May 91

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

**எக்காளசத்தம் 85 - Jan. 1991**



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும்,அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.
(எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் – யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப். 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளை களும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

கர்த்தர் மோசேயை நோக்கி நீ முதலாம் மாதம் முதல் தேதியில் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசஸ்தலத்தை ஸ்தாபனம் பண்ணு என்றார். இது இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து புறப்பட்ட மாதமாகும். இந்த மாதத்தின் 14 ம் தேதி பஸ்கா அடிக்கப்பட்டு நடுராத்திரியிலேயே அல்லது 15-ம் தேதி காலையில் இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டார்கள் (யாத். 12:40, 41; எண் 33:1-3). இந்த வருஷத்தின் முதல் மாதம் முதல் தேதியில் ஆசரிப்புக் கூடாரத்தை ஸ்தாபனம் பண்ணும்படி (Set up) கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்டார். அப்படியே வருஷத்தின் ஆரம்பத்திலே நம்முடைய ஆவிக்குரிய வாழ்க்கைக்கான தீர்மானங்களை நாம் உறுதிப்படுத்தி (ஸ்தாபித்து) ஆண்டு முழுவதும் செயல்படுத்துவோம். நாம் இரட்சிக்கப்பட்ட நாளை நினைவு கூறுவோமாக. நமக்காக கல்வாரி சிலுவையிலே இரத்தம் சிந்தி மரித்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மரணத்தை நினைவுகூறும் திருவிருந்தை (புதிய ஏற்பாட்டு பஸ்காவை) தவறாமல் ஆண்டு முழுவதும் ஆசரிப்போமாக! இது என்ன என்று நம் முடைய பிள்ளைகளுக்கும் விளக்கிச் சொல்லுவோமாக (யாத் 13:8) இஸ்ரவேலர்கள் பஸ்காவை ஆசரித்தது ஆபிப் மாதம் 14-ம் தேதி மாலை என்றாலும் அவர்கள் எகிப்திலிருந்து இரட்சிக்கப்பட்டது 15-ம் தேதி காலையிலாகும் (எண் 33.3). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நமக்காக கல்வாரி சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்தது பகலிலாகும், இரவிலல்ல. நாம் மீட்கப்பட்டது பகலில், இரவிலல்ல. இயேசு கிறிஸ்து நமக்காகப் பலியானபொழுது நாம் மீட்கப்பட்டோம் ஆனபடியினால் இயேசு கிறிஸ்துவினுடைய மரணத்தை நினைவு கூறுவதும் அவருடைய மாம்ச சரீர ஐக்கியத்தில் பங்கு பெறுகிறதுமான திருவிருந்தை (நற்கருணை) ஆச்சாரத்தை காலையிலோ, மாலையிலோ, பகலிலோ, இரவிலோ எப்பொழுதும் ஆசரிக்கலாம், ஆசரிக்க வேண்டும். இந்த ஆண்டு முழுவதிலும் அல்லது நம்முடைய முடிவு மட்டும் நம்முடைய ஆவிக்குரிய வாழ்க்கையை இது கட்டுவதாக என்னை நினைவு கூறும்படி இதைச் செய்யுங்கள், இதைச் செய்யும்பொழுதெல்லாம் என்னுடைய மரணத்தை நினைவு கூறுகிறீர்கள், தெரிவிக்கிறீர்கள் என்று கர்த்தர் சொன்னார் (I கொரி 11:23-26).

கர்த்தர் உங்கள் எல்லோரையும் ஆசீர்வதிப்பாராக!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR.)

# திரும்பவும், திரும்பவும் பாவம் செய்து கொண்டே இருந்தால்

நம்முடைய தேவனாகிய கர்த்தர் நீதியுள்ள நீதிபதி. அவரிடத்தில் எவ்வளவேனும் பட்சபாதம் இல்லை. அவர் பாவத்தை பாராத சுத்த கண்ணர் (ஆபகூ 1:13). பாவிகள் மேல் நாள்தோறும் சினங் கொள்ளுகிற தேவன் (சங் 7:11)

ஒருவன் கர்த்தருடைய கற்பனையை மீறி பாவத்திற்கு உட்படும்போது அவனுக்கும் இறைவனுக்கும் நடுவே பாவம் வந்து அவனை தெய்வத்தை விட்டு பிரிக்கின்றது. மேலும் அவன் பாவம் செய்யும்போது பிரிவினை இன்னும் அதிகமாகிறது. இப்படி பாவமானது செய்கிறவனை இறைவனை விட்டு தூரப்படுத்திக் கொண்டே இருக்கிறது. இந்த மனிதன் ஒரு நாளிலே தன்னுடைய தவறை உணர்ந்து மெய் மனஸ்தாபப்பட்டு, எல்லா பாவங்களையும் அறிக்கை செய்துவிட்டு விடும்போது இரக்கம் பெறுகிறான். ஏனெனில் கர்த்தர் மன்னிக்கிறதை பெருத்தவராயிருக்கிறார். துன்மார்க்கனுடைய சாவை அவர் விரும்பவில்லை. அவன் மனந்திரும்பி குணப்பட வேண்டுமென்றே அவர் விரும்புகிறார்.

ஒருவன் ஒருநாள் எதிர்பாராத விதமாய் விபச்சாரப் பாவத்தில் விழுகிறான் என்று வைத்துக் கொள்வோம். ஐயோ, நான் குழியில் விழுந்தேன் என்று மனம் கசந்து அழுது இருதயம் நொறுங்குண்டவனாய் தெய்வத்தை நோக்கி இரக்கம் கேட்டு கெஞ்சினால் கர்த்தர் அவனுக்கு ஒருவேளை இரக்கம் செய்யலாம். இப்படி மனந் திரும்புவதற்கு பதிலாக எப்படியோ ஒருமுறை பாவம் செய்தாயிற்று. இன்னொரு முறை செய்தால் என்ன, அட இப்போது செய்வோம், அப்புறம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளலாம், ஓ! தாவீது ராஜா பாவம் செய்துவிட்டு மன்னிப்பு பெறவில்லையா?

அவ்வளவு பெரிய ஊழியக்காரரே பாவம் செய்கிறாரே. எவ்வளவு நம்மை போன்ற கிறிஸ்தவர்கள் செய்கிறார்கள்? நாம் மட்டும் என்ன விதிவிலக்கா? கர்த்தர் அன்புள்ளவர், மிகவும் நல்லவர் நம்மை நரகத்தில் கொண்டு போய் போடுவாரா? பிள்ளை தவறு செய்யும் போது தகப்பன் என்ன பிள்ளையை கொலையா செய்வான்? என்று பலவிதத்திலும் தங்கள் மனதைத் தேற்றிக் கொண்டு பாவத்தின் வஞ்சனையால் இருதயத்தை கடினமாக்கிக் கொண்டு திரும்பவும் திரும்பவும் பாவம் செய்து கொண்டே இருக்கிற போலி கிறிஸ்தவர்கள் உண்டு.

கர்த்தர் நீடிய பொறுமையுள்ளவர். எமோரியர்களுடைய அக்கிரமம் பெருகிக்கொண்டே போயிற்று. கர்த்தர் அவர்களுடைய அக்கிரமத்தினிமித்தமாய் அவர்களுடைய செழிப்பான தேசத்தை பிடுங்கி ஆபிரகாமின் சந்ததிகளுக்கு கொடுக்க சித்தம் கொண்டார். உடனே அதைச் செய்யவில்லை. அந்த தேசத்தை ஆபிரகாமுக்கு தருவேன் என்று வாக்குத் தத்தம் பண்ணினார். அத் தேசத்து ஜனங்கள் பாவத்தோடே பாவத்தை கூட்டிக் கொண்டே போய் பாவத்தை பூரணமாக்கினார்கள். பாவம் பூரணமானவுடனே அந்த தேசம் அவர்களைக் கக்கிப் போட்டது. கர்த்தர் ஆபிரகாமுக்குச் சொல்லி நானூற்று முப்பது வருடங்களுக்குப் பின் அந்த தேசத்தை ஆபிரகாமுடைய சந்ததிகளுக்குக் கொடுத்தார் (ஆதி 15:16). ஆகாப் என்ற இஸ்ரவேலின் ராஜா கர்த்தருடைய கோபத்தை கிளறிவிட்டான் கர்த்தர் தீர்க்கதரிசியாகிய எலியாவை அனுப்பி சாப வார்த்தைகளை கட்டளையிட்டார். அதைக் கேட்ட உடனே கொடியவனாகிய ஆகாப் எலியாவின் மீது வெளிப்படையாய் பகைமையைக் காண்பித்த போதிலும் அந்தரங்கமாய் தன் வஸ்திரங்களைக் கிழித்து தன் சரீரத்தின் மேல் இரட்டை போர்த்துக் கொண்டு, உபவாசம்பண்ணி ரட்டிலே படுத்து தாழ்மையாய் நடந்து கொண்டான். அவனுடைய தாழ்மையைக் கண்ட கர்த்தர் கோபம் தணிந்து சாபம் அவன் சந்ததியின்

நாட்களில் நிறைவேறும் என்றார் (I ராஜா 21:27-29).

அதே சமயத்தில் யூத ராஜாவாகிய மனாசே தன் எல்லா செய்கைகளினாலும் செய்த பாவங்களினிமித்தம் யூதாவை தமது சமுகத்தை விட்டு கர்த்தர் அகற்றினார். மனாசே சிந்தின குற்றமற்ற இரத்தத்தினிமித்தமாகவும் கர்த்தர் அவனை மன்னிக்க சித்தமில்லாதிருந்தார் (II ராஜா 23:26, 27; 24:3-4).

தொடர்ந்து பாவம் செய்து கொண்டேயிருந்தால் என்னவாகும்? பாவம் ஒரு நாள் பூரணப்பட்டுவிடும். பாவம் பூரணப்படும்போது மரணத்தைப் பிறப்பிக்கும் (யாக். 1:15) இதில் சொல்லப்பட்ட மரணம் சரீர மரணத்தைக் குறிப்பிடவில்லை. நமது ஜீவனாகிய தேவனை விட்டு நிரந்தரமாக பிரிக்கப்படுவதையே குறிப்பிடுகிறது சரீர மரணமும் வரும். பாவம் பூரணப்பட்ட பின்பு ஒருவன் மனந் திரும்ப வேண்டுமென்று விரும்பினாலும், அவன் மனமாறுதலை அடைய முடியாமல் போய்விடும். ஏனென்றால் ஒருதரம் பிரகாசிப்பிக்கப்பட்டும் பரம ஈவை ருசி பார்த்தும் பரிசுத்த ஆவியைப் பெற்றும் தேவனுடைய நல்வார்த்தையையும் இனி வரும் உலகத்தின் பெலன்களையும் ருசி பார்த்தும், மறுதலித்துப் போனவர்கள் தேவனுடைய குமாரனை தாங்களே மறுபடியும் சிலுவையில் அறைந்து அவமானப்படுத்துகிறபடியால் மனந்திரும்புவதற்கேதுவாய் அவர்களை மறுபடியும் புதுப்பிக்கிறது கூடாத காரியம் (எபிரெ. 6:4-6).

கர்த்தர் நீடிய பொறுமையுள்ளவர். அதற்கு ஒரு எல்லை உண்டு என்பதையும் அறிய வேண்டும். தேவனுடைய வார்த்தை தொடர்ந்து உன்னை எச்சரித்துக் கொண்டே இருந்தும் பாவத்தை விட்டு மனந்திரும்பாமல் திரும்பவும் திரும்பவும் பாவம் செய்து கொண்டிருக்கிற பாவியே கேள். இஸ்ரவேலருடைய மீறுதலை எண்ணிக் கொண்டே வந்த கர்த்தர் இதுவரை என்னை பத்துமுறை பரிட்சை பார்த்தார்கள் என்கிறார். நீ விடாதிருக்கிற பாவத்தை எத்தனை முறை செய்தாய் என்று கர்த்தர் எண்ணிக் கொண்டே வருகிறார். உனது பாவத்தின் பாரம் கூடிக் கொண்டே வருமானால் ஒரு நாள் நீ தராசிலே நிறுக்கப்படும்போது குறையுள்ளவனாய்க் காணப்படுவாய். சகாயமின்றி சடுதியாய் நாசமடைவாய். அதன்பின் கர்த்தர் உன்னை மன்னிக்க மனதில்லாமல் என்றென்றும் கைவிடுவார். ஆகையால் இன்றே மனந்திரும்பு. உன் பாவம் நிறைவடைவது எப்போது என்று நீ அறியாயே.

செய்றதையெல்லாம் செய்துவிட்டு பிற்பாடு ஆசீர்வாதத்தை அடைய விரும்பிய சீர்கெட்ட ஏசா ஆகாதவனென்று தள்ளப்பட்டதை நினைவில் கொள். அவன் கண்ணீர்விட்டு கவலையோடே தேடியும் மனமாறுதலைக் காணாமல் போனதுபோல் உனக்கும் ஆகாதபடி பார் (எபி. 12:16-17). கர்த்தருடைய தயவு உனக்கு உண்டாயிருக்கும் காலத்திற்குள் உன்னை சரி செய்து இரக்கம் பெற்றுக் கொள். சாகப் போகிற சமயத்தில் சகாயம் பெற்றுக் கொள்ளலாம் என்று எண்ணாதே. உன் அக்கிரமம் நிறைவடையும் முன்பு மனந்திரும்பு.

*அடிக்கடி கடிந்து கொள்ளப்பட்டும் தன் பிடறியைக் கடினப்படுத்துகிறவன் சகாயமின்றி சடிதியில் நாசமடைவான்.*

(நீதி 29:1)

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | நாள் | திருமணம் நடந்த இடம் |
|---|---|---|---|
| Bro. பர்னபாஸ் (ஸ்ரீதர்) | Sis. மேபல் தயாவதி | 21—11—90 | நாகர்கோவில் |

# “சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல் அநியாயத்துக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்கோ உக்கிர கோபாக்கினை வரும்”

அன்றொரு நாள் (1-4-1990) ஞாயிறு காலை ஆராதனை தலைமை சபையில் (பம்பாயில்) ஆரம்பமாயிற்று. அது கோடைகாலம். கொடிய உஷ்ணமும், புழுக்கமும் உண்டாயிருந்தது. கருப்புச் சால்வைப் போர்த்துக் கொண்டு அழுக்கு வஸ்திரம் தரித்த கிழவனான ஒரு மனிதன் ஆராதனைக்குள் நுழைந்து அமர்ந்தார் ஆராதனை நடுவே சாட்சிப் பகுதியில் ஒரு சகோதரன் மூலமாக சாட்சி கொடுக்க ஒரு ஊழியக்காரர் அனுமதி கேட்கிறார் என்று செய்தி வந்தது. ஆராதனை ஸ்தலத்திற்கு வெளிப்புறம் உள்ள Hall-ல ஆளை அழைத்து யார்? என்று விசாரித்தேன். பெயர் ஜெயராஜ், தான் ஒரு ஊழியக்காரன் என்றும் ஊழியம் செய்வதாகவும், மதுரையில் ஒரு சபை நடத்துவதாகவும் சொன்னார். எந்த ஐக்கியம்?என்று கேட்டதற்கு சுயாதீன ஊழியம் என்றார். அதோடு தன்னுடைய மகன் பீற்றர் லாலா ரஜபதி கல்லூரியில் (Lala Rajapathi College) Lecturer-ஆக இருப்பதாகவும் ஆராதனைக்குக் கொண்டு வந்து விட்டுவிட்டு போயிருப்பதாகவும், ஆராதனை முடிந்தவுடன் வந்து கூட்டிக் கொண்டு போவார் என்று அறிவித்ததுமன்றி தனக்கு சாட்சி கொடுக்க அனுமதி வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். சரி 5 நிமிஷம் சுருக்கமாக சாட்சி கொடுங்கள் என்று சொல்லிவிட்டு நானும் ஸ்தானத்தில் போய் அமர்ந்தேன்.

சாட்சி கொடுக்க எழுந்தார். தான் ஒரு வாத்தியார் என்றும், பெந்தேகொஸ்தேகாரர்கள் பிசாசு பிடித்து ஆடுகிறவர்கள் என்று என் தகப்பனார் சொல்லியிருந்தார் என்றும் சாட்சி கொடுக்க ஆரம்பித்து நான் ஒரு பெந்தெகொஸ்தே சபைக்குப் போயிருந்தேன். எல்லாரும் அப்படி ஆடுவது கண்டு ஓடி வந்து விட்டேன்; மறுநாள் அந்த சபை ஊழியக்காரர் என்னிடத்தில் வந்து பேசினார். 'அல்லாமலும், அல்லாமலும்' அப் 19:16 என்று சொல்லிக் கொண்டிருந்தார். நான் சொன்னேன் அந்த வசனம் அப் 19:16 அல்ல அப் 19:6 என்றேன் உடனே அவர் ஆமா, ஆமா; ஆ ஆ ஆ என்று அலறினேன். என் மனைவி என்னைப் பார்த்து என்னங்க! இப்படி சத்தம் போடறீங்க என்றாள். உடனே நான் அவளைப் பார்த்து உனக்கு பிள்ளை கிடையாது. இனி மேலும் பிள்ளை கிடையாது என்றேன். கர்த்தர் உடனே ஊழியத்திற்கு இறங்கு என்றார். ஆசிரியர் வேலையை ராஜினாமா செய்துவிட்டு நானும், என் மனைவியும் ஒவ்வொரு ஊராய் போய் ஊழியம் செய்தோம் என்று பைபிளை (Bible) திறக்காமலே வாயில் வந்ததை பேசி அறுவை சிகிச்சை செய்து கொண்டிருந்தார். 15 நிமிஷம் 20 நிமிஷமாக கடர ஆரம்பித்தது. உட்கார பலமுறை சொல்லி ஒரு வழியாக உட்கார்ந்தார். உஷ்ண காலத்தில் கருப்புச் சால்வையைப் போர்த்திக் கொண்டு ஆராதனைக்குள் வந்ததன் மூலமாக- பூமிக்குள்ளிருந்து சால்வையைப் போர்த்திக் கொண்டு எழும்பி வந்ததாய் தோன்றுகிற கிழவனான சாமுவேல் தீர்க்கதரிசி தான் என்கிற எண்ணம் ஜெயராஜ் நாடோடி ஊழியருக்கு இருக்கிறது என்று அறிந்துகொண்டோம் (I சாமு 28:14).

பிரசங்க ஊழியம் முடிந்து திருவிருந்து ஆராதனை ஆரம்பமாயிற்று. திருவிருந்துக்கான ஆயத்தம் செய்யும்படி ஒருவர் காலை ஒருவர் கழுவசாட்சி கொடுத்துவிட்டு எழுந்து ஒருவர் கால்களை ஒருவர் கழுவும்படி Hall-க்குள்ளாகச் சென்றார்கள். இந்த ஜெயராஜ் ஊழியக்காரன் ஆராதனை ஸ்தலத்திலிருந்து வெளியே Hall-ல் வந்து நின்று திருவிருந்து பகலில் ஆசரிக்கிறது தப்பு இரவில்தான் ஆசரிக்க வேண்டும். இரவில் ஆசரித்தார்கள் என்று 10 வசனம் நான் காட்ட முடியும் என்று சபை மக்களோடு வாக்குவாதம் செய்து கொண்டிருந்தார். வெளியே Hallல் ஒரே இரைச்சலாக இருந்தது. நான் கால் கழுவுதல் ஆராதனை செய்யும்படி

யாய் ஆராதனை ஸ்தலத்திலிருந்து வெளியே வந்தபொழுது அந்த மனிதனை வேகமாய் வந்து என்னை மறித்து திருவிருந்து ஆராதனை இரவில்தான் செய்யலாம் பகலில் செய்யக் கூடாது. இரவில் திருவிருந்து ஆராதனை செய்வதற்கு நான் 10 வசனங்கள் ஆதார மாகக் காட்டமுடியும், நீங்கள் பகலில் திரு விருந்து நடத்தலாம் என்பதற்கு ஒரு வசனம் காட்ட முடியுமா? என்று கேள்விக் கேட்டார். காட்ட முடியும். கூட்டம் முடிந்ததும் (ஆரா தனை முடிந்ததும்) பதில் சொல்கிறேன் என்று சொன்னேன். கிழவன் கேட்கவில்லை மிகவும் சத்தம் போட்டு பேச ஆரம்பித்தார். அப் பொழுது நான் கேட்டேன். இயேசு கிறிஸ்து மரித்தது இரவிலா, பகலிலா என்று கேட் டேன். அதற்குப் பதில் சொல்லாமல். பகலில் திருவிருந்து ஆராதனை நடத்தக் கூடாது. இர வில்தான் திருவிருந்து நடத்த வேண்டும் என்று சத்தம் போட ஆரம்பித்தான். இந்த கிழவனுடைய நோக்கம் ஆராதனையை குழப்பி, தடுப்பதென்பதும், நம்மை எரிச்சல் மூட்டி பாவம் செய்ய வைத்து, வெளியே போய் துர்பிரச்சாரம் செய்யத் திட்டமிட்டு உள்ளான் என்றும் அறிந்து கொண்ட நான்; உமக்கு ஆராதனையில் உட்கார விருப்பமா? இல்லையா? என்று கேட்டேன். இல்லை என்று சொன்னதைத் தொடர்ந்து ஆராதனைக்குப் பக்கத்திலுள்ள ஓர் அறையில் உட்கார வைத்து மின் விசிறியை இயக்கி வசதி செய்து விட்டு ஆராதனையை ஆசீர்வாதமாக நடத்தி முடித்தோம்.

ஆராதனை முடிந்ததும் சரியாக இந்தக் கிழவனுன தீர்க்கதரிசியின் மகன் 'தி பெந்தெ கொஸ்தே' ஆராதனைக்குப் போய்விட்டு வந்து தகப்பனை அழைத்துச் செல்ல வந்தான். தன் னுடைய பெயர் பீட்டர் என்றும் La La Raja-pathirai Collegeல் Lecturer ஆக இருப்பதாக வும் அறிமுகப்படுத்திக் கொண்டார். தகப்பன் மகனைப் பார்த்ததும் மகனே, நீ சொன்னபடி தான் இங்கு இருக்கிறது. நீ சொன்னபடி நடந்தது என்று சொல்லி ஆரம்பித்ததும் வாருங்கள் உட்கார்ந்து பேசுவோம், உம்மு டைய தகப்பனுர் இரவில் தான் திருவிருந்து நடத்த வேண்டுமென்று சொல்லி ஆராதனை நடுவில் கலவரம் செய்தார். உட்கார்ந்து பேசு வோம் என்று அழைத்தேன். கிழவன் நான் பேச மாட்டேன் என்று சொல்லி வெளியே ஓடிவிட் டான். மகனிடம் தகப்பனுடைய சீர்கேட்டை விளக்கிச் சொல்லி கண்டித்தேன். நீர் உம்மு டைய தகப்பனை இங்கே விட்டுவிட்டு எங்கே போய்விட்டு வந்தீர் என்று கேட்டேன். அவர் 'தி பெந்தெகொஸ்தே மிஷன்' ஆராதனைக்குப் போய்விட்டு வருகிறேன் என்றுன். அப்படி யானுல் உம்முடைய தகப்பனுரை ஏன் அங்கே அழைத்துப் போகவில்லை, இங்கே விட்டுவிட்டு போனீர் என்று கேட்டேன். இப்படி போகிற இடங்களிலெல்லாம் கலகம் செய்கிற சுபாவம் என் தகப்பனுருக்கு இருக்கிறபடியால்தான் என் தகப்பனுரை அங்கே அழைத்துச் செல்ல வில்லை என்றுன்.

சரி. உம்முடைய தகப்பனைக் கூப்பிடும். இரவில்தான் திருவிருந்து ஆராதனை நடத்த வேண்டும் என்பதற்கு 10 வசனம் ஆதாரம் காட்ட முடியும் என்று சொன்னுரே. இப் பொழுது அந்த வசனங்களைச் சொல்லட்டும் என்றேன் - மகனும் தகப்பனுடைய உபதேசம் உள்ளவனே, தெனுலிராமன் மகனைப் போல தகப்பனுக்கு மகன் எந்த அளவும் சளைத்தவன் அல்ல. Supper என்று எழுதியிருக்கிறதனு டைய அர்த்தம் என்ன என்று கேட்டான். Supper என்றுல் இரவு சாப்பாடு என்று அர்த் தம். ஆனுல் இதை திருவிருந்து (Holy Com-munian) என்றுதான் சொல்லுகிறோமேயல்லா மல் இரவு சாப்பாடு என்று சொல்லவில்லையே என்றேன்.

இயேசு கிறிஸ்து நமக்காக மரித்தது பக லிலா? இரவிலா என்று கேட்டேன், பகலில் என்று பதில் வந்தது. இயேசு கிறிஸ்து நமக் காகப் பலியானது எந்த கிழமையில் (நான்) என்று கேட்டேன். தெரியாது என்றுன். பாருங்க Lecturer-ஆக இருக்கிற ஒரு கிறிஸ்த வனுடைய யோக்கியதை. சரி, இயேசு கிறிஸ்து நமக்காக மரித்தது வெள்ளிக்கிழமை பகலில் என்று சொல்லி திருவிருந்தின் விளக் கத்தைக் கொடுத்தேன். நான் அவசரமாக ஒரு இடத்துக்கு விருந்துக்குப் போகவேண்டும். சீக்கிரமாக நானும் என் தகப்பனும் வந்து விளக்கம் பெற்றுக் கொள்ளுகிறோம். Leisurely ஆக உட்கார்ந்து பேசுவோம் என்றுன். நான்

சொன்னேன் தெய்வீக காரியத்தைப் பேசுவதைக் காட்டிலும் விருந்துச் சாப்பாடு அவ்வளவு முக்கியமானதல்ல. உம் தகப்பனையும் கூப்பிடும் உட்கார்ந்து பேசுவோம் என்று. கிழவனோ வெளியே ரோட்டில் நின்று எங்கள் காதுகள் கேட்க கத்திக் கொண்டிருந்தான். மகனோ, நாங்கள் சீக்கிரமாக வந்து ஒன்று இரண்டு நாட்களுக்குள்ளாக விளக்கம் தெரிந்து கொள்ளுகிறோம் என்று சொன்னான்.

வெளியேயுள்ள கிறிஸ்தவன் என்றாலே பொய் சொல்லுகிறதிலேயும், பொய்யை நம்புகிறதிலேயும் பேர் போனவர்களாக இருக்கிறார்கள் என்பது எங்களுக்குத் தெரியும். உம்முடைய தகப்பன் வெளியே போய் என்னை புதிய எருசலேம் சபையில் அடித்துவிட்டார்கள் என்று துர்ப்பிரச்சாரம் செய்வார், நீயும் நம்புவாய். ஆனபடியால் விபரத்தை நீர் தெரிந்து கொள்ளும்படியாகவே உமக்கு விபரத்தைச் சொல்லுகிறோம் என்று சொன்னேன். இல்லை ஐயா, சீக்கிரமாக வந்து உபதேசத்தை விளங்கிக் கொள்ளுகிறோம் என்று சொல்லிவிட்டு மகனும், தகப்பனும் சென்றுவிட்டார்கள். திரும்ப வரவேயில்லை. நாட்களும் கடந்தன. என்ன வரவில்லையே என்று பீட்டர் (கிழவனான தீர்க்கதரிசியின் மகன்) பெயருக்கு அவன் கொடுத்த விலாசத்திற்கு பதிவுத் தபால் ஒன்று அனுப்பினேன். திரும்பி வந்துவிட்டது. இதற்கிடையில், G. N. Jeyaraj, Rtd. Headmaster என்று From விலாசமிட்ட Inland Letter ஒன்று Tamil Nadu-விலிருந்து வந்தது.

சரி. Mr. Peter விலாசம் (Address) சரிதானா என்று பார்த்து வர ஒரு ஊழியரை அனுப்பினேன். அந்த ஊழியரை Mr. Peter பிடித்து, அடித்து கொலை செய்வேன் என்று பலாத்காரமாய்ப் பிடித்து வீட்டுக்குள் அடைத்து வைத்திருக்கிறான். அவன் மனைவி ஐயோ அடிக்காதீங்க என்று சத்தமிட்டிருக்கிறான். அந்த Building-லுள்ள சில தமிழரும் மராட்டியர்களும் கூடியிருக்கின்றனர். நீ என்ன ஜாதிடா? என்று கேட்டு மிரட்டி அடித்திருக்கிறான். புதிய எருசலேம் ஊழியா, நான் கிறிஸ்தவன் என்று சொல்லியிருக்கிறார். கிறிஸ்தவவில் என்ன ஜாதிடா! என்று கேட்டிருக்கிறான். ஊழியர் மறுபடியும் நான் கிறிஸ்தவன் என்று சொல்லியிருக்கிறார். அதற்கு Mr. Peter சொல்லியிருக்கிறான் இவனுகளெல்லாம் அரிஜனங்கள் அதனால்தான் ஜாதியை சொல்ல மாட்டேன்கிறானுங்க என்று சொல்லியிருக்கிறான். கூட இருந்த ராமகிருஷ்ணன் என்ற பிராமணன் அதெல்லாம் அசிங்கம், ஜாதி பேச்சைப் பேசாதிரும் என்று சொல்லி, ராமகிருஷ்ணன் காரியத்தை விசாரித்திருக்கிறான். விசாரிக்கும் பொழுதுதான் தெரிய வந்தது ஜெயராஜ் மகனுடைய பெயர் பீட்டர் அல்ல பூபதிபாலன் என்று. (என்னே! கள்ள கிறிஸ்தவர்களுடைய இரட்சிப்பு)

புதிய எருசலேமுக்கு வெளியே பூரண இரட்சிப்பு இல்லை என்பதை கிறிஸ்தவ உலகம் அறிந்து கொள்ளும் காலம் வெகு தூரத்தில் இல்லை. சத்தியத்தை அறியாமத்தினால் அடக்கி வைத்ததாக உலக சரித்திரத்திலேயும் கிடையாது பொய்யும், புரட்டும் பாவமானது வஞ்சகமான ஊழியம் செய்கிற ஊழியர்களையும், ஊழியங்களையும் பொய்யர்களுடைய முகமூடியை கிழித்து உலகத்துக்குக் காட்டுவோம்.

எப்படியோ தேவகிருபையினாலும், பிறருடைய உதவியினாலும் விடுவிக்கப்பட்டு ஊழியர் சபைககு வந்து சேர்ந்தார். இந்தக் காரியத்தை மறைக்க அந்தக் கிழட்டுத தீர்க்கதரிசியும் அவனைச் சேர்ந்த ஆட்களும் சென்னைப் பட்டணத்திலும் தமிழ் நாட்டில பல இடங்களிலும் கிழவனான ஜெயராஜ் புதிய எருசலேம் சபையில போய் பாவமன்னிப்பின் உபதேசத்தை விசாரித்ததற்காக கதவைப் பூட்டி வைத்து அடித்தார்கள் என்று பொய்ப் பிரச்சாரம் செய்திருக்கிறார்கள் காட்டாத்துறை வாத்தியாரும், கிறிஸ்தவர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொள்ளுகிற பலரும் தங்களுடைய சபைகளில் அதை நம்பி பொய்யைப் பிரச்சாரம் செய்கிறதாகவும் எனக்குத் தெரிய வந்தது. உடனே நான் ஒரு பதிவுத் தபாலை (Registered Post) Mr. ஜெயராஜிக்கு அனுப்பி Madras சென்னை நகருக்கு நான வருகிறேன். நீங்கள் அங்கே வாருங்கள் (12-5-1990 சனி) சத்தியத்தைக் குறித்தும், சம்பவங்களைக் குறித்தும் பேசுவோம். உண்மையை கிறிஸ்தவ

உலகத்துக்கும் காண்பிப்போம் என்று அழைப்புக் கொடுத்துவிட்டு Madrasக்குச் சென்றேன். அழைப்புக் கொடுத்துவிட்டு சென்னை சென்று காத்திருந்தோம். கள்ளத் தீர்க்கதரிசியையும்காணவில்லை.அவனுடைய வகையருக்களையும் காணவில்லை.

கள்ளத் தீர்க்கதரிசியினுடைய மகனுடன் நடந்த சம்பாஷனைகளின் உண்மையைவெளிப் படுத்த எங்களிடத்தில்Audio Cassette உண்டு. வேத வசனத்தின் பிரகாரமும் அரசியல் சட்டப்பிரகாரமாகவும் Mr. Prof.Peter மேல் நடவடிக்கை எடுத்து Bombayயை விட்டே துரத்த முடியும். ஆனாலும் தேவ நாமம் தூஷிக்கப்படாதபடிக்கு நாங்கள் இறைவனிடத்தில் அக்காரியத்தை ஒப்படைத்துவிட்டு அமர்ந்திருக்கிறோம்.

வேதமும், கிறிஸ்தவமும், இயேசு கிறிஸ்துவும் எல்லாருக்கும் சொந்தம். ஆகையால் அவரவர் சுய இஷ்டப்படி வேதத்திற்கு விளக்கம் கொடுப்பதும், தாறுமாறாய் நடப்பதும், கிறிஸ்துவின் உபதேசத்தைத் தூஷிப்பதையும் நாம் சகிக்க முடியாது. எங்களிடத்தில் தவறு உண்டென்றால் யாரும் நேரடியாக வரலாம். விளக்கத்தைத் தெரிந்து கொள்ளலாம். உன் விடத்தில் தவறு உண்டென்றால் நாங்கள் கேட்போம், கேட்க கடமையும்பட்டுள்ளோம். சத்தியம் எது என்பதையும், உத்தம மார்க்கத்தார் எந்தக் கூட்டம் (I கொரி 11:19; அப். 28:23) என்பதையும், சம்பவங்கள் எது உண்மை என்பதையும் உட்கார்ந்து பேசினால் தான் தெளிவடையும், தெரியவரும். வாருங்கள் கூடிப் பேசுவோம். வேணுமென்றால் Videoவும் Setup பண்ணிக் கொள்ளலாம். இல்லையென்றால் நீங்கள் கூட்டுங்கள், நாங்கள் வருகிறோம். கிறிஸ்தவ உலகத்தில் புதிய எருசலேம் சபைக்கு வெளியே நடப்பது என்ன?

(தொடரும்)



"பெரியோரெல்லாம் ஞானிகளல்ல, முதியோரெல்லாம் நீதியை அறிந்தவர்களுமல்ல" (யோபு 32:9).



---

# வேத பாடம் (தொடர்ச்சி)

**லேவி 8:1 to 10:20 :-** ஆரோனையும் ஆரோனுடைய குமாரரையும் ஆசாரிய ஊழியத்திற்காய் அபிஷேகித்து பிரதிஸ்டை செய்தல்: *(யாத் 29:1-9; 30:30; சங். 133)*

**லேவி 8:1-15 :-** கர்த்தர் மோசேயை நோக்கி நீ ஆரோனையும் அவன் குமாரரையும் வரவழைத்து வஸ்திரங்களையும் அபிஷேக தைலத்தையும் பாவ நிவாரண பலிக்கு ஒரு காளையையும் இரண்டு ஆட்டுக் கடாக்களையும் ஒரு கூடையில் புளிப்பில்லா அப்பங்களையும் கொண்டு வந்து சபையையெல்லாம் ஆசரிப்புக் கூடார வாசலுக்கு முன்பாக கூடிவரச் செய் என்றார் *(லேவி. 8:1-3)*. மோசே சீக்கிரமாய் அப்படியே கீழ்ப்படிந்து செய்தார் *(வச:4)*. மோசே சீக்கிரமாய் கர்த்தருடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்து அப்படியே செய்தார். தெய்வீக காரியத்தில் மனிதன் உடனே கீழ்படிந்து மோசேக்கு தேவன் கட்டளையிட்டபடியே செய்ய மோசேயோடு இணைந்து தேவ கட்டளையைச் செய்வதே தெய்வீக ஊழியத்தின் அர்த்தமாகும் (Divine Mission). மோசேக்கு கர்த்தர் கட்டளையிட்ட பிரகாரம் செய்தார்கள் *(யாத் 39:42-43)*. காண்: லேவி *8:4, 16:34*, யாத் *4:30, 7:6, 10:20, 8:17, 11:10, 17:6, 39:43, 40:16* எண் *4:37, 41, 17:11, 20:27, 27:22, 31:31*. ஒரேப்பிலே இஸ்ரவேலரெல்லாருக்காகவுமே கர்த்தர் தேவனுடைய மனிதனாகிய மோசேக்குக் கட்டளையிட்டார் தனித்தனியாய் ஒவ்வொருவருக்கும் கட்டளை கிடையாது *(மல் 4:4)*. குறைவுள்ளதும் அந்தக் காலத்துக்கு மாத்திரமே

உரியதும் பழமையாய் போனதுமான பழைய ஏற்பாட்டிற்கே ஒரு மாதிரி இருந்ததென்றால் புதியதும் பரிபூரணமுமானதும், பூரணப்படுத்துகிறதும் ஜீவனும் உள்ளதுமான புதிய ஏற்பாட்டிற்கு மாதிரி இல்லையா?

ஒவ்வொரு காலத்திலேயும் அந்தந்த காலத்திற்குரிய பூரணமான சத்தியத்தை தேவன் ஒருஆள் மூலமாகவே வெளிப்படுத்துகிறார் ஏனோக்கின் காலத்தில் ஏனோக்கு,நோவாவின் காலத்தில்நோவா,ஆபிரகாமின் காலத்தில் ஆபிரகாம்,மோசேயின் காலத்தில் மோசே. மோசேயினால் பழைய உடன்படிக்கை ஸ்தாபிக்கப்பட்டது (பழைய ஏற்பாடு முழுவதும் இதற்கு உட்படும்). சாமுவேல், நாத்தான், எலியா, எலிசா, மீகா, ஏசாயா, எரேமியா, எசேக்கியேல், ஓசியா, ஆமோஸ், தானியேல், மல்கியா, யோவான் ஸ்நானகன், கர்த்தராகிய இயேசு கிறிஸ்து.இயேசு கிறிஸ்துவின் மூலமாக புதிய உடன்படிக்கை ஸ்தாபிக்கப்பட்டது (புதிய ஏற்பாடு முழுவதும் இதற்கு உட்படும்) ஆதி அப்போஸ்தலர்கள்: இவர்கள் காலத்தில் இவர்கள் மூலமாகவே தேவன் பூரணமான சத்தியத்தை வெளிப்படுத்தினார். மற்ற பலர் தெய்வீக ஊழியம் செய்தாலும் இந்த பிரதானமானவர்களுடைய வெளிப்படுத்தலைச் சார்ந்தே அவர்கள் ஊழியம் இருந்தது. இந்த கடைசி காலத்தில் வேதத்தின் மாதிரியான தேவனுடைய மனிதன் உண்டு. ஓரேபிலே இஸ்ரவேலர் எல்லாருக்காகவும் தேவன் மோசே மூலமாய் நியாய பிரமாணமாகிய நியாய பிரமாணங்களையும் கட்டளைகளையும் கற்பித்தார் (மல். 4:4). அப்படியே புதிய ஏற்பாட்டின் சபையார் எல்லாருக்காகவும் புதிய ஏற்பாட்டையும் அப்போஸ்தலர்களையும் தேவன் கொடுத்தார் இந்த கடைசி காலத்திலேயும் தேவனால் அனுப்பப்பட்ட ஓர் அப்போஸ்தலன் உண்டு, மாதிரி உண்டு, அவரோடு கூட சேர்ந்து தெய்வீக கட்டளையை நிறைவேற்றுவதே தெய்வீக ஊழியம் (Divine Mission) புதிய ஏற்பாட்டு ஊழியமாகும். ஆகாப், யோசபாத் ராஜாக்களின் காலத்தில் யெகோவா நாமத்தில் 400 தீர்க்கதரிசிகள் தீர்க்க தரிசனம் சொன்னபோதிலும் தீர்க்கதரிசியாகிய மீகாவினிடத்தில் மாத்திரம் தேவனுடைய வார்த்தை இருந்தது. அந்த 400 பேரும் ஒன்றுபோல் தீர்க்கதரிசனம் சொன்னாலும் அவர்கள் கள்ளத் தீர்க்கதரிசிகளே (II நாளா 18 அதி).

(தொடரும்)

---

"பின்பு கர்த்தர் ஆரோனை நோக்கி: நீயும் உன்னோடே கூட உன் குமாரரும், உன் தகப்பன் வம்சத்தாரும் பரிசுத்த ஸ்தலத்தைப் பற்றிய அக்கிரமத்தைச் சுமக்க வேண்டும், நீயும் உன்னோடே கூட உன் குமாரனும் உங்கள் ஆசாரிய ஊழியத்தைப் பற்றிய அக்கிரமத்தைச் சுமகக வேண்டும்" (எண் 18:1).

---

# முகமது மார்க்கத்தை அறிந்து கொள்ளுதல்
## (MOHOMEDENISM)

மகமதென்பவனால் உண்டாக்கப்பட்டு அரபியர், துருக்கியர் முதலியவர்களால் கை கொள்ளப்பட்ட மார்க்கம். இதற்கு இஸ்லாம் மார்க்கமென்றும் பொருளுண்டு (Islam). இஸ்லாம் என்பது பக்தி என்று அர்த்தம் கொள்ளும்; அதனால் இந்த சமயத்தார்களுக்கு பக்தர்களென்று அர்த்தம் கொள்ளும் "முஸ்லம்" அந்த பேர் பன்மையில் 'முஸ்லமான்' என்று திரியும்.

1. மகமதென்பவன் கி. பி. 570-ம் வருஷம் அரபி தேசத்திலுள்ள மக்கா என்கிற பட்டணத்திலே பிறந்தான். அவன் தகப்பன் பெயர் அப்துல்லா. தாயின் பெயர் அமீனா.

இவர்கள் காப்பிர்கள் என்கிற விக்கிரக ஆராதனைக்காரராயிருந்தார்கள். மகமது சிறு வயதாயிருக்கும்போதே தகப்பன் மரித்துப்போனபடியால் தன் பாட்டனாகிய அப்துல் மொதலாப் என்பவனிடத்தில் சில காலமிருந்து பின்பு சிரியா முதலிய தேசங்களில் வியாபாரம் பண்ணிக் கொண்டிருந்த தன் பெரிய தகப்பனாகிய அபுதாலப் என்பவனிடத்தில் வளர்ந்தான் இப்படியிருக்கும்போது ஐசுவரியமுள்ளவனாயிருந்த தன உறவின் முறையாளாகிய கதிஜா என்னும் ஒரு விதவையினிடத்தில் உத்தியோகத்திற்கு அமர்ந்து சிலகாலம் உண்மையுள்ளவனாய் அவளிடத்தில் பணிவிடை செய்துகொண்டிருநத பின்பு அவளையே விவாகம் பண்ணிக் கொண்டு அவளால் கிடைத்த செல்வத்தினால் ஒட்டக வியாபாரம் முதலியன செய்து மக்கா பட்டணத்தில் முக்கியமான வியாபாரியாயிருந்தான். மகமது கூர்மையான புத்தியும் விவேகமுமுடையவனாய் இருந்து வியாபாரம் பண்ணிக் கொண்டிருக்கையில் அந்தந்த தேசத்திலுள்ள மதாசாரங்களை விசாரித்து அறிந்து கவனித்துக் கொண்டே வந்தான்.

அக்காலத்தில் சில யூதர்கள், பல கிறிஸ்தவர்கள் அரபி தேசத்திலும் அதை அடுத்த தேசங்களிலும் இருந்தார்கள். அவர்களுடைய சில ஒழுக்கங்களை மகமது நல்லதாக ஒத்துக் கொண்டாலும் அவர்களுடைய ஆராதனைகளையும் நடக்கைகளையும், பிரிவினைகளையும் கண்டு தன் சொந்த தேசத்தாரின் விக்கிரகாராதனையையும் வீண் பக்தியையும் குறித்து கவலை அடைந்து ஆதாம், நோவா, ஆபிரகாம், மோசே, இயேசு என்னப்பட்ட தீர்க்கதரிசிகளுடைய ''நபி''மார்களால உண்டாக்கப்பட்ட பூர்வ மதத்தை புதுப்பித்து தன் தேசத்தாருக்கு பிரசித்தமாக்க வேண்டுமென்று வைராக்கியம் கொண்டு தன் 40-ஆம் வயதில் கி பி. 610 ஆரா என்ற மலையினருகே வாசம் பண்ணி கபிராயேல் என்ற தேவதூதன் தனக்கு தரிசனையானாரென்று தன் மனைவிக்கு அறிவித்து தான் ''அல்லா''வினால் அனுப்பப்பட்ட நபி என்று அறியப்படுததி ஒரு நூதனமான வேதத்தை ஸ்தாபனம் பண்ணும்படியாகத் தீர்மானித்துக் கொண்டான். அவனுடைய பெண்ஜாதியாகிய கதிஜாளும் அவனுடைய இனத்தான் ஒருவனும் அவனுலடைய இனததானாகிய அலி என்பவனும் அவனுலடைய அடிமை பெண்ணாகிய ஒரு பெண்ணையும் தன்னுடைய கொள்கைகளை ஏற்றுக் கொண்டதனனுடைய சீடர்கள் என்று பிரகடனப்படுத்தினான்.

மகமது தனக்கு ''கொரான்'' என்னும் வேதாகமம் பங்கு பங்காக பல காலங்களில் கபிராயேல் தூதனாலே கொடுக்கப்பட்டதென்று சொன்னான். ஆனால் ''வாயிரா'' என்ற ஒரு கிறிஸ்தவ சந்நியாசியையும் ஒரு யூதனையும் கொண்டு பலசமயத்தாருக்கு இசைவாக 'கொரான்' எழுதி வைக்கப்பட்டதாக திட்டமாகத் தெரிகிறத. 16ஆம் சூரத்திலே ''பொய்யாகவே எவனோ ஒருவன இந்த கொரானை எழுதும்படிக்கு அவனைப் படிப்பிக்கிறானென்று மக்காபுரியார் சொன்னதற்கு அந்நிய பாஷைக்காரனோ சுயமான அரபியாச்சுதே'' என்று போக்கு சொல்லியிருக்கிறான். மேலும் முகமதுக்கு அடிக்கடி ஒரு வலிப்பு வரும். அது வரும்போது தன்னை மூடச் சொல்லி அதை அல்லாவினால் உண்டாகும் சன்னதம் என்று சொல்லிக் கொண்டு வந்தான். இதனால் 73 74ஆம் சூரத்தில் மூடப்பட்டவரென்று எழுதியிருக்கிறது. நாளுக்கு நாள் மகமது பலத்துப் போவதை மக்காவின் தூனா கண்டு கி பி 622ஆம் வருஷம் அவனையும், அவனுடைய புது வேதக்காரர்களையும் பிடித்து கொலை செய்ய வேண்டுமென்றிருந்த போது அவன் புறப்பட்டு மதினா என்ற பட்டணத்துக்கு ஓடிப் போனான். ஓடிப் போதலுக்கு அரபி பாஷையிலே இஜ்ரா (Hijrah) என்று பெயர். இந்த இஜ்ரா வருஷ முதல் மகமது மார்க்கத்துக்காரர்கள் வருஷக் கணக்கை கணக்கிடுகிறார்கள். மதினாவில் மகமத மஜித் என்ற ஒரு பள்ளியைக் கட்டி அபுபக்கருடைய மகளாகிய அயஷா என்ற பெண்ணைக் கலியாணம் பண்ணினான். மகமதுக்கு உண்டாயிருந்த 40 வைப்பாட்டிகளுக்கும் 9 பெண்ஜாதிகளுக்குள்ளும் இவளே பிரதான நாயகியாக இருந்தாளென்று சொல்லுகிறார்கள் மகமது ஊமர் என்பவனுடைய மகளாகிய எப்பாகாவின் படுக்கையறையிலே மரியம் என்ற வெள்ளாட்டியோடே சரசம் செய்து கொண்டிருந்ததை ''ரப்கான்'' கண்டு அதனால் உண்டான

சண்டையால் நான் இனி ஒருக்காலும் அந்த வெள்ளாட்டியோடே கூடுகிறதில்லையென்று அவளுக்கு சத்தியம் பண்ணிக் கொடுத்தான். அப்படிச் செய்தும் சிற்றின்பத்தினால் மயங்கி 6ஆம் சூரத்திலே அல்லா தன்னைப் பார்த்து நபியே, உன் பெண்டுகளுக்குச் சம்மதியாக வேண்டுமென்பதற்கு இரக்கமாக பொறுத்துக் கொள்ளுகிற அல்லாவானவர் உனக்கு உத்தாரங் கொடுத்ததை நீ ஆகாதென்று தள்ளுவானேன் என்று எழுதி வைத்தான். மேலும் சத்ய என்ற தன் தத்துக் குமாரனுடைய பெண் சாதியாகிய சயனட் என்பவளை சேர்த்துக் கொண்டதினால் ஜனங்கள் எல்லோரும் அவன் பேரில் குற்றம் சாட்டினபோது அவன் 83ஆம் சூரத்திலே அல்லா உங்கள் மஞ்சாரப் பிள்ளைகளை நீங்கள் பெற்ற பிள்ளைகளாக பாவிக்கிறதில்லையென்று எழுதி வைத்தான்.

(தொடரும்)

வாசல் வழியாய்ப் பிரவேசியாமல் வேறு வழியாய் ஏறுகிறவன் கள்ளனும் கொள்ளைக்காரனுமாயிருக்கிறான்.

(யோவா 10:1)

---

மாதர் பகுதி :

# மணவாட்டி ஓடிப்போய் சேர்ந்து கொள்வாளோ?

இருளிலே வனாந்தரத்தில் பிரயாணம் பண்ணுகிறவர்களும் கடலிலே படகிலே பிரயாணம் பண்ணுகிறவர்களும் தாங்கள் எத்திசையில் போகிறோம் என்று அறியாமல் போய்விடலாம். இவர்கள் திசைமாறி அங்கும் இங்கும் அலைந்து திரிய வாய்ப்புண்டு. ஆனால் இவர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்து நட்சத்திரங்களைக் கவனித்து திசையைக் கண்டுபிடிக்க முடியும். விசேஷமாக துருவ நட்சத்திரங்கள் வட திசையில் நிலை மாறாமல் அப்படியே இருக்கும். மனிதன் திசை மாறி அங்கும் இங்கும் அலைவான். ஆனால் நட்சத்திரங்களோ காலா காலமும் அப்படியே இருக்கிறது. வழி விலகின எவனும் இதை கவனித்து நடக்க வேண்டிய வழியைக் கண்டு நடக்க முடியும்.

இவ்விதமாகவே மனிதர்கள் இறைவனுடைய வழியை விட்டு விலகி திசைமாறி போய் விடுகிறார்கள். பெண்கள் எப்படி இருக்க வேண்டும்? எவ்விதம் இருக்கவேண்டும்? ஆண்கள் எவ்வாறு குடும்பத்தை நடத்த வேண்டும்? வேலைக்காரர் கடமை என்ன? முதலாளியின் பொறுப்பு என்ன? நண்பர்கள் எதற்கு? அயலானுடன் பழகும் முறை இப்படி எல்லாவற்றிற்கும் வேதாகமத்தில் ஆலோசனை இருக்கிறது. இறைவனுடைய இவ்வாலோசனைகள் நேற்றும் இன்றும் என்றும் மாறாதவைகள். தடுமாறுகிற மனித சமுதாயம் தப்பித்துக் கொள்ள வேதாகமமே வழிகாட்டுகிறதாயிருக்கிறது.

விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயிருக்க வேண்டும் என்பது ஆவியானவரின் கட்டளை (எபி 13:4). இந்நாட்களில் கிறிஸ்தவர்கள் எனப்படுகிறவர்கள் (So Called Christians) விவாக முறைமைகளைக் கெடுத்துப் போட்டு உலக மனிதர்களுடைய (பாவிகள்) வழிகளில் நடந்து தங்களை நாகரீக கிறிஸ்தவர்கள் என்கிறார்கள் (Modern Christians). இவர்கள் துணைகளை (கணவன்மார்/மனைவிமார்கள்) தாங்களே தேடிக் கொள்கிறார்கள். வழியில் பார்க்கும் நபரையோ, உடன் வேலை செய்பவர்களையோ அல்லது அடிக்கடி சந்திப்பவர்களையோ அல்லது தேவாலயத்தில் வருகிறவரையோ இப்படி யாரையாவது நேசித்து இழுத்துக் கொண்டு ஓடிப் போகிறார்கள். சில நாடுகளில் முதலாவது பழகி கணவன் மனைவி போல் வாழ்ந்து (உடலுறவு கொண்டு) தங்களுக்கு இன்பம் அளிப்போரைத் துணையாகக்

கொண்டு விவாகம் முடித்து சில நாள் வாழ்ந்து பின்னர் ? என்கிறார்கள். இப்படிப் பட்டவர்களுக்கு விவாகம் முடித்து வைக்கிற பெந்தேகொஸ்தேகாரர்களும் உண்டு. பின்னர் விட்டுவிட்டு வேறு நபரோடே சேர்கிறார்கள். இன்னும் சிலர் ஒன்றோடு பலவற்றை சேர்த்துக் கொள்கிறார்கள். இவர்களெல்லாம் விவாகத்தைப் பற்றி இறைவன் காண்பித்த வழிகளை விட்டு விலகிப் போன விபச்சாரராயிருக்கிறார்கள்.

**வேதாகமத்தில் இறைவன் அங்கீகரித்து ஆசீர்வதித்த விவாகங்களைக் கவனிக்க:**

ஆதியிலே தேவன் மனுஷனை (ஆதாம்) உண்டாக்கினார். அவனுக்கோ துணை தேவைப் பட்டது (ஆதி 2:15). ஆனால் ஆதாமோ தன் துணையை தேடி அலையவில்லை. இறைவன் அவனுடைய விலா எலும்பு ஒன்றை எடுத்து மனுஷியாக உண்டாக்கி (ஏவாள்) ஆதாமுக்கு ஏற்ற துணையாக அவளை ஒப் படைத்தார் (ஆதி 2:22) ஏவாள் தன் தகப்பனாகிய தேவனால் ஒரே புருஷனாகிய ஆதாமுக்கு கற்புள்ள கன்னிகையாக கரம் பிடித்து கொடுக்கப்பட்டாள். புருஷனான ஆதாம் ஏவாளை ஏற்றுக் கொண்டு அவளை பராமரிக்க, போஷிக்கக் கடமைப்படுகிறான். இந்த முதலாம் விவாகத்தில் மணவாட்டி தனனுடைய தகப்பனால் மணவாளனிடம் ஒப்புவிக்கப்படுகிறாள். ரெபேக்காளை கற்புள்ள கன்னிகையாக அவள் தகப்பனாகிய பெத்துவேல் ஈசாக்குக்கு ஒப்புக் கொடுத்தார் (ஆதி 24:50) லேயாளை அவள் தகப்பனாகிய லாபான் கற்புள்ள கன்னிகையாக யாக்கோபுக்கு ஒப்புக்கொடுத்தார் (ஆதி 29:21-23). அக்சாளை அவள் தகப்பனாகிய காலேப் ஒத்னியேலுக்கு கற்புள்ள கன்னிகையாக ஒப்புக் கொடுத்தார் (யோசு 15:17). மீகாளை அவள் தகப்பன் சவுல் தாவீதுக்கு ஒப்புக் கொடுத்தார்!(I சாமு 18:27).

பரிசுத்த அப்போஸ்தலனாகிய பவுலும் கன்னிகையை விவாகம் பண்ணிக் கொடுக்கும் உரிமை உள்ளவன் அவன் தகப்பனே என்று எழுதியிருக்கிறார் (I கொரி 7:28).

ஒவ்வொரு நாட்டிலும் வெவ்வேறு விதமான முறைமைகள் (Culture) இருக்கலாம். ஆனால் வேதத்தை விசுவாசிக்கிற கிறிஸ்தவர்களின் முறை வேதம் காட்டும் முறைமையாக இருக்க வேண்டும். அதுவே இயேசுவினால் அங்கீகாரம் பெறும். ஆசீர்வாதமும் பெறும். இப்படியிருக்க கன்னிப் பெண் தகப்பனுக்குத் தெரியாமல் ஓடிப் போய் யாரையாவது கட்டிக் கொண்டால், அதை பரிசுத்த விவாகம், யாவருக்குள்ளும் கனம் பெற்ற விவாகம் என்று சொல்லக் கூடுமோ?

கன்னியர்கள் நேசிக்கும் சௌந்தரியமுள்ள மணவாளனை இதோ! யாவரும் (கிறிஸ்தவர்கள்) எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த மணவாளனாகிய இயேசு கிறிஸ்துவை ஓடி போய் சேர்ந்து கொள்வேன் என்று கிறிஸ்தவ விசுவாசிகள் எண்ணிக் கொள்கிறார்கள். ஆகையால் நீ எந்த சபையில் இருந்தால் என்ன? எந்த உபதேசத்தை கைக் கொண்டு வந்தால் என்ன? எந்த நிலையில் இருந்தால் என்ன? அவர் வரும் போது பறந்து போய்சேர்ந்து கொள்வோம் என தப்பிதமான எண்ணம் கொள்கிறார்கள். இயேசுவானவர் திருவசனத்தைக் கொண்டு தண்ணீர் முழுக்கினால் சுத்திகரித்து கறைதிரை ஒன்றுமில்லாமல் பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ள சபையாக தமக்கு முன் நிறுத்திக் கொள்ளும்படி அதற்காக தம்மைத் தாமே ஒப்புக் கொடுத்தார் (எபேசி 5:26,27).

திருச்சபையை மணவாட்டியாக உவமித்திருப்பதை வேதாகமத்தில் காண்கிறோம். இந்த மணவாட்டி மணவாளனிடம் தானாக ஓடிப் போவாளோ! தேவ ஜனங்கள் திருமணத்தின் நியமத்தைப் பெற்றிருக்க ஆட்டுக் குட்டியானவரின் கல்யாணத்தின் நியமம் என்ன? இதோ ஓர் அப்போஸ்தலன் திருச்சபையாரிடம் சொல்வதைப் பாருங்கள்: நான் உங்களை கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக் கொடுக்க நியமித்த படியால் உங்களுக்காக தேவ வைராக்கியமான வைராக்கியம் கொண்டிருக்கிறேன் (II கொரி 11:2). யார் இந்த அப்போஸ்தலன்? கிறிஸ்துவுக்குள் பதினாயிரம் உபாத்தியாயர்கள் உங்களுக்கு இருந்தாலும் தகப்பன்மார் அநேகர் உங்களுக்கு இல்லையே. கிறிஸ்து இயேசுவுக்குள் சுவிசேஷத்தினால்

நான் உங்களைப் பெற்றேனே. ஆகையால் என்னைப் பின்பற்றுகிறவர்களாகுங்கள் (I கொரி 4:15-16) என புத்தி சொல்கிற தகப்பனாயிருக்கிறார். திருச்சபையின் தகப்பனாயிருக்கிறார். பிள்ளைகள் கெட்டுப் போகக் கூடாதே என்று பயப்படுகிறார் (கலா 4:11). பிள்ளைகள் தவறிப் போகிறதினால் மனம் எரிகிறார் (II கொரி 11:29). இப்படிப்பட்ட தகப்பனே திருச்சபையாகிய மணவாட்டியை மணவாளனிடம் ஒப்புக் கொடுக்க வேண்டியதே வேதாகம நியமம். உனக்கு தகப்பன் உண்டா? யார் அவர்? நீ பரிசுத்த கனமுள்ள விவாகம் செய்ய விரும்புகிறாயா? ஓடிப்போக எண்ணமா? தேவனால் அனுப்பப்பட்ட ஒரு மனுஷன் இருந்தான் அவன் பெயர் யோவான். கர்த்தருக்கு வழியை செவ்வை பண்ணுங்கள், என்று ஏசாயா தீர்க்கதரிசி சொன்னபடியே இந்த யோவான் வனாந்தரத்தில் கூப்பிடுகிறவனுடைய சத்தமாய் இருந்தார் (யோவா 1:23). தேவனால் அனுப்பபபட்ட இந்த சதத்தோடே சேர்ந்தார்கள், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு போன்ற பிதாக்களுடைய இருதயத்திற்கொப்ப இருப்பபபட்ட ஆபிரகாமின் சந்ததியார். இவர்களை இரட்சகர் இயேசுவிடம் ஒப்புக் கொடுத்தார யோவான் (யோவ 1:29-51). "இதோ மணவாளன் இயேசு வரப் போகிறார். இதோ மணவாளன் வருகிறார். அவருக்கு எதிர் கொண்டுபோக புறப்படுங்கள் என்கிற சத்தம் பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடம் திருப்பும்படி தேவனால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலனாயிருக்கிறார் (மல் 4:6). இந்த சத்தத்தின் ஆலோசனைக்கு உட்பட்டு அவரோடே ஐக்கியப்படுகிறவர்களே வரப் போகிற மணவாளனாகிய இயேசுவுக்கு மணவாட்டியாய் ஒப்புக் கொடுக்கப்படுவர்கள். இந்த சத்தத்தோடே ஐக்கியப்படாதோர் விளக்கில் எண்ணெயில்லா புத்தியற்ற கன்னிகைகளோ கைவிடப் படுவார்கள்.

நீங்களோ புத்தியுள்ள மணவாட்டியாய் யாவருக்குள்ளும் கனமான பரிசுத்த விவாகத்திற்கு ஆயத்தப்படுங்கள். ஓடிப்போக எண்ணாதீர்கள். ஓடிப் போகிறவள் கற்புள்ள கன்னிகை அல்ல.

---

நான் தீட்டுபடவில்லை, நான் பாகால்களைப் பின்பற்றவில்லை என்று நீ எப்படிச் சொல்லுகிறாய்? பள்ளத்தாக்கிலே, நீ நடக்கிற மார்க்கத்தைப் பார்; நீ செய்ததை உணர்ந்து கொள், தாறுமாறாய் ஓடுகிற வேகமான பெண்ணொட்டகம் நீ. (எரே 2:2, 3)

---

# இயேசுநாம கூட்டத்தாரின் (Only Jesus) தீவிரவாதிகளில் ஒருவருடைய இரகசியக் குறிப்பிலிருந்து...

பிதாவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் ஒருவரல்ல .-

தேவனே பிதா என்று 181 தடவை இயேசு கிறிஸ்து கூறுகிறார்.

மத் - 7:21; 10:33; 16:17, 27; 18:10, 19,35; 20:23; 24;36; 25:34; 26:29,39,42.

மாற் - 8:38; லூக். 9:26; 10:21,22; 11:13; 22:29; 24:49.

யோ - 1:18; 4:23; 5:17-19, 23,26; 5;36,37; 6:27,32, 40,44; 5:43; 8:16, 19, 26, 28, 49, 38.

அனுப்புகிறவரும் அனுப்பப்படுகிறவரும் ஒரே நபரல்ல இருவர் :-

யோ 3:2.34; 4:34; 5:30,44; 7:16,18,28,33; 8:29,42; 12:44,45,49; 13:3; 16:5; 20:21; 17:18.

1. இயேசு பிதாவினால் உலகத்திற்குக் கொடுக்கப்பட்டவர் (யோ 3:16).

2 இயேசு பிதாவினாலேயன்றி அவராலே ஒன்றுமே செய்ய முடியாது (யோ 5:19).

3. இயேசு பிதாவினிடத்திலிருந்து அதிகாரம் பெற்றார் (யோ 10:18; 13:3).

4. இயேசுவின் பிரசங்கம் பிதாவினிடத்திலிருந்து பெற்றவைகள் (யோ. 8:40, 26; 15:15).

5. குமாரன் பிதாவால் இராஜ்யத்தைப் பெற்றார் (லூக் 22:29).

6. குமாரன் பிதாவுக்குக் இராஜ்யத்தை கடைசியாக ஒப்புக் கொடுப்பார் (I கொரி. 15:24).

7. குமாரன் பிதாவுக்குக் கீழ்ப்பட்டிருப்பார் (I கொரி 15:27,28).

8 கிறிஸ்துவின் தலை தேவன் (I கொரி 11:3).

9. தேவன் குமாரனை மரித்தோரிலிருந்து உயிர்ப்பித்தார் (எபே 1:19, 20).

10. கிறிஸ்து பிதாவிடம் செல்வதற்கான வழி (யோ 14:6).

இயேசு பிதாவை நோக்கி ஜெபித்தார்.

மத் 26:33. 42; 27:46

மாற் 14:32; 15:37.

லூக் 3:21; 6:12; 9:18,28; 22:39,44; 23:46.

யோ 11:41.

**யோவான் 14:1**

*(ஏகத்துவ நாமக்காரர்களைப்பற்றி இன்னும் வரும்)*

---

"என் ஆடுகள் உங்கள் கால்களால் மிதிக்கப்பட்டதை மேயவும், உங்கள் கால்களால் குழப்பப்பட்டதைக் குடிக்கவும் வேண்டுமா? (எசே 34:19)

---

# சில மனிதர்களோடு சில விவாதங்கள்

ஒரு இந்து மதப்பெரியவரை சந்தித்தேன். அவரிடம் மரணத்திற்கு பின் உங்களுடைய நம்பிக்கை என்ன? என்று விசாரித்தேன், மரித்த பின் என்னுடைய செய்கைக்குத் தக்க படி இன்னொரு மனுஷனாய் பிறப்பேன், இப்படி பல பிறவிகள் எடுத்து பின்னர் எந்தப் பிறவியில் நான் இறைவனுக்கேற்ப இருக்கிறேனோ அந்தப் பிறவியில் இறைவனோடு சேர்வேன். அதாவது முக்தி அடைவேன். அதற்கு பின் பிறவி எடுக்க மாட்டேன் என்று அவர் மறு உத்தரவு சொன்னார். அது எப்படி என்று கேட்டேன். பதிலாக கடலிலே தண்ணீர் இருக்கிறது வெயில் ஏறினவுடன் தண்ணீர் ஆவியாகி மேலே சென்று பின்னர் மழையாகப் பொழிந்து தண்ணீராகி கடலிலே கலக்கிறது போல இருக்கிற மனிதன் இறந்து வேறொரு பிறவி எடுத்து வேறு மனிதனாய் மறுபடியும் பூமிக்கு வருகிறான் என்றார். நான் அவரிடம்

ஐயா உங்கள் நம்பிக்கையின்படி முதலாவது உலகில் குறிக்கப்பட்டுள்ள எண்ணிக்கை உள்ள மனிதர்கள் இருக்கிறார்கள். இவர்கள் மறுபடியும் மறுபடியும் பிறக்கிறார்கள். இப்படித்தானே என்றேன். ஆமாம் என்றார். அப்படியானால் இந்த குறிக்கப்பட்ட எண்ணிக்கையிலிருந்து கொஞ்ச பேர் முக்தி அடைந்து கொண்டே இருப்பதால் இந்த எண்ணிக்கை குறைந்து கொண்டேயல்லவா வரும். முடிவில் ஒருவருமே இந்தப் பூமியில் இல்லாமல் எல்லாரும் முக்தி அடைவார்கள்தானே என்றேன்.

அவருக்கு நான் விளக்கம் கொடுத்து அவரது நம்பிக்கை தவறு என்று காண்பித்தேன். எப்படியெனில் நாளுக்குநாள் வருடத்துக்கு வருடம் மாதத்துக்கு மாதம் பூமியில் ஜனத்தொகை பெருகிக் கொண்டே போகிறது. இப்படிப் பெருகிக் கொண்டே போகிறபடியால் மனிதன் வாழும் ஸ்தலங்களை ஆகாய மண்டலத்தில் உருவாக்கலாமா என்று ஆராய்கிறான். எனவே முன்பு இருந்த மனிதனே மறுபடியும், மறுபடியும் பிறந்து வருவானேயானால் ஜனத்தொகை ஒருபோதும் கூடிக் கொண்டிருக்காதே. குடும்பக் கட்டுப்பாட்டுக்கும் அவசியமில்லையே பரிசுத்த வேதாகமத்தில் எழுதியிருப்பது தேவன் ஒருவனை உருவாக்கினார். நீங்கள் பலுகிப் பெருகி பூமியை நிரப்புங்கள் என்று ஆசீர்வதித்தார். அதன்படியே பூமியிலே மனுஷர்கள் பெருகிக் கொண்டே இருக்கிறார்கள். ஒரு விதை போட்டால் அது முளைத்து மரமாகி அநேக விதைகளைத் தருகிறது. அந்த விதைகள் இன்னும் திரளான விதைகள் தருகிறது. இப்படிப் பெருகிக் கொண்டே போகிறது. ஆகவே இயற்கையின் தத்துவப்படி பரிசுத்த வேதாகமம் கூறும் விளக்கமே சரி.

ஒரே தரம் மரிப்பதும் பின்பு நியாயத்தீர்ப்படைவதும் மனுஷனுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது (எபி 9:27) என்று பரிசுத்த வேதாகமத்தில் சொல்லியபடி மனிதன் மரித்து அவனுடைய செய்கைக்குத் தக்க பலனை அடைகிறான் என்றேன். அவர் பேந்த பேந்த விழித்தார்.

இன்னொரு மனிதனை சந்தித்தேன். அவனுடைய நம்பிக்கையைப் பற்றி விசாரித்தேன் அவன் சொன்னான். மனிதன் மரித்த பின் நாயாகவோ, கழுதையாகவோ, பன்றியாகவோ, புலியாகவோ, எறும்பாகவோ பிறக்கிறான். பின்னர் அவன் அந்தப் பிறவியில் இறைவனுக்கேற்ப வாழ்வானானால் மறுபடியும் மனிதனாய் பிறப்பான். அதிலும் இறைவனுக்கேற்ப வாழ்வானானால் முக்தியடைவான்.

நான் அவனிடம் கேட்டேன். ஒரு புலி என்ன பாவம் செய்கிறது. அது பிற மிருகங்களை அடித்துப் புசிக்கிறதினால் !அது பாவம் செய்கிறதா? அதற்கு நியமிக்கப்பட்ட ஆகாரம் அதுதானே. ஒரு பறவை என்ன தீங்கு செய்கிறது. மனிதனைத் தவிர எல்லா ஜீவன்களும் இயக்கிவிடப்பட்ட இயந்திரங்கள் போல அவைகளின் அமைப்புக்கேற்றபடி செயல்படுகின்றன. ஆகவே விலங்காய்ப் பிறந்த மனிதன் அந்தப் பிறவியில் இறைவனுக்கேற்ற காரியம். இயற்காத காரியம் என வேறுபிரித்து செய்து இறை உலகம் அடைய வாய்ப்பில்லை என்றேன். ஆள் அமைதியானார்.

கொலை செய்யாதிருப்பாயாக என்று கிறிஸ்தவர்களின் வேதம் சொல்லுகிறது. ஆனால் அவர்களோ ஆடு, மாடுகளை கொலை செய்து வாயில்லா ஜீவன்களைச் சாப்பிடுகிறார்கள். இப்படி உயிர்வதை செய்வது நியாயமா; என்ற குற்றம் சாட்டினான் ஒருவன். நான் அவனுடைய காலைப் பார்த்து நீ போட்டிருக்கிற செருப்பு எதினால் செய்யப்பட்டது என்று கேட்டேன். தோலினால் செய்யப்பட்டது என்றான். உயிரினங்களைக் கொன்று மாம்சத்தைப் புசித்தால் பாவம், கொன்று அதன் தோலை உரித்து உனக்குப் பாதரட்சை செய்து கொண்டால் பாவமில்லையோ? பட்டுப் பூச்சிகளைக் கொன்று உன் தாயார் உடுத்திக் கொள்ள பட்டுச் சேலை செய்து கொண்டால் அது உயிர்வதை இல்லை, அப்படித்தானே!

ஒரு மனிதனைக் கொன்றால் அவன் அம்மா, அப்பா என்று கத்துவான். ஓர் ஆட்டைக் கொன்றால் ம்மா என்று அலறும். ஒரு மரத்தின் கிளையை வெட்டினால் அது பேசாமல் இருக்கிறது. ஆனால் எல்லாவற்றிற்கும் உயிர்

இருக்கிறது. அப்படியிருக்க கீரையை கிள்ளி சாப்பிடுகிறாய். காய்களைக் கொய்து சாப்பிடுகிறாய். மரத்தை வெட்டி விறகாக்குகிறாய். இப்படி உயிர்வதை செய்வது நியாயமோ?

வேதத்தில் சொல்லியிருப்பது ''மனிதனை கொலை செய்யக் கூடாது'' எல்லா உயிரினங்களைக் காட்டிலும் மனிதனே மேலானவன் அவனைக் கொலை செய்தால் பாவம். மனிதன் உயிர் வாழ ஆகாரமாய் கொடுக்கப்பட்ட விலங்கினங்களையும், பறவைகளையும், மச்சங்களையும் சாப்பிடுகிறது பாவமல்ல. உயிரினங்களைக் கொலை செய்ய அஞ்சும் வேஷ பக்திக்காரர்கள் மனிதனை கொலை செய்யச் சாடுகிறார்கள். கள்ள மதம் என்றேன்.

ஒரு ரஷ்ய தேசத்து ஞானி என்னோடே பேசிக் கொண்டிருக்கையில் ஆகாயத்தை உற்றுப் பார்த்து ஓ! எவ்வளவு அழகாக இருக்கிறது என்றான். நான் அவரிடம் இவைகளையெல்லாம் உண்டாக்கின இறைவனை நீர் நம்புவதில்லையே என்றேன் அவர் சிரித்தவாறு ஆ! இந்தியர்கள் வினோதமான நம்பிக்கையை கற்றுக்கொடுத்திருக்கிறார்கள்என்றார். நான் அவரை நோக்கி நீர் எதற்காக வாழ வேண்டும், என்றாவது ஒருநாள் சாகத்தானே போகிறீர். இன்றைக்கே செத்துப் போனால் என்ன என்றேன். உடனே அவர் ஓ! Life is Interesting. வாழ்க்கை இன்பமாயிருக்கிறது. இங்கே இந்த தேசத்தைப் பாரும். எண்ணிறந்த மக்கள் ஆகாரமில்லாமல் வியாதியிலும், வருத்தத்திலும், தங்க இடமில்லாமலும், வஸ்திரமில்லாமலும் இருக்கிறார்களே. இவர்களுக்கு வாழ்க்கை இன்பமாகவேயில்லை. இன்பமாக மாறுமென்ற நம்பிக்கையுமில்லையே இவர்கள் ஏன் வாழ வேண்டும். செத்துப் போகலாமே, அல்லது எல்லாரையும் கொண்டு போய் கடலில் அமிழ்த்து விடலாமே. ஏன் செய்யவில்லை? என்றேன். முகம் வெளிறிப் போய்விட்டார். மனிதன் வாழ்வது இறைவனிடம் நன்மை பெற்று அவருக்கு நன்றி செலுத்தி அவரை மகிமைப்படுத்தி இறைவனுக்காகவே வாழ்கிறான். வாழ வேண்டும். படைத்தான் படைப்பெல்லாம் மனுவுக்காக, மனுவைப் படைத்தான் தன்னை வணங்க என்பது ஆன்றோர் கூற்று என்றேன்.

சில அரைகுறை படிப்பாளிகள் மனிதன் குரங்கிலிருந்து வந்தான். குரங்கு தவளையிலிருந்து வந்தது. தவளை பூச்சியிலிருந்து வந்தது பூச்சி அணு உயிரிலிருந்து வந்தது என்று தங்களுடைய நம்பிக்கையைத் தெரியப்படுத்தினார்கள். உன்னுடைய தத்துவப்படி யானைக்கு முதலாவது துதிக்கை இல்லை, அது மூக்கை உரசி உரசி காலப்போக்கில் துதிக்கையாக மாறிவிட்டதாம். ஆடு உயர இருக்கும் தழையை பறிக்க கழுத்தை நீட்டி, நீட்டி ஒட்டகச் சிவிங்கி ஆகிவிட்டதாம். இவைகள் எல்லாம் உண்மையானால் நீ பறக்க வேண்டும் என்று விரும்பி உன் கையை ஆட்டிக் கொண்டே இருந்தால் உனக்குச் சிறகு முளைத்து பறக்க முடியுமென்று நம்புகிறாயா? அல்லது நீ அப்படி முயற்சித்து முடியாமல் போக உன் மகனும் அப்படி முயற்சித்து, அவன் மகனும் முயற்சித்தால் சிறகு ஏதாவது ஒரு சந்ததியில் முளைக்குமல்லவா? இதை நம்புகிறாயா? நிருபிக்க முடியுமா? என்றேன் வாயடைத்துப் போனார்கள்.

வேதம் சொல்லுகிறது. தேவன் சகலவற்றையும் நன்மையும் செம்மையுமாய் சிருஷ்டித்தாரென்பது.

தேவன் (சிருஷ்டிகர்த்தா) என்று ஒருவரில்லை என்று மதிகேடன் ஒருவன் சொன்னான் உலகம் எப்படி உருவாயிற்று என்று கேட்டேன். அது இருந்தது. அதிலிருந்து இது வந்தது. இது அப்படியாகி, இப்படியாயிற்று என்று புழுகினான். நான் சொன்னேன். நான் இதுவரை எந்த மனிதனும் பிரவேசித்திராத இடம் என்று சொல்லப்பட்ட இடத்திற்குள் பிரவேசித்து அங்கே ஒரு பாழடைந்த மண்டபத்தைக் கண்டேன். அது செங்கற்களால் கட்டப்பட்டு மச்சுப்பாவி செதுக்கப்பட்ட மரக்கட்டைகளால் ஜன்னல், கதவுகள் எல்லாம் அதில் இருந்தது. இங்கே மனிதர்கள் வந்ததே கிடையாது. அப்படியிருக்க இந்த வீடு எப்படி இங்கே வந்தது. இதை மனிதன் கட்டவேயில்லை என்று முற்றிலும் நம்பின நான் ஒரு காலத்தில் ஒரு பெரும் புயல் உண்டாயிற்று. அப்போது மணலும், விறகுகளும் ஒன்றாய்ப் பறந்து வந்தது. மரத்துக்கு மரம்

மோதி தீ உண்டாகி விறகெல்லாம் தீப்பற்றி எரிய அது மணலைச் சுட அலைகள் ஒரு இடத்தில் அமர காலப் போக்கில் அது இறுக மரங்கள் அதன்மீது விழ. அதன்மேல் மண், சுண்ணாம்பு இவைகளெல்லாம் தூண்களாய் வந்து பரவ அது பலவிதமான மாற்றங்களுக்கு உட்பட இந்த மண்டபம் உண்டாயிற்று என்று சொன்னால் நம்புவாயா? இல்லையென்றால் அந்த மண்டபம் எப்படி உண்டாயிற்று? ஏற்கனவே மனிதர்கள் அங்கே வாழ்ந்து. இல்லாமல் போயிருக்க வேண்டும். அந்த இடம் வெளியுலகுக்கு மறைக்கப்பட்டிருக்கிறது. இதுவே உண்மை.

வானமும் பூமியும் ஆகாயமும் பூமியிலுள்ள யாவும் நானும் நீயும் எவ்வளவு நேர்த்தியாய், செவ்வையாய் இறைவனால் உருவாக்கப்பட்டிருக்கிறோம் என்பதை நம்பாமல் இப்படி உருவானேன், அப்படி உருவானேன் என்று சொன்னால் எப்படி நம்பலாம். Bible-ஐத் தவிர மற்றதொன்றும் வேதமல்ல, தேவ வாக்குமல்ல.

''புறஜாதிகள் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து உம்மிடத்தில் வந்து, மெய்யாகவே எங்கள் பிதாக்கள் பிரயோஜனமில்லாத பொய்யையும், மாயையும் கைப்பற்றினார்கள் என்பார்கள்''

(எரே 16:19)

# இயேசு இந்த வீட்டில் பிறந்துள்ளாரா?

பாத்திரம் : சேகர் (பணக்காரச் சிறுவன்)

ஸ்டீபன் (ஏழைச் சிறுவன்)

அன்றும் வழக்கம்போல் அதிகாலைப் பொழுது, புள்ளினங்களின் ஏகோபித்த இனிய குரலொலிகளின் மெல்லிசையால் நகர்ந்து கொண்டிருந்தது, ஆங்காங்கே பசும்புல் பரப்பில் பல பச்சிளங் குழந்தைகள் பல வர்ண அங்கிகளை அணிந்தவாறு பாடி ஆடி விளையாடிக் கொண்டிருந்தனர் ஆனால் அதில் ஒரு சிறுவன் மட்டும் அவர்களது மகிழ்ச்சியில், ஆர்பாட்டத்தில் கலந்து கொள்ளாது ஓரமாக ஒரு கல்லின் மீது சோகமே திருவுருவாக அமர்ந்திருக்கிறான். அவன்தான் அந்த பணக்காரச் சிறுவன் சேகர். அவனது சோகத்திற்கு காரணம் எவை என்பதை கதையில் காண்போமா!

ஸ்டீபன் : சேகர் என்னடா கவலையாக இருக்கா நேற்று வரை நல்லாதனடா இருந்த.

சேகர் : (ஒன்றும் பேசாமல் அமைதியாக இருந்தான்) அமைதி . ..

ஸ்டீபன் : டேய் சேகர் உன்னதான்டா, ஏன் பேசாம இருக்க, பேச மாட்டியா? ஒம் பிரச்சனை என்னடா? என்ன விஷயம்?

சேகர் : ஸ்டீபன் நீ உண்மையிலேயே இயேசுவின் பிள்ளை, இயேசு கிறிஸ்து உங்க வீட்டில் பிறந்திருக்கிறார், ஆனால் நான் பாவி., நான் பாவி., ஸ்டீபன்.

ஸ்டீபன் : என்னடா சேகர்! என்ன சொல்றே? உனக்கு என்ன ஆச்சு?

சேகர் : ஸ்டீபன் இன்று அதிகாலையில் நடந்த ஒரு சோக சம்பவம் என்னை மிகவும் உருக்கிற்று.

ஸ்டீபன் : என்ன சம்பவம் சேகர்? எனக்கு கொஞ்சம் சொல்லுவாயா?

சேகர் : சொல்றேன் ஸ்டீபன், சொல்றேன் கேள், 'நம் தெரு ஓரத்தில் குடியிருக்கிற பிச்சை எடுக்கிற பாபுவின் தாயும் அவனும், இன்று அதிகாலையில் எங்க வீட்டுக்கு 'கிறிஸ்மஸ்' காரணமாக பிச்சை வாங்க வந்தாங்க. அப்போ நான் தெருவுல விளை யாடிக்கிட்டிருந்தேன், அந்த அம்மாவும் மகனும் ''அம்மா தாயே நல்லுள்ளம் கொண்டவர்களே, இயேசு இன்று பிறந்திருக்கார்மா'' என கூவினர்., இதனைக் கேட்ட என் அப்பாவும் அம்மாவும் வெளியே வந்து 'போடி கழுதை அறிவு கெட்டவளே, காலங்காத்தால விடிஞ்சதும் விடியாததுமா வந்து கழுத்து அறுக்கிறியே' என திட்டி அனுப்பி விட்டனர். அந்த தாயும் மகனும் மிகுந்த வருத்தத்துடன் திரும்பி சென்றனர். அவங்க போவும்போது அந்த மகன் அவங்க அம்மாகிட்ட ''அம்மா! அம்மா! இயேசு இந்த வீட்டில் பிறந்திருக்காராம்மா'' என்று கேட்டான் அப்போது அந்த தாய் மகவிடம் ''இல்லை மகனே இயேசு இந்த வீட்டில் பிறக்க வில்லை'' என்று கூறி அழும் தன் மகனை ஆறுதல்படுத்தினாள். பின்பு அவர்கள் அடுத்து இருந்த உங்களுடைய குடிசைக்கு கடந்து சென்றனர். அங்கே அவர்கள் சென்று ''அம்மா தாயே! அருள் உள்ளம் கொண்டோரே இயேசு இன்று பிறந்துள்ளாரம்மா'' என்று கூவினர் அந்த வார்த்தைகளைக் கேட்ட உன் அப்பாவும், அம்மாவும் உன் தம்பியுங்கூட வெளியே ஓடிவந்து அவர்களை உள்ளே அழைத்துச் சென்று, நன்கு உபசரித்து, சில நல்ல ஆடைகளையும் தந்து மகிழ்ச்சியுடன் அவர் களை அனுப்பினர், வெளியே செல்லும்போது அந்த மகன் தன் தாயிடம் ''அம்மா! அம்மா இயேசு இந்த வீட்டில் பிறந்துள்ளாராம்மா!'' என்று கேட்டான். அதற்கு அந்த தாய், ''மகனே உண்மையிலேயே இயேசு இந்த வீட்டில் பிறந்துள்ளார்'' என்று கூறி இருவரும் தங்கள் இருப்பிடமான சிறிய குடிசைக்குச் சென்று விட் டனர். அவர்கள் சென்றுவிட்டனர். ஆனால் அவர்களைக் குறித்த நினைவு என்னை விட்டுச் செல்லாமல் என்னை மிகவும் வருத்தியது, ஸ்டீபன், என்னுடைய அப்பா ஒரு பெயர் கிறிஸ்தவராயிருந்த போதிலும் ஏழைகளுக்கு இரங்கும் ஈதல் குணம் கொஞ்சம் கூட இல்லையே என்பதை நினைத்து நான் மிகவும்; வருந்து கிறேன். ஆனால் உன் வீட்டில் நடந்த சம்பவங்கள் என்னை மிகவும் ஆச்சரியத் தில் ஆழ்த்தியது. இந்தவித எண்ணங்களினால்தான் என் மனம் அல்லல் பட்டு உங் களுடன் விளையாடி மகிழ்ந்திருக்க முடியவில்லை.

ஸ்டீபன் : சேகர் உனது நல்மனதை, ஈகை குணத்தை நான் மிகவும் பாராட்டுகிறேன் உனது அப்பா பணம் படைத்த, கிறிஸ்தவராய் இருந்த போதிலும் ஏழைகளுக்கு இரங்கும் குணம் சிறிது கூட இல்லையே, ஆனால் அந்த வீட்டில் சேகருக்கு காணப்படும் நல்

'தேவன் ஒருவரே '
THERE IS ONE GOD...
Regd. No. 040088/84
Postal Regd No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

மனதை நான் மிகவும் பாராட்டுகிறேன் (சேகரும் ஸ்டீபனும் ஒருவரை ஒருவர் கட்டி பிடித்து அன்புகூறல்).

ஸ்டீபன் : சேகர் பெரியவர்கள் எப்படியும் இருக்கட்டும், நாம் நமது நல்நடத்தையின் மூலம் நம்மை போன்ற அநேகச் சிறுவர்களை கிறிஸ்துவின் அன்பில் அரவணைப்போம்.

சேகர் : ஸ்டீபன் உனக்கு எனது அன்பான கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள்.

ஸ்டீபன் : சேகர் உனக்கும் எனது பணிவான கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள்.

எனவே, அருமையான குழந்தைச் செல்வங்களே! குழந்தையாய் பிறந்த நமது இரட்சகரின் குணாதிசயங்களைப் பெற்று வருங்கால சமூகத்தை வழி நடத்துங்கள், வாழ்க வளமுடன் மழலைப்பட்டாளம் அமைந்திற்கும் மாமன்னர் இயேசுவின் நாமத்தில் எனது அன்பான கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள்.

---

''உன்னிடத்தில் நீ அன்பு கூறுவது போல் பிறனிடத்திலும் அன்பு கூறுவாயாக என்பதே''
(மத். 22:39).

---

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
28 (வியாழன்) பிப்ரவரி—1991

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
ஆண்டு சந்தா Rs. 15-00
வெளிநாடு Rs. 100-00
அனுப்ப வேண்டிய முகவரி:
**Chief Pastor N. LAZAR**
**"New Jerusalem Church"**
**Church Lane, Tilak Nagar,**
**Durga Road, Bhandup,**
**Bombay-400078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாக குறிப்பிடவும்,

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15- (பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறீர்கள்.

6. புதிய எருசலேம் செய்திமலர் தேவைப்படுவோர் ரூ. 19/- (தனிப்பிரதி ரூ 15/- தபால் செலவு ரூ. 4/-) அனுப்பி உடனே பெற்றுக் கொள்ளவும்.
வெளிநாடு : ரூ 50/- சில பிரதிகளே உள்ளன. பிரதிக்கு முந்துங்கள்.

Edited, Printed and Published by : Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400078. Printed at ; PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29 Ph : 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 86 - Feb. 1991

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.
(எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப். 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். உலகமெங்கும் குழப்பமாக இருக்கும் காலத்துக்குள்ளாக நாம் வந்திருக்கிறோம். மத்திய ஐரோப்பா, மேற்கு ஆசியா ஆகிய பகுதிகளில் யுத்தம் நடைபெறுகிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய 1000 வருஷ அரசாட்சி வரும் வரை இவ்விதமான யுத்தம் நடைபெறதான் செய்யும், யுத்தம் இருக்கும். இதனால் உலக முடிவு உண்டாகாது. இவைகளெல்லாம் வேதனைகளுக்கு ஆரம்பம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும், பரிசுத்த தீர்க்கதரிசிகளும் சொன்ன தீர்க்கதரிசன சம்பவங்கள் நிகழ ஆரம்பித்துள்ளன. ஆவிக்குரிய மண்டலத்திலும் பகல் வேஷதாரிகள் மிகுதியாகிவிட்டார்கள். இவைகள் கடைசி நாட்களில் கொடிய காலங்கள் வருமென்று II தீமோ 3-ம் அதிகாரத்திலேயும், I யோ 4-ம் அதிகாரத்திலேயும், II பேது 2, 3-ம் அதிகாரங்களிலேயும் சொல்லப்பட்ட சம்பவங்கள் எழுத்தின் படி நடந்து வருகின்றன. முழுக்க முழுக்க பாவத்திலிருந்து கொண்டு பரிசுத்தம், நீதி என்று குள்ளநரி வேதாந்தம் பேசும் கள்ள ஊழியர்கள் அநேகர். அட்ரஸ் (Address) இல்லாத தறுதலைகள் வேறு கிறிஸ்தவத் தொண்டர்களென்று தங்களைப் பற்றி எழுதிக் கொள்ளுகிறார்கள். வாய்ச்சாலகர்கள் மிகுந்து செப்படி வித்தைகள் மலிந்து காணப்படுகின்றன. உங்களை நம்பித்தான் (இயேசுவை அல்ல) எங்களது ஊழியம்; எங்களுக்குக் கொடுத்தால்தான் உங்களது பொக்கிஷம் பரலோகத்தில், இல்லையென்றால் எல்லாருடைய இரத்தப்பழியும் உங்கள் தலையில் என்று சாபம் போட்டு பயமுறுத்தும் ஏமாற்றுக்காரர்கள் ஏராளம். ஆனபடியினால் தேவனுடைய ஜனங்கள் வேத வசனத்தை உற்றுப் பார்த்து உங்களுடைய கிரியைகளை நடப்பிப்பீர்களாக, உங்களுடைய பிரயாசங்களைச் செலவழிப்பீர்களாக!

கர்த்தர் தேவ ஜனங்களுக்கு எல்லாக் காரியங்களிலேயும் புத்தியைத் தந்தருளும்படி ஜெபிக்கவும் உதவி செய்யவும் கடமைப்பட்ட தேவ ஊழியன்

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR.)

# "சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல் அநியாயத்துக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்கோ உக்கிர கோபாக்கினை வரும்"

(ஜனவரி இதழ் தொடர்ச்சி)

8-9-1990 Bangalore ''புதிய எருசலேம் சபைக்குச் சென்றிருந்தேன். நான் வருவதை முன்கூட்டியே அறிந்த கனமுள்ள மனிதர் ஒருவர் என்னைப் பார்க்கும்படியாக வந்திருந்தார். பல காரியங்களைப் பேசிக் கொண்டிருந்தோம். பேச்சோடு பேச்சாக ஒரு காரியத்தை விசாரித்தார். ஐயா, புதிய எருசலேம் சபைக்கு யாராவது வந்து பாவஅறிக்கை உபதேசத்தை ஏற்றுக் கொள்ளாவிட்டால் அவர்களை அடித்து, பிடித்து ஒரு அறையில் போட்டு அடைத்து சவுக்கை கொண்டு அடிக்கிறார்களாமே, அது உண்மையா என்று விசாரித்தார். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. யார் ஐயா அப்படி சொன்னது? எப்போ நடந்த சம்பவம் என்று கேட்டேன், இயேசு நாமக்காரர் Pastor Johnsonதான் எங்கள் வீட்டில் வந்து சொன்னார் என்று சொல்ல ஆரம்பித்தார். அப்படியானால் ஆள் எவ்வளவு உயரம், வயது எவ்வளவு என்றும் விசாரித்தேன். எங்கே நடந்தது என்றும் கேட்டேன். எனக்கு பெரிய ஆச்சரியமாய்ப் போய்விட்டது. அதோடு கூட அவர் சொன்னதின் அர்த்தம் எங்களுக்கு விளங்க ஆரம்பித்தது. இப்படியெல்லாம் பொய் பிரசாரம் பண்ணினால் செவித்தினவு உள்ள கிறிஸ்தவர்கள் கேட்டு மன குதர்க்கமடைந்து 'புதிய எருசலேம் சபை'க்கு வருவதை விட்டுவிடுவார்களென்றும் சத்தியத்திற்கு விரோதமாகப் போராடும்படியாகவும் கள்ளக் கிறிஸ்தவர்கள் கையாளும் நரி தந்திரம் என்று அறிந்து கொண்டேன். பாஸ்டர் ஜான்சன் என்று சொல்லி அப்படி ஒரு ஊழியக்காரனை நான் கண்டதோ அந்த மனிதன் தலைமை சபைக்கு வந்து பாவமன்னிப்பின் உபதேசத்தைப் பற்றி பேசினதோ நடந்ததாய் சொல்லப்படுகிற எந்தவொரு சம்பவமோ நடக்கவில்லை என்று அவருக்கு அறிவித்தேன். அவருக்கும் ஆச்சரியமாய்ப் போய்விட்டது. ஒரு பிரங்கை அப்பத்துக்காகவும் சில காசுகளுக்காகவும் கள்ள ஊழியர்கள் பரப்புகிற பொய் சாட்சியைப் பாருங்கள். இவைகளினாலெல்லாம் நாங்கள் அசையப் போகிறதுமில்லை. சத்தியத்தை இந்த துன்மார்க்கர்கள் மூடி மறைக்க முடியாது. திரித்துவத்தை, திரியேகத்துவத்தை பழைய ஏற்பாட்டிலிருந்து நிரூபித்தால் ரூ. 2000/- சன்மானம் என்று இயேசுநாமகாரர்கள் 'இயேசுவே வாரும்' பத்திரிக்கையில் விளம்பரப்படுத்தி சவால் விட்டிருந்தார்கள். 11-9-1981 வெள்ளியன்று இவர்களைச் சந்தித்து திரித்துவத்தை ஸ்தாபித்து ஜெயங்கொண்டோம். கடைசியில் நாங்கள் கூறிய வசனம் சங் 110:1. ஆனால் அந்த ரூபாய் 2000/தையும் தரவில்லை. நான்தான் Doctrine Preparation பண்ணி Preaching பண்ணுகிற Pastor என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட இருவாளர் தாவீயேல் அவர்கள் திருவிருந்து நடத்தின பின்பு கால் கழுவுகிற ஆராதனையை நடத்துகிறார். இன்னும் என்னென்ன ஸ்தாபிக்கப் போகிறார்களோ. ஆண்டவர் ஆதாம்ஏவாள் என்று இரண்டு ஆவிகளை சிருஷ்டித்தார். பின்பு ஆதாமுடைய சரீரத்தை உண்டாக்கினார். உண்டாக்கி அதனுடைய நாசியிலே ஊதினபோது ஆதாம் உண்டானான் என்று கதை கட்டினார்கள். ஐயா வேதத்தில் அப்படியில்லையே. தேவன் மனிதனை பூமியின் மண்ணினாலே உருவாக்கி ஜீவ சுவாசத்தை அவன் நாசியில் ஊதினபோதே மனிதன் ஜீவனும் ஆத்துமாவுமானான். ஆதாம் சிருஷ்டிக்கப்பட்டான் என்றல்லவா வேதம் சொல்லுகிறது என்று அவர்களுக்கு விளக்கிச் சொல்லிய போது அவர்கள் வாயடைப்பட்டு அவமானப்பட்டதை மறைக்க என்னென்னவோ பிதற்றித் திரிகிறதாகத் தெரிகிறது. கவம் தாவீயேல் இலங்கை ஓடி அங்கே பிதற்றியிருக்கிறார். ஓ! புதிய எருசலேம் சபை பாஸ்டர் இன்னரா!?

எனக்குத் தெரியுமே. அவருடைய சொந்தக்காரர் இன்னாருக்கு ஞானஸ்நானம் கொடுத்தது நான்தான். இதுதான் இவர்கள் சுவிசேஷம். இந்த வாக்குமீறிகளிடமிருந்து அவர்கள் ஒப்புக் கொண்ட 2000/- ரூபாயை வசூல் செய்ய வேண்டியதுதான்.

இவர்களுக்குச் சத்தியம் தெரியும். ஆனாலும் சில அற்ப ஆதாயங்களுக்காக சத்தியத்தை மறைத்து வைத்துக் கொண்டு அமெரிக்க வில்லியம் பிரங்காமுடைய ஊழியத்தைச் செய்கிறார்கள். ஏவாளை ஆதாம் அறியும் முன்பே சாத்தானால் கற்பழிக்கப்பட்டாள். சாத்தானுக்குப் பிறந்தவன்தான் காயீன் என்பது இவர்களுடைய உபதேசம். அதாவது பாவம் செய்கிறவர்களெல்லாருடைய தாயும் விபசாரிகள் சாத்தானால் கற்பழிக்கப்பட்டு பிறந்த குழந்தைகள் என்கிறார், Mr. இயேசு நாமகாரர். இதை தேவ ஜனங்கள் ஒத்துக் கொள்கிறார்களா? பாவம் செய்யாத ஆத்துமா இல்லையே. சாத்தானால் பிறந்தவன் இரட்சிக்கப்படுவதில்லை. இயற்கை பிறப்பு (Natural Birth) பிறந்தவர்கள் எல்லோரும் இரட்சிக்கப்படுவார்கள். ஆமா, Pastor ஜான்சன் போன்ற பொய் சொல்லித் திரியும் இருவாளர்கள் யாரால் பிறந்தவர்கள் என்பதை அவர்கள் தான் நிரூபிக்க வேண்டும். இயேசுவானவரைக் கிறிஸ்து என்று விசுவாசிக்கிற எவனும் தேவனால் பிறந்திருக்கிறான். தேவனால் பிறந்த எவனும் பாவம் செய்யான் என்று அறிந்திருக்கிறோம். பொய் சொல்லுகிற எவனும் பிசாசினால் உண்டாயிருக்கிறானென்பதையும் அறிந்திருக்கிறோம், ஏனென்றால் அவன் பொய்யனும் பொய்க்குப் பிதாவுமாயிருக்கிறபடியினாலும் அவன் பொய் பேசும்போது தன் சொந்தத்திலிருந்து எடுத்துப் பேசுகிறான். அவன் மனுஷ கொலை பாதகன் (யோவா 3:44).

எப்படியும் இவர்கள் உண்மை பேச உண்மையாக நடந்து கொள்ள நாம் ஜெபம் பண்ணுவோம். பூட்டப்பட்ட பெட்டியிலிருந்து காணிக்கை திருடுவார்கள். திருட்டை கண்டு பிடித்தவுடனே அவசரமாக ஒரு சீட்டு எழுதி அவசர செலவுக்காக எடுத்தேன் என்று Rs 5, (50) என்று எழுதிப் போட்டு விடுகிறான். அவனும் இயேசுவின் நாமம் தான். என்ன இது 5 ரூபாயா? 50 ரூபாயா? 5x50 ஆ இறைவனுக்கே வெளிச்சம். இப்படி காணிக்கை திருடுகிறவனும் வாய்ச்சாலகர்களும் மனைவியை அடிக்கிறவனும் (மிருகங்கள் கூட தன்னுடைய ஜோடியை தாக்குவதில்லை) இயேசு நாமம், இயேசுநாமம் என்று சொல்லி அலைகிறார்கள். இவர்களால் வஞ்சிக்கப்படுகிற ஜனங்கள் ஏராளம், கள்ளத் தீர்க்க தரிசனங்களுக்கு கணக்கில்லை. பெரிய பெரிய வாக்குத் தத்தங்களை பிரமாதமாகச் சொல்வார்கள். ஆவிகளை பகுத்தறியும் வரங்கள் இல்லாதவர்களும் வேத அறிவு இல்லாததுமான கிறிஸ்தவர்கள் இவர்களால் ஏமாந்து போகிறார்கள். அதனுடைய புள்ளி விவரங்களையும் கொடுப்போம்.

(தொடரும்)

சத்திய உதடு என்றும் நிலைத்திருக்கும். பொய் நாவோ ஒரு நிமிஷ மாத்திரம் இருக்கும் (நீதி 12:19).

---

**எருசலேமின் சமாதானத்துக்காக வேண்டிக் கொள்ளுங்கள்**

# பரிசுத்தவான்கள்

கிறிஸ்துவில் பிரியமானவர்களே இந்நாட்களில் அநேகர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைத் தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்ட போதிலும் அவருக்கு ஊழியம் செய்கிறவர்களாக காணப்பட்ட போதிலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் விலையேறப் பெற்ற இரத்தத்தால் கிடைக்கும் பாவ மன்னிப்பாகிய மீட்பை, பரிசுத்த வாழ்க்கையை, பரிசுத்தவான்கள் என்று அழைக்கப்படும் தகுதியைப் பெறுதவர்களாகவே காணப்படுகிறார்கள். இப்படித் தாங்கள் அழுக்கறக் கழுவப்படாமல் இருப்பதால் மற்றவர்களும் தங்களைப் போல்தான் இருப்பார்கள் என்பது இவர்களுடைய அபிப்பிராயம். எனவே மனிதனாகப் பிறந்த யாரையும் பரிசுத்தவான் என்று கூறக்கூடாது. ''எல்லோரும் பாவம் செய்து, தேவமகிமையற்றவர்களானார்கள்'' (ரோ 3:23) என்று பிரசங்கித்தும், எழுதியும் வருகிறார்கள். இது சாத்தானுடைய போதனையாகும். ''இலவசமாய் அவருடைய கிருபையினாலே கிறிஸ்து இயேசுவிலுள்ள மீட்பைக் கொண்டு நீதி மான்களாக்கப்படுகிறார்கள்'' (ரோ 3:24) என்றும், கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினாலும், நமது தேவனுடைய ஆவியினாலும் கழுவப்பட்டீர்கள், பரிசுத்தமாக்கப்பட்டீர்கள் (I கொரி 6:11) என்றும் எழுதியிருக்கிற வேதவாக்கியங்களை மறைத்து அல்லது மறுத்து மக்களுக்குப் போதித்து, மக்களை பரிசுத்தமடைய விடாதபடி தடை செய்யும் சாத்தானின் பிரதிநிதிகளைக் குறித்தும், கள்ளப் போதகர்களைக் குறித்தும் மக்கள் கவனமாய் இருக்க வேண்டும்.

''அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும்.'' (I யோ 1:7, கொலோ 1:14) என்று பரிசுத்த வேதாகமம் கூறுகிறபடி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தத்துக்கு மனுமக்களின் பாவங்களை நீக்கி சுத்திகரிக்க வல்லமையுண்டு. அப்படி சுத்திகரிக்கப் பட்டவர்களைப் பரிசுத்தவான்களென்றே வேதம் அழைக்கிறது (I கொரி 1:1-2; II கொரி 1:1; எபே 1:1, பிலி 1:1; கொலோ 1:1-2; I தெச 1:1; II தெச 1:1).

தேவனாகிய கர்த்தர் ஏதேன் தோட்டத்தின் நடுவில் இருக்கிற விருட்சத்தின் கனியைக் குறித்து; நீங்கள் சாகாதபடிக்கு அதைப் புசிக்க வேண்டாம் என்றார். அப்பொழுது சர்ப்பம் ஸ்திரீயை நோக்கி நீங்கள் இதைப் புசிக்கும் நாளிலே உங்கள் கண்கள் திறக்கப்படும் என்றும் நீங்கள் நன்மை தீமை அறிந்து தேவனைப்போல் இருப்பீர்கள் (ஆதி 3:3-5) என்றும் பொய் சொல்லி அன்று தேவனுடைய கட்டளையை மீறும்படி ஏவாளை வஞ்சித்தது போல இந்நாட்களிலும் பிதாவாகிய தேவன் மனுக்குலத்தின் மேல் அன்பு கூர்ந்து மனு மக்களின் மீட்புக்காகத் தம்முடைய சொந்தக் குமாரனை பலி செலுத்தி அவருடைய இரத்தத்தினால் மனு மக்கள் மீட்கப்படுவார்கள், பரிசுத்தவான்களாவார்கள், நீதிமான்களாவார்கள் என்று தேவனாகிய கர்த்தர் தீர்மானித்திருக்கிற தீர்மானத்தை பொய்யாக மாற்றி மனிதன் என்றைக்கும் பாவியாகத்தான் இருப்பான். அவன் பரிசுத்தவானாக முடியாது, நீதிமானாக முடியாது. நாங்கள் அனைவரும் தீட்டானவர்கள் போல இருக்கிறோம், எங்களுடைய நீதிகளெல்லாம் அழுக்கான கந்தை போல் இருக்கிறது (ஏசா 64:6) என்று வேதம் கூறுகிறதல்லவா, ஆகையால் யாரும் பரிசுத்தவான்களாகமுடியாது என்று இந்தப் பொய்யர்கள் மக்களுக்குப் பிரசங்கிக்கிறார்கள். மேலே நாம் வாசித்த வேத வாக்கியத்தின் கருத்தாவது ஒரு மனிதன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய இரத்தத்தினால் கழுவப்படுவதற்கு முந்தியுள்ள அநுபவமாகும். ஒருவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கட்டளையின்படி ஞானஸ்நானம் பெற்றுத் தன் பாவங்கள் போகக் கழுவப்பட்டு (அப் 22:16) பரிசுத்த ஆவியினால் புதுப்பிக்கப்படும் பொழுது (தீத் 3:5) அவன் பாவம் போகக் கழுவப்பட்டவனாக, பரிசுத்தமாக்கப் பட்டவனாக, நீதிமானாக்கப்பட்டவனாகக் காணப்படுகிறான் (I கொரி 6:9-11).

இன்னும் சிலர் : அப்போஸ்தலனுகிய பவுலே, தனக்குள் பாவம் வாசமாயிருக்கிறது என்றும் நான் விரும்புகிற நன்மையைச் செய்யாமல் விரும்பாத தீமையையே செய்கிறேன் என்றும் (ரோ 7:19) கூறியிருக்கிறுரே. ஆகையால் எல்லோரும் பாவிகளே, ஒருவனும் பரிசுத்தவான் அல்ல என்றும் கூறுகிறுர்கள். அப்போஸ்தலனுடைய இந்த அனுபவமானது அவர் கிறிஸ்துவண்டை வருவதற்கு முன்னுன அனுபவமாகும். கிறிஸ்து இயேசுவினுலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் என்னைப் பாவம் மரணம் என்பவைகளின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே'' (ரோ 8:2) என்று வெற்றி முழக்கமிட்டிருப்பதை இங்கே காணுகிறேம்.

இவ்விதமான பரிசுத்த வாழ்வையடைய தேவன் நியமித்துள்ள வழியை நாம் அறிந்து கொள்வது மிகவும் அவசியமாகும். கர்த்தராகிய தேவன் தம்முடைய குமாரனுகிய இயேசு கிறிஸ்துவின் சரீரமான சபையை இந்த உலகத்தில் தோற்றுவித்திருக்கிறுர். அந்த சபைக்கே, தம்முடைய குமாரனைத் தலையாக ஏற்படுத்துகிறுர் (எபே 1:23), கிறிஸ்துவின் சரீரம் பரிசுத்தமானது. இவ்வித பரிசுத்தமான சபையில் சேர்க்கப்பட்டவர்கள் பரிசுத்தவான்களாயிருப்பார்கள்.

''கொரிந்துவிலே கிறிஸ்து இயேசுவுக்குள் பரிசுத்தமாக்கப்பட்டவர்களாயும், பரிசுத்தவான்களாகும்படி அழைக்கப்பட்டவர்களுமாயிருக்கிற தேவனுடைய சபைக்கு......எழுதுகிறதாவது'' (I கொரி1:2) என்று எழுதியிருப்பதைக் காணலாம். ''நீங்கள் தேவனுடைய ஆலயமாய் இருக்கிறீர்களென்றும், தேவனுடைய ஆவி உங்களில் வாசமாயிருக்கிறதென்றும் அறியாதிருக்கிறீர்களா? ஒருவன் தேவனுடைய ஆலயத்தைக் கெடுத்தால் அவனைத் தேவன் கெடுப்பார். தேவனுடைய ஆலயம் பரிசுத்தமாயிருக்கிறது. நீங்களே அந்த ஆலயம். தேவனுடைய சபை பரிசுத்தமாயிருந்தால் அங்கே சேருகிற, சேர்க்கப்படுகிற மக்களும் பரிசுத்தமாவார்கள். ''நான் பரிசுத்தர் ஆகையால் நீங்களும் பரிசுத்தமாயிருங்கள்'' என்று எழுதியிருக்கிறதே (I பேது 1:15-16).

மேலும் முதற்பலனுகிய மாவானது பரிசுத்தமாயிருந்தால் பிசைந்த மா முழுவதும் பரிசுத்தமாயிருக்கும்; வேரானது பரிசுத்தமாயிருந்தால் கிளைகளும் பரிசுத்தமாயிருக்கும் (ரோ 11:16) என்று பரிசுத்த வேதாகமம் கூறுகிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை மூலைக் கல்லாகக் கொண்டு அவருடைய அப்போஸ்தலர், தீர்க்கதரிசிகளை அஸ்திபாரக் கற்களாகக் கொண்டு ஆவிக்குரிய மாளிகையாக கட்டப்பட்டு வரும் தேவனுடைய பரிசுத்த நகரமாகிய தேவனுடைய சபையில் (எபே 2:19-22; அப். 2:47), புதிய எருசலேமில் சேர்க்கப்பட்டவர்கள் பரிசுத்தமடைகிறுர்கள் (வெளி 3:12). பரிசுத்தவான்களாக அழைக்கப்படுகிறுர்கள். நீ நீதிபுரம் என்றும் சத்திய நகரம் என்றும் பெயர் பெறுவாய் (ஏசா 62:12; ஏசா. 1:25-27; வெளி 21:2-10) என்றும் வேதம் கூறுகிறது. அல்லேலூயா.

''சீர்கெட்ட பிள்ளைகளே, திரும்புங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறுர்; நான் உங்கள் நாயகர்; நான் உங்களை ஊரில் ஒருவனும், வம்சத்தில் இரண்டு பேருமாகத் தெரிந்து, உங்களைச் சீயோனுக்கு (தேவனுடைய சபைக்கு) அழைத்துக் கொண்டுவந்து உங்களுக்கு என் இருதயத்துக்கு ஏற்ற மேய்ப்பர்களைக் கொடுப்பேன்; அவர்கள் உங்களை அறிவோடும் புத்தியோடும் மேய்ப்பார்கள்'' (எரே 3:14-15) என்று சேனைகளின் கர்த்தர் கூறுகிறுர். கிறிஸ்துவின் சரீரமான சபைக்கே தேவன் தம்முடைய ஊழியக்காரராகிய அப்போஸ்தலர், தீர்க்கதரிசி, போதகர், மேய்ப்பர், சுவிசேஷகர் களைக் கொடுக்கிறுர், மற்றவர்களுக்கல்ல (எபே 4:11-15). இந்த கடைசி காலத்திலும் தேவனுடைய ஆலயமாகிய தேவனுடைய சபை எழும்பும் என்றும் அங்கே கர்த்தர் தம்முடைய வழிகளைப் போதிப்பார், நாம் அவருடைய பாதைகளில் நடப்போம் என்றும் வேதம் கூறுகிறது. இங்கே கர்த்தருடைய வழி என்று கூறப்பட்டிருப்பது ''பரிசுத்த வழியாகும்'', தீட்டுள்ளவன் அதிலே நடந்து வருவதில்லை. அந்த வழியிலே நடக்கிறவர்கள் பேதையாயிருந்தாலும் திசைகெட்டுப் போவதில்லை (ஏசா 35:8-10) என்றும் காண்கிறேம்.

தேவன் தம்முடைய குமாரனுகிய கிறிஸ்து

வின்சரீரமான சபைக்கேஅப்போஸ்தலர்,தீர்க்க தரிசிகளைதருகிறார்(I கொரி 12:28;எபே 4:11-13) அவர்களிடமே மனிதர்கள் பரிசுத்த வாழ் வடைவதற்குக் கைக்கொள்ள வேண்டிய சத்தி யங்களையும், கட்டளைகளையும் ஒப்படைத்திருக் கிறார் (ஏசா 2:2-3; மத் 28:19-20) என்று வேதம் கூறுகிறது. ''முன்னே நீங்கள் பாவத் துக்கு அடிமைகளாயிருந்தும் இப்பொழுது உங் களுக்கு ஒப்புவிக்கப்பட்ட உபதேச சட்டத் திற்கு நீங்கள் மனப்பூர்வமாய் கீழ்ப்படிந்ததி னாலே தேவனுக்கு ஸ்தோத்திரம், பாவத்தி னின்று நீங்கள் விடுதலையாக்கப்பட்டு நீதிக்கு அடிமைகளானீர்கள். இப்பொழுது நீங்கள் பாவத்திலிருந்து விடுதலையாக்கப்பட்டு நீதிக்கு அடிமைகளானதினால், பரிசுத்தமாகுதல் உங்க ளுக்குக் கிடைக்கும் பலன், முடிவோ நித்திய ஜீவன் (ரோம 6 : 17, 18, 22; 8:2) என்று வேதம் கூறுகிறது.

இந்நாட்களில் அநேகர் கட்டளை வேண் டாம், உபதேசம் வேண்டாம், வேதம் வேண் டாம், இயேசுவே போதும் என்று கூறி மக்க ளைத் தங்கள் பக்கமாய் சேர்த்துக் கொண்டு தங்களைப்போல் வாழ வைக்கிறார்கள். ஆனால் நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறதுபோல நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாயிருங் கள் (I கொரி 11:1) என்று அப்.பரிசுத்த பவுல் கூறுகிறார். கிறிஸ்து பரிசுத்தராயிருக்கிறாரே.

ஒருநாள் ஒரு ஊழியக்காரர் ஒரு கூட்டத் தில் பேசும்பொழுது: ஆண்டவருக்கு தம்மை சுமந்து செல்வதற்கு ஒரு கழுதைதான் வேண் டும், ஒரு அப்போஸ்தலனோ, ஒரு தீர்க்கதரி சியோ தேவையில்லை என்று கூறினார். அன்று இயேசுவை சுமந்த அந்த கழுதை மறுபடியும் குப்பைமேட்டிற்குச் சென்றிருக்கும், அந்தக் கழுதை பரலோகம் சென்றிருக்காது. இப்படி அநேகர் சிலகாலம் இயேசு கிறிஸ்துவை சுமந்து திரிகின்றவர்களாய் காணப்பட்டு, பின்னர் தாங்கள் விட்டு வந்த பழைய குப்பை மேட்டில் போய் (பாவத்தில்) புரள ஆரம் பித்து விடுகிறார்கள். இப்படிப்பட்டவர்க ளுடைய உபதேசத்தைக் கேட்பவர்களும் அப் படியே ஆகிவிடுகிறார்கள், குருவைத் தொட ரும் சீடர்களும் குரு போலவே மாறிவிடுவார் கள்.

ஆகையால் சகோதரனே! சகோதரியே? தேவ வசனத்தை உங்களுக்குப் போதித்து உங்களை நடத்தினவர்களை நீங்கள் நினைத்து அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்றாய் சிந்தித்து அவர்களுடைய விசுவாசத்தைப் பின்பற்றுங்கள் (எபி 13:7) என்று வேதம் கூறு கிறதைக் கவனித்து சீர்கெட்டவர்களையும் தேவனுடைய பரிசுத்தத்திற்கு மாறுபட்டவர் களையும் விட்டு விலகி உங்களை இரட்சித்துக் கொள்ளுங்கள் (அப் 2:40).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத் தத்தால் கழுவப்பட்டு பரிசுத்தமாக்கப்பட்ட வர்கள் மட்டுமே கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவார்கள். பரிசுத்த மாக்கப்பட்டவர்களுடைய சுதந்திரத்தில் பங்கு பெறுவார்கள் (அப் 26:18; I யோ 3: 2, 3; எபி 12:14; மத் 5:8, வெளி 19:7, 8). அவர்களே இந்த உலகத்தை 1000 வருடம் அரசாளுவார்கள் (வெளி 1:6). வானத்தின் கீழெங்குமுள்ள இராஜ்ஜியங்களின் ராஜரீக மும், ஆளுகையும், மகத்துவமும் உன்னத மானவருடைய பரிசுத்தவான்களாகிய ஜனங் களுக்குக் கொடுக்கப்படும். அவர்களுடைய இராஜ்யம் நித்திய இராஜ்ஜியம்(தானி 7:27) ''எங்கள் தேவனுக்குமுன்பாக எங்களை ராஜாக் களும், ஆசாரியர்களுமாக்கினீர். நாங்கள் பூமி யில் அரசாளுவோம் என்று புதிய பாட்டைப் பாடினார்கள் (வெளி 5:9,10; மீகா 4:8) என்று வேதம் கூறுகிறது. ஆகையால் சகோதரனே, சகோதரியே வஞ்சிக்கப்பட்டு போகாதபடி வஞ்சகப் போதனைகளை, சபையல்லாதவை களை விட்டு விலகி பரிசுத்தவான்களுடைய ஐக் கியத்தைத் தேடி, உன்னுடைய வாழ்க்கை யைப் பரிசுத்தமாக்கிக் கொள் (I யோ 1:1,3, 4). இப்போது உலகத்தில் தேவனுடைய திருச் சபை உண்டு. அங்கே பரிசுத்தவான்களும் உண்டு. அதுவே புதிய எருசலேம் சபை. தேவன் சுத்தமாக்கினவைகளை நீ தீட்டாக எண்ணாதே (அப் 10:15) சேர்ந்து கொள்.

---

''...பரிசுத்தவான்களுடைய சபைக ளெல்லாவற்றிலேயும் அப்படியே இருக் கிறது.'' (I கொரி 14:33)

---

# வேத பாடம் (தொடர்ச்சி)

**லேவி 8:14-17 :** ஆசாரியர்களுக்காகச் செலுத்தப்பட்ட காணிக்கைகள்

1. பாவ நிவாரண பலி :— பாவ நிவாரணப் பலிக்கான காளை கொண்டு வரப்பட்டது. ஆரோனும் அவன் குமாரர்களும் தங்கள் கைகளை அதன் தலையின்மேல் வைத்தார்கள். அங்கே அது கொல்லப்பட்டது. அதின் இரத்தத்தை எடுத்து தன் விரலினால் பலிபீடத்தின் கொம்புகளின் மேல் பூசி பலிபீடத்துக்காய் பிராயச்சித்தம் செய்து மற்ற இரத்தத்தை பலிபீடத்தின் அடியிலே ஊற்றிவிட்டு அதின் மேல் பாவ நிவிர்த்தி செய்யும் பொருட்டு அதைப் பரிசுத்தப் படுத்தினான். பின்பு மோசே கர்த்தர் தனக்குக் கட்டளையிட்டபடியே குடல்கள் மேல் இருந்த கொழுப்பு முழுவதையும் கல்லீரலின்மேல் இருந்த ஜவ்வுகளையும், இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின் மேல் இருந்த கொழுப்பையும் எடுத்து பலி பீடத்தின் மேல் தகனித்து காளையையும் அதின் சாணியையும் பாளையத்தின் புறம்பே சுட்டெரித்தான். இது ஆசாரியர்களுக்காகச் செலுத்தப்பட்ட பாவ நிவாரண பலி (யாத் 29:10)

**லேவி 8:18-21** :- சர்வாங்க தகன பலி :- ஆட்டுக் கடாவைக் கொண்டு வந்தான். அதின் தலையின் மேல் ஆரோனும் அவன் குமாரர்களும் தங்கள் கைகளை வைத்தார்கள். அப்பொழுது அது கொல்லப்பட்டு மோசே அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின் மேல் சுற்றிலும் தெளித்தான். ஆட்டுக்கடா சந்து சந்தாகத் துண்டிக்கப்பட்டது. மோசே அதின் தலையையும், துண்டங்களையும், கொழுப்பையும் தகனித்தான். குடல்களையும் தொடைகளையும் தண்ணீரால் கழுவின பின்பு மோசே ஆட்டுக்கடா முழுவதையும் பலிபீடத்தின் மேல் சுகந்த வாசனைக்கான தகன பலியாய் தகனித்தான்.

**லேவி 8:22-29** :- பிரதிஷ்டை கடா :- பிரதிஷ்டைக்குரிய ஆட்டுக்கடாவை கொண்டு வந்தான். அதின் தலையின் மேல் ஆரோனும் அவன் குமாரர்களும் தங்கள் கைகளை வைத்தார்கள் பின்பு அது கொல்லப்பட்டது. அதின் இரத்தத்தில் மோசே கொஞ்சம் எடுத்து ஆரோனின் வலது காதின் மடலிலும், வலது கையின் பெருவிரலிலும் வலது காலின் பெருவிரலிலும் கொஞ்சம் பூசினான். பின்பு ஆரோனின் குமாரரையும் அழைத்தான். மோசே அவர்கள் வலது காதின் மடலிலும், வலது கையின் பெருவிரலிலும், வலது காலின் பெருவிரலிலும் கொஞ்சம் பூசி மீதி இரத்தத்தை பலி பீடத்தின் மேல் சுற்றிலும் தெளித்து கொழுப்பையும், வாலையும், குடல்கள் மேலிருந்த கொழுப்புகள் முழுவதையும், கல்லீரலின் மேலிருந்த ஜவ்வையும், இரண்டு குண்டிக்காய்களையும் அவைகளின் மேலிருந்த கொழுப்பையும், வலது முன்னந் தொடையையும் எடுத்து கர்த்தருடைய சந்நிதியில் வைத்திருந்த புளிப்பில்லா அப்பங்களின் கூடையில் உள்ள புளிப்பில்லா அதிரசம் ஒன்றையும், ஒரு அடையையும் எடுத்து அந்தக் கொழுப்பின் மேலும், முன்னந் தொடையின் மேலும் வைத்து அவைகளையெல்லாம் ஆரோனின் உள்ளங்கைகளிலும் அவனுடைய குமாரரின் உள்ளங்கைகளிலும் வைத்து அசைவாட்டும் பலியாக கர்த்தருடைய சந்நிதானத்தில் அசைவாட்ட பின்பு மோசே அவைகளை அவர்களின் உள்ளங்கைகளிலிருந்து எடுத்து பலி பீடத்தின் மேல் இருக்கிற பலியின் மேல் தகனித்தான். அவைகள் சுகந்த வாசனையான பிரதிஷ்டை பலிகள். பின்பு மோசே மார்க்கண்டத்தை எடுத்து அதைக் கர்த்தருடைய சந்நிதானத்தில் அசைவாட்டும் பலியாக அசைவாட்டினான். கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்டபடியே பிரதிஷ்டையின் ஆட்டுக்கடாவிலே அது மோசேயின் பங்காயிற்று.

**லேவி 8 : 30** :- ஆசாரியர்கள் அபிஷேகப் பண்ணப்படுதல் :- மோசே அபிஷேகத் தைலத்தையும், பலி பீடத்தின் மேலிருந்த இரத்தத்திலும் கொஞ்சம் எடுத்து ஆரோன் மேலும் அவன் வஸ்திரத்தின் மேலும், அவன் குமாரர் மேலும் அவன் குமாரர் வஸ்திரத்தின் மேலும்

தெளித்து ஆரோனையும் அவன் வஸ்திரங்களையும், அவன் குமாரரையும் அவன் குமாரரின் வஸ்திரங்களையும் பரிசுத்தப்படுத்தினான் (யாத் 30:30; சங் 133).

லேவி 8 : 31, 32 :- ஆசாரியர்களின் உணவு :- பிரதிஷ்டையின் ஆட்டுக்கடாவைக் கொண்டு வந்து அதின் மாம்சத்தையும் ஆசரிப்பு கூடார வாசலிலே வேவித்து, பிரதிஷ்டை பலியின் கூடையிலுள்ள அப்பங்களையும் அங்கேயே புசிக்க வேண்டும். மாம்சத்திலும் அப்பத்திலும் மீதியானதை அக்கினியிலே சுட்டெரித்துப் போட வேண்டும், மறுநாளைக்கு வைக்கக் கூடாது. (யாத் 29 : 31 - 34).

லேவி 8:33-36 : ஆசாரியர்கள் இவ்விதமாய் தொடர்ந்து 7 நாட்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டார்கள். கர்த்தர் மோசேயைக் கொண்டு கட்டளையிட்ட எல்லாக் காரியங்களையும் ஆரோனும் அவன் குமாரரும் செய்தார்.

லேவி 8: 14, 18, 22 ஆகிய வசனங்களில் ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளை பலிமிருகங்கள் மேல் வைத்ததாக வாசிக்கிறோம். இது இவர்களுடைய பாவங்கள் அந்த மிருகங்கள்மேல் சுமத்தப்பட்டது என்பதற்கு அடையாளமாகும். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின்மேல் நம்மெல்லாருடைய பாவங்களும் சுமத்தப்பட்டது (ஏசா 53:6, I தீமோ 2:5, 6, I பேது 2:24,)

லேவி 8:11, 12, 15, 23, 27, 28, 30 போன்ற வசனங்களில் மோசே ஆசாரியனாக காணப்படுகிறார். உபா 18:15-20ல் மோசே தீர்க்கதரிசி என்று குறிப்பிடப்பட்டுள்ளார். உபா 33:5ல் மோசே ராஜா என்று குறிப்பிடப்பட்டுள்ளார். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய மூன்றுவித ஸ்தானங்களுக்கு மோசே முன்னடையாளமாக இருக்கிறார்.

வேதாகமத்தில் விதிவிலக்கான ஆட்கள் உண்டு, அவர்களில் மோசே ஒருவர். ஆசாரியர்கள் தினந்தோறும் பரிசுத்த ஸ்தலம்வரை போய் தூபம் காட்டலாம். அப்பத்தை அடுக்கி வைக்கலாம். ஆனால் மகாபரிசுத்த ஸ்தலம்வரை போகக் கூடாது. பிரதான ஆசாரியனாகிய மோசே வருஷத்துக்கு ஒருமுறை பாவநிவாரண நாளில் தனக்காகவும், ஜனங்களுக்காகவும் பலியிட்டு இரத்தத்தோடே மாத்திரம் மகா பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசிக்கலாம். மோசேயோ தனக்கு இஷ்டமானபொழுதெல்லாம் மகாபரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசித்து தேவனோடு பேசுவார். தீர்க்கதரிசிகளிடத்திலே தேவன் காட்சி, தரிசனம், சொப்பனம், ஊரீம், தும்மீம் மூலம் பேசுவார். ஆனால் மோசேயினிடத்திலோ தேவன் முகமுகமாய் பேசினார் (எண் 12:1-8(. அவ்வாறே இங்கேயும் மோசே ஆசாரியர்களுக்கு ஆசாரியராயிருந்து அவர்களைப் பிரதிஷ்டை செய்கிறார்.

லேவி 9:1-7 : ஆசாரியர்கள் ஆசாரிய ஊழியம் செய்ய கட்டளை பெறல், அதற்கான ஆயத்தங்களைச் செய்தல்.

லேவி 9:8-21 : ஆசாரியர்கள் பலிசெலுத்தி ஆராதனை செய்தல்.

லேவி 9:22-24 : ஆசாரியர்களும், மோசேயும் சேர்ந்து வெளியே வந்து ஜனங்களை ஆசீர்வதித்தார்கள். அப்பொழுது கர்த்தருடைய மகிமை சகல ஜனங்களுக்கும் காணப்பட்டது. அன்றியும் கர்த்தருடைய சந்நிதியிலிருந்து அக்கினி புறப்பட்டு பலிபீடத்திலிருந்த சர்வாங்க தகன பலியையும் கொழுப்பையும் எரித்துவிட்டது.

லேவி 9:22-23 : கரங்களை உயர்த்தி ஆசீர்வதித்தல் எண் 6:24-26ன் பிரகாரம் தேவ ஆசீர்வாதம் அவர்கள் மேல் இறங்குவதாம், இஸ்ரவேலர்களுடைய பலி அங்கீகரிக்கப்பட்ட

தென்பதற்கு தேவ சந்நிதானத்திலிருந்து அக்னி எழும்பி பலிபீடத்திலிருந்த பலியை அங்கீகரித்ததாகும். அது அவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்பதற்கும் அடையாளமாயிருக்கிறது. தேவ மகிமை இறங்கியது தேவன் மத்தியில் இருக்கிறார் என்பதற்கு அடையாளமாகும். மெய்யான ஆராதனையும், அது அங்கீகரிக்கப்பட்டதென்பதற்கும் தேவன் நம் மத்தியில் இருக்கிறார் என்பதற்கும் பரிசுத்த ஆவியின் நிறைவும் தேவ மகிமை இறங்கி வருவதும் அடையாளமாகும். ஜனங்கள் கூடிவந்து தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும் (லேவி 9: 5, 6). ஆராதனை தேவசித்த பிரகாரம் தேவ வசனத்தின்படி நடைபெற வேண்டும். அப்பொழுது தேவன் ஜனங்களை ஆசீர்வதிப்பார். தேவமகிமை வெளிப்படும் (லேவி 9:22-24). ஆராதனையின் நோக்கம் தேவ மகிமையினால் நிரப்பப்படுவதே. ஆராதனை ஆரம்பத்திலோ, நடுவிலோ, முடிவிலோ தேவ மகிமையினால் நிரப்பப்பட வேண்டும். ஆவபடியினால் ஆவியினால் நிரம்பி தேவனுக்கு ஆராதனை செய்யுங்கள் (பிலி 3:3).

---

"மேலும், ஆரோனைப் போலத் தேவனால் அழைக்கப்பட்டாலொழிய, ஒருவனும் இந்தக் கனமான ஊழியத்துக்குத் தானாய் ஏற்படுகிறதில்லை" (எபி 5:4).

---

# முகம்மது மார்க்கத்தை அறிந்து கொள்ளுதல்

(ஜனவரி மாத தொடர்ச்சி)

623-ம் வருஷத்திலே அவன் நோன்பு இருக்க கட்டளையிட்டு மதினாவுக்கருகாமையிலிருந்த தேசத்தாரோடு பல சண்டைகளை மூட்டி யூதர்களை அநியாயமாய்த் துரத்தி, வழிப் பயணம்போன வர்த்தகர்களுடைய சரக்குகளைக் கொள்ளையாடி தன் சகாக்களுக்கு சம்பளமாகப் பங்கிட்டுக் கொடுத்தான். அதினால் அநேக துன்மார்க்கர்கள் அச்சமறக் கள்ளத்தனம் பண்ணுகிறதற்கு அந்தப் புது மார்க்கத்தில் சேர்ந்தார்கள். அதுவுமன்றி பூர்வத் தொடங்கி இந்நாள் மட்டும் அதுவே அரபு தேசத்தாருடைய குலவித்தையாயிருக்கிறது.

627-ம் வருஷத்தில அவன் ஆயிரத்து நானூறு (1400) பேரைக் கூட்டிக் கொண்டு மக்காவுக்குப் போகவேண்டுமென்று புறப்பட்டான். இந்த புது மார்க்கத்தார் முகம்மதுவை இராசாவாக்கி அவன் விட்ட வேர்வையையும், அவன் துப்பின உமிழ்நீரையும், சவரம் செய்யப்பட்ட அவன் மயிரையும் விலையேறப் பெற்ற பொருளாக சேமித்து காப்பாற்றினார்கள்.

629-ம் வருஷத்திலே ரம்ஜான் மாதத்தில் அவன் பிறந்த இடமாகிய மக்காவை பலாத்காரமாய் பிடித்து அதன் பக்கத்தில் சேர்ந்த ஊர்களிலும் நாலாயிரம் ஆண்களையும் பன்னீராயிரம் ஒட்டகங்களையும் சிறைபிடித்தான். அதற்கு மறுவருஷத்தில் அவன் எழுதிய ஒன்பதாம் சூரத்திலே காபிர்களை சங்காரம் பண்ணிப் போடவேண்டுமென்று அல்லா கற்பித்தார் என்று எழுதி வைத்தான். அதனால் துன்மார்க்கம் மிகவும் பலுகிப் போயிற்று.

இஜ்ஜிராவின்பதினோராம் வருஷமாகிய கி.பி.631ம் வருஷத்திலே மகம்மதுவுக்கு நஞ்சிடப்பட்டுத் தன் பெண்டுகளுடைய வீடுகளுக்கெல்லாம் பயித்தியம் பிடித்தவன் போல் ஓடி தன் 63ம் வயதிலே வெகு அவஸ்தைப்பட்டு செத்து மதினாவிலே அடக்கம் பண்ணப்பட்டான்.

அவன் பட்டத்திலே அவனுடைய மருமகனாகிய அலி இருக்க வேண்டுமென்று முகம்மது இருக்கும் போதே அவனும் பார்க்கக்காரரும் தீர்மானித்தார்கள். ஆனால் முகம்மதுவினுடைய மாமனாகிய அபுபக்கரும், ஓமரும், ஒத்மானும் அலியை வேண்டாமென்று தள்ளினார்கள். இது நியாயமென்று துருக்கர், முகலாயர்

ஒத்துக் கொண்டு பார்சுகாரரோடு சேர்ந்தவர்களை ''ராபிஜ''காரராகிய அகன்று போனவர்கள் என்றும் தங்களை ''சன்னி'' ஜமாத்தாகிய சபை என்றும் சொல்லுகிறார்கள்.

II. கொராவென்பது வாசகமென்றருத்தங்கொள்ளும். அதற்கு வகுப்புகளென்று அர்த்தங்கொள்ளும் புர்சான் என்று பெயர். அல்கொரான் என்றும் அல்கிதாப் அதாவது சிறப்பான வாசகமென்றும் சிறப்பான புத்தகம் என்றும் கூறுகிறார்கள்.

கொரான் 114 சூரத்துக்கள் (அதிகாரங்களாக) வகுக்கப்பட்டுள்ளது. சில சூரத்துக்கள் பெரிதும், சில சூரத்துக்கள் சிறியதுமாக வகுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு சூரத்தும் ''அயாத்'' என்ற வாக்யெங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது. பல புஸ்தகங்களில் பலவிதமாய் ''அயாத்'' வகுக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சூரத்தின் தலைப்பில் அதின்பேரும் அது அருளப்பட்ட இடமும் ''பிஸ்மில்லா'' என்ற வாக்கும் எழுதியிருக்கின்றன (''பிஸ்மில்லா'' என்பது மகா இரக்கமுள்ள அல்லாவின் நாமத்தில் என்றருத்தமாகும்). கொராவின் பாஷை நடை பல இடங்களில் வெகு அலங்காரமாய் அரபி பாஷையில் எழுதியிருக்கிறது. கொராவிலுள்ள சூரத்துக்கள் பல பல வேளைகளில் பிரிவு பிரிவாக உண்டாக்கப்பட்டபடியால் மகம்மது மரணமடையும்போது அவைகள் தாறுமாறாய் இருந்தன. பின்பு அபுபக்கர் என்பவன் அவைகளையெல்லாம் சேர்த்து பல பிரதிகளையும் ஒத்திட்டு சீர்ப்படுத்தி மகம்மதின் பெண்சாதிகளில் ஒருத்தியாகிய ரப்சாளென்பவளிடத்தில் வைத்து வைத்தான்.

கொரானிலுள்ள இஸ்லாம் மார்க்கம் இரண்டு வகுப்புகளாக வகுக்கப்பட்டிருக்கிறது.

1. விசுவாசிக்கத்தக்கவைகளாகிய ''இமாம்''.
2. நடக்கைக்குரிய ''தீன்'' என்பவைகளுமே. அவையாவன:

முதலாவது : விசுவாசிக்கத்தக்கவைகளாகிய இமாம் என்பவைகள் ஆறு காரியங்களாம் :-

1. அல்லா ஒருவர் இருக்கிறார் என்பதையும்
2. தூதர்கள் இருக்கிறார்களென்பதையும்
3. வேதமுண்டென்பதையும்
4. நபிகள் உண்டென்பதையும்
5. சரீர உயிர்த்தெழுதலும் நியாயத்தீர்ப்புகளுமுண்டென்பதையும்
6. ''நசிப்'' என்கிற விதிப்படி சகலமும் நடக்கிறதென்பதையும் விசுவாசிக்கிறதே.

1. ''வாயிலா அ இல்லல்ல மகம்மத் ரசுரல்ல.''மெய்யான அல்லாவொழிய வேறல்லா இல்லை. மகம்மதே அவருடைய நபியாயிருக்கிறார் என்ற உறுதிப்பாடு மகம்மது மார்க்கத்திற்கு ஆதாரமாயிருக்கிறது. மகம்மது விக்கிரகாராதனையை நீக்கினாலும் மொஹரம் பண்டிகையாகிய அல்லாசாமி பண்டிகையிலே இவர்கள் செய்து வைக்கிற ஐந்து விரல்களும் மற்று முண்டாயிருக்கிற வீண் சடங்கு காரியங்களும் இவர்களும் விக்கிரகாராதனைக்காரர்களென்பது வர்ஜிதம்.

2. நான்கு பிரதான தூதர்கள் இருக்கிறார்களாம். அவர்கள் யாரெனில் சிபிராயேல், மிகாயேல், மரண தூதனாகிய அஸாரேயேல் உயிர்த்தெழுதலில் எக்காளத்தை ஊதப்போகிற இஸ்ரபேல் என்பவர்களே. மேலும் ஒவ்வொரு மனிதனோடும் இரண்டு இரண்டு தூதர்கள் நாடோறும் அவனோடிருந்து அவன் செய்கிற நன்மை தீமைகளையெல்லாம் எழுதிக் கொள்ளுகிறார்களாம். பிசாசாகிய 'இப்லிஸ்' முன் ''அசாசிஸ்'' என்ற பேரைக் கொண்ட தூதனாயிருந்து அல்லாவின் கட்டளைப்படி ஆதாமை வணங்காததினால் பிசாசானான்.

3. வேதங்கள் நான்கு ''மூசா'' நபி எழுதிய ''தௌரத்தும்'' தாவீதின் சங்கீத புஸ்தகமாகிய ''சபீரும்'', ''இசா'' நபியின் சுவிசேஷமாகிய ''இஞ்ஜீலும்'', ''மகம்மது'' வின் கொரானுமே.

4. 2,24,000 நபிமார்கள் இருக்கிறார்களென்றும் அவர்களில் விசேஷமானவர்கள்

ஆதாம், நோவா, ஆபிரகாம், மூசா, இசா, மகம்மதென்பவர்களே.

5. மாமிச உயிர்த்தெழுதல் உண்டாகி நன்மை செய்தவர்கள் நன்மையையும், தீமை செய்தவர்கள் தீமையையும் அநுபவிப்பார்கள். எல்லாருடைய நடக்கைகளும் பெரிய திராசில் நிறுக்கப்படுமாம். கொரானில் நியாயத் தீர்ப்பு நாளைக் குறித்து சில விபரீத விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. ஏழு நரகமும் ஏழு மோட்ஷமுமுண்டென்றும்; மோட்சசாலிகள் பேரின்பங்களை மட்டுமல்ல குமரிகளோடு சிற்றின்பங்களில் திளைப்பார்களென்றும் மோட்ஷவாசிகள் யாராவது புத்திரர் வேண்டுமென்று ஆசைப்படுவார்களாகில் ஒரு நாளிகையிலே கருத்தரித்து பிள்ளை பிறந்துவிடுமென்றும் கொரானில் சொல்லியிருக்கிறது.

6. உலகத்தில் சகலமும் ''நசீப்'' விதிப்பிரகாரம் நடந்து வருகிறதாம். இந்த விஷயத்திலேயும் மகம்மது மார்க்கத்திலே பல விகற்பங்களுண்டு.

IIவது நடக்கைக்குரிய ''தீன்'' என்பவைகள் நாலு அவையாவன.

1. நமாஸ் பண்ணுகிறதும்.

2. பிச்சையாகிய சக்காத்து கொடுக்கிறதும்.

3. உபவாசம் பண்ணுகிறதும்.

4. மக்காவுக்கு யாத்திரை போகிறதுமே.

(தொடரும்)

''பிரியமானவர்களே, உலகத்தில் அநேகங் கள்ளத் தீர்க்கதரிசிகள் தோன்றியிருப்பதினால், நீங்கள் எல்லா ஆவிகளையும் நம்பாமல், அந்த ஆவிகள் தேவனால் உண்டானவைகளோ என்று சோதித்தறியுங்கள்'' (I யோ 4:1).

---

**மாதர் பகுதி**

# கிறிஸ்தவ திருமணம்

திருமணம்: வயது வந்த ஓர் ஆணும் பெண்ணும் இல்லற வாழ்க்கை நடத்த ஒன்று கூடுவதையே திருமணம் என்ற சொல்லின் மூலம் குறிப்பிடுகிறார்கள். ஒரு சிறப்பான புனித செயல் என்பதைக் காட்டத்தான் திரு என்ற சிறப்புக் குறிக்கும் சொல் அத்துடன் சேர்க்கப்பட்டு 'திருமணம்' என்று அழைக்கப்படுகிறது.

மனித குலம் பல ஆயிரக்கணக்கான பல வகையான சோதனைகளைச் செய்து பார்த்து கடைசியாக 'ஒருவனுக்கு ஒருத்தி' திருமணத்தை அமைத்திருக்கிறது. ஒரு கூட்டத்தைச் சேர்ந்த ஆடவர்கள் ஒரு பெண்டிர் கூட்டம் முழுவதையும் மணம் புரிந்து கொள்ளுதல், ஒருவன் பல பெண்களை மணந்து கொள்ளுதல், ஒருத்தி பல ஆண்களை மணந்து கொள்ளுதல் போன்ற பல வகையான மனநிலைகள் மாறி இன்றைய திருமண நிலை சமுதாயத்தில் பெரும்பான்மையினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு ஏறக்குறைய உலகமெங்கும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஏறக்குறைய எல்லா அறிஞர்களும் சான்றோர்களும் இந்த ஒருவனுக்கு ஒருத்தி என்ற மன நிலையைப் போற்றுகிறார்கள். கள்ள மதங்கள் இதற்கு மாறாய் ஒப்புதல் அளிக்கலாம். ஆனால் உலகில் எண்ணற்ற ஆண்களும் பெண்களும் ஒருவனுக்கு ஒருத்தி என்கிறதையே பின்பற்றுகிறார்கள். சமுதாயம், அரசு, திருச்சபை இவைகளெல்லாவற்றிலும் முந்திய நிறுவனமாகும் 'இல்லறம்' என்பது. மனிதனின் நன்மைக்காக தேவன் ஏற்படுத்திய நிறுவனமாகிய இல்லறத்தை தேவனால் அருளப்பட்டதும் பாவம் உலகத்தில் பிரவேசிக்கும் முன்னரே ஏற்பட்டதுமான இல்வாழ்க்கை தேவனின் பரிசுத்த

முறைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தது. தேவன் ஆதாமையும் ஏவாளையும் உருவாக்கிய போது அவர்களை ஆணும் பெண்ணுமாக தேவ சாயலில் உருவாக்கினார். பாவமற்ற நிலையில் புருஷன் மனைவி தொடர்பு புனிதமாகவும் பரிசுத்தமாகவும் அமைந்திருந்தது. இவர்களின் தொடர்பு திருமணத்தினால் புருஷனும் மனைவியும் ஒன்றாயிருக்க வேண்டும் என்று தேவன் உரைக்கிறார். இங்கே எழுதப்படுகிறவைகள் ஆணுக்கும் பெண்ணுக்கும் பொருந்தும். அவனென்று எழுதுகிற இடத்தில் அவன் மாத்திரமல்ல அவள் என்றும் எடுத்துக் கொள்ளவும்.

குடும்பத்தின் அஸ்திபாரக் கொள்கைகள் புனிதத்துவத்தையும் தெய்வீகத் தன்மையையும் ஆதாரமாகக் கொண்டுள்ளமையால் பாவி அதனுடன் இணைந்து செயலாற்ற முடியாது. எனினும் மறுபிறப்பின் மூலம் கிறிஸ்துவுடன் இணைக்கப்பட்டவர்களுக்கு குடும்பத்தின் அஸ்திபாரக் கொள்கைகள் துவக்கத்தில் தேவனால் அமைக்கப்பட்டதைப் போல் மாற்றமின்றி உள்ளதால் இச்செய்திகள் குறிப்பாக அவர்களுக்கென்றே அமைந்துள்ளன. தேவன் குடும்பத்தைப் பற்றிய தமது கொள்கைகளையும் திட்டத்தையும் பாவியை குடும்ப வாழ்க்கையில் பங்கேற்க வைப்பதற்காக மாற்றி அமைக்கவில்லை என்பதை திருமறையிலிருந்து கண்டு கொள்ளலாம்.

ஆனால் சில வேளையில் மனிதனின் இருதயக் கடினத்தினிமித்தம் தேவ அனுமதியுடன் சில மாற்றங்கள் செய்யப்பட்டதுண்டு. மறுபடியும் பிறந்து கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டு கிருபையின் ஆவியை பெற்று வாழ்வோர் கடின இருதயமுள்ள முற்கால இஸ்ரவேலர்களோடு தங்களை வகைப்படுத்திக் கொள்ளத் தேவையில்லை. அவர்கள் நியாயப் பிரமாணத்தின் கீழ் வாழ்ந்து திவ்விய வாழ்க்கைக்குரிய தேவத்துவங்களை அசட்டை செய்தார்கள்.

எபேசியர் 5-ஆம் அதிகாரத்தில் புருஷனுக்கும் மனைவிக்குமுள்ள உறவு, கிறிஸ்துவுக்கும் சபைக்கும் உள்ள உறவை ஒப்பிட்டுள்ளது. கிறிஸ்து சபையோடு நித்தியமாய் இணைக்கப்பட்டுள்ளார். இப்புனிதத் தன்மையே குடும்பத்திலும் என்றென்றும் இருக்க வேண்டும். பிரிந்து செல்வதென்பதற்கு இங்கே இடமில்லை. வாழ்க்கையில் பரிசுத்தமும் மேன்மையும் நிறைந்த உறவு திருமண உறவே யாகும். ஆதி. 2-ஆம் அதிகாரத்தில் தேவன் அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என்று கூறுகிறார். ஒருவரின்றி மற்றவரில்லை. இதுவே தேவ நியமனம். இதுவே குடும்பத்திற்கு ஆதாரம். இருவரின்று குடும்பம் முழுமையடையாது. அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள். கிறிஸ்து ஆதிகால திருமண உறவின் ஐக்கிய நிலைமைகளை புதிய ஏற்பாட்டில் எடுத்துரைத்துள்ளதைக் காண்கிறோம். மத் 19:3-9, மாற்கு 10:1-12, லூக் 16:18 ஆகிய வசனங்களில் கிறிஸ்து திருமண சம்மந்தமாக உரைத்துள்ளதைக் காண்கிறோம். I கொரி 7:10-15, ரோம 7:1-4 ஆகிய வசனங்களில் திருமண வாழ்வின் ஐக்கிய நிலையை பரிசுத்த ஆவியானவர் அப்.பவுலின் மூலமாக மீண்டும் வலியுறுத்திக் கூறுகின்றார். தமக்கும் சபைக்குமுள்ள ஐக்கியத்தை குறிப்பிடுவதன் மூலமாக கிறிஸ்து ஒருமைப்பாட்டின் தத்துவத்தை மீண்டும் விளக்குகிறார் (எபேசி 5:22-23.)

## வாழ்க்கைத் துணையை தேர்ந்தெடுப்பது:-

உங்களுக்கு வாழ்க்கைத் துணையை தேர்ந்தெடுக்க வல்லவர் கடவுள் ஒருவரே. அவருடைய குரலுக்கு செவி கொடுக்கும் மக்களுக்காக இதைச் செய்து முடிக்க அவர் ஆவலாயிருக்கிறார். தேவன் தம்முடைய பிள்ளைகள் ஒவ்வொருவருக்குமான வாழ்க்கைத் திட்டங்களை வைத்திருக்கிறார் (எபேசி 2:10). அது உண்மையானால் நீங்கள் திருமணம் செய்ய வேண்டுமா வேண்டாமா என்பதைக் கூட அவர் திட்டமிட்டு வைத்திருப்பார். இதை நீங்கள் நம்ப வேண்டும். நீங்கள் திருமணம் செய்ய வேண்டுமென்பது தேவனுடைய சித்தமானால் நீங்கள் மணம் செய்ய வேண்டிய ஆளையும் குறித்து வைத்திருப்பார் என்பது உறுதி. தமக்கு கீழ்ப்படிய வேண்டுமென்று அவர் யாரையும் வலுக் கட்டாயம் செய்ய மாட்டார். ஒருவர் கடவுளின் திருவுளத்தை தள்ளி அதற்கு புறம்பான வகையில் கூட திருமணம் செய்து கொள்ள முடியும்.

ஆத்தும மீட்புக்கு அடுத்தபடி வாழ்க்கைத் துணை தேர்ந்தெடுப்பதற்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும். இங்கு தவறு ஏற்பட

நீங்கள் இடமளிக்கக் கூடாது, வாழ்க்கையில் இந்த ஒரு காரியத்தை மட்டும் நீங்கள் மீண்டும் மாற்றி அமைக்க எண்ணக் கூடாது. திருமண காரியத்தில் அவருடைய வேளை வரக் காத்திராமல் அவர் திருவுளம் அறியாமல் பிறரைத் திருப்திபடுத்த அல்லது நான் ஒரு பெண்ணுக்கு வாழ்வளிக்கப் போகிறேன் என்று கூறி நீ திருமணம் செய்து கொள்ளாதே. அப்படித் திருமணம்செய்துகொண்ட பலர் எத்தனையோ காலத்திற்கு பின்பும் இன்றும் மனம் வருந்திக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய வாழ்க்கை நமக்கு நல்ல எச்சரிப்பாக உள்ளது.

கடவுளுடைய திருவுளம் அறியாமல் திருமணம் செய்வதைவிட திருமணம்செய்யாமலே இருந்து விடுவது மேல் என்று கூறலாம். அவருடைய முழு சித்தத்தையும் உணராமல் திருமணம் செய்துவிட்டு வருந்துவதை விட பொறுத்திருப்பது நலம்.

விரத்தராயிருத்தல்: I கொரி 7-ஆம் அதிகாரத்திலும், மத். 19:12ல் இயேசுவானவர் சொன்ன வார்த்தையும் வைத்து கிறிஸ்தவர்களில் சிலர் திருமணமற்றவர்களாய்த் தனி வாழ்க்கை செய்து பணி ஆற்றுவதை உன்னதமான நிலை என்று கூறுகிறார்கள். அதையும் வேத வசன வெளிச்சத்தில் பார்ப்போம்:-

I கொரி. 7-ஆம் அதிகாரத்தை நாம் படிக்கும்போது ஒரு காரியத்தை நாம் மனதில் கொள்ள வேண்டும். இந்த அதிகாரத்தில் சில விஷயங்களை அப்-பவுல் பேசும்போது நான்கு இடங்களில் ஆண்டவருடைய திருவுளத்தை நான் அறிவேன். கர்த்தரால் எனக்குக் கட்டளையில்லை என்கிறார் I கொரி 7:3, 12, 25, 40 பார்க்கவும், எல்லோரும் தன்னைப் போன்று தனி வாழ்க்கை செய்ய வேண்டுமென்று தான் விரும்பினாலும் ஒவ்வொருவருக்கும் ஆண்டவர் அருளிய 'வரம்' (Iகொரி 7:7) உண்டென்பதையும் அவர் ஒப்புக் கொள்கிறார். அவர் இங்கு 'வரம்' என்ற சொல்லை பயன்படுத்துவதை நாம் கவனிக்க வேண்டும். இது முயன்று சாதிக்கும் ஒரு செயலோ அல்லது திறமைக்கேற்ப ஒருவர் பெற்றுக் கொள்ளும் வெகுமதியோ அல்ல, இது ஒரு 'ஈவு' இதில் பெருமைப்படக் கூடிய காரியம் ஒன்றுமில்லை. என்பதே இதன் பொருள்.

இதே சொல்லை இயேசுவானவர் மத். 19:11ல் உபயோகித்துள்ளார். அன்னை வாழ்க்கை ஒரு சிலருக்கு அருளப்படுவதாக அவர் குறிப்பிடுகிறார். கடவுளிடமிருந்து இதை ஈவாகப் பெற்றவர்களே இவ்வாழ்க்கையை வாழமுடியும் என்பதை அவர் தெளிவுபடுத்துகிறார். மத் 19:12ல் திருமணமில்லாமல் இருப்பதில் சிறப்பொன்றுமில்லை. இது ஒரு சிலருக்கு கடவுள் கொடுக்கும் அழைப்பு, பெரும்பாலானோர் விஷயத்தில் அவர்கள் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்பதே கடவுளின் திட்டம். நீங்கள் தனித்திருக்க வேண்டுமென்றால் அதை கடவுள் உங்களுக்குத் தெரிவிப்பார். உங்கள் உள்ளத்தில் அப்படி கடவுளின் கட்டளை ஒன்று கிடைக்காதவரை நீங்கள் திருமணம் செய்து கொள்வதே கடவுளின் விருப்பம் என்று நீங்கள் நினைக்க வேண்டும். "விவாகம் யாவருக்குள்ளும் (விசுவாசிகளுக்குள்ளும், ஊழியர்களுக்குள்ளும்) கனமுள்ளது (எபிரே 13:4). சாத்தான் உன்னை வஞ்சிக்க இடம் கொடுக்காதே.

பால் உணர்ச்சி:- தேவன் தாம் (சிருஷ்டித்து)உண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார். அது மிகவும் நன்றாக இருந்தது (ஆதி 1:31).

(தொடரும்)

---

"...தேவன் இணைத்ததை மனுஷன் பிரிக்காதிருக்கக் கடவன் என்றார்"

(மத் 19:6)

---

சாட்சி

# இயேசுகிறிஸ்து என் நோயை குணப்படுத்தினார்

என் பெயர் V. அண்ணாதுரை என்ற கிதியோன். என்னுடைய சொந்த ஊர் ஈரோடு. நான் இந்துக் குடும்பத்தில் பிறந்தேன். என் பெற்றோர்கள் கற்பித்தபடி நான் இந்து மதத்தில் மிகுந்த வைராக்கியமுள்ளவனாயிருந்தேன். விக்கிரகங்களை பயபக்தியோடு வணங்கி வந்தேன். இப்படியிருக்கும்பொழுது சிலநாள் கழித்து கடவுள் இல்லையென்று நினைத்துக் கொண்டிருந்தேன். சிகரட், பிராந்தி குடித்தல், சீட்டு ஆடுதல் ஆகிய பாவங்களிலிருந்து விடுபட வேண்டும் என்று நினைத்தும் மறுபடியும் இந்தப் பாவங்களை செய்து கொண்டிருந்தேன். பாவத்தின் சம்பளம் மரணம் என்ற வேதவாக்கின்படி நான் பாவத்தில் இருந்து கொண்டிருந்தேன்.

என் அண்ணன் சிம்சோன் புதிய எருசலேம் திருச்சபைக்கு வரச் சொல்வார். அதற்கு மறுதலிக்கிறவனாகவும் காணப்பட்டேன். என் அண்ணன் திருச்சபைக்கு வரச் சொல்லி அடிப்பார். அதற்கு நான் திருச்சபைக்கு வந்தால் தான் ஒழுங்காக இருக்க முடியுமா? திருச்சபைக்கு வராமலே ஒழுங்காக இருக்க முடியும் என்று சொல்பவனாகக் காணப்பட்டேன்.

16-3-89 அன்று நான் மஞ்சள் காமாலையினால் அவதிப்பட்டுக்கொண்டிருந்தேன் நான். ஒரு மாத காலமாக மஞ்சள் காமாலை நோயினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். அப்பொழுது நான் வைத்தியரிடம் சென்று பார்த்தேன். அவர் மருந்து அரைத்துக் கொடுத்தார். இத்தனை நாள் என்ன பண்ணிக் கொண்டிருந்தீர்கள் மஞ்சள் காமாலை முற்றிவிட்டது என்று சொன்னார். நான் என் அம்மாவிடம் இறந்து விடுவேன் என்று சொன்னேன். அந்த நேரத்தில் பேப்பரில் ஒருவர் மஞ்சள் காமாலையினால் இறந்து விட்டார் என்ற செய்தி வந்தது. நான் இந்த செய்தியைப் படித்தவுடன் செய்தி மேலும் பயத்தை உண்டாக்கியது.

அப்பொழுது நான் இயேசு சுவாமியை மஞ்சள் காமாலையைக் குணப்படுத்தினால் நான் திருச்சபைக்கு வருவதாக ஜெபம் செய்து கொண்டேன். அடிமையின் ஜெபத்தைக் கேட்டு என் நோயை குணப்படுத்தினார். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்ற வேத வாக்கியத்தின்படி எங்கள் வீட்டில் அனைவரும் இயேசு சுவாமியை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டோம். அடியேன் 10-4-89 அன்று திருச்சபைக்கு கடந்து வந்தேன். பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் என்ற வேத வாக்கியத்தின் படி அடியேன் ஒரு காலத்தில் மெய் தேவனை அறியாமல் மனம் போல் ஜீவித்துக் கொண்டிருந்தேன். அடியேன் மெய் தேவனை அறிய இரக்கம் செய்தார் இதற்காய் தேவனை ஸ்தோத்தரிக்கிறேன்.

''ஒருவன் கிறிஸ்துவுக்குள் இருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான் பழையவைகள் ஒழிந்து போயின எல்லாம் புதிதாயின- (II கொரி 5:17) என்ற வேதவாக்கின்படி என்னுடைய பழைய சுபாவங்கள் மாற ஆரம்பித்தது. அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி இரட்சிப்பார் (மத் 1:21) என்ற வேத வாக்கின்படி அடியேனின் பாவங்களை முற்றிலும் நீக்கினார். நான் ஒரு நாளைக்கு மூன்று சினிமா பார்ப்பேன். ஆனால் அந்தப் பழக்கத்தைக்கூட தேவனாகிய கர்த்தர் மாற்றினார்.

பின்பு நான் தேவனுடைய மிகுந்த இரக்கத்தால் மே மாதம் 1990ல் 25,26,27 ஆகிய மூன்று நாட்கள் மெட்ராஸில் நடந்த ''புதிய எருசலேம் சபை'' கன்வென்ஷனில் நான் என்னை மெய் தேவனுக்கு ஒப்புக் கொடுத்து தலைமை ஐயா மூலம் ஞானஸ்நானம் பெற்று தேவனோடு உடன்படிக்கை செய்ய தேவன் கிருபை செய்தார். நான் 6-9-90 புதன்கிழமையன்று சேலத்தில் நடந்த முழு இரவு ஜெபத்தில் சேலத்து போதகர் ஐயா முன் பாவங்களை அறிக்கையிட்டேன் என்ன ஆச்சரியம்!

தேவன் என்னை பரிசுத்த ஆவியால் அபிஷேகித்தார். அடியேனுக்கு வருடத்துக்கு ஒரு முறையாவது மஞ்சள் காமாலை வந்து விடும். ஆனால் இப்போது மஞ்சள் காமாலை வராத படி கிருபை செய்தார். இதற்காய் தேவனை ஸ்தோத்தரிக்கிறேன். இப்பொழுது தேவன் தாம் என்னை அவர் பிள்ளையாக மாற்றி அவருடைய கிருபையைத் தந்து பரிசுத்தப்படுத்தி அவருக்கு ஒரு சாட்சியாக என்னை நிலை நிறுத்திக் கொண்டு வருகின்றார். நானும் அவரோடு ஐக்கியமாகி மிகுந்த சமாதானத்தைக் கண்டும் ருசித்தும், அனுபவித்தும் வருகின்றேன். எனவே மெய்யான தெய்வம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என்றும் அவர் ''புதிய எருசலேம் சபை''யில் இருக்கிறார் என்பதையும் என் சாட்சி மூலமாகத் திட்டமாகத் தெரிவிக்கிறேன்.

நீங்களும் விசுவாசியுங்கள். தேவாசீர்வாதம் பெறுங்கள். 'நீ இயேசுவை விசுவாசித்தால் தேவ மகிமையைக் காண்பாய் (யோ 11:40).

இப்படிக்கு கிறிஸ்துவுக்குள்,
**Bro. வ. கிதியோன்**
கொமாரபாளையம்;கிளை
சேலம் மாவட்டம்

''...நான் குருடனாயிருந்தேன், இப்பொழுது காண்கிறேன்...'' (யோ 9:25).

---

# சுவிசேஷம்

ஒருவன் தன் சிநேகிதருக்காக தன் ஜீவனைக் கொடுக்கிற அன்பிலும் அதிகமான அன்பு ஒருவரிடத்திலுமில்லை (யோவா 15:13). மனிதர்கள் தங்களுக்குப் பிரியமானவர்கள், சொந்தக்காரர்கள், தங்களுக்கு உதவி செய்தவர்கள் இருந்தால் அவர்களுக்காக வேண்டிய எல்லா உதவிகளையும் செய்வார்கள். அவர்கள் ஆபத்தில் கைகொடுப்பார்கள், ஆனால் தங்களுக்குப் பிடிக்காதவர்கள் தன் இனத்தைச் சேராதவர்கள் இருந்தால் அவர்களை ஏறிட்டுக்கூடப் பார்க்கமாட்டார்கள். இப்படிப்பட்டவர்கள் ஓர் ஆபத்தில் சிக்கிக் கொண்டால் போனால் போகட்டும் என்பார்கள்.

என்னதான் தங்களுக்கு அன்பானவர்களாயிருந்தாலும் தன்னுயிரைக் கொடுக்க முன்வரமாட்டார்கள். ஆனால் சொல்வார்கள், உனக்காக என் உயிரை வேண்டுமானாலும் தருவேன் என்பார்கள். ஆனால் சந்தர்ப்பம் வரும்போது தலைமறைவாக ஓடிப்போய் விடுவார்கள். ஆனால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோ வானத்தின் கீழ் பூமியின்மேல் நடமாடுகிற அனைத்து மனிதர்களுக்காகவும் தன்னுடைய உயிரைக் கொடுத்திருக்கிறார். மனுமக்கள் மீது தேவன் வைத்த அன்பினால் இப்படி தியாகம் செய்தார். வேதவாக்கியம் சொல்லுகிறதாவது நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே தேவன் நம்மேல் வைத்த தமது அன்பை விளங்கப் பண்ணுகிறார் (ரோம 5:8). பார்த்தீர்களா! தேவன் நம்மீது கொண்ட அன்பை. இந்த அன்பின் சிநேகிதம் உங்களுக்கு வேண்டாமா, அதுமட்டுமல்ல, நம்முடைய பாவங்களை நிவிர்த்தி செய்கிற கிருபாதாரபலி அவரே. நம்முடைய பாவங்களை மாத்திரமல்ல. சர்வலோகத்தின் பாவங்களையும் நிவிர்த்தி செய்கிற பலியாயிருக்கிறார் (I யோ 2:2). ஆகா என்ன அன்பு! பார்த்தீர்களா? இயேசுவின் எல்லையற்ற அன்பு. நீங்கள் உங்கள் பாவங்களைப் போக்க என்னதான் தானதர்மங்களைச் செய்தாலும் உங்கள் பாவம் போகாது. இதோ உங்கள் பாவங்களைப் போக்கும்படியாக உலகத்தின் நாலா திசைகளிலுமுள்ள மனுக்குலத்தின் பாவத்தைப் போக்கும்படியாக உலகத்தின் மத்தியமான யூதேயா நாட்டில்உள்ள எருசலேம் பட்டணத்தில் கொல்கதா மலையில் இயேசு தன்னைப் பலியாய் ஈந்தார். நீங்கள் எந்நிலையில் இருந்தாலும் இயேசு உங்களுக்கு சொந்தமானவரே மட்டுமல்ல. மனிதனுடைய பிறப்பு, இறப்பு, அடக்கம், உயிர்த்தெழுதல் ஆகியவற்றின்

இலக்கணமுடையவனாயிருக்கிறபடியே இயேசுவும் இந்த இலக்கணத்தின் வடிவில் வந்து பலியானார். எப்படியெனில் முதலாவது மனிதன் பிறக்கிறான். இரண்டாவது மரிக்கிறான், மூன்றாவது அடக்கம் பண்ணப்படுகிறான். நான்காவது இறைவனுக்கு முன்பாக நியாயத்தீர்ப்புக்காக உயிர்த்தெழுதலடைகிறான். இதுவே மனிதனின் முழுத் தன்மையாகும். அப்படியே இயேசுவும் முழுமையான, பூரணமான பலியாகத் தன்னைப் படைக்கும் வகையில் இயேசு புருஷனை அறியாத கன்னிகையினிடத்தில் பரிசுத்த ஆவியால் உற்பத்தியாகி பிறந்தார். இரண்டாவது சிலுவையில் அறையப்பட்டு மரித்தார். மூன்றாவது அடக்கம் செய்யப்பட்டார், நான்காவது உயிர்த்தெழுந்தார். இதுவே முழுமையானதும், அர்த்தமுள்ளதும், யாவரும் ஒப்புக்கொள்ளக் கூடியதுமான பலி. எனவே இயேசுவின் தியாகப் பலியாலேயன்றி வேறே எதினாலும் மனிதனின் பாவம் நிவிர்த்தியாகாது என்பது சத்தியம்.

இயேசுவாலேயன்றி வேறொருவராலும் மீட்பில்லை. இயேசுவேயல்லாமல் வேறே எந்த மதத்திலாகிலும் நான் வணங்கிய தெய்வம் என் பாவத்தை மன்னித்தது. நான் பாவியாயிருந்தேன். என் தெய்வம் எல்லாவற்றையும் நிவிர்த்தி செய்துவிட்டது. இப்பொழுது நான் பரிசுத்தமாயிருக்கிறேன் என்று யாராலும் சொல்ல முடியுமா? அப்படிச் சொல்லக் கூடுமானால் இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு தன்னுடைய பாவத்தை முறையாக அறிக்கைசெய்து விட்டுவிட்ட ஒரு மெய்க் கிறிஸ்தவன்தான் சொல்ல முடியுமே தவிர வேறு யாரும் சொல்லவே முடியாது. இப்படித்தான் தேவதாசன் என்ற சகோதரன் இயேசு கிறிஸ்துவைத் தன் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு பாவத்திலிருந்தும், சாபத்திலிருந்தும் விடுதலை பெற்று எப்பொழுதும் சந்தோஷமாக ஜிவித்துக் கொண்டிருந்தார். காட்டன் மில் தொழிற்சாலையில் நல்ல ஒரு வேலையும் கிடைத்தது. தன்னோடு வேலை பார்க்கும் நவமணி என்ற சகோதரனுக்கு இயேசுவைப் பற்றியும், இயேசுவின் உயிர்த் தியாகப் பலி பற்றியும் சொல்லி நீங்களும் கடவுளாகிய இயேசுவை ஏற்றுக் கொள்ளுங்கள் சகோதரரே என்று அடிக்கடி சொல்வது வழக்கம். ஒருநாள் நவமணி கேட்டார். என்ன! உங்கள் இயேசுநாதர்தான் உயிர் கொடுத்தார் என்று சொல்கிறீர்களே இப்பொழுது என்னுடைய தாய், தகப்பன், மனைவி எல்லாம் இப்பவே எனக்காக உயிரைக் கொடுக்க தயாராக இருக்காங்க. ஆனபடியால் அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று சொன்ன மாதிரி நான் அவர்களை நினைத்தாலே போதும் என்றார். அதற்கு தேவதாசன் அடே தம்பி நீ சொல்கிற மாதிரி அவர்கள் உனக்காக உயிர் கொடுக்கப் போவதுமில்லை தெய்வமாகப் போவதுமில்லை. உண்மையாகவே மனிதனுக்காக உயிர் கொடுத்தவர் ஒருவர் உண்டென்றால் அது இயேசு கிறிஸ்து தான் என்று திட்டமாகச் சொன்னார்.

ஆனாலும் நவமணியின் மனம் மாறவில்லை. இப்படியே ஆண்டுகள் பல கடந்தன. நவமணிக்கு கம்பெனியில் வாங்குகிற சம்பளம் போதாதபடியால் வெளிநாடு சென்று வேலை செய்து அதிகப் பணம் சம்பாதிக்கலாம் என எண்ணிஅதன்படி தென் ஆப்பிரிக்கா சென்றுவிட்டார். போன இடத்தில் நல்ல வேலை கிடைத்தது. அதிகமான சம்பளம் கிடைத்து வங்கியில் பணத்தையெல்லாம் சேர்த்து வைத்தார். ஏறத்தாள பத்து வருடம் கழித்து அதிகமான பணம், வெளிநாட்டுப் பொருட்கள் சேலை, துணிமணிகள் ஏராளமாக வாங்கிக் கொண்டு தன்னுடைய ஊருக்கு வந்தார். வீட்டில் எல்லோருக்கும் ரொம்ப சந்தோஷம் ஒரே ஆரவாரம்தான். இரவு சாப்பிட்டு விட்டு எல்லோரும் அவரவர் படுக்கைக்குப் போய் படுத்துக் கொண்டார்கள். அப்படியே நவமணியும் அவன் மனைவியும் தனி அறையில் உட்கார்ந்து வெளிநாட்டு சங்கதிகளையெல்லாம் பேசிக் கொண்டிருக்கும் போது நவமணி மனைவியைப் பார்த்து நீ எப்படி என்னை மறந்து விட்டு நிம்மதியாய் இருந்தாய் என்று கேட்டார். அதற்கு அவள் ஐயோ! அதை ஏன் கேட்கிறீங்க, நான் ஐந்து, பத்து வருஷமா செத்த பிணமாகத்தானிருந்தேன். உயிரெல்லாம் உங்கள் மேல் தான். வெறும் கட்டைதான் இங்கே இருந்தது என்றாள். இப்படியே பேசிக் கொண்டிருக்கும் போது நவமணி இப்போ நான் கேட்பதெல்லாம் தருவாயா? என்றான். அதற்கு அவள் என்னங்க இப்படி கேட்டுட்டீங்க நான் உங்

களுக்காக என் உயிரை இப்பவே விடச் சொன்னாலும் விடத் தயாராயிருக்கிறேன் என்று அழுத்தமாகச் சொன்னான். நவமணிக்கு ரொம்ப சந்தோஷம். இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போது வாசற்படிக்கு வெளியே "சலார், சலார், சலார்" என்று கோர சத்தமாய் பெரிய சத்தம் கேட்டிருக்கிறது. இவர்களுக்கு ஒரே பயம் ஆட்டியது. அடுத்த படியும் "சலார் சலார்" என்றதும் நடுத்த குரலில் அடே! நவமணி வெளியே வா நான் எமதர்மன் உன்னைக் கொண்டு வரும்படி கடவுள் என்னை அனுப்பியிருக்கிறார் என்ற சத்தம் கேட்டதுமே நவமணிக்கு நடுக்கமும் பயமும் பிடித்து ஆட்டியது. ஐயோ நான் பத்து வருடத்துக்குப் பிறகு இன்றைக்குத்தான் வீட்டுக்குவந்து என் மனைவியிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். ஐயோ நான் என்ன செய்வேன் என்று மகா துயரத்தோடே சொல்லி அழ ஆரம்பித்தார். அப்புறமும் டேய்! சீக்கிரம் வா என்ற சத்தம் கேட்டதும் உடனே ஓடிப்போய் பாட்டியை எழுப்பி பாட்டி என் உயிரைப் பிடிக்க எமதர்மன் வந்து வாசற்படியில் நிற்கிறான். எனக்குப் பதிலாக நீங்க போங்க பாட்டி. உங்களுக்கு இப்போது எண்பது வயதாகிவிட்டதுதானே என்று சொன்னான். அந்தப் பாட்டி உடனே அடப் பாவி கொலைகாரா, கொஞ்சம் கூட இரக்கமில்லாமல் தெய்வம்போல இருக்கிற என்னைப் போகச் சொல்லுகிறியேடா. நீ சின்னப் பயதானடா போடா என்று சொல்லியதும் தாயாரிடம் போய் அம்மா எனக்காக நீங்களாவும் எமதர்மனிடம் போங்கள் என்றான். அதற்கு அந்த அம்மா டேய், நீ குடியிருந்த கோயிலடா நானு. என்னைச் சாகச் சொல்லிவிட்டு நீ வாழ முடியுமாடா என்று சொல்லி உன்னைப் பெற்றதற்கு ஒரு குழவிக் கல்லை பெற்றிருந்தால் மசாலா அரைக்க ஆகும் என்று சொல்லிவிட்டுப் போய் படுத்துக் கொண்டாள். அப்படியே அப்பா, தம்பி தங்கை எல்லாரிடத்திலும் கேட்டான். யாரும் போக தயாராயில்லை. கடைசியாக தன் மனைவியிடம் போய் எனக்காக நீ போ! என்றான். அதற்கு அவள் இவ்வளவுதானு என்மீதுள்ள உங்க அன்பு மனைவிக்காக கணவன் உயிரைக் கொடுப்பாங்கன்னுகேள்விப்பட்டிருக்கிறேன். நீங்க என்னடான்னா பொம்பளையைப் போய் சாகச் சொல்லுறீங்களே என்று சொல்லிவிட்டுப் போய் படுத்துக் கொண்டாள் கோபமும் பயமுமாக.

அப்புறம் வெளியேயிருந்து உரத்த சத்தத்தில் அடே! இன்னுமாடா வராமலிருக்கிறாய். இன்னும் இரண்டே நிமிஷத்தில் நீ வராமல் போனால் வீட்டுமேலே விழுந்து வீட்டை இடித்து உங்கள் எல்லோரையும் சேர்த்துக் கொண்டு போகப்போகிறேன் என்று ஆவேசத்தோடே சத்தம் கேட்டது. அப்போது வீட்டில் உள்ள எல்லாரும் ஒன்றுசேர்ந்து இவன் போகாட்டிபோனால் இருக்கிற எல்லாருக்குமே ஆபத்து. ஆனபடியால் இவனைப் பிடித்து வெளியே தள்ளிவிட வேண்டியதுதான் என முடிவுகட்டி 'நவமணியைப் பிடித்து வெளியே தள்ளினார்கள். அப்போது அவன் அலறி அடித்து மனைவியைப் பார்த்து ஏண்டி, இப்போதானே நீ உங்களுக்காக என் உயிரை இப்பவே விட தயார் என்று சொன்னாயடி என்றான். அட போய்யா பே. ஏதோ ஆசைக்கு வாயிலே சொன்னாப்பில உயிரைக் கொடுத்து விடுவாங்களாக்கும். உனக்கு சாவு வந்துட்டா போய் தொலையேன். இருக்கிறவங்க உயிரை ஏன் வாங்குற என்றாள். வெளியேயிருந்து சத்தம் வருகிறது. இன்னும் ஒரே நிமிஷம்தான் வராது போனால் உங்கள எல்லாரையுமே கொல்லப் போகிறேன் என்றதுமே எல்லாரும் பயந்துபோய் இந்த சனியனை வெளியே தள்ளினால்தான் நம்ம தப்ப முடியும் என்று சொல்லி நவமணியின் கையையும், காலையும் பிடித்து அலற அலற வெளியே இழுத்துக் கொண்டு போய் வெளியே விட்டதுமே கதவைப் பூட்டிக் கொண்டார்கள். இவன் மரண பயத்தால் பிடிக்கப்பட்டு மயங்கி விழுந்து விட்டான். இப்படி சத்தம் கொடுத்தது தேவ தாசன் தான்.

எப்படியெனில் நவமணி வெளிநாட்டிலிருந்து வந்திருக்கிறான் என்பதைக் கேள்விப்பட்டு அவனைப் பார்க்கலாம் என்று ஒரு ஜெபக் கூட்டத்திற்கு சென்றுவிட்டு வருகிற வழியில் ஆராதனையில் அடிக்கிற சிமிட்டாவையும் கையில் பிடித்துக் கொண்டு நவமணியை விட்டு வாசற்படியில் நின்று உள்ளே அவனும் அவன் மனைவியும் பேசிக் கொண்டிருக்கும்

‘தேவன் ஒருவரே…’
THERE IS ONE GOD...

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

போது அவன் மனைவி இப்பவே உங்களுக்காக என் உயிரைவிடத் தயார் என்று சொன்ன வார்த்தையைக் கேட்டதும் தேவதாசன் சற்று சுதாரித்துக் கொண்டு இன்றைக்கு இவனுக்காக யார்தான் உயிரைக் கொடுக்க முன் வருவார்கள் என்பதை பார்ப்போம் என்று சொல்லி இப்படியாக பிமிட்டாவை சலார் சலார் என்று தட்டி இப்படிக் கூப்பிட ஆரம்பித்தார். எல்லோரும் சேர்ந்து இவனை வெளியே தள்ளவுமே மயங்கிக் கிடக்கும் இவனைத் தூக்கிக் கொண்டு தன்னுடைய இருப்பிடத்திற்கே கொண்டு போய்விட்டார். ஏற்கனவே தேவதாசன் சற்று பருமனான ஆளுங்கூட. அதனால் தைரியமாக தூக்கிக் கொண்டு வந்துவிட்டார். அவன் அந்த மயக்கத்திலேயே தூங்கிவிட்டான். காலையில் நித்திரை தெளிந்து கண்விழித்துப் பார்த்ததுமே அவனுக்கு அதிர்ச்சியாகிவிட்டது. உடனே தேவதாசன் சகோதரரே நீர் பத்து வருடத்திற்கு முன்னால் உன் வீட்டில் உள்ள எல்லோருமே உனக்காக உயிரைக் கொடுப்பார்கள் என்றாயே, இந்த ராத்திரி உனக்காக யார் உயிர் கொடுக்க முன்வந்தது? என்பது வயது கிழவியாகிலும் உயிர் கொடுக்க முன்வந்ததா? இதோ உனக்காக இயேசுநாதர் உயிர் கொடுத்திருக்கிறார். இதை இப்பவாவது நம்புகிறாயா என்றார்.

உடனே அவர் காலைப் பிடித்துக் கொண்டு சகோதரரே என் தாயும் என் மனைவியும் என்னிடத்தில் காண்பித்த மாய்மாலமான அன்பை நம்பித்தான் உங்களுடைய ஆலோசனைகளையெல்லாம் அலட்சியம் செய்தேன். மெய்யாகவே நீங்கள் ஆராதிக்கிற கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே எனக்காக உயிரைக் கொடுத்த ஆண்டவர் என்பதை இப்பொழுது அறிந்து கொண்டேன். நான் இரட்சிக்கப்பட என்ன செய்ய வேண்டும் என்று அழுதுகொண்டே கேட்க ஆரம்பித்தார். அப்புறம் அவரை சபைக்கு அழைத்துவந்து பரிசுத்தவான்களிடம் விடவுமே பரிசுத்தவான்கள் காட்டிய தெய்வீக அன்பையும் உபசரிப்பையும் பார்த்ததுமே அவருக்கு சொல்லொண்ணா சந்தோஷமும், ஆச்சரியமுமாகிவிட்டது. பின்பு அவர் ஞானஸ்நானம் பெற்று பரிசுத்த ஆவி பெற்று கர்த்தருக்கு சாட்சியாக இருந்தாராம்.

அவர் தம்முடைய ஆத்துமாவை மரணத்தில் ஊற்றி அக்கிரமக்காரரில் ஒருவராக எண்ணப்பட்டு அநேகருடைய பாவத்தை தாமே சுமந்து அக்கிரமக்காரருக்காக வேண்டிக் (கொண்டார்) கொண்டதினிமித்தம் அநேகரை அவருக்குப் பங்காகக் கொடுத்தார் (ஏசா 53:12).

"நானே நல்ல மேய்ப்பன்; நல்ல மேய்ப்பன் ஆடுகளுக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிறான் (யோ 10:11).

## ஞானஸ்நானம்

கிறிஸ்துமஸ் புது வருஷ ஆராதனையில் புதிய எருசலேம் சபை (பம்பாயில்) 8 பேர்களும், (வள்ளியூரில்) 38 பேர்களும் திருமுழுக்குப் பெற்று திருச்சபையில் சேர்ந்து கொண்டார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   28 (வியாழன்) பிப்ரவரி 1991
   27 (புதன்) மார்ச் 1991
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாக குறிப்பிடவும்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at: PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph: 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 87 - March 1991

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப்.1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய ஜனங்களுக்கு கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள் பல

உலகத்தின் ஒரு பகுதியில் யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. பாபிலோனைக் குறித்தும், ஏதோமைக் குறித்தும் கர்த்தருடைய தீர்க்கதரிசனங்கள் நிறைவேற வேண்டியதாயிருக்கின்றன. அவைகள் நிறைவேறுகின்றன. எழுந்திருக்கமாட்டாத படி பாபிலோன் (ஈராக்) முறியடிக்கப்படும். பாலஸ்தீனு (Lebanon), சீரியா, மெசபெத்தோமியா ஆகியவைகள் ஏதோம், பெலிஸ்தர் ஆகியோர்களின் சந்ததிகளாகும், அவைகளும் முறியடிக்கப்படும். இஸ்ரவேல் பாதுகாக்கப்படும். அமெரிக்கா, அதனுடைய கூட்டு நாடுகள் அம்புச் செலவைப் பார்க்கக்கூடாது. ஏனெனில் பாபிலோன் கர்த்தருக்கு விரோதமாகப் பாவம் செய்தது. ஈராக்கை சுற்றி அணிவகுத்து அதற்கு விரோதமாய் அதன்மேல் அம்புகளை எய்ய கர்த்தர் கட்டளையிட்டுள்ளார் (எரே 50:9-15; எரே 49 அதி. எரே 51 அதி; ஏசா 21 அதி). யார் தடுத்தாலும் நிற்காமல் நடைபெற வேண்டிய சம்பவமே இவைகள். இவைகளின் முடிவு என்னவாய் இருக்கும் என்பதும் நமக்குத்தெரியும். நாம் கர்த்தரில் களிகூர்ந்து நம்முடைய கர்த்தருடைய வேதத்தில் எழுதியிருக்கிற தீர்க்கதரிசன சம்பவங்களே நிறைவேறுகின்றன என்று அறிந்து உற்றுகவனிப்போமாக. துன்மார்க்க ஜனங்களுடைய அபேட்சை அழியும். துன்மார்க்கருக்குத் துணை போகிறவர்களும் வெட்கி நாணமடைவார்கள். நாமோ நம்முடைய தலைகளை உயர்த்தி நம்முடைய மீட்பு சமீபமாயிருக்கிறது என்று அறிந்து ஆயத்தப்படுவோமாக. நம்முடைய இராஜாவை சந்திக்க கர்த்தருடைய ஜனங்கள் யாவரும் ஒன்றாய்க் கூட்டி சேர்க்கப்படுவார்கள். அவரைச் சந்திக்க ஆயத்தப்படுவார்கள். அதற்கான கட்டளையும், கிருபையையும், அதிகாரமும், திருச்சபைக்கு இறைவன் கையளித்துள்ளார். ஆனபடியால் நாம் சந்தோஷப்பட்டு களிகூறுவோமாக.

இதோ கர்த்தர் வருகிறார் !

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR.)

# சத்தியத்துக்குக் கீழ்ப்படியாமல் அநியாயத்துக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்கோ உக்கிரக கோபாக்கினை வரும்

(தொடர்ச்சி)

புதிய எருசலேம் செய்தியில் வெளியான ஒரு 'சாட்சி சம்பவம் சரியில்லை, அது மிகைப்படுத்தி எழுதப்பட்டது என்று ஒரு ஊழியர் எனக்கு எழுதியிருந்தார். சரி, அப்படியா உண்மையை அறியலாம் என்று சம்பந்தப்பட்டவர்களுக்கு தபால் (Letter) எழுதி விசாரித்தறிந்தேன். மேற்படி சம்பவத்தில் சம்பந்தப்பட்டவர்கள் பத்திரிக்கையில் எழுதப்பட்டிருக்கிற செய்தி சரியே. குற்றஞ் சொல்ல மேற்படி ஊழியக்காரன் ஒரு பொய்யன். அந்தச் சம்பவம் நடந்து 3 மாதங்கள் கழித்து இவன் குறை சொல்லுவது அயோக்கியத்தனம். அவன் ஒரு மாய்மாலக்காரன் என்று எழுதி அனுப்பினார்கள். இந்த ஆவணங்களை நான் சேர்த்துக் கொண்டு மேற்படி உண்மை விளம்பி ஊழியக்காரனுக்கு ஒரு கடிதம் (Letter) எழுதினேன். சம்பவம் நடந்த ஊருக்கு நான் சுற்றிப் பார்க்க (Visiting) வருகிறேன், நீரும் அங்கு வாரும். உண்மையை அறியலாம் என்று எழுதிவிட்டு அந்த ஊருக்குச் சென்றேன். திருவாளர் வரவில்லை. Letter ஒன்று வந்தது. அதில் நான் ரொம்ப அவசர ஊழியத்திலிருக்கிறேன். அதனால் வர முடியவில்லை என்று. சரி போகட்டும்.

சில நாட்கள் கழித்து அதே ஊழியரிடத்திலிருந்து பிரமாதமான ஒரு தபால் (Letter) வந்தது. தானும், பாஸ்டர் ஜோசப்பும் சென்னை (Madras)மெரினா கடற்கரையிலிருந்து ஜெபித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது வானத்தில் ஒரு கரம் காணப்பட்டது. என்னோடிருந்த ஊழியர் உடனே ஜெபிப்போம் என்று சொல்லி உங்களுடைய தலையில் தேவனுடைய கரம் இரங்கிற்று என்றார். ஆஹா! தேவனுடைய காயம்பட்ட கரமல்லவா; அற்புத கரம், அதிசய கரம் என்று ஒரே வருணனை. பல வருணனைகளோடு கூட எழுதியிருந்தார். அது இயேசுவின் கரம் என்மேல் இறங்கிற்று என்று எழுதியிருந்தார். அப்படியா ஐயா? தேவனுடைய கரம் இறங்கிற்று என்று வேதாகமத்தில் எழுதப்பட்டிருக்கிறதெல்லாம் பரிசுத்தாவியானவர், தேவனுடைய வல்லமை இறங்கிற்று என்றே அர்த்தம் என்று வசன ஆதாரங்களோடுகூட எழுதி வசன ஆதாரங் காட்டி விளக்கினேன், அதோடு கூட நான் சென்னை (Madras) போகிறேன் அந்த (Pastor)பாஸ்டர் ஜோஸப்பின் விலாசத்தையும் (Address) எழுதுங்கள். அவரையும் கண்டு விசாரிக்கிறேன் என்று எழுதியிருந்தேன். ஆனால் மேற்படி ஊழியர் பாஸ்டர் ஜோஸப்பினுடைய விலாசத்தை (Address) தரவில்லை. இன்னும் தந்தபாடில்லை. ஆனால் தேவனுடைய கரம் என்பது தேவனுடையவல்லமைதான் என்பதை ஒத்துக் கொண்டார்.

மேலும் இவர் புதிதாக கண்டுபிடித்தது போல சில உபதேசங்களை எழுதிக் கொண்டிருந்தார். சரி, அப்படியென்றால் அந்த உபதேசத்தை நான் கேட்க விரும்புகிறேன். ஆனபடியினால் அங்கே வருகிறேன். நீரும் உம்முடைய உபதேசக்காரர்களும் இந்த இடத்தில் வந்து உங்கள் உபதேசத்தை சொல்லுங்கள் என்று தபால் (Letter) அனுப்பிவிட்டு போய் கோயம்புத்தூர் சபையிலே அவருடைய வருகையை எதிர்பார்த்து 10 நாட்கள் காத்திருந்தேன். அவரிடத்திலிருந்து அருமையான ஒரு தபால் (Letter) வந்தது. நான் எங்கும் அலைந்து ஊழியம் செய்வதால் நான்உங்களை சந்திக்க எனக்கு நேரமில்லை என்று எழுதப்பட்டிருந்தது. இந்த வஞ்சகன் என்ன செய்தான் என்பதை நான் கண்டுபிடித்தேன். எனக்கு எழுதின லெட்டர்களுடைய Zerox Copyகளை தான் வஞ்சிக்க வேண்டுமென்று எண்ணி செயல்படுகிற சிலருக்கும் அனுப்பி புதிய எருசலேம் பாஸ்டருக்கு விளக்கம் கேட்டு எழுதினேன். பதில் கொடுக்க முடியவில்லை என்று சொல்ல, தன்னை பெரிய

ஆளாகக் காட்டிக் கொள்ள இந்தச் செயலை இந்த மனிதன் செய்கிறான் என்று எனக்குத் தெரிய வந்தது. எனக்கு அனுப்பப்பட்ட அதே (Letter)லட்டர்களின் Zerox Copyகள் சிலருக்கு அனுப்பப்பட்டதை நான் கைப்பற்றி வைத்திருக்கிறேன். ஆனபடியினால் ஆத்துமாக்களை வஞ்சிக்கிற இப்படிப்பட்ட வஞ்சக ஊழியர்களைப் பற்றி கிறிஸ்தவ உலகத்திற்கு எழுதி வெளிப்படுத்துவது அவசியமாயிருக்கிறது.

ஒரு ஸ்திரீக்கு இரவு 12 மணிக்கு இவருடைய ஞாபகம் வந்துவிட்டதாம். அவள் இரவு விழித்திருந்து புருஷனுக்குத் தெரியாமல் இவரைப் புகழ்ந்து எழுதியிருக்கிறாள். இவர்களுடைய சீர்கேட்டை என்னவென்றுசொல்லுவது? நேரடியாக சந்தித்து விசாரிக்க வேண்டிய அநேகக் காரியங்கள் உண்டு. இவர்களைக் கூப்பிட்டாலும் வரமாட்டார்கள். நாங்கள் வருகிறோம் என்றாலும் ஓடி ஒளிவார்கள். எந்த வாக்கையும் உண்மையாய் நிறைவேற்றவுமாட்டார்கள். யாரிடத்திலேயாவது சத்தியம் உண்டென்றால் அவர்கள் நேரடியாக வரலாம். ஒரு வழி பயணச் செலவு நான் கொடுக்கத் தயார்,

வெளிநாட்டை நம்பி ஊழியம் செய்கிற ஒரு பெந்தெகொஸ்தே கூட்டத்தார்களிலிருந்து தேவனுடைய பிள்ளைகளில் சிலர் சத்தியத்தை அறிந்து புதிய எருசலேமுக்கு வந்து சேர்ந்ததினாலே மேற்படி சபையின் ஊழியர்களுக்கெல்லாம் மிகுந்த கோபம் வந்துவிட்டதாம். அவர்கள் புதிய எருசலேம் சபையின் ஊழியர்களுடன் லட்டர் மூலமாகவும், நேரடியாகவும் சில வாக்குவாதங்கள் செய்திருக்கிறார்கள். அதோடுகூட நாங்கள் எல்லாரும் அதாவது சேலம் மாவட்டத்திலுள்ள பெந்தெகொஸ்தே பாஸ்டர்கள் எல்லாரும் சேர்ந்து இந்தக் காரியத்துக்கு முடிவு கட்டுவோம். உங்கள் Chief Pastor-யிடம் ஒரு கேள்வி கேட்காமல் விடமாட்டோம். உங்கள் தலைமை போதகருக்கு(Chief Pastor) எழுதுங்கள் என்று சொல்லி எனக்கு செய்தி வந்தது. எனக்கு மிகவும் சந்தோஷம். அப்படி எல்லாரையும் கூடி கூட்டத்திற்கான (Meeting) நாளைக் குறித்துவிட்டு எனக்கு லட்டர் எழுதச் சொல்லுங்கள் நான் வருகிறேன். மேற்படி Meeting நாளை News Paper-லும் விளம்பரப்படுத்தட்டும். வீடியோவும் (Video) ஒழுங்கு (arrangement) செய்து கொள்ளலாம் என்று எழுதின் மூலமும், ஆள் மூலமாகவும் செய்தி அனுப்பினேன். அந்த செய்தி மேற்படி ஊழியர்களுக்கும் அறிவிக்கப்பட்டது. ஒவ்வொருவரிடமாய் பேசித் தொண்டைத் தண்ணீரைச் செலவழிக்கிறதைக் காட்டிலும் அப்படி இவர்கள் மொத்தமாகக் கூடினால் சத்தியத்தை ஸ்தாபிக்கிறது இலகுவாயிருக்குமே என்று நினைத்தேன். ஆனால் மேற்படி ஊழியர்களிடமிருந்து அணக்கமே இல்லை. வேறு என்ன செய்ய? அவர்களுக்கே தெரியும். அவர்கள் செய்கிறது ஊழியம் அல்ல, அட்டூழியம் என்று.

ஆத்துமாக்கள் எல்லாம் கர்த்தருடையது. ஆடுகள் என்னுடையது,உன்னுடையது என்று பங்கு போட்டு வாக்குவாதம்பண்ணுகிறீர்கள், கர்த்தர் தம்முடைய ஆடுகளை தம்முடைய மந்தையிலே கூட்டிச் சேர்ப்பார். நீ எவ்வளவு தான் வேலியடைத்தாலும் என் ஆடுகள் என் சத்தத்துக்குச் செவி கொடுக்கும் (யோ 10:16) என்ற இறைவார்த்தையின்படி அவருடைய ஆடுகள் வேலியை உடைத்துக்கொண்டு ஒரு நாள் நல்ல மேய்ச்சலுள்ள, சுத்தத் தண்ணீருள்ள இடத்துக்கு வந்தே சேரும். நாங்கள் பாடுபட்டோம், உழைத்தோம், கட்டினோம். இது என் வல்லமையின் பராக்கிரமத்தினால் என் மகிமை பேர்பிரஸ்தாபத்துக்கென்று நான் கட்டின பாபிலோன் என்று சொல்லிக் கொண்டிருக்காதீர்கள். ஆத்துமாக்களைக் கர்த்தரிடம் சேருங்கள் (லூக் 11:23, மத் 12:30). மெய்யான சபையினிடமாய்க் கொண்டு வந்து சேருங்கள் (அப் 11:24). அப்படிச் செய்தால் உங்கள் பிரயாசத்துக்கான பலனை நீங்கள் பெறுவீர்கள்.தேவனுடைய ஆடுகளைக் கூட்டிச் சேர்க்கவும், அவருடைய வருகைக்காய் அவர்களை ஆயத்தப்படுத்தவும் புதிய எருசலேம் சபை பூமியிலே எழுப்பப்பட்டிருக்கிறது. அதற்காக அனுப்பப்பட்டிருக்கிறோம். ஆடுகளைக் கூட்டிச் சேர்த்து, ஆதாயப்படுத்தி அவருடைய சந்நிதானத்திலே கொண்டு போய் நிறுத்துவதற்கு அதிகாரமும் கட்டளையும் எங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது (I கொரி 11:2). இது எங்களுடைய உரிமை, ''விதைக்கிறவன் ஒருவன் அறுக்கிறவன் ஒருவன்'' என்

கிற மெய்யான வழக்கச் சொல் இதினாலே விளங்குகிறது. நீங்கள் பிரயாசப்பட்டு பயிரிடாததை அறுக்க நான் உங்களை அனுப்பினேன் மற்றவர்கள் பிரயாசப்பட்டார்கள். அவர்களுடைய பிரயாசத்தின் பலனை நீங்கள் பெற்றீர்கள் என்றார் (யோவா 4:37,38). அது நிறைவேறுகிறது.

புதிய எருசலேம் சபையை எதிர்த்து, எங்களைப் பகைத்து கிரியை செய்ததினிமித்தம் தங்கள் ஆத்தும ஜீவனை இழந்து போனவர்கள் உண்டு. தங்கள் குடும்பத்திலுள்ளவர்களின் இரட்சிப்பை இழந்து போனவர்கள் உண்டு. சரீர ஜீவனை இழந்து போனவர்கள் உண்டு, தேவ சாபம் உண்டாகி சிட்சிக்கப்பட்டவர்களுண்டு. தங்களுடைய ஊழியமும், சபைகளும் சிதறிப் போய் நஷ்டப்பட்டு வெட்கப்பட்டவர்கள் உண்டு. சத்தியத்தை எதிர்த்து ஜெயங் கொண்டவர்கள் ஒருவருமில்லை. நாங்கள் தேவனால் உண்டானவர்கள். தேவனை அறிந்தவன் எங்களுக்குச் செவி கொடுக்கிறான், தேவனால் உண்டாயிராதவன் எங்களுக்குச் செவி கொடுக்கிறதில்லை (I யோ 4:6). உலகமெங்கும் புதிய எருசலேம் சபை கட்டப்படும். யார் எதிர்த்தாலும் தூஷித்தாலும் அவர்கள் யாரால் இயக்கப்படுகிறார்கள் என்று எங்களுக்குத் தெரியும். உண்மையுள்ளவர்கள் உண்டென்றால் அவர்கள் நேரடியாக வரட்டும், Letter மூலமாக அல்ல. அவர்கள் கூப்பிடட்டும் நாங்கள் அங்கு வருகிறோம். உட்கார்ந்து பேசுவோம். எது சத்தியம்? எது உண்மை? எது பொய் என்று அறிந்து பொய்யைக் களைந்து மெய்யைப் பின்பற்றுவோம் கிறிஸ்தவத்தை ஸ்தாபிப்போம். சத்தியவான் எவனும் என் சத்தம் கேட்கிறான் என்ற கர்த்தருடைய வார்த்தை நிறைவேறட்டும் (யோவா 18:37).

(தொடரும்)

"..இவர்கள் துர்புத்தியுள்ள மனுஷர்கள், விசுவாசவிஷயத்தில் பரீட்சைக்கு நில்லாதவர்கள்..." (II தீமோ 3:8,9)

---

# முகம்மது மார்க்கத்தை அறிந்து கொள்ளுதல்

(தொடர்ச்சி)

IIவது நடக்கைக்குரிய "தீன்" என்பவைகள் நாலு. அவையாவன:

1. நமாஸ் பண்ணுகிறதும்.

2. பிச்சையாகிய சக்காத்து கொடுக்கிறதும்.

3. உபவாசம் பண்ணுகிறதும்.

4. மக்காவுச்கு யாத்திரை போகிறதுமே.

1. நாளொன்றிற்கு 5 தரம் ஜெபமாகிய நமாஸ் செய்ய வேண்டும். அப்போது மக்காவின் புறமாக "கிபலா"வை நோக்கிக் கொண்டிருக்க வேண்டும். நமாஸுக்கு முன் ஸ்நானம் பண்ண வேண்டும். இரண்டு விதமான ஸ்நானங்கள் உண்டு. தீட்டுப்பட்டிருக்கும்போது 'குஸத்' என்ற சர்வாங்க ஸ்நானமும் மற்ற வேளைகளில் கை, கால் கழுவிக் கொள்ளும் "அபதஸ்த" என்ற ஸ்நானமுமே. ஜலமில்லாதவிடத்திலே சுத்தமான மணலினால் சரீர சுத்தம் செய்ய வேண்டுமாம். நமாஸ் பண்ணுகிறவர்கள் 99 மணி சேர்ந்த "துஷ்பா" என்னும் ஒரு ஜெபமாலையைக் கொண்டு ஜெபிப்பார்கள்.

2. சக்காத்து என்கிற பிச்சை கொடுக்கிறதில் இரண்டு விதமாம்.

(a) நியாயமானபடி நம்முடைய ஆஸ்திகளில் 1 பாகம் பகுதியாக அல்லாவுக்குக் கொடுக்கிறது. இதற்குப் பெயர் சக்காத்து.

(b) உற்சாகமான மனதோடே ஒருவனுக்கு கூடியமட்டும் தான தர்மம் பண்ணுவது இதற்கு "சதாகாத்" என்பது பெயர்.

3. ரம்ஜான் மாதத்தில் ''கொரான்'' இறங்கினதாம். ஆனபடியால் இந்த மாதம் முழுவதும் ஒரு பிறை கண்டு மறு பிறை காணு மட்டும் சூரியன் தோன்றி அஸ்தமிக்கும் பரியந்தம் மகா விரதமாய் உபவாசம் பண்ண வேண்டும். அப்படிச் செய்யும்போது உமிழ்நீர் விழுங்கவும், காத்துப் பரியவும் (அபானவாயு) கூடாது. நமாஸ் மோட்சத்துக்குப் பாதி வழி மட்டும் கொண்டு போகிறதும், உபவாசம் மோட்ஷ வாசலண்டையில் கொண்டு போகிறதென்றும், தர்மம் தேவ சமூகத்தண்டையில் கொண்டு போகிறதென்றும் இந்த மதக்காரர்கள் சொல்லிக் கொள்கிறார்கள்.

4. இஸ்லாம் மதக்காரனொருவன் தலைக்குள்ள வாழ்நாளுக்குள்ளே மக்காவுக்கு ஒரு தடவையாகிலும் அகத்தியமாய் யாத்திரைப் போக வேண்டும். மகம்மது இந்தப் பிரமாணங்களையெல்லாம் உபாயத் தந்திரமாய்க் கொடுத்தான். எப்படியென்றால் விக்கிரக ஆராதனைக்காரராயிருந்த அராபியர் மக்கா என்கிற நகரத்திலே வருஷந்தோறும் தங்கள் திருநாளை கொண்டாடுவார்கள். அதை முன்விட்டு இஸ்லாமானவர்கள் மக்காவுக்குப் போய் 'அச்க' என்ற பெருநாளைக் கொண்டாட வேண்டுமென்றும், மக்காவின் புறமாகிய ''கிப்லா''வுக்கு நேராக நின்று தொழுது கொள்ள வேண்டுமென்றும் கொரானில் கற்பித்திருக்கிறது. மெக்காவின் மசூதியில் ஒரு கருப்புக் கல்லிருக்கிறது. அங்கே போகிறவர்கள் அதை முத்தமிடுகிறார்கள். மேலும் அங்கே 'நில்', 'நில்' என்றர்த்தங்கொள்ளும் 'சிம்', 'சிம்' என்ற ஒரு கிணறுமுண்டு. அந்தக் கிணறு இஸ்மவேல் ஆபிரகாமால் வெளியே அனுப்பி விடப்பட்டபோது அவனுக்குத் தண்ணீர் கொடுத்த கிணறும். மேலும் அரபியர் ஆபிரகாமை தங்கள் பிதாவென்று சொல்லி சுன்னத்துப் பண்ணிக் கொள்ளுகிறார்கள். இஸ்லாம் மார்க்கத்தார்கள் எல்லோரும் சுன்னத்துப் பண்ணித் தங்களை இப்பிராயீமுடைய (ஆப்ரகாம்) வேதக்காரர்கள் என்கிறார்கள். கொரானில் சுன்னத்தைக் குறித்து ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. ஆனால் மகமது மார்க்கத்தார் யூதர்களைப் போலத் தங்கள் பிள்ளைகளை எட்டாம் நாளில் சுன்னத்துப் பண்ணாமல் முதலாம் காரியத்தில் சொல்லிய இஸ்லாம் மார்க்கத்தின் ஆசாரத்தையுச்சரிக்கக் கூடுமானபோது சுன்னத்துப் பண்ணுகிறார்கள். மேலும் அரபியர் கபிரத் என்றநட்சத்திரத்தை தேவியாக கும்பிட்டபடியால் இஸ்லாமானவர்கள் வெள்ளிக்கிழமையை நல்ல நாளாக ஆசரித்து அதை சமத்தாகிய சபையின் நாள் என்பார்கள். அன்றியும் வெள்ளிக்கிழமை மகம்மது மக்காவிலிருந்து ஓடிப்போன நாளாம். அக்கினியைத் தெய்வமாக வணங்குகிறவர்கள் விக்கிரகங்களை வெறுத்துத் தள்ளினபடியால் மகம்மதுவும் விக்கிரகங்களை விலக்கிப் போட்டாலேயன்றி வேறல்ல.

அதுவுமன்றி மகம்மது சாராயம் முதலிய மதுபானங்களைக் குடிக்கக் கூடாதென்றும், சதுரங்கம் தவிர மற்றசூதாட்டங்களை விளையாடக் கூடாதென்றும், பன்றி இறைச்சியையும் பிஸ்மல்லாப் பண்ணப்படாமல் செத்த மிருகங்களையும், இரத்தத்தையும் சாப்பிடக் கூடாதென்றும் இஸ்லாமில் இமாமையுந் தீனையும்சேர்ந்தவர்கள் ஜாதி வித்தியாசமில்லாமலிருக்க வேண்டுமென்றும், தங்களுக்குள்ளே பணத்துக்கு வட்டி வாங்கக் கூடாதென்றும் கற்பித்தான். பழைய ஏற்பாட்டில் அசுத்தமென்று விலக்கியிருக்கிற ஒட்டக இறைச்சியை மகம்மது மார்க்கத்தார் மகா பிரியமாய்ச் சாப்பிடுகிறார்கள்.

மகம்மது மார்க்கத்தாருக்கு கொரானே தர்ம சாஸ்திரமாயிருக்கிறது. அதில் ஒரு மனிதன் நாலு பெண்சாதிகளைக் கொள்ளலாமென்றும், இரண்டு சகோதரிகளைக் கொள்ளலாகாதென்றும், வேசித்தனமும், விபச்சாரமுங் கண்டிப்பாக தண்டிக்கப்பட வேண்டுமென்றும் கற்பித்திருந்தாலும் இந்த விபச்சார, வேசித்தனத்தில் துலுக்கரைப் போன்ற அக்கிரமக்காரர்கள் வேறொருவருமில்லை. மகம்மதே அதற்கு சாட்சியாயிருக்கிறான். அதெப்படியென்றால் அவன் இந்த காரியத்தில் தன் இஷ்டப்படி நடந்தான். துலுக்கர் சிற்றின்பத்திலே தேறினவர்களாகச் சிலர் ஆண் புணர்ச்சிக்காரர்களாயும் இருக்கிறார்கள். அவர்களுக்குள் கோஜாக்களென்னப்பட்ட பேடிகள் (அலிகள்) அதிகமாயிருந்து சோதோம் கொமாராவின் அக்கிரமத்துக்குரியவர்களாயிருக்கிறார்கள். வைப்பாட்டிகளுக்கும், அடிமைப்பெண்களுக்

கும் பிறக்கிற பிள்ளைகள் விவாக சம்பந்தத்திற் பிறந்த பிள்ளைகளைப் போலவே சுதந்திரத்திற் குரியவைகளாயிருக்கின்றன. சுதந்தரத்தை ஸ்திரீக்கு ஒரு பங்கும் புருஷருக்கு இரண்டு பங்கும் கொடுக்க வேண்டும். ஒருவன் மற்றொருவனைக் கொலை செய்தால் கொலைக்குக் கொலை கொரானில் கற்பிக்கப்படவில்லை. பணம் முதலியவற்றால் கொலைபாதகத்தை நிவாரணம் செய்து கொள்ளுகிறார்கள். கள்ளனுடைய கைகளை அறுத்துப்போட வேண்டுமென்ற அநியாயப் பிரமாணம் கொரானிலுண்டு. அந்நிய மதத்தாரோடே யுத்தம் செய்து அவர்களைக் கொலை செய்கிறது பெரிய புண்ணியமென்றும் யுத்தத்தில் கொள்ளையடிக்கிற வஸ்துக்களில் ஐந்தில் ஒரு பங்கு அல்லாவுக்கு கொடுக்க வேண்டுமென்றுஞ் சொல்லியிருக்கிறது.

மகம்மது மார்க்கத்தில் அநேக பிரிவினைகளுண்டு. மகம்மது தானே இஸ்லாமானவர்களுக்குள்ளே எழுபத்திமூன்றுபிரிவினைகளிருக்குமென்று சொன்னானும். இத்தனைப் பிரிவினைகளிலிரண்டு முக்கியமான பிரிவினைகளுண்டு. அவர்கள் ''சைவி'' என்பவர்களும் ''சுன்னி'' என்பவர்களுமாகுமே.

(தொடரும்)

''இப்படி அநேக தேவர்களும், கர்த்தாக்களும் உண்டு என்று சொல்லப்பட்டாலும் பிதாவாகிய ஒரே தேவன் நமக்குண்டு. அவராலே சகலமும் உண்டாயிருக்கிறது. இயேசு கிறிஸ்து என்னும் ஒரே கர்த்தரும் நமக்குண்டு; அவர் மூலமாய்ச் சகலமும் உண்டாயிருக்கிறது. அவர் மூலமால் நாமும் உண்டாயிருக்கிறோம்.

(I கொரி 8:56..)

# தேவனுடைய சித்தம்

''அவன் சம்மதியாதபடியினாலே, கர்த்தருடைய சித்தம் ஆகக்கடவதென்று அமர்ந்திருந்தோம்.'' (அப் 21:24)

உலகில் தேவ சித்தம் நடந்து கொண்டிருக்கிறது. தேவன் சர்வ உலகங்களையும், பூமியையும், சமுத்திரத்தையும், சூரிய, சந்திர, நட்க்ஷத்திர மண்டலங்களையும் சிருஷ்டித்து இயக்கி அவைகள் தங்களைத் தாங்களே நடத்திக் கொள்ளும்படியாக தேவன் விட்டு விடவில்லை. அவைகளை ஆண்டு நடத்துகிறார். நிமிஷந்தோறும் கவனிக்கிறார். திட்டமிட்டு அவைகளை சிருஷ்டித்து திட்டமிட்டு அவைகளை நடத்துகிறார். ஆ! தேவனுடைய ஞானம், அறிவு, ஐசுவரியம் என்பவைகளின் ஆழம் அளவிடப்படாதவைகள். தேவனுடைய அந்தரங்க ஞானத்தை மனிதன் ஆராய்ந்து சர்வவல்லவருடைய சம்பூரணத்தை மண்ணோடாயிருக்கிற மனிதன் அறிய முடியாது. அது வானபரியந்தம் உயர்ந்தது. பாதாள பரியந்தம் ஆழமானது. அதின் அளவு பூமியைப் பார்க்கிலும் நீளமும், சமுத்திரத்தைப் பார்க்கிலும் அகலமுமாயிருக்கிறது. ஆகையினால் அதை முற்றிலும் அறிய முடியாது. எறும்பானது நம்மைப் போன்ற ஒரு சிருஷ்டியாக இருக்கிறது. அதனுடைய மூல வாழ்க்கை முதலியவைகளைப் பற்றி நாம் ஓரளவு ஆராய்ந்து அறிந்து கொள்ள முடியும். ஆனால் அது நம்மைப் போல் ஒரு சிருஷ்டியாயிருந்தும் தனக்கு மேற்பட்ட சிருஷ்டியாகிய நம்மைக் குறித்து ஆராய அறிய முடியாது. ஒன்றும் அறிய முடியாது. நாம் சிருஷ்டிகளைக் குறித்து அறிகிற அறிவும் ஓரளவே எல்லாவற்றையும் அறிய முடிகிறதில்லை. அப்படியிருக்க உயர்ந்தவராகிய தேவனைப் பற்றி நாம் அறியக் கூடிய அளவு அவர் நம்மைப் பற்றி வெளிப்படுத்தின அளவே அறிய முடியும். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். அவர் தம்மைப் பற்றி ஓரளவாவது உலகத்தின் மூலமாயும் (சிருஷ்டிப்புகள்), கேள்வியின் மூலமாயும் (ஒலி வேதம்), செவி-வழி கேட்டறிதல் வரி வேதத்தின் (சத்திய வேதம் Bible) மூலமாகவும் தம்மை வெளிப்படுத்தியிருக்கிறார்.

உலக சரித்திரம் தேவனால் ஆளப்பட்டு வருகிறது (தானி 4:35). அவர் தம்முடைய ஜனத்திற்காக உலக அரசியலில் தலையிடுகிறார். தம்முடைய ஜனத்திற்காக ஒருவரை இராஜா வாக்கி இன்னொருவரை தாழ்த்துகிறார். தம் முடைய ஜனத்தைத் தண்டிக்க ஒரு இராஜா வை உபயோகிக்கிறார். அவர்களை விடுதலை யாக்க வேறொரு ராஜாவை உபயோகிக்கிறார். உலக சரித்திரத்தை தேவன் நடத்தி வரு கிறார். உலகத்தில் நடைபெறுகிற நன்மைகள் தீமைகள் தேவன் தம்முடைய சித்தத்தை நிறைவேற்றும் கருவியாக எடுத்து உபயோகிக் கிறார். நன்மை செய்கிறவர்களுக்கு அதற் கேற்ற நன்மையுண்டாகும். தீமை செய்கிறவர் களுக்கு அதற்கேற்ற தண்டனையுண்டாகும். தேவன் தீமைக்கு காரணரல்ல. தீமை, தீமை செய்து வெற்றி கொண்டது என்று நாம் நினைக்க வேண்டியதில்லை. அந்த தீமையையே தம்முடைய சித்தம் நிறைவேற்ற ஒரு கருவி யாக தேவன் மாற்றிப் போடுகிறார். இது தேவனுடைய வல்லமையைக் காண்பிக்கிறது. பரிசுத்தவானாகிய யோசேப்பின் சரித்திரத்தின் மூலமாக இதை நாம் அறிந்து கொள்கிறோம். யோசேப்பின் சகோதரர்களும் மற்றவர்களும் அவருக்குத் தீமை செய்தார்கள். தேவனோ அதையே அவரை உயர்த்த கருவியாக உப யோகித்து தம்முடைய ஜனங்களுக்கு நன்மை செய்தார். தம்முடைய திட்டத்தை நிறை வேற்றினார். ''நீங்கள் எனக்குத் தீமை செய்ய நினைத்தீர்கள். தேவனோ, இப்பொழுது நடந்து வருகிறபடியே, வெகுஜனங்களை உயிரோடே காக்கும்படிக்கு அதை நன்மையாக முடியப் பண்ணினார்'' (ஆதி 50:20).

இன்றைக்கிருக்கிற உலகம் ஆதாம் தொடங்கி கிட்டத்தட்ட 6000 ஆண்டுகளாகி மனிதனுடைய கையிலே விடப்பட்டுள்ளது. மனிதன் உலகத்தில் சுபிட்க்ஷத்தை, சமாதா னத்தை, சமத்துவத்தை கொண்டுவந்து பார் என்று தேவன் விட்டுள்ளார். இந்த 6000 ஆண்டுகளில் எந்த அரசாட்சியும் மக்களுக்கு எல்லாம் நன்மையாய் இருந்ததில்லை. யுத்தங் களும், கலகங்களும், பிரிவினைகளும், பிரச்சனை களும், குறைச்சல்களும் எப்பொழுதும் இருந்தே வருகிறது. அதற்கு காரணம் மனித னுடைய பாவமே. சமாதான கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு அவருக் குக் கீழ்ப்படிந்தாலொழிய மனித சமுதாயங் களுக்கோ, இராஜ்யங்களுக்கோ சமாதானம் இல்லை. தாயாய், தகப்பனாய், சகோதரனாய், சகோதரியாய், கணவனாய், மனைவியாய், அரச னாய், குருவாய், நியாயாதிபதியாய், காவல் காரனாய் இன்னும் ஒவ்வொரு பதவியில் மனி தன் அவ்வப்போது அமர்த்தப்படுகிறான். இவை களெல்லாம் இறைவனுடைய பதவிகளே. இம் மனிதர்கள் பிரதிநிதிகளாய் இந்த ஸ்தானத் தில் இந்தப் பதவியில் நான் இருக்கிறேன் என்று எண்ணி அந்த ஸ்தானத்துக்கு, பதவிக்கு உண்மையாயிருந்து சரியாய் நிர்வகிக்க தங்க ளுடைய அதிகாரத்தை துர்பிரயோகம் செய் யாமல் நீதியை நடப்பிக்க ஒவ்வொருவரும் கடமைப்பட்டுள்ளோம். அப்படியில்லையென் றால் அந்த இடத்திலிருந்து நாம் தள்ளப்படு வோம். தண்டனையடைவோம்.

அதாவது உலகம் ஒரு நாடகமேடை போலிருக்கிறது. இராஜாவாய், ராணியாய், மந்திரியாய், சேவகனாய், குடிமக்களாய் வேஷம் போட்டு நடிக்கிறார்கள். சரியாக அந்தப் பாத்திரத்தை நடிக்க வேண்டும் (நாய் வேஷம் போட்டால் குரைக்க வேண்டும் என்று சொல் வார்கள்). நாடகம்முடிந்ததும் இவர்இராஜாவு மல்ல, இவள் ராணியுமல்ல. அவர் புருஷனு மல்ல, அவள் பெண்ஜாதியுமல்ல. ஆனால் நடிப்பு சரியாய் நடித்ததற்கு அவர்களுக்கு வெகுமதிகள் (Presentations) வாழ்த்துதல்கள் கிடைக்கின்றன. அப்படியே இந்த உலக வாழ்க்கையில் நாம் சரியாயிருந்தால், உண்மை யாய் நடந்தால் இறைவனிடமிருந்து வெகு மதியைப் (Award) பெற்றுக் கொள்வோம். இல்லையென்றால் தண்டனையடைவோம். சிலர் பதவிக்கு வந்ததும் தங்களைக் கடவுள் என்று எண்ணிக் கொள்வார்கள். நான் நினைத்தால் உன்னை (உங்களை) இப்படிச் செய்வேன், அப்ப டிச் செய்வேன் என்று கனைத்து கர்ச்சிப்பார் கள். அடுத்தபடி அவர்கள் பதவி போய்விடும் தேவன் அவர்களைப் பதவியிலிருந்து விரட்டி விடுவார். ஆனபடியால் தேவ ஜனங்கள் துன் மார்க்க அதிகாரிகளை, அரசாங்கத்தைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. நாம் ஜெபித்தால் தேவன் அதை மாற்றிப் போடுவார் (சங் 105: 14-15).

நம்முடைய வாழ்க்கையிலே தேவனுடைய சித்தம் ஆக வேண்டும், தேவனுடைய சித்தமே ஆக வேண்டும். தேவனுடைய சித்தம் செய்ய வேண்டும் என்ற விருப்பம் வேண்டும். உலக சிருஷ்டிகளிலே சிறிய பனித்துளி முதற் கொண்டு பெரிய அண்டங்கள் கோளங்கள் வரை தேவன் என்னென்ன நோக்கத்திற்காகச் சிருஷ்டித்தாரோ அவைகள் அவைகளை நிறைவேற்றி வருகின்றன; நிறைவேறுகின்றன. ஆனால் புத்தி சித்தமுள்ள மனிதனோ தேவனுடைய சித்தம் இன்னதென்று அறிந்தும் அதை அல்லத் தட்டுகிறான். அதினால் இவனுடைய சிருஷ்டிப்பின் நோக்கம் நிறைவேறுவதில்லை. மனிதனைக் குறித்து தேவ சித்தம் இன்னதென்று வேதாகமத்தில் எழுதப்பட்டுள்ளது. மனசாட்சி என்ற பிரமாணமும் அவனுக்குள் கொடுக்கப்பட்டிருக்கிறது. தேவ சித்தத்தை அவன் அறிந்து கொள்ள வேண்டும், அவன் அறிந்து அதை செய்ய வேண்டும். ஒவ்வொரு விசுவாசியும் தன்வில் தேவ சித்தம் நிறைவேற வேண்டும் என்று ஜெபிக்க வேண்டும். தேவ சித்தத்தையறிந்து அதையே செய்ய வேண்டும். வாழ்க்கையில் நடக்கிற எந்த சம்பவத்துக்கும் தேவ சித்தமே ஆகும் என்று உறுதியாய் நம்பி கர்த்தரை ஸ்தோத்தரிக்க வேண்டும். கர்த்தரை விசுவாசிக்க வேண்டும். தேவனை நம்ப வேண்டும். நமக்கு விளங்காத காரியத்துக்குச் ஜெபம் பண்ணி தேவனுடைய கரத்திலே விட்டுவிடவேண்டும். "அன்றியும் அவருடைய தீர்மானத்தின்படியாய் அழைக்கப்பட்டவர்களாய் தேவனிடத்தில் அன்பு கூறுகிறவர்களுக்கு சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறது" (ரோம 8:28). தேவன் நமக்கு நன்மையே செய்வார். அவர் நல்லவராகவே இருக்கிறார் (சங் 119:68). சுத்த இருதயமுள்ளவர்களாகிய இஸ்ரவேலருக்குத் தேவன் நல்லவராகவே இருக்கிறார் (சங் 73:1). யாருக்கென்றால் சுத்த இருதயமுள்ளவர்களாகிய இஸ்ரவேலருக்கே (சங் 73:1). கர்த்தருடைய ஜெபத்திலே உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுவதுபோல பூமியிலேயும் செய்யப்படுவதாக (மத் 6:10) என்று ஜெபிக்கும் படியாக வேதத்தில் கட்டளையிடப்பட்டுள்ளது. பரலோகத்திலே தேவனுடைய சித்தம், தேவனுடைய சித்தமே நிறைவேற்றப்படுகிறது. தேவ தூதர்கள் எல்லோரும் அவருடைய சித்தத்தை மாத்திரம் செய்கிறார்கள் (சங் 103:20,21). பூமியிலே இன்னும் முழுவதுமாக தேவனுடைய சித்தம் நிறைவேற்றப்படவில்லை. ஏன் விசுவாசி, ஊழியக்காரன் என்று சொல்லப்படுகிற அநேகர்களிலும் கூட தேவ சித்தம் நிறைவேற்றப்படவில்லை. தேவனுடைய சித்தத்துக்கு மாறாகவே பெரும்பாலோர் ஜீவித்துப் பின்னர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். பரமண்டல ஜெபம் கண்டிப்பாக செய்ய வேண்டும். உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுவது போல முதலாவது என்னிலேயும், பின்பு பூமியிலேயும் செய்யப்படுவதாக என்று ஜெபிக்கிறோம். ஜெபத்தின் நோக்கமே தேவனுடைய சித்தம் ஆகட்டும் என்பதே. தேவனுடைய சித்தத்துக்கு ஒப்புக் கொடுப்பதே. தேவனுடைய சித்தம் இன்னதென்று தெளிவாய் அறிந்த காரியத்தில் அதற்காய் நாம் விடாப்பிடியாய் ஜெபித்துப் பெற்றுக் கொள்ளலாம். இயேசு கிறிஸ்து யார்? யாருக்காக மரித்தாரோ அவர்களெல்லாரும் இரட்சிக்கப்பட வேண்டுமென்பது தேவனுடைய சித்தம்.

ஆனால் பூமியிலுள்ள எல்லாரும் இரட்சிக்கப்படுவது தேவ சித்தமல்ல. அது தேவ சித்தமாயிருந்தால் எல்லாரும் கண்டிப்பாக இரட்சிக்கப்படுவார்கள். (இதைக் குறித்து பின்னொரு முறை விளக்கமாக எழுதுகிறேன்) நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கெத்சமெனேயில் போய் ஜெபித்த பொழுது அவருக்கு முன்பாக தேவ சித்தம் காண்பிக்கப்பட்டது. இயேசு கிறிஸ்துவில் ஒரு சுய சித்தம் இருந்தது. தேவ சித்தம் அவருக்குக் கசப்பாயிருந்ததினால் என் பிதாவே இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக் கூடுமானால் நீங்கட்டும் ஆகிலும் என் சித்தப்படியல்ல உம்முடைய சித்தப்படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார். பிதாவும் குமாரனும் ஒருவரல்ல (Two Persons). மறுபடியும் அப்படியே ஜெபம் பண்ணினார். மறுபடியும் அப்படியே ஜெபம் பண்ணினார். தேவ சித்தத்துக்கு அதை ஒப்படைத்து அதைச் செய்ய தீர்மானித்து விட்டார். வீரனைப் போல் எழுந்து எதிரிகளைச் சந்திக்க முன் வந்தார். பின்பு தேவ சித்தம் அறிய

அவர் ஜெபம் பண்ணவில்லை. அப்படியே இது தேவ சித்தம் என்று அறிகிறதை உடனே அப்படியே செய்ய வேண்டும்.

பாவம்! இது பாவம் என்று நம்முடைய ஆத்துமாவுக்கே தெரியும். மனுஷனுக்கு செம்மையாய்த் தோன்றுகிற வழியுண்டு அதின் முடிவோ மரண வழிகள். தேவ சித்தம் அறிந்தும் அதை அல்லத்தட்டிவிட்டு சுயசித்தம் செய்வதே பாவம். நமக்கு ஒரு காரியம் நல்லதாயிருந்தாலும் தேவ சித்தம் வெளிப்பட்டு அதைத் தடுத்தால் நாம் நம்முடைய சுயசித்தத்தை அந்த இடத்தில் கொன்று போட்டு தேவ சித்தத்தையே செய்ய வேண்டும் அது மிகச் சிறந்த நன்மை. அது தேவனுக்கு மகிமை கொண்டு வரும். மனிதனுக்குச் செம்மையாய்த் தோன்றுகிற வழிகளுண்டு அதன் முடிவோ மரணம் (நீதி 16:25).

வாழ்க்கையில் ஒவ்வொருவரைக் குறித்தும் தேவசித்தம் வெவ்வேறுயிருக்கும். தேவன் எவ்விதம் நடத்துகிறுரோ அதற்குட்பட்டு அதை சந்தோஷமாய் ஏற்றுக் கொண்டு அதில் களிகூர வேண்டும். நமக்குப் பிடிக்கவில்லை என்று நாம் ஓடக் கூடாது. நெருக்கடி ஏற்பட்டு விட்டது என்று கர்த்தாவே போதும் என்னைக் கொன்று போடும் என்று ஜெபிக்கக் கூடாது. நெருக்கடியை தீர்க்க தேவனிடம் ஜெபிக்க வேண்டும். அதில் தேவ சித்தத்தை அறிந்து செயல்பட வேண்டும். அதுவே நம்முடைய வெற்றி.

தேவ சித்தத்தை வேதத்தின் மூலமும் ஜெபத்தின் மூலமும் அறியலாம். பரிசுத்த ஆவியானவருடைய உதவியை நாடவேண்டும். நீண்ட ஜெபத்தின் மூலமாக தேவ சித்தத்தைக் கண்டுபிடிக்கலாம். தெய்வீக வெளிப்படுத்தலின் மூலமாகவும் தேவ சித்தத்தை அறியலாம். நமக்கு வெளிப்படாத காரியங்கள் திருச்சபை மூலம் வெளிப்படும். அதன்படி நாம் செய்வோமானுல் நாம் சந்தோஷமடைவோம். நம்முடைய வாழ்க்கையில் தேவ சித்தம் நிறைவேற நாம் ஒப்புக் கொடுப்போமாக. உம் சித்தமே என் சித்தம் ஆமென்!

''...தாவிதை என் இருதயத்துக்கு ஏற்றவனுகக் கண்டேன்; எனக்குச் சித்தமானவைகளையெல்லாம் அவன் செய்வான்...'' (அப் 13:22)

# வேத பாடம் (தொடர்ச்சி)

லேவி 10:1-7 :- முதலாவது ஆசாரியர்களின் பாவம்.

வச. 1 : பின்பு ஆரோனின் குமாரராகிய நாதாபும், அபியூவும் தன் தன் தூபகலசத்தை எடுத்து, அவைகளில் அக்கினியையும், அதின்மேல் தூபவர்க்கத்தையும் போட்டு, கர்த்தர் தங்களுக்குக் கட்டளையிடாத அந்நிய அக்கினியை அவருடைய சந்நிதியில் கொண்டு வந்தார்கள். நாதாபும், அபியூவும் ஆரோனுேடு கூட சேர்ந்து ஆசாரிய ஊழியத்திற்கு அபிஷேகிக்கப்பட்டவர்கள். ஆரோனுடைய குமாரர் நாதாப், அபியூப், எலெயாசார், இத்தாமார் என்பதாகும். இவர்கள் சமீபத்தில்தான் ஆரோனுேடுகூட ஆசார ஊழியத்திற்கு அபிஷேகிக்கப்பட்டார்கள் (லேவி 8:12-36.) கர்த்தர் பிரமாணம் அருளி ஜனங்களோடு உடன்படிக்கை பண்ணினபொழுது நாதாபும், அபியூவும் தங்கள் தகப்பனுகிய ஆரோனுேடும், எழுபது (70) மூப்பர்களோடும் சேர்ந்து மோசேயோடு இறைவனைத் தரிசித்தவர்கள் (யாத் 24:1-11.) கர்த்தருடைய கட்டளையை இவர்கள் இவ்வளவுச் சீக்கிரமாய் மீறி தேவன் கட்டளையிடாத அந்நிய அக்கினியை இவர்கள் தூப கலசத்தில் நிரப்பி தேவ சந்நிதானத்தில் கொண்டு வந்ததின் மூலம் இவர்கள் குடித்திருந்தார்கள் என்று தெரிகிறது. ஏனென்றல் இதற்குப் பின்பு கர்த்தர் ஆரோனை நோக்கி எச்சரிக்கும்பொழுது மதுபானம் குடிக்கக் கூடாது என்று கட்டளையிட்டதின் மூலமாக இது தெரிய வருகிறது.

**லேவி 10:8, 9:-** அந்நிய அக்கினியை தேவ சந்நிதானத்தில் கொண்டுவரக் கூடாது (லேவி 16:12, 13; யாத் 30:9; எண் 16:6-35).

**வச - 2.** அப்பொழுது அக்கினி கர்த்தருடைய சந்நிதியிலிருந்து புறப்பட்டு அவர்களைப் பட்சித்தது. அவர்கள் செத்தார்கள். கர்த்தருடைய சந்நிதியிலிருந்து அக்கினி புறப்பட்டு கடவுளுடைய அக்கினியினால் அழிக்கப்பட்ட ஐந்து சம்பவங்கள் வேதாகமத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

1. சோதோம் கொமாரா பட்டணங்கள் ஆதி 19:24, 25.
2. எகிப்திலே உண்டான வாதை யாத் 9:23, 24.
3. இஸ்ரவேலர்கள் மேல் எழும்பின வாதை எண் 11:1-3,
4. மோசே ஆரோனுக்கு எதிர்த்து நின்ற 250 பேர் எண் 16:35; 26:9,10.
5. எலியாவைப் பிடிக்க வந்த 102 ராணுவ வீரர்கள் (II இரா I: 10-14).

தேவனுடைய சந்நிதானத்தில் பிரவேசித்து ஆராதனை செய்கிறவர்கள் தேவனுடைய கட்டளைகளின்படியும், தேவ சித்தத்தின் படியும் ஆராதனை செய்ய வேண்டும். தங்கள் இஷ்டப் பிரகாரம் ஆராதனை செய்யக்கூடாது. தங்களுக்குக் கட்டளையிடப்படாத வழி யத்தில் நுனிகரமாகயாரும் நுழையக்கூடாது. தனக்கடாத வழியந்தில் தலையிட்டு உசியா ராஜா குஷ்டரோகத்தை வாங்கிக் கொண்டான் (II நாளா 26:16-21). தேவனுடைய அக்கினியானது பரிசுத்தத்தை அங்கீகரிக்கிறதும், பாவத்தைச் சுட்டெரிக்கக் கூடிய துமாயிருக்கிறது. கர்த்தருடைய வார்த்தையின்படி நாம் ஆராதனை செய்தால் கர்த்தர் தெய்விக அக்கினியை அனுப்பி அதை அங்கீகரிப்பார் (லேவி 9 : 24; ஆதி 4:4,5;15:17; I இரா 18:38; I நாளா 21:26; II நாளா 7:1-3). சிலர் தேவ மகிமை இறங்க சுய முயற்சிகளைச் செய்து சுய கிரியைகளைச் செய்கிறார்கள். சிலர் அந்நிய பாஷை உண்டாகச் சொல்லிக் கொடுத்து இப்படிப் பேசுங்கள் என்று சொல்லிக் கொடுக்கிறதாகக் கேள்வி. இன்னும் சிலர் ஆவியில் நிறைவு உண்டாக பாட்டை விரட்டி திரும்பத் திரும்ப (Repeat) பாடி தம்புரு அடித்து அக்கினி மூட்டப் பிரயாசப்படுகிறார்கள். இப்படிச் செய்கிறது அந்நிய அக்கினியைக் கொளுத்துகிற தாகும். வேதனையில் கிடப்பார்கள் (ஏசா 50:11). சரியான சபை ஸ்தோத்திரம் சொன்னால் போதும் ஆவியில் நிறைவு உண்டாகும். ஆவியினாலே ஆராதனை செய்வதே சரி. சில கள்ளக் கிறிஸ்தவர்களும், கள்ள வழியர்களும் குடிகாரர்களாக இருக்கிறார்கள். குடித்துவிட்டு ஆராதனை செய்கிறவர்களுக்கு ஐயோ! மேல்நாட்டுப் பாணிகளை நாங்கள் கடைப்பிடிக்கிறோம் என்று சிலர் சொல்லுகிறதாகக் கேள்வி. நீ (உன் ஆத்துமா) சாகாத படிக்குக் குடியாதே.

**வச 4 :-** மோசே ஆரோனின் சிறிய தகப்பனான ஊசியேலின் குமாரராகிய மீசவேலே யும் எல்சாபானையும் அழைத்து நீங்கள் கிட்ட வந்து உங்கள் சகோதரரைப் பரிசுத்த ஸ்தலத் துக்கு முன்னின்று எடுத்துப் பாளயத்துக்குப் புறம்பே கொண்டு போங்கள் என்றார். மோசே சொன்னபடி அவர்கள் செய்தார்கள். ஆரோனின் சிறிய தகப்பனின் பிள்ளைகள் ஆசாரியர்கள் அல்ல (யாத் 6:22).

**வச 6,7 :-** கர்த்தருடைய அபிஷேகத் தைலம் ஆரோனின் தலையிலும் அவனுடைய குமாரர் எலெயாசார், இத்தாமார் மேல் இருப்பதால் அவர்கள் மற்றவர்களைப் போல் துக்கங் கொண்டாடக் கூடாது. மற்றவர்கள் துக்கங் கொண்டாடலாம். ஆசாரியர்கள் தங்கள் தலைப் பாகைகளை எடுக்கவோ, வஸ்திரங்களைக் கிழிக்கவோ கூடாது.

**லேவி 10:8-11 :-** ஆசாரியர்களுடைய கடமையும் அவர்கள் தேவ சமுகத்தில் பிர வேசிக்கும் பொழுது அவர்கள் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கம்.

1. அவர்கள் கடினமான திராட்சை ரசத்தையோ, மதுபானத்தையோ குடிக்கக் கூடாது.

2. தீட்டுள்ளதற்கும், தீட்டில்லாததற்கும், இன்னது பாவம், இன்னது பாவமில்லை என்று வித்தியாசத்தைக் காண்பிக்க வேண்டியதும்.

3. கர்த்தருடைய நியாயப் பிரமாணத்தை இஸ்ரவேலர்களுக்குப் போதிக்க வேண்டியதும் அவர்கள் கடமைகளில் முக்கியமானதாகும் (நெகே 8:2,8; மல் 2:7).

லேவி 10:12,13 :- போஜன பலியில் மீதியானதை ஆரோனும், ஆரோனுடைய குமாரரும் பரிசுத்த ஸ்தலத்திலே புஷிக்க வேண்டும்.

லேவி 10:14,15 :- ஆசாரியன், ஆசாரியனுடைய குமாரர், குமாரத்திகள், குடும்பத்தார்களுடைய பங்கு.

லேவி 10:16-20 :- ஆசாரியர்கள் தவறாய் விளங்கிக் கொண்டு பாவ நிவாரண பலியை புஷிக்காமல் அதை தகனித்து விடுகிறார்கள். மோசே ஆரோனின் குமாரர்களைக் கடிந்து கொள்ளுகிறார். இன்று துக்கநாள் அதை நாங்கள் புஷித்தால் நன்றாயிருக்குமோ? என்று ஆரோன் சொன்னபொழுது மோசே அமைதியாயிருந்தார்.

லேவி 11 அதி :- ஆரோக்கியம் சுத்தம் சம்பந்தப்பட்ட சட்டங்கள், இன்னின்ன மிருகங்கள், பிராணிகள் புஷிக்கத்தக்கவைகள் இன்னின்னவைகள் புஷிக்கத்தகாதவைகள் என்று விலக்கப்படுகின்றன. அசை போடுகிறதும், விரிகுளம்புள்ளதுமானவைகள் புஷிக்கத்தக்கவைகள் (வச 1-8). தண்ணீரில் சிறகும், செதில்களும் உள்ளவைகள் புஷிக்கத்தக்கவைகள் (வச 9-12). பறவைகளில் புஷிக்கத்தகாதவைகள் (வச 13-19). ஊரும் பிராணிகளில் புஷிக்கத்தகாதவைகள், தீட்டுள்ளவைகள் (வச 20-23). அசுத்தமான மிருகங்கள் தீட்டுள்ள மனிதன் (வச 24-28). அசுத்தமான ஊரும் பிராணிகள் (வச 29,30). செத்ததைத் தொடக் கூடாது (வச 31). இறந்திருக்கும் பாத்திரம் தீட்டாகும் (வச 32,33). அசுத்தமான உணவு, தண்ணீர், தீட்டான பாத்திரங்கள் (வச 35). தீட்டான பாத்திரங்கள் (வச 36). தீட்டான விதைகள் (வச 37,38). தீட்டான மனிதன் (வச 39,40). தீட்டான பிராணிகள் (வச 41-43).

லேவி 11:44-47 :- இஸ்ரவேலன் ஒவ்வொருவனும் இறைவன் பரிசுத்தமுள்ளவராயிருக்கிறதுபோல இவனும் பரிசுத்தமாயிருக்க வேண்டும். ஏனென்றால் இறைவனோடு ஐக்கியமாயிருக்க, இறைவனைத் தரிசிக்கப் பரிசுத்தம் தேவை (எபி 12:14)

(தொடரும்)

''...நீங்கள் மூட்டின அக்கினி ஜுவாலையிலும் நடவுங்கள் வேதனையில் கிடப்பீர்கள்...''
(ஏசா 50:11)

## கிறிஸ்தவ திருமணம் (தொடர்ச்சி)

பால் உணர்ச்சி :- தேவன் தாம் உண்டாக்கின (சிருஷ்டித்து) எல்லாவற்றையும் பார்த்தார். அது மிகவும் நன்றாக இருந்தது- (ஆதி 1:31). பால் உணர்ச்சி தேவன் மனிதனில் சிருஷ்டித்ததாகும். இது பெண்களைக் காட்டிலும் ஆண்களுக்கு அதிகமாகக் காணப்

படும். இந்த விஷயத்தில் மீறுதல் செய்கிறவர்கள் அநேகமாக ஆண்களாகவே இருப்பார்கள். மனிதன் பாவத்தில் விழும் முன்பே கணவனும் மனைவியும் ஒரே மாம்சமாயிருப்பாகளென்று தேவன் சொன்னார். இறைவன் மனிதனில் திட்டமான நோக்கத்தோடேதான் இந்த விஷயத்தில் மீறுதல் செய்கிறவர்கள் அநேகமாக ஆண்களாகவே இருப்பார்கள். மனிதன் பாவத்தில் விழும் முன்பே கணவனும் மனைவியும் ஒரே மாம்சமாயிருப்பார்களென்றுதேவன் சொன்னார். இறைவன் மனிதனில் திட்டமான நோக்கத்தோடே தான் இந்த உணர்வை வைத்திருக்கிறார் என்று தெரிகிறது. இந்த உணர்வு ஆணுக்கும் பெண்ணுக்கும் உண்டு. ஒரு குறிப்பிட்ட வயதுக்குப் பின்பு இவர்களில் ஜீவ சக்தி பெருகத் துவங்குகிறது. அது முதற்கொண்டு இவ்வுணர்ச்சி வேளாவேளைகளில் அதிகமாயிருக்கும். இது ஒன்றும் தவறல்ல. பசியுணர்ச்சி, நித்திரை, ஓய்வு இவைகளைப் போன்ற ஒரு இயல்பான உணர்ச்சியே பால் உணர்ச்சி. இவைகளைப் படைத்த இறைவன் அவைகளை சரியான முறைகளில் பயன்படுத்தும் வழிகளையும் நமக்கு வகுத்துத் தந்துள்ளார். கடவுளின் படைப்பில் பால் உணர்ச்சி ஒரு புனிதமான உணர்ச்சி. அது பரிசுத்தமானது. மனிதன் பாவப் படுகுழியில் விழுமுன்னரே அது இறைவனால் படைக்கப்பட்டாயிற்று. இறைவன் பார்த்து மிகவும் நல்லது என்று கண்ட உலகில் இதுவும் ஒன்று. இதிலிருந்து அதின் புனிதத் தன்மையை நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். அவன் பாவத்தில் விழ்ந்த பின்னர்தான் இந்த உணர்ச்சியில் தடுமாற ஆரம்பித்தான். தங்கள் நிர்வாணத்தைக் கண்டு வெட்கப்படவுமாரம்பித்தனர். அன்று முதற்கொண்டு கடவுளால் அருளப்பட்ட ஈவை மனிதன் தவறாய் பயன்படுத்தி வருவதால் இன்று பால் உணர்வு என்ற பதம் பலர் மனதில் அசுத்தமான பொருளைக் கொடுத்து நிற்கிறது. கடவுள் எதை தூய்மையாக, அழகாக, பரிசுத்தமாக வைக்க எண்ணியிருந்தாரோ அதை இன்றைய சினிமா பட உலகம், விளம்பர பலகைகளும், அசுத்தப் படங்களும், கடைத்தரமான புத்தகங்களும் பால் உணர்வுக்குத் தவறான ஒரு பொருளைத் தந்து விட்டன. பால் உணர்வு பற்றிய சிந்தனையில் மனிதன் எவ்வளவாய் கெட்டு விட்டான் என்பதை பெருமளவு விற்பனையாகும் நிர்வாணப் படங்கள், புத்தகங்கள், சினிமா, வீடியோ கேசட்டுகள் நிரூபிக்கின்றன. ஒரு பெண்ணை நிர்வாணமாய் மேடையில் காட்டப் போகிறார்கள் என்றால் அந்த காட்சியைக் காண ஏராளமான மக்கள் கூடுகிறார்கள். இது எதைக் காண்பிக்கிறது? வேறொரு கிரகத்திலிருந்து யாராவது மனிதர்களைக் காண பூமிக்கு வந்தால் இது என்ன? இவர்களுக்குப் பைத்தியமா என்று சொல்லி மனிதர்களைப் பற்றி ஆச்சரியப்படுவார்கள். தலைகீழாய் மாறிவிட்ட இந்த உலகில் பால் உணர்வு வெறும் உடல்கூறு செயலாக, இன்பம் பெறுவதற்குரிய வழியாக எண்ணும் மக்கள் வாழும் இவ்வுலகில் பால் உணர்வு பற்றி இழிவான கருத்துக்களை, விளம்பரங்களை கிறிஸ்தவன் எதிர்த்துப் போராட வேண்டும். கடவுளுக்கு ஒளியாகக் கிறிஸ்தவன் திகழ வேண்டும்.

சில மதங்கள் மனிதனுடைய உடலை தீயதாகவும், பால் உணர்வுகளைப் பற்றி தவறான தத்துவங்களும், கருத்துக்களும் உடையவைகளாயிருக்கின்றன. மனித உடல் தீயது அதை சீக்கிரம் களைந்துவிட வேண்டும் என்றும் எண்ணுகின்றனர். அல்லது அந்த மனித உடலையே வணங்கவும் அதன் ஆசைகளையெல்லாம் அப்படியே நிறைவேற்றவும் நினைக்கின்றனர்.

இறைவன் மனிதனுடைய ஆவி, ஆத்துமா போன்ற உடலையும் படைத்துள்ளார். மனிதனுடைய உடல் கோடிக்கணக்கான அணுக்களின் கூட்டாகும். இது விசித்திர விநோதமாய் ஒழுங்கோடு அமைக்கப்பட்டுள்ளது. அதைக் குறித்து சங்கீதக்காரன் சொல்லுகிறதையும் கேளுங்கள் (சங் 139:13-18). மனித உடல் ஆவி, ஆத்துமா போன்று அவ்வளவு முக்கியமானதல்ல என்று கிறிஸ்தவர்களிலும் சிலர் எண்ணுகின்றனர் அது தவறு. கடவுள் உடலைப் படைத்ததில் ஒரு திட்டமான நோக்கம் இருக்கிறது. மனித உடலில் ஒவ்வொரு அவயவமும் பரிசுத்தமானவையாக இருக்கின்றன என்று யூத வேத சாஸ்திரம் சொல்லுகின்றது. தூய ஆவியான கடவுள் வாழும் இடம் நம்முடைய உடல். உடலின்றேல் உயிரில்லை. உடலைக் காத்தல் உயிரைக் காத்தலாகும். உடலை ஆரோக்கியமாகவும், உறுதியாகவும்,

பரிசுத்தமாகவும், அழகாகவும் காக்க வேண்டும். உடலைக் காக்கா விட்டால் உயிராகிய கிளி கூட்டிலிருந்து பறந்து போய் விடும். இந்த உடல்தான் பாவத்துக்குக் காரணம் என்று சிலர் எண்ணுகின்றனர். அது தவறு உடலை வதைப்பதினாலோ, அழிப்பதினாலோ அதின் ஆசைகளை ஒழிப்பதினாலோ நாம் பாவத்திலிருந்து விடுதலை பெற முடியாது. இந்த உடல்தான் பாவத்துக்குக் காரணம் என்று பேசுகிறவர்களுக்கு மார்ட்டின் லூத்தர் இவ்வாறு ஒரு பதில் சொன்னார். ஆண்டவராகிய இயேசு இந்த உலகத்தில் வந்த பொழுது அவருக்கு உடல் இருந்தது ஆனாலும் அவர் பாவம் செய்யவில்லை. பிசாசுக்கு உடலில்லை அவன் பாவத்தின் முழு உருவமாயிருக்கிறானே! என்றார்.

பாவத்தின் வேர் மனித உடலில் அல்ல, மனித உள்ளத்தில் இருக்கிறது. உடலை அழிப்பதாலோ அதனை ஒழிப்பதாலோ நாம் பாவத்திலிருந்து விடுதலைப் பெற முடியாது. உள்ளத்தில் மாற்றம் ஏற்பட்டால்தான் பாவத்தின் மேல் வெற்றி கிட்டும். இறைவா! எங்களுக்கு பால் உணர்வு ஆசைகளே வராதபடிச் செய்யும் என்று சிலர் வேண்டிக் கொள்ளுகிறார்கள். அது சரியல்ல. ஆண்மையை அழித்து கடவுள் வாழும் ஆலயத்தின் ஒரு பகுதியை இடித்துப் போடுவது போன்ற ஒரு செயலாகும் இது. நாம் வெற்றி வாழ்க்கை வாழ வேண்டும் என்பதே இறைவனின் விருப்பம். அடுப்பில் எரிகிற நெருப்பை அவித்துப் போட வேண்டிய அவசியமில்லை. வீடு தீப்பற்றி விடாதபடி பார்த்துக் கொண்டால் போதும். ஆதாமை தேவன் சோதனைக்கு விட்டுவிட்டார். அவன் பரிசுத்தமாயிருக்க வேண்டுமென்று தேவன் விரும்பினார். பரிசுத்தம் என்பது ஒன்றும் அறியாத, கள்ளங்கபற்ற தன்மையிலும் மேலானது. தெய்வ பக்தியில் ஆதாம் ஒரு சரியான தீர்மானம் செய்து சோதனையை வென்றிருக்கலாம், பரிசுத்தமாயிருக்கலாம். நம்முடைய காரியங்களிலும் நாம் அப்படியிருக்க முடியும்.

## அசுத்த எண்ணங்கள்

ஒவ்வொரு வேளைகளில் ஆண்களுக்கோ பெண்களுக்கோ இந்த எண்ணங்கள் தோன்றும். இந்த எண்ணம் தோன்றுவது அவர்கள் ஆண் என்றும் இவர்கள் பெண் என்றும் நிரூபிக்கின்றன. அவைகள் தோன்றுவிட்டால் ஏதோ குழப்பம் என்று அர்த்தம். இந்த எண்ணங்கள் பெண்களைக் காட்டிலும் ஆண்களுக்கு அதிகம். இந்தக் காரியத்தில் அதிகமாய் பாதிக்கப்படுவது ஆண்களாகவே இருப்பார்கள். விதிவிலக்கும் இருக்கலாம், மாற் 7:21ல் மனித இருதயத்திலிருந்து புறப்படுகிறவைகளில் முதலாவது அசுத்த எண்ணங்களை முன் வைத்தார். மனம் மாறாத மனிதர்களின் இருதயங்களெல்லாம் பொல்லாததாயிருப்பதால் அவைகளைப் பற்றி இயேசுவானவர் கொடுத்த வருணனை சரியே. விபச்சாரக்காரனொருவனுடைய உள்ளத்தில் அசுத்த எண்ணங்கள் நுழைந்து தொல்லை கொடுப்பது போலவே பக்தி நெறியில் வாழ்பவனுடைய உள்ளத்திலும் அவைகள் புகுந்து தொல்லை கொடுக்கும்.

ஆனால் கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தினாலும், சமுதாயக் கட்டுப்பாடுகளைப் பற்றிய அச்சத்தினாலும், பக்தி வைராக்கியத்தினாலும் சந்தர்ப்பக் குறைவும் தேவ பக்தியுள்ளவனை வேசித்தவ செயலில் ஈடுபடாதபடி அவைகளைத் தடுக்கின்றன. தேவ எச்சரிப்பை, தேவாவியின் தடுத்தலை அனுசரித்து நடக்கிறவன் பாவம் செய்யான்.

சோதனைக்கும் பாவத்திற்கும் உள்ள வேறுபாடுகளை நாம் அறிந்திருக்க வேண்டும். நம்மைப் போலவே இயேசுவானவரும் ஒவ்வொரு காரியத்திலும் சோதிக்கப்பட்டார். ஆனால் சிந்தனையளவில் கூட அவர் பாவம் செய்யவில்லை. நாம் இந்த உலகில் வாழ்க்கையை முடிக்கப் போகும் கடைசி நாளில்கூட நமக்கு சோதனைகள் வரலாம். ஆனால் நாம் பாவம் செய்யாமலிருக்க வேண்டும். நம்முடைய உள்ளங்களில் பாவ இச்சைகள் தங்கி கருவேற்படும் போதே (கர்ப்பந்தரிக்கும் போதே) நாம் பாவம் செய்கிறோம் (யாக் 1:15). நம்முடைய மனதில் பளிச்சிடும் இச்சையான எண்ணத்தை நாம் ஏற்கும் போது தான் பாவம் விளைகிறது. அவ்வெண்ணத்தை நாம் உடனே விரட்டுவோமானால் அங்கு பாவம் தோன்ற இடமிருக்காது. பலர் இரு மணமாகாமலே மணவாழ்க்கை (மனதில்) வாழ்கிறார்கள். இவர்களுடைய மனதை அலைய விடுகிறார்கள். மனம் எங்கெங்கே அலையுமோ அங்கே இப்பொழுது அல்லது பின்னொரு நாளோ இவர்கள் உடலும் அங்கு செல்வது நிச்சயம். அந்தச் செய்கையைச் செய்

வதைக் காட்டிலும் மகா மோசமானது இந்த எண்ண வாழ்க்கை. செயலைவிட எண்ணங்கள் வலிமையுடையது என்பதை மறந்து விடாதிருங்கள்.

நீ எண்ணங்களுக்கு இடங்கொடுத்தால் அதைக் கனநேரம் மனதில் போட்டு சுவைக்கத் தொடங்கும் போது கூடுகட்டவிட்டு விடுகிறாய். உடனே பாவம் உண்டாகிறது. இச்சையான எண்ணத்தை ஒருவன் அதிகம் சிந்திக்கும்போது அது அவனை தனக்கு அடிமையாக்கி விடும். அச் சிந்தனையில் அவன் தொடர்ந்து சென்றால் பிறகு அதிலிருந்து அவனால் விடுதலை பெறமுடியாது போய்விடும். உடனே முயற்சி செய்திருந்தால் சுலபமாக விடுதலை கிடைத்திருக்கும். மற்றப் பாவங்களில் வெற்றி கொள்வதுபோல் அசுத்த எண்ணங்களிலும் வெற்றி பெற வேண்டுமானால் நாம் நம்முடைய தவற்றை உண்மையாக அறிக்கை செய்ய வேண்டும். பாவத்திலிருந்து விடுதலை பெற உண்மையான நாட்டம் நமக்கு இருக்க வேண்டும். அப்படிப்பட்ட விருப்பமுள்ளவர்கள் தங்கள் அசுத்த எண்ணங்களையும் பாவ அறிக்கை செய்ய, ஆலோசனை கேட்கத் தயங்க மாட்டார்கள். அப்பொழுது ஜனங்கள் அவனை நோக்கி நாங்கள் என்ன செய்யவேண்டுமென்று கேட்டார்கள் (லூக் 3:10).

(தொடரும்)

---

''அன்றியும் மாம்சத்தின்படி நடக்கிறவர்கள் மாம்சத்துக்குரியவைகளைச் சிந்திக்கிறார்கள்; ஆவியின்படி நடக்கிறவர்கள் ஆவிக்குரியவைகளைச் சிந்திக்கிறார்கள்''

(ரோம 8:5).

---


## FORM IV

(See Rule 8)

| | | | |
|---|---|---|---|
| 1. | Place of publication | : | Bombay |
| 2. | Periodicity of its publication | : | Monthly |
| 3. | Printers Name | : | Chief Pastor N. Lazar |
| 4 | (Whether citizen of India?) | : | Yes |
| | (if foreigner, state the country of origin) | : | —— |
| | Address | : | Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400078. |
| 5. | Editor's Name | : | Chief Pastor N. Lazar |
| | (Whether citizen of India?) | : | Yes |
| | (if foreigner, state the country of origin) | : | —— |
| | Address | : | Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400078. |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per centof the total capital. | : | New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400078. |

I, Chief Pastor N. Lazar hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date : 26-2-1991

*Sd.* Chief Pastor N. Lazar,
Editor/Printer/Publisher.

# இயேசுவுக்கு நான் ஒரு சாட்சி

''நீங்கள் எனக்கு சாட்சியாக இருங்கள்''. கர்த்தர் மகிமைக்காகவும் இயேசுவின் பரிசுத்த நாமத்திற்காகவும் என் சாட்சியைத் தொடர்கிறேன்.

என் பெற்றோர்கள் திருமணத்தின் போது R.C.யில் சேர்ந்து திருமணம் செய்து கொண்டவர். எனக்கு ஒரு சகோதரி இருந்தாள். அவளுக்கும் சிறு குழந்தையிலேயே ஞானஸ்நானம் கொடுத்து இருக்கிறார்கள். நான் 31-12-1965 இரவு 12-02 பிறந்து இருக்கிறேன். என் தகப்பனார் Madras-ல் Telecommunication Department-ல் வேலை செய்து வந்தார். 1-1-1966 அன்று அங்கு ஒருவரை மணந்து கொண்டு எங்களை கை விட்டு விட்டார். இதனால் நாங்கள் தாத்தா, ஆயா, அம்மா, அக்கா, நான் எல்லோரும் பள்ளி கொண்டாவை அடுத்துள்ள ஒதியத்தூர் என்ற கிராமத்தில் தங்கி, பெரியவர்கள் கூலி வேலை செய்து கஷ்டத்தோடு எங்களை வளர்ந்து வந்தார்கள். நானும் என் சகோதரியும் அருகில் உள்ள C.S.I. பள்ளியில் படித்துக் கொண்டு Churchக்கு சென்று கொண்டிருந்தோம்.

என் சகோதரி திருமணத்துக்குப்பின் இந்துவாக மாறிவிட்டாள். 20-8-1981ல் திருமணம் நடந்தது. இதுவரையில் குழந்தையில்லை, அதன்பின் நான் சரியாக C.S.I. Churchக்கு செல்வதில்லை. +2 முடித்து College சென்றேன். அப்போது நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த அன்பு கிடைக்கவில்லை. வீட்டிலும் கஷ்டங்கள் மனதுக்கு அமைதியில்லை, சந்தோஷம் இல்லை. C.S.I. Church studentக்கு கல்லூரியில் ரு. 200/- Scholership கொடுத்திருந்தார்கள். அதனால் நான் 1985ல் C.S.I. சபையில் ஞானஸ்நானம் எடுத்துக் கொண்டேன். T.C.யிலும் கிறிஸ்தவன் என்று எழுதியிருந்தார்கள் (Government Scholer ship கிடையாது).

நான் நிறைய சினிமா பார்ப்பேன். வாரத்துக்கு 8 to 10 படங்கள், எப்போதும் சினிமா பாட்டு கேட்பது, கதைப் புத்தகங்கள், கிரைம் நாவல்கள் மாதத்திற்கு 20-25 வரை வாசிப்பது இவசரி கதைகள் அனைத்தும் படிப்பது போன்ற கெட்ட பழக்கங்கள் என்னிடம் காணப்பட்டது. College செல்லும் போது ஒரு பெண்ணை அன்பிற்காக காதலித்தேன். என் படிப்பைப் படிக்காமல் எப்பொழுதும் அவளையே நினைத்துக் கொண்டிருந்தேன். தோல்விகள், பிரச்சினைகள் தோன்றியது. பரீட்சை சரியாக எழுதாமல் எப்பொழுதும் அந்தப் பெண்ணுக்காக நாட்கணக்கில், மணிக்கணக்கில் நின்று கொண்டிருந்தேன். கடைசியில் அந்தப் பெண் என்னை வெறுத்தாள். எனவே மனமுடைந்துக் காணப்பட்டேன். இரண்டு முறை குடித்தேன், இரண்டு மாதம் சிகரெட் புகைத்தேன். அதன் பிறகு இது செய்வது தவறு என்று விட்டுவிட்டேன். ஆனாலும் அவளையே நினைத்துக் கொண்டு பித்தனானேன். மனதில் நிம்மதியில்லை, சமாதானமில்லை. இந்நிலையில் R.C கோவிலுக்குச் சென்றேன். அப்பெண்ணைக் குறித்து பல இந்து கோயில்களுக்கும் சென்று வேண்டுதல் செய்துள்ளேன். 1985ல் இருந்து 1989 வரை அப்பெண்ணை சந்தித்தேன் (பார்த்தேன்) இருவர் இருப்பதற்கு இடையேயுள்ள தூரம் 12 கி.மீ. ஆகும். நான் அப்பெண்ணைப் பார்ப்பது பள்ளிக் கொண்டாவில் நான் நினைக்கும் போதெல்லாம் அந்தப் பெண்ணைக் கண்டேன். அதனால் கடவுள்தான் அந்தப் பெண்ணை சந்திக்க ஏற்பாடு செய்துள்ளார் என்று நினைத்துக் கொண்டேன். (அவள் பள்ளி படிப்பை முடித்த பின்னும் நினைக்கும் போது அவளைக் கண்டேன். ஆனால் இருவரும் ஒரு போதும் பேசியது இல்லை) சிறிது இடைவெளிக்குப் பிறகு நான் ஒரு கம்பெனிக்கு வேலைக்குப் போனேன். அப்போதும் அப்பெண் அதே இடத்துக்கு வேலைக்கு வருபவளாக காணப்பட்டாள். மனநிம்மதியில்லை. இருவரும் வேலையை விட்டு நின்று விட்டோம்.

பள்ளிகொண்டாவில் புதிய எருசலேம் சபை திறக்கப்பட்டது. நண்பர் நேகேமியா மூலமாகத் தெரிய வந்தது. என்னுடன் கூட வேறு சிலரையும் அழைத்துக் கொண்டு வந்தேன். முதன் முதலாக மனதில் கொஞ்சம் சமாதானம் அடைந்த மாதிரி தோன்றியது. கர்த்தருக்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக.

அல்லேலூயா! பள்ளிக்கொண்டா புதிய எருசலேம் சபை ஊழியர் ஐயாவையும் Madras சபை ஊழியர் ஐயாவையும் இதற்கு முன் மூன்று முறை பார்த்து இருக்கிறேன். எனக்கு அவர்களை ரொம்ப பிடித்துவிட்டது.

பள்ளிக்கொண்டா ஊழியர் ஐயாவை அடிக்கடி சந்திப்பேன். இவ்வேளையில் நான் காதலித்த பெண்ணுக்கு அவர்கள் வீட்டில் வேறொருவருக்கு திருமணம் செய்து வைத்து விட்டார்கள் என்று சொல்லக் கேள்விப்பட்டேன். சரி இனிமேல் அவள் வேறு ஒருவரின் மனைவி. அவளை நினைக்கக் கூடாது என்று (வேளாங்கன்னி சென்று மொட்டை அடித்துக் கொண்டு அங்கேயே அவளை நினைப்பதை மறந்துவிட்டு வரலாம் என்று) நினைத்தேன். ஊழியர் அவர்களிடம் சொன்னேன். புதிய எருசலேம் ஊழியர் ஐயா வேண்டாம் என்று அறிவுரை கூறினார்கள். நான் என் மனதில் உள்ளவையை நிறைவேற்ற வேளாங்கன்னிக்கு 24-9-90ல் சென்றேன். அங்கு நடைபெறும் வழிபாடு விக்கிரக ஆராதனை, இந்துமுறை என்று கண்டு ஏன் இங்கு வந்தோம் என்று தோன்றியது. மனதில் அதிகமான பாவமும் தோன்றியது. உடனே டிக்கட் வாங்கிக் கொண்டு திரும்பி வந்துவிட்டேன். பல இன்னல்களுடன் வீடு வந்து சேர்ந்தேன். கடந்த ஐந்து ஆண்டுகளாக தகப்பனார் வந்து கொண்டிருக்கிறார். இது எனக்குப் பிடிக்கவில்லை. அவருக்கு என்னைக் கண்டாலே பிடிக்காது எனக்கு அவரைக் கண்டாலே பிடிக்காது. இதனால் வீட்டிலும் எவக்கு மகிழ்ச்சியோ, சமாதானமோ, சந்தோஷமோ கிடையாது. இந்நிலையில் C.S.I. Churchக்கு செல்லலாம் என்று சென்றேன். Julyயிலிருந்து C.S,I. Churchக்குச் சென்று கொண்டு இருந்தேன். எந்தக் கோயிலுக்குச் சென்றாலும் நிம்மதி கிடைக்கவில்லை. இவ்வேளையில் C. S I. சபையில் புது நன்மை எடுப்பதற்குச் சொன்னார்கள். புதிய எருசலேம் ஊழியர் ஐயாவிடம் கூறினேன். அவர்கள் வேண்டாமென்றும் I கொரி 11-ம் அதிகாரத்தை வாசித்து உங்கள் விருப்பப்படி செய்யுங்கள் என்றார்கள். அதை எடுத்து படித்து அது தவறு என்று கண்டேன். இவ்வேளையில் புதிய எருசலேம் சபைக்குச் சென்றேன். Sept. 30ல் C.S.I. Bishop வந்து மற்ற பிள்ளைகளுக்கு புது நன்மை கொடுக்கப்பட்டது, அனைவரும்
பிடி பிடித்துவிட்டு வந்தவர்கள், காலதாமத
மாக, காதலர்களாக, சினிமா படம் பார்த்து
விட்டு வந்தவர்கள். கீழ்த்தரமாக நடந்தவர்
கள் இவர்களுக்குப் புது நன்மை கொடுக்கப்
பட்டது. பிஷப் உபதேசமும் இவர்களைப்
போலவே இருந்தது. அப்போது "புதிய எரு
சலேம் சபைக்கும் மற்ற சபைகளுக்கும் உள்ள
வித்தியாசத்தைப் பார்த்தேன், புதிய எருச
லேம் சபையின் ஊழியர் ஐயா ஞாபகம் வந்
தது. அவர்கள் ஊழியத்துக்காக தன் Engineer
பதவியை விட்டு, அன்பாகவும், ஆத்துமாக்
களின் நிலமையை அறிந்து அறிவுரையும் கூறு
கிறார்களே, ஸ்தோத்திரம் சொல்லுகிறார்களே
கடவுளுக்குப் பயந்து' நடக்கிறார்களே என்று
நினைத்துப் பார்த்தேன். C.S I. சபையிலிருந்து
30-09-1990ல் இதுவும் ஒரு சபையா ?,என்று
உரக்கக் கூறிவிட்டு எழுந்து பள்ளிக்கொண்டா
புதிய எருசலேம் சபையை நோக்கி ஸ்தோத்தி
ரம் என்று கூறி திருச்சபையை அடைந்தேன்.
திருச்சபை ஆராதனை முடிந்தது. நான் எதிர்
பார்த்த சமாதானம், மகிழ்ச்சி, சந்தோஷம்
மனதுக்கு ஆறுதல் கிடைத்தது. மனதின்
பாரம் நீங்கியது. இதுதான் கடவுளால்
தெரிந்து கொள்ளப்பட்ட சபை என்று அறிந்து
சபையோடு சேர்ந்து கொண்டேன்.

புதிய எருசலேம் சபையில் முழு இரவு விழிப்பு ஜெபத்தில் கலந்து கொண்டு பாவ அறிக்கை செய்தேன். அதிலிருந்து மறக்க முடியாமலிருந்த பெண்ணை மறந்தேன். எல்லா தீய பழக்கங்களையும் மறக்க தேவன் கிருபை செய்தார். அல்லேலூயா! நான் இரட்சிக்கப் பட்டேன்.

வழக்கமாக எவக்கு நவம்பர், டிசம்பர் மாதங்களில் இருந்து வந்த ஒத்த தலைவலி, புதிய எருசலேம் சபையில் ஐக்கியப்பட்ட பின்னர் இதுவரையில் வரவில்லை. B. Sc. பட்டப் படிப்பை முடிக்க முடியாமலிருந்த நான் அதிக மதிப்பெண்கள்பெற்று வெற்றியடைய தேவன் கிருபை செய்தார், நான் மனந்திரும்பி புதிய மனிதனானேன். மகா சந்தோஷத்துடன் பாரம் இல்லாமல் மகிழ்ச்சியாக இருக்கின்றேன். அநேக மக்களுக்கு நான் அடைந்த பலனையும், புதிய எருசலேம் சபையைப் பற்றியும், இயேசுவைக் குறித்தும் அவர் திரும்ப வரப்போகிறதைக் குறித்தும் சாட்சி சொல்லி வருகிறேன். இதைப் படிக்கிற நீங்களும் மணவாட்டி திருச்சபையாகிய புதிய எருசலேம் சபையுடன் இணைந்து சாட்சியாக மாறும்படி கேட்டுக் கொள்ளுகிறேன், உங்களுக்காகவும் ஜெபிக்கிறேன்.

இப்படிக்கு, சகோ. ரவி
புதிய எருசலேம் சபை, பள்ளிகொண்டா,

(October -'90ன் தொடர்ச்சி)

# சேராபீன்கள்

## பரிசுத்தமாகுதல் என்னும் செட்டை



### 3. பரிசுத்த ஆவியினால் பரிசுத்தமாகுதல் I தெச 2:13

அகாஸ்வேரு ராஜாவுக்கு மணவாட்டியை ஆயத்தப்படுத்த யேகாயின் வசம் கன்னிகைகள் ஒப்புவிக்கப்பட்டார்கள். அப்படியே கிறிஸ்துவுக்கு மணவாட்டியை பரிசுத்த ஆவியானவர் ஆயத்தப்படுத்துகிறார். அது அப்போஸ்தலனைக் கொண்டு ஆயத்தப்படுத்துகிறார் (ரோம 15:15, II கொரி 11:2). நாம் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று பரிசுத்த ஆவியினால் நிறைந்து இருக்க வேண்டும். அப்பொழுது பரிசுத்த ஆவியானவர் நம்மை சகல சத்தியத்திற்குள்ளும் வழி நடத்துவார் (யோ 16:13). நினிவே போ என்று கர்த்தர் சொன்னால் யோனா தர்ஷீசுக்கு ஓடிப் போகிறார் (யோனா 1:1-3). இப்படிச் செய்யக் கூடாது. நீ போய் அந்த இரதத்துடன் சேர்ந்து கொள் என்று பரிசுத்த ஆவியானவராகிய தேவன் சொன்னார் பிலிப்பு அப்படியே செய்தார் (அப் 8:29,30). இப்படி நாம் நம்மை தேவ ஆவியானவருக்கு ஒப்புக் கொடுத்து செவி கொடுத்து கீழ்ப்படியும் பொழுது சகல சத்தியத்துக்குள்ளும் வழி நடத்தப்படுவோம். அப்படி வழி நடத்தப்பட்டால் மாத்திரமே பாவத்திலிருந்து விடுதலையாக முடியும், பரிசுத்தமடைய முடியும் (II கொரி 3:17,18).

### அந்த சேராபீன் விசுவாசம் என்னும் செட்டையால் பறந்து கொண்டிருந்தான்

"தேவனால் பிறப்பதெல்லாம் உலகத்தை ஜெயிக்கும், நம்முடைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம் (I யோ 5:4). விசுவாசம் மிக அவசியம் (எபி 11:6). அந்த விசுவாசமானது வேத வசனத்தை விசுவாசிப்பதாகும் (எபி 11:1). விசுவாசம் கேள்வியினால் வரும். அகங்காரிகள் விசுவாசிக்க மாட்டார்கள் (ஆபகூக் 2:4). ஆபிரகாம் கர்த்தரை விசுவாசித்தான். கர்த்தர் அதை அவனுக்கு நீதியாக எண்ணினார் (ஆதி 15:6). ஆபிரகாம் கர்த்தருடைய வார்த்தையை விசுவாசித்தார். கர்த்தருடைய வார்த்தையை விசுவாசிக்காமல் கர்த்தரை விசுவாசிக்க முடியாது. விசுவாசிக்கிறேன் என்பதை அவர் சொல்லுகிற பிரகாரம் செய்கிறதினால் நிரூபிக்க வேண்டும் (ஆதி 22:2,9,10,18). இறைவன் மோசேயை பேர் சொல்லி அழைத்து தன்னுடைய ஜனங்களை எகிப்திலிருந்து விடுதலையாக்கும்படி அனுப்பினார். அந்த மோசேக்கு எந்நெ, யம்பிரே என்னப்பட்ட இருவரும், இன்னும் இஸ்ரவேல் புத்திரரில் சிலரும் எதிர்த்து நின்றார்கள். அப்படியே இந்தக் கடைசிக் காலத்தில் தேவனால் அனுப்பப்படுகிற ஒரு அப்போஸ்தலன் உண்டு. அவருடைய வார்த்தைக்குக் கீழ்ப்படியாமல் சத்தியத்துக்கு எதிர்த்து நிற்கிற துர்ப்புத்தியுள்ள மனிதர் எழும்புவார்கள். ஆனாலும் இவர்கள் அதிகமாய்ப் பலப்படுவதில்லை. அவர்களுடைய மதிகேடு எல்லாருக்கும் வெளிப்பட்டது போல இவர்களுடைய மதிகேடும் வெளிப்படும் (II தீமோ 3:1-9).

நீ எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்ட நாளில் நடந்தது போல உன்னை அதிசயங்களைக் காணப் பண்ணுவேன் (மீகா 7:15), முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கும் (பிர 3:15). விசுவாசமும் நல் மனசாட்சியும் உடையவர்களாயிருங்கள். சத்தியத்தை விசுவாசிக்காமல் அநியாயத்தில் பிரியப்படுகிறவர்களை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி அவர்கள் பொய்யை விசுவாசிக்கத்தக்கதாக கொடிய வஞ்சகத்தைத் தேவன் அனுப்புவார் (II தெச 2:10-12). ஆம் சத்தியத்தைத் தரையிலே தள்ளி கிரியை செய்து அனுகூலம் அடைவர். இது அந்திக் கிறிஸ்துவின் ஆவி (தானி 8:12; II தெச 2:9-12). நாம் சத்தியத்தைக் கைக்கொண்டு வருகிற நீதியுள்ள ஜாதி என்று அழைக்கப்படுவோமாக (ஏசா 26:2).

இந்த நாட்களிலே மேற்புறமான கிறிஸ்தவம் ஒன்று படம் காட்டப்படுகிறது. அவரை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் அவருடைய நாமத்தினால் பாவ மன்னிப்பைப் பெறுவான் (அப் 10:43) என்று இருப்பதினால் நாங்கள் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறோம், பாவ மன்னிப்பைப் பெற்றிருக்கிறோம் என்று எண்ணுகிறார்கள். ஆனால் நான் உங்களுக்கு பிர

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

சங்கித்தப் பிரகாரமாய் நீங்கள் அதைக் கைக்கொண்டிருந்தால் அதினாலே நீங்கள் இரட்சிக்கப்படுவீர்கள் மற்றபடி உங்கள் விசுவாசம் விருதாவாயிருக்குமே (I கொரி 15:2) என்று அப்போஸ்தலன் சொல்லியிருக்கிறார். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்து அப்போஸ்தலருக்கு தரிசனமாகி பிதா எனக்குச் சகல அதிகாரங்களையும் கொடுத்து அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி, பாவங்களை மன்னிக்கவும், சமத்தி னைக்கவும் அப்போஸ்தலருக்கு அதிகாரம் கொடுத்தார் (யோவா 20:19-23). வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் புறப்பட்டு போங்கள் என்று அப்போஸ்தலர்களுக்கு இயேசு கட்டளையிட்டார் (மத் 28:18-20). பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷ குமாரனுக்கு அதிகாரம் உண்டு என்று நீங்கள் அறிய வேண்டுமென்று கர்த்தர் சொன்னார் (மாற் 2:1-10). பரிசேயர்கள் கிறிஸ்துவை தேவனுடைய குமாரனென்று விசுவாசியாமல் போனார்கள், இதன் மூலமாக அவரை அனுப்பின பிதாவையும் அவர்கள் விசுவாசியாமல் போனார்கள். ஆனால் அவர்கள் தாங்கள் பிதாவை விசுவாசிப்பதாகச் சொல்லிக் கொண்டார்கள். நாங்கள் வேதத்தை அறிந்தவர்கள், அதின்படி நடக்கிறவர்கள் என்ற மேட்டிமையான எண்ணமே அவர்கள் சத்தியத்தைக் காணாதபடிக்கு அவர்களுடைய கண்களைக் குருடாக்கிப் போட்டது. அதே ஆவி பாவங்களை மன்னிக்க இவன் யார்? என்று இன்று கேட்கிற வேதபாரகரில் கிரியை செய்கிறது.

இயேசு கிறிஸ்து தம்முடைய அப்போஸ்தலனுக்கு பாவ மன்னிப்பின் அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறார். நீ பாவ மன்னிப்பின் உபதேசத்தை ஏற்றுக் கொண்டாயானால் அப்போஸ்தலனையும் ஏற்றுக் கொள்வாய். அப்போஸ்தலனை ஏற்றுக் கொண்டாயானால் கிறிஸ்துவை, பிதாவை ஏற்றுக் கொள்வாய் (யோ 13:20). இராஜாவின் வார்த்தை எங்கேயோ அங்கே அதிகாரமும் உண்டு(பிர 8:4). பாவங்களை மறைக்காமல் அறிக்கை செய்வதே பாவ மன்னிப்புப் பெற, பாவத்திலிருந்து விடுதலைப் பெற வழி. தேவனிடத்தில் நாம் நம்முடைய பாவங்களை மறைக்க முடியாது (எபி 4:13). நாம் ஊழியக்காரரிடமே நம்முடைய பாவங்களை மறைக்கிறோம். அனனியாவும், சப்பீராளும் சாத்தானால் நிரப்பப்பட்டு பேதுருவினிடத்தில்பொய் சொன்னார்கள். அது பரிசுத்தாவியினிடத்தில், தேவனிடத்தில் பொய் சொன்னதாகும். எனவே அப்போஸ்தலனிடத்தில்பொய் சொல்வது தேவனிடத்தில் பொய் சொல்வதாகும் (அப் 5:1-4). தேவனிடத்தில் அறிக்கை செய்வதென்பது ஊழியக்காரனிடம் அறிக்கை செய்வதே (யோசுவா 7:19). ஊழியர்கள் மூலமாய் மன்னிப்பு அருளப்படுவது இது நம்முடைய இயேசு கிறிஸ்து தாமே நடப்பிக்கிறதும் அவரால் நாம் அடையும் மன்னிப்பு என்று விசுவாசிக்க வேண்டும் (அப் 10:43).

கர்த்தருடைய எல்லா வார்த்தைகளையும் விசுவாசியுங்கள். தேவனுடைய வார்த்தையைக் குறித்து ஒரு போதும் அவிசுவாசமாயிராதேயுங்கள். தேவனுடைய வார்த்தையை முழு நிச்சயமாய் நம்புங்கள் அப்பொழுது நீங்கள் கிரியை செய்கிறதற்கான பெலன் உங்களுக்கு உண்டாகும். கர்த்தருடைய வார்த்தையை நிறைவேற்றுவது நமக்கு நீதியாயிருக்கிறது. அதன் பலன் பரிசுத்தமாகுதலாகும். ஆகவே அந்த சேராபீன் விசுவாச மென்னும் செட்டையால் பறந்து கொண்டிருந்தான்.

(தொடரும்)

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   27 (புதன்) மார்ச் 1991
   29 (திங்கள்) ஏப்ரல் 1991

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி:
   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR. New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at: PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph: 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 88 - April 1991

## "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின், அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி ''தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)'' எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6 இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப்.1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6) இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளே, கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்! உலகத்திலே போதனை செய்வார் உண்டு. அவர்கள் அநேகர்; சாதனை செய்வாரோ சிலர். தங்களிடத்தில் இல்லாததை இருக்கிறதுபோல் காண்பிக்கிறவர்களும், தாங்கள் செய்கிற நரித் தந்திரங்கள் பிறருக்குத் தெரிய வராது என்று எண்ணி பெரிய போதனைக்காரர்கள்போல் போதிக்கிறவர்கள் அநேகராகிவிட்டார்கள். வெறும் தீனியைத் திணித்துக் கொண்டே இருக்கிறவர்கள் அநேகர். இவர்கள் திணிக்கிறது மற்றவர்களுக்கு ஜீரணமாக வேண்டும். அதற்குத் தண்ணீர் தேவை. சாதனையில்லாத போதனைக்காரர்களுடைய வேஷம் ஒருநாள் கலைக்கப்படும். சிலர் மனிதாபிமானம், மனித நேயம் என்று எழுதிக் கொண்டிருக்கிறார்கள். மதப் போர்வையை சிலர் போர்த்திக் கொண்டு காம விகாரத்துக்கு ஏதுவாக தேவனுடைய சத்தியத்தைப் புரட்டுகிறார்கள். ஒரு ஊழியக்காரன் ஒரு சகோதரிக்கு வாழ்த்து அனுப்புகிறான். உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள், உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள் என்று எழுதி வாழ்த்து மடல் (Greeting Card) ஆணும் பெண்ணும் இணைக்கமாய் கை வைத்திருக்கிறது போன்ற போட்டோவை (Photo) அனுப்பி வைக்கிறான். எப்படியிருக்கிறது காரியம். ஆனபடியால் சுதந்திர (சுயாதீன) ஊழியக்காரர்களைக் குறித்து தேவ ஜனங்கள் எச்சரிக்கையாயிருக்க வேண்டும், ஏன் என்றால் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் இவர்கள் கீழ்ப்படியார்கள். தட்டிக் கேட்கவும் ஆள் இல்லை அல்லவா. ஆனபடியால்தான் திருச்சபைக்கு வெளியே தெய்வீக ஊழியம் இல்லையென்று நாம் அடிக்கடி சொல்லவும், எழுதவும் செய்கிறோம். இவ்விதமான கள்ள ஊழியர்கள் யார்? எப்படிப்பட்டவர்கள்? என்பதையும் கிறிஸ்தவ உலகத்திற்கும், உலகத்திற்கும் தெளிவாக படம்பிடித்துக் காட்ட வேண்டிய அவசியமிருக்கிறது. சீக்கிரமாக "புதிய எருசலேம் செய்தி"யில் வெளிப்படுத்தல் ஆகமத்திற்கு விளக்கம் வருகிறது. கிறிஸ்தவ உலகத்திற்கும், உலகத்திற்கும் அருள வேண்டிய செய்தியாகும் அது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் உண்டாகும் இரட்சிப்பு இல்லையேல் எந்த நற்குணமும் பூரணப்படாது. சுவைக்கு உதவாத கதாசிரியர்கள் வெறும் சக்கையான உபதேசங்களாக எழுதிக் கொண்டும் பேசிக் கொண்டுமிருக்கிறார்கள். இவர்களே இரட்சிக்கப்படாததினால் இரட்சிப்பைப் பற்றி அவர்களுக்கு ஞாபகம் வருவதில்லை, உலகத்துக்கு உபதேசம் கொடுக்கிறார்கள். இவ்விதமாய் கடந்த நாட்களில் உபதேசம் கொடுத்தவர்கள் உண்டு. அதனால் உலகத்துக்கு எந்த நன்மையுமில்லை. முதலாவது இரட்சிப்பு. இரட்சிப்பைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள், உண்மை உரைத்தல், பிரச்சினை என்றால் பேசி தீர்த்து இணக்கம் காணுதல். இதற்கு உட்படாதவர்களை நாம் பொறுத்துக் கொள்ள முடியாது, பொறுத்துக் கொள்ளவுங் கூடாது. ஏனென்றால் இவர்கள் உலகத்தை வஞ்சிக்கிறவர்களாயிருக்கிறார்கள். பாவம் செய்தவர்களை எல்லாருக்கும் முன்பாகக் கடிந்து கொள்ளும்படி கட்டளையிட்டுள்ளாரே (I தீமோ 5:19, 20). எல்லாப் பிரச்சினைக்கும் முடிவு கூடி பேசி தீர்த்தலே. அதற்கு உட்பட விருப்பமில்லாதவர்கள் அவரவர் மட்டிலே இருந்து கொள்வது அவர்களுடைய கடமை. ஆனாலும் துன்மார்க்கருக்கு சமாதானம் இல்லை. அவர்கள் அமர்ந்திருக்கக் கூடாத கடலைப்போல் சேற்றையும், அழுக்கையும் நுரைத்தள்ளி கொண்டேயிருப்பார்கள் (ஏசா 57:20, 21). நாம் தேவனுடைய சித்தத்தை நிறைவேற்றுவோம். நன்மை செய்வோம். நன்மை செய்கிறது மாத்திரமல்ல தீமையை எதிர்ப்பதும் நம்முடைய கடமையாயிருக்கிறது. உண்மைக் கிறிஸ்தவர்களாய் உள்ளும் புறமும் ஒன்றுபோல், உண்மைக் கிறிஸ்தவர்களாய் ஜீவித்து தேவ சித்தத்தை நிறைவேற்றுவோமாக!

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR.)

# அவர் மரணத்தை ஜெயமாக விழுங்குவார்

மரணம் மனித ஜாதியைப் பிடித்திருக்கிற ஒரு பெரிய விபத்தாகும். மனிதன் நித்தியமாக வாழ்வதற்கென்று இறைவனால் படைக்கப்பட்டான். அதற்கான சாத்தியக் கூறுகள் உள்ளும் புறமும் அவனுக்கு அமைக்கப்பட்டுள்ளது. அதே சமயம் அவனுக்கு நிபந்தனையும் கொடுக்கப்பட்டது (ஆதி 2:16, 17). மனிதனுக்கு ஒரு பரம எதிரி உண்டு. அவன் சாத்தானாகும். சாத்தானை தேவன் படைக்கவில்லை. தேவன் தாம் உண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார் அது மிகவும் நன்றாயிருந்தது (ஆதி 1:1, 31). அவன் தேவனால் சிருஷ்டிக்கப்பட்ட தேவ தூதனாகும். அவன் மேற்படியானமையினால் விழுந்துபோன தேவ தூதனாகும். தேவ தூதன் சாத்தானாய்ப் போய்விட்டான். தன்னைப் போலவே மனிதனையும் விழச் செய்து தன்னோடு சேர்த்துக் கொள்ள அவன் திட்டமிட்டான். நீங்கள் தேவனுடைய கட்டளையை மீறினால் நஷ்டமொன்றுமில்லை, லாபம்தான். நீங்கள் சாவதே சாவதில்லை என்று பொய் சொன்னான். அவனை விசுவாசித்து ஏற்றுக் கொண்ட முதல் மனிதன் ஆதாம் ஆகும். ஆதாம் தேவனுடைய கட்டளையை மீறினான் அவன் மரித்தான். முதலாவது ஆத்தும மரணத்தை அடைந்தான். தன்னுடைய ஜீவனான தேவனை விட்டுப் பிரிந்தான். ஐக்கியத்தை இழந்தான். ஒருநாள் அவனுடைய சரீரமும் செத்துப் போயிற்று. ஆதி 5ஆம் அதிகாரம் இன்னான் இத்தனை ஆண்டுகள் ஜீவித்தான் பின்பு மரித்தான் என்கிற பதிவைக் காண்பிக்கிறது. அதே சமயம் தேவனுக்குப் பிரியமாக ஜீவித்த ஒருவர் இன்னும் உயிரோடிருக்கிறார் என்று நிரூபிக்கிறது. ஏனோக்.

தேவனை விட்டுப் பிரிக்கும் மரணத்தை, எல்லோரையும் பயப்படுத்தும் மரணத்தை முதல் ஆதிமனிதனிடமிருந்து மனித ஜாதி சுதந்தரித்துக் கொண்டது (ரோம 5:12). மனிதனாய் இந்த உலகத்தில் பிறந்து பாவம் செய்து, பாவத்திநிமித்தம் உண்டாகும் மரணத்தை மனித ஜாதியெல்லாம் அநுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அதிலிருந்து யாரும் தப்ப முடியவில்லை, உலகத்தில் தேவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற எல்லாரும் இப்பூமியினில் வந்து ஜீவித்து மரித்துப்போன மனிதர்களே. அவர்கள் மரித்தார்கள், மரித்தே போய்விட்டார்கள். அவர்களுடைய சரீரம் அழிந்து போய்விட்டது. அவர்கள் மரணத்தை ஜெயித்து எழும்பவில்லை. ஆனபடியால் முன்னால் அவர்கள் இருந்த சரீர தோற்றப்படி உருவங்களைப் படைத்து செத்துப்போன அந்த உருவங்களை, படங்களை மனிதன் வணங்குகிறான். இது ஒரு பொய்யாகும். அது உண்மையிலே வெறும் சிலைகள்தான்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோ அவ்விதம் இல்லை. மனிதனை மீட்கும்படியாய் இவ்வுலகத்தில் பிறந்த தெய்வம் அவர். அவர் இப்பூவுலகில் மனிதனுக்காகப் பிறந்து பரிசுத்த வாழ்வை வாழ்ந்து மனிதனுக்காக, மனிதனைப் பிடித்திருக்கிற மரணத்துக்குள்ளாகி மரணத்தை ஜெயித்து மூன்றும் நாள் உயிரோடெழுந்தார். அவருடைய சரீரம் மகிமையாய் உயிரோடெழுந்தது. அவர் நம்முடைய பாவங்களுக்காக ஒப்புக் கொடுக்கப்பட்டும் நாம் நீதிமான்களாக்கப்படுவதற்காக எழுப்பப்பட்டுமிருக்கிறார் (ரோம 4:25). ஆம் இயேசு கிறிஸ்து உயிரோடெழுந்தார். இயேசுகிறிஸ்து உயிரோடிருக்கிறார். இதற்கு நாங்கள் சாட்சிகள் (அப் 5:32; 3:15; 10:40-43). அவர் மரணத்தை ஜெயமாக விழுங்குவார் என்கிற வேத வாக்கியம் நிறைவேறிற்று. அவர் உயிரோடிருக்கிறபடியினால் கொடிய பாவிகள் பாவத்திலிருந்து மனந்திரும்புகிறார்கள், இரட்சிக்கப்படுகிறார்கள். அவருடைய உயிர்த்தெழுதலின் வல்லமைதான் அற்பமாய்க் காணப்பட்ட கலிலேயராகிய மனிதர்களை வல்லமையுள்ள சாட்சிகளாய் மாற்றிற்று. உயிர்த்தெழுந்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தங்களோடிருந்தபடியினால் அவர்கள் எழும்பி இந்த ஜீவ வார்த்தைகளை உலகமெங்கும் பரப்பினார்கள். உலகத்தில் சில மதங்கள் பாவம் செய்

கிறதற்கென்றே ஸ்தாபிக்கப்பட்டுள்ளவை. பாவம் செய்ய விரும்புகிற யாவரும் அதிலே சேர்ந்து துணிகரமாக பாவம் செய்கிறார்கள். இதினாலே அவர்கள் மரித்து சொல்லொண்ணா வேதனையுள்ள அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலாகிய நரகத்தில் தள்ளப்படுகிறார்கள். ''பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபச்சாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரக ஆராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள்'' (வெளி 21:8).

''கிறிஸ்துவோ மரித்தோரிலிருந்து எழுந்து நித்திரையடைந்தவர்களில் முதற்பலனானவர்கள். மனுஷனால் மரணம் உண்டானபடியால், மனுஷனால் மரித்தோரின் உயிர்த்தெழுதலும் உண்டாயிற்று. ஆதாமுக்குள் எல்லோரும் மரிக்கிறதுபோல கிறிஸ்துவுக்குள் எல்லோரும் உயிர்ப்பிக்கப்படுவார்கள். அவனவன் தன்தன் வரிசையிலே உயிர்ப்பிக்கப்படுவான். முதற்பலனானவர் கிறிஸ்து, பின்பு அவர் வருகையில் அவருடையவர்கள் உயிர்ப்பிக்கப்படுவார்கள்'' (I கொரி 15:20-23). சரீரத்தில் மரணமடைந்த மனிதர்களில் முதலாவது உயிர்த்தெழுந்து மரணத்தை ஜெயித்தவர் இயேசு கிறிஸ்து ஒருவரே. அவரை முதற்பலன் என்று எழுதியிருக்கிறது. முதற்பலன் என்றால் இஸ்ரவேலர்கள் விளைச்சலில் முதலாவது ஒரு அரிக்கட்டை அறுத்துக் கொண்டுபோய் தேவ சந்நிதானத்தில் பிரதிஷ்டை செய்வார்கள். இது எதைக் காண்பிக்கிறது என்றால் இவ்விதமான அநேகம் ஆயிரம் மனிகள் வந்து களஞ்சியத்தில் சேரப் போகின்றன என்பதற்கு முன் அடையாளமாயிருக்கிறது. ஆதாம், ஏவாள் பாவம் செய்தார்கள், அவர்கள் மரித்தார்கள். அவர்களுடைய சந்ததி எல்லாம மரித்துக் கொண்டிருக்கிறார்கள். இயேசு கிறிஸ்து பரிசுத்தமாய் ஜீவித்தார். மரித்து மரணத்தை ஜெயித்து உயிர்த்தெழுந்தருளிப் போய் உன்னதத்தில் தேவசந்நிதானத்தில் தேவனுடைய வலது பாரிசத்தில் வீற்றிருக்கிறார் (எபே 1: 19-23). ஆதாமுக்குள் எல்லாரும் மரிக்கிறதுபோல கிறிஸ்துவுக்குள் (கிறிஸ்துவுக்குள்ளிருக்கிற) எல்லாரும் உயிர்த்தெழும்புவார்கள். ஆதாமுடையவர்கள் எல்லாரும் மரிக்கிறதுபோல கிறிஸ்துவினுடையவர்கள் எல்லோரும் மகிமையான உயிர்த்தெழுதலை அடைவார்கள் (I கொரி 15:22, 23). கிறிஸ்தவத்தின் நம்பிக்கை இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலிலே இருக்கிறது. ஆம் இயேசு கிறிஸ்து ஒருவரே மரணத்தை ஜெயித்தவர். மனிதனை மரணத்திலிருந்து விடுதலையாக்குகிறவர். ஒன்றில் ஜெயம் பெற்றவர்தான் உனக்கு ஜெயம் அருள முடியுமேயொழிய விண்டம்பம் பேசி செத்துப் போனவர்கள் உனக்கு எந்தநன்மையும் செய்ய முடியாது. பிரயோஜனமற்றதும் இரட்சிக்க மாட்டாதவைகளுமாயிருக்கிற வீணானவைகளை (வெறும் சிலைகளை) பின்பற்றுகிறீர்கள், அவைகள் வீணானவைகளே (I சாமு 12:20,21) பொய்யான மாயையைப் (விக்கிரகத்தை) பற்றிக் கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு வரும் கிருபையைப் போக்கடிக்கிறார்கள் (யோனா 2:8). வீண் மாயைகளைப் பற்றிக் கொள்ளுகிறவர்களை நான் வெறுத்து கர்த்தரையே பற்றிக் கொண்டிருக்கிறேன் என்று சங்கீதக்காரர் சொல்லுகிறார் (சங் 31:6). விக்கிரக ஆராதனையோடு காமவிகாரம், அசுத்தம், பொய் சம்பந்தப்பட்டிருக்கிறது. விக்கிரக ஆராதனைக்காரர் ஒருபோதும் பாவத்திலிருந்து விடுதலையாகார்.

இந்நாட்களில் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுந்த பண்டிகையை நாம் ஆசரிக்கிறோம். மரணத்தை ஜெயித்து உயிர்த்த கடவுள், அவரை விசுவாசித்து அவருடைய உயிர்த்தெழுதலின் பண்டிகையை உண்மையாய் ஆசரிக்கிற எல்லோரையும் தம்முடைய உயிர்த்தெழுதலின் வல்லமையினால், ஜீவனால் நிரப்புவாராக. உயிர்த்தெழுதலின் ஜீவன் உங்களில் பிரவேசித்து வெற்றி வாழ்க்கை அருள்வதாக. நாம் பாவங்களுக்குச் செத்தவர்களாயிருக்க அவர் மரித்தார். நாம் நீதிக்கென்று ஜீவிக்கிறவர்களாயிருக்க அவர் உயிர்த்தார் (I பேது 2:24). கர்த்தருடைய பாடு மரணங்களைத் தியானிப்பதினால் பாவங்களுக்குச் செத்து அவருடைய உயிர்த்தெழுதலின் பண்டிகையை ஆசரிப்பதினால் ஜெய வாழ்வை அடைவோம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய வருகை பிந்துமானால் நாம் சரீரத்தில் மரித்தாலும் மகி

மையாய் உயிர்த்தெழும்புவோம் அல்லது நம்முடைய தலைமுறையில் அவருடைய இரண்டாம் வருகை இருக்கும். நாம் மரணத்தைக் காணுமல் மறுரூபம் அடைந்து பறப்போம். அப்.பவுல் அந்த மகிமையான முதலாம்உயிர்த்தெழுதலில் பங்கு பெறவே வாஞ்சையாயிருந்தார் (பிலி 3:9-12). இதோ உயிர்த்தெழுந்த கர்த்தர் வருகிறுர். அவரை நீ சந்திக்க ஆயத்தப்படு (ஆமோஸ் 4:12).

இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தார்!

இயேசு கிறிஸ்துவே உயிர்த்தெழுந்தார் !!

ஆமென்!

---

# ஸ்திரீகளால் தங்களை கறைபடுத்தாதவர்கள் இவர்களே (வெளி 14:4).

இந்த வசனத்தைக் கண்ட உடனே சிலர், விவாகம் பண்ணுதவர்களே ஸ்திரீகளால் தங்களை கறைபடுத்தாதவர்கள் என்று எண்ணி விவாகம் பண்ணுமல் இருந்து மேன்மை பாராட்டுகிறுர்கள். விவாகம் பண்ணி பிள்ளைகளைப் பெற்றவர்கள் சிலர் இவ்வளவு நாள் தங்களை கறைபடுத்தியாயிற்று. இனிமேலாவது கறைபடாதிருப்போம் என்று தீர்மானித்து, கணவனும மனைவியும் பிரிந்து வாழவோ, அல்லது கணவன் வேறு ஒரு சகோதரியாகிய பெண்ணுேடு சேர்ந்து ஊழியம் செய்யவும், மனைவியோ வேறு ஒரு நபரோடே சேர்ந்து ஊழியம் செய்யவும் ஒப்புக் கொடுத்து உயர் ஸ்தலத்தை அடையப் போகிறேம் என்று எண்ணுகிறவர்களாகவும் இருக்கிறுர்கள்.

மேலே சொல்லப்பட்டுள்ள வசனம்(வெளி 14:4) தீர்க்கதரிசன புஸ்தகத்திலுள்ள ஒரு வாக்கியமாகும் (வெளி 22:19). இது பரிசுத்த ஆவியானவர் சொன்ன வார்த்தை (II பேது 1:21). இதை வாசிக்கிறவர்கள் எல்லாரும் விளங்கிக் கொள்ளும்படி எழுதப்பட்டதல்ல. பரிசுத்த ஆவியானவரால் அனுப்பப்பட்டவர்கள் விளக்கிச் சொல்ல விளங்க வேண்டிய காரியமாகும் (அப் 8:26-35). இந்த இடத்தில் ஸ்திரீகள் என்ருல் பெண்பாலரைக் குறிப்பிடுகிறது என்று அர்த்தமல்ல.அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டி=இயேசுவைக் குறிப்பிடுகிறது.அவர் வாயிலிருந்து பட்டயம் புறப்பட்டதென்ருல்= தேவனுடைய வார்த்தையைக்குறிப்பிடுகிறது. பாம்பு=சாத்தானைக் குறிப்பிடுகிறது. இப்படி தீர்க்கதரிசன புத்தகத்தில் எழுதப்பட்டுள்ள வார்த்தைகள் பெரும்பாலும் உவமான சொற்களாகவே உள்ளன.

ராகேல் தன் பிள்ளைகளுக்காக அழுது அவைகள் இல்லாதபடியால் ஆறுதலடையாதிருக்கிறுள் என்று எரேமியா உரைத்த தீர்க்கதரிசனத்தை வாசித்த உடன், ராகேல் என்று ஒரு அம்மா தன் பிள்ளை இல்லாமல் போனபடியால் அழுதாள் என்று அர்த்தங் கொள்வது சரியா? ஏரோது பெத்லகேமின் எல்லைகளிலுள்ள இரண்டு வயதிற்குட்பட்ட எல்லா பிள்ளைகளையும் கொன்றபடியால் அந்த தேசத்தில் கூக்குரல் உண்டாயிற்று. இந்த இடத்தில் ஒரு ஊர் அல்லது தேசம் ராகேல் என்ற ஸ்திரீயாக உவமயிக்கப்பட்டுள்ளது (மத் 2:16-18).

I have likened the daughter of zion to comely and delicate woman (Jer 6:2). எருசலேம் பட்டணத்தை (எரே 6:6) சீயோன் குமாரத்தி என்றும் அவளை செல்வமாய் வளர்ந்த ரூபவதியான பெண் என்றும் ஒப்பிடப்பட்டுள்ளது (எரே 6:2). சாலமோனின் நாட்களுக்குப் பின்பு இஸ்ரவேலர் இரண்டாகப் பிரிந்தார்கள். பத்துக் கோத்திரத்தார் யெரோபெயாமை ராஜாவாக ஏற்படுத்தினுர்கள். அவன் சமாரியாவை தலைநகராக்கி ஆளுகை செய்தான். யூதா, பென்யமீன் கோத்திரத்தார் ரெகோபெயாமோடே இருந்தார்கள். ரெகோபெயாம் எருசலேம் நகரத்திலிருந்து ஜனத்தை ஆண்டான். இஸ்ரவேல சபையார் இரண்டுபட்டார்கள். இவர்களையும் பார்த்து கர்த்தர் சொல்லுகிறுர். ஒரு தாயின்

குமாரத்திகளாகிய இரண்டு ஸ்திரீகள் இருந்தார்கள் (எசேக் 23:2). மூத்தவள் பெயர் அகோலாள், இளையவள் பெயர் அகோலிபாள். அகோலாள் என்பதற்கு சமாரியா என்றும், அகோலிபாள் என்பதற்கு எருசலேம் என்றும் பொருளாம் (எசே 23:4). இங்கே இரண்டு சபைகளை இரண்டு ஸ்திரீகளுக்கு ஒப்பிட்டிருப்பதைக் காணலாம்.

''கிறிஸ்து சபைக்குத் தலையாயிருப்பது போல், புருஷனும் மனைவிக்கு தலையாக இருக்கிறான் (எபே 5:23). மனுஷன் தன் தகப்பனையும் தாயையும் விட்டு தன் மனைவியுடன் இசைந்து இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள். இந்த இரகசியம் பெரியது. நான் கிறிஸ்துவையும் சபையையும் பற்றி பேசுகிறேன்'' (எபே 5:31, 32). இந்த இடத்தில் கிறிஸ்துவின் சரீரமான சபையானது மனைவியாகிய ஒரு ஸ்திரீக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. தன் பிள்ளைகளோடே அடிமைப்பட்டிருந்த எருசலேம் (நியாயப் பிரமாணத்திற்கு அடிமைப்பட்டுள்ள யூத சபை) ஆகார் என்ற அடிமை ஸ்திரீக்கு ஒப்பிடப்பட்டுள்ளது (கலா 4:25). பரிசுத்த ஆவியானவரின் ஆளுகைக்குட்பட்டுள்ள (சுயாதீனமுள்ள) மெய்யான திருச்சபையாகிய மேலான எருசலேமோ நம்முடைய தாயாகிய ஸ்திரீக்கு ஒப்பிடப்பட்டுள்ளது (கலா 4:26).

ஆபிரகாமின் மனைவி பெயர் சாராள். இந்த அம்மாவுக்குப் பிறந்த பிள்ளையாகிய ஈசாக்குதான், தேவனுடைய வாக்குத் தத்தத்துக்குரியவர். இவர் ஒருவரைதான் தேவன் ஆபிரகாமின் ஏகசுதன் (only one) என்று அழைக்கிறார் (ஆதி 22:2). ஆபிரகாம் தனக்குண்டான யாவையும் ஈசாக்குக்குகொடுத்தார் (ஆதி 25:5). ஆபிரகாமுக்கு மறுமனையாட்டிகள் இருந்தார்கள் (ஆதி 25:6). மறுமனையாட்டியின் பிள்ளைகளுக்கு வெகுமதிகளைக் (Gifts) கொடுத்து கிழ்தேசத்துக்கு அனுப்பிவிட்டார் (ஆதி 25:6). சாராளுக்கும் மற்ற மனைவிகளுக்கும் உள்ள வித்தியாசம் எவ்வளவு பெரிதாக உள்ளது பாருங்கள். சாராளின் பிள்ளை தவிர, ஆபிரகாமுக்குப் பிறந்த வேறே எந்த பிள்ளைகளும் ஆபிரகாமோடே இருக்கவில்லை. அந்த ஸ்திரீகள் பெற்ற பிள்ளைகள் யாரும் அவருடைய சுதந்திரத்திற்கு பங்குள்ளவர்களாகவில்லை. ராஜ ஸ்திரீகள் அறுபது பேரும், மறுமனையாட்டிகள் எண்பது பேரும் உண்டு. கன்னியருக்குத் தொகையில்லை, என் புறாவோ, என் உத்தமியோ ஒருத்தியே (உன் 6:8, 9). இந்த வசனத்தின் அர்த்தம் என்ன? ராஜாவாகிய இயேசு கிறிஸ்துவின் மனைவியாகிய மணவாட்டியாகிய திருச்சபை ஒன்றே. அதன் பெயர்—புதிய எருசலேம் (வெளி 21:2, 10). இந்த இடத்தில் புதிய எருசலேம் நகரம் (சபை) மணவாட்டியாகிய ஸ்திரீயாக நியமிக்கப்பட்டுள்ளது. ஆபிரகாமுக்கு சாராள் மட்டுமே மனைவியாக தேவ தீர்மானத்தின்படி ஏற்படுத்தப்பட்டவள். மற்ற பெண்கள் மாம்சஇச்சைப்படி சேர்ந்து கொண்டவர்கள், அல்லது சேர்க்கப்பட்டவர்கள். அதேபோல் தேவனால் எழுப்பப்படாமல் வசனத்தைக் கேட்டு விசுவாசித்து, இயேசு கிறிஸ்துவை இரட்சகராக ஏற்றுக் கொண்டு அவர்களாகவே கூடிக் கொண்ட கூட்டத்தார், இப்படி திரளான சபைகள் உண்டு. தேவ தீர்மானத்தின்படி எழுப்பப்பட்ட சபையின் பிள்ளைகளே, ஆட்டுக்குட்டியானவர் எங்கே போனாலும் அவரைப் பின்பற்றிப் போகிற அவருடைய எல்லாவற்றிற்கும் சுதந்திரவாளிகள். மற்ற சபைகளின் பிள்ளை இயேசு கிறிஸ்துவினிடமிருந்து வரங்கள் (gifts) பலவற்றை பெற்றிருக்கலாம். ஆனால் புதிய எருசலேம் சபையின் பிள்ளைகளுக்குரிய சுதந்திரத்தை அடைய முடியாது. புதிய எருசலேம் சபை பிள்ளைகளே மற்ற சபைகளாகிய ஸ்திரீகளால் கறைபடாதவர்கள்.

ஸ்திரீகளால கறைபடாதவர்கள் இவர்களே (வெளி 14:4) இந்த இடத்தில் கறைபடாத நிலை (not defiled) என்பது எதைக் குறிப்பிடுகிறது? கணவன் தன் மனைவியை அறிவது (உடலுறவு கொள்வது) கறை என்று தீர்ப்பது மூடத்தனமாகும். தேவன் ஒருவனையல்லவா படைத்தார், ஆவி அவரிடத்தில் பரிபூரணமாய் இருந்ததே. பின்னே ஏன் ஒருவனைப் படைத்தார்? தேவ பக்தியுள்ள சந்ததியைப் பெறும்படி தானே? (மல் 2:15) ஒரு புருஷன் மனைவியை சேர்தல் தீட்டுப்படுதல அல்லது கறைபடுதல் (Defiled) என்றால், கறைபடுதல் மூலமாக தேவ பக்தி உள்ள சந்ததி பிறக்குமோ? விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்

னது, விவாக மஞ்சம் அசுசிப்படாதிருப்பதாக (Undefiled), வேசிக்கள்ளரையும், விபச்சாரக் காரரையும் தேவன் நியாயந்தீர்ப்பார் (எபி 13:4) மனைவியோடே படுப்பது மஞ்சத்தை அசுசிப்படுத்தாது, வேறு ஸ்திரி அந்த இடத்தில் வந்தால் அப்போதே விவாக மஞ்சம் அசுசிப்படும், அவன் ஆக்கினைத் தீர்ப்படைவான். ஸ்திரீகளுக்குரிய வழிபாடு உண்டாயிருக்கும் போது அவள் பரிசுத்த ஸ்தலத்துக்கு வரக்கூடாது (லேவி 15:19, 12:2) என்று பிரமாணம் இருப்பதால் அந்த வழிபாடு வருவது இழிநிலை, தீட்டு என்று சொல்வாயோ? அது இறைவனின் அமைப்பு. அதேப் போல் பரிசுத்த அப்பத்தை புசிக்குமுன் மூன்று நாள் மனைவியுடன் சேராமலிருக்க வேண்டும் என்பது தேவ பிரமாணம். ஜெப உபவாச வேளைகளில் பிரிந்திருக்க வேண்டும் (I கொரி 7:5) என்றிருப்பதால், மனைவியுடன் சேரும் செயல் அசுத்தம் என்று தீர்க்க துணிவாயோ? தேவன் ஒன்றைப் படைத்தால் அது நல்லதே.

கறைபடுதல் என்றால் என்ன அர்த்தம்? விக்கிரக ஆராதனை செய்யக்கூடாது என்பது கட்டளை. கட்டளையை மீறி விக்கிரக ஆராதனை செய்வது கறைபடுதலாகும் (defiled) (எசே 23:7), கர்த்தரிடம் பெற்றுக் கொண்ட கற்பனைகளை கைக் கொள்ளாமலிருப்பதே அசுசிபடலாகும் (Defiled) (வெளி 3:3,4). Blessed are the undefiled in the way who walk in the Law of the Lord (Ps 119:1). கர்த்தருடைய கற்பனையின்படி நடக்கிறவர்களே கறைபடாதவர்கள் (சங் 119:1)

விபச்சாரம் செய்யாதே என்ற பிரமாணத்தை அறிந்து மீறுதல் செய்தவன் கறைபட்டவன். இந்தப் பிரமாணத்தை அறியாமலிருந்தும் விபச்சாரம் செய்தவனும் கறைபட்டவனே. பாருங்கள் இந்நாட்களிலே திரளான சபைகளைக் காண்கிறோம். ஒரு சபையில் விசுவாசித்தால் போதும் பரலோகம். இன்னொரு சபையில் ஞானஸ்நானம் பெற்றால் போதும் பரலோகம், இன்னொரு சபையில் பரிசுத்த ஆவி (அந்நிய பாஷை அடையாளத்துடன்) பெற்றால் போதும் பரலோகம். இன்னொரு சபையில் வாங்கினதைத் திருப்பிக் கொடுத்தால் போதும் பரலோகம். இன்னொரு சபையில் தவறாது பூசை கண்டால் பரலோகம். இன்னொரு சபையில் மரித்த பின் பாதிரி வந்து ஜெபித்தால் போதும் பரலோகம். பிரியரே இது என்ன? ஆவியானவர் ஒருவரே; சபைக்கொரு உபதேசத்தையா அவர் கொடுத்து கலகமுண்டாக்குவார்? எல்லா சபையாரும் ஒரே ஆவியானவரிடம் உபதேசம் பெற்றிருந்தால் எல்லாருக்கும் ஒரு உபதேசமல்லவா இருக்கும். சபைக்கு சபை உபதேசம் வித்தியாசப்படுவதால் அவைகள் பரிசுத்தாவியால் கொடுக்கப்பட்ட உபதேசமல்ல.

தேவனுடைய சரீரம் ஒன்றே (சபை) (எபே 4:4) அவருடைய உபதேசத்தை அறியாதிருக்கிறவர்கள் அல்லது தப்பாக விளங்கிக் கொண்டவர்கள், தேவனுடைய நன்மையும் பரிபூரணமான சித்தத்தை செய்ய முடியாது. இவர்கள் தான் கறைபட்டவர்கள். கிறிஸ்துவின் சிந்தையறியா சபைகள் பல உண்டே, இவைகளின் பிள்ளைகள் அந்த சபைகளாகிய ஸ்திரீகளால் கறைபட்டவர்கள் (கற்பனையை மீறினவர்கள்) கர்த்தருக்குப் போதிக்கத்தக்க அவருடைய சிந்தையை அறிந்தவன் யார்? எங்களுக்கோ கிறிஸ்துவின் சிந்தை உண்டாயிருக்கிறது (I கொரி 2:16) என்கிறார் பவுல். அவர் இறைவன் உள்ளத்திலுள்ளதை அறிந்து கொண்டபடியால் அவருடைய விருப்பம் முழுமையும் அறிகிற அறிவு பவுலுக்கு உண்டாயிருந்தது. அவர் அப்போஸ்தலன். நீதிபரரை தரிசித்து, அவர் திருவாய் மொழியைக் கேட்டு அவர் திருவுளச் சித்தத்தை அறியும்படி அவர் இறைவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர் (அப் 22:14). இந்த அப்போஸ்தலன் கிறிஸ்துவுக்கேற்ப திருச்சபையை ஆயத்தப்படுத்துகிறார். கற்புள்ள கன்னிகையாக ஆயத்தப்படுத்துகிறார் (II கொரி 11:2). இவர்கள எல்லா உபதேசத்தையும் எல்லா அறிவையும், எல்லா வரங்களையுமுடையவர்கள் (I கொரி 1:5,7). பவுல் மூலமாய் தேவன் கொடுத்த உபதேசத்துக்கு மாறுபட்டு நடப்பது கற்பு குலைந்த நிலையாகும் (II கொரி 11:3).

ஸ்திரீகளால் கறைபடாதவர்கள் இவர்களே (வெளி 14:4) ஸ்திரீகள் என்பது இயேசு

கிறிஸ்துவின் ஒரே சரீரமாகிய மெய்யான திருச்சபைக்கு, அப்பாற்பட்ட பற்பல சபைகளாகும். அந்த சபைகளின் அல்லது அவர்களுடைய தவறான உபதேசங்களுக்குட்படாதவர்களே, ஸ்திரீகளால் கறைபடாதவர்கள். இதுதான் அதன் அர்த்தம். விவாகம் பண்ணுவதும் ஒன்றுமில்லை, விவாகம் பண்ணாமலிருப்பதும் ஒன்றுமில்லை, விருத்த சேதவம் பண்ணுவதும் ஒன்றுமில்லை- பண்ணாமலிருப்பதும் ஒன்றுமில்லை. ஒன்றுமில்லாதிருந்தும் தன்னை ஒரு பொருட்டென்று எண்ணுகிறவன் தன்னைத் தான் வஞ்சிக்கிறான். விவாகம் பண்ணிவவன் கறைபட்டவன் என்பது சாத்தாவின் போதனையாகும். எச்சரிக்கையாயிருங்கள். ஸ்திரீயினிடம் பிறத்தவன் பரிசுத்தமாயிருப்பது எப்படி? உபதேசத்தால். நான் உங்களுக்குச் சொன்ன உபதேசத்தினாலே நீங்கள் இப்பொழுதே பரிசுத்தமாயிருக்கிறீர்கள (யோவா 15:3). தவறான உபதேசத்தால் தீட்டுப்படாதிருங்கள். மனைவியே, நீ உன் புருஷனுக்கு செய்ய வேண்டிய கடமையைச் செய் (Iகொரி 7:3,4,10). புருஷனே நீ உன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய் (I கொரி 7:3, 4). இல்லையென்றால் நீ உபதேசத்தை மீறியவ(ன்)ள். நீ தீட்டுப்பட்டவள். மெய்யான ஒரே சபைக்கு வெளியே உள்ள சபைகளின் உபதேசத்தால் நீ உன்னை கறைபடுத்தாதே. தீட்டுப்படுத்தாதே.

ஸ்திரீகளால் தங்களைக் கறைபடுத்தாதவர்கள் இவர்களே (Rev. 14:4).

''சர்ப்பமானது தன்னுடைய தந்திரத்தினால் ஏவாளை வஞ்சித்ததுபோல் உங்கள் மனதும் கிறிஸ்துவைப் பற்றிய உண்மையினின்று விலகும்படி கெடுக்கப்படுமோவென்று பயந்திருக்கிறேன்''

(II கொரி 11:3)

# முகம்மது மார்க்கத்தை அறிந்து கொள்ளுதல்

(தொடர்ச்சி)

மகம்மதுவுக்கு பாத்திமா என்கிற ஒரு குமாரத்தி இருந்தாள். அவள் அலி என்கிறவருக்கு வாழ்க்கைப்பட்டாள். மகம்மது மரித்துப் போன பின்பு இவன் அவனுடைய சிங்காசனத்துக்குரியவனாயிருந்தும் தள்ளப்பட்டு அபுபக்கர் என்ற மகம்மதின் மாமனார் சிம்மாசனத்தில் ஏறி 'கலிப்' (Khalif) என்ற ராஜாவானான். அபுபக்கர் வெகு சீக்கிரத்தில் கொலை செய்யப்பட்டான். அவனுக்குப் பின்''ஓத்மா'' என்பவன் கலிப் (Khalif) ஆகி அவனும் கொலை செய்யப்பட்டான். பின்பு மகம்மதின் மருமகன் 'அலி' அந்தப் பட்டத்தை அடைந்தும் கொஞ்சக் காலத்தில் மசூதியிலே கொலை செய்யப்பட்டான். அவனுடைய குமாரர்களாகிய அசேன், உசேன் என்பவர்களும் சதி செய்யப்பட்டு கொலை செய்யப்பட்டார்கள். இதனால் மகம்மது மார்க்கத்தார் இரண்டு மார்க்கமாகப் பிரிந்து போனார்கள்.

1. சையீ
2. சன்னி

இவர்களுக்குள்ளே தீரா பகையும் போருமுண்டு. சையீகளுக்குள்ளே ரோப்பீகளென்கிற ஞானிகளுண்டு. இவர்கள் ஏறக்குறைய சைவ ஞானிகளைப் போல சோரஸ்சர்களுடைய கொள்கைகளை கொரானுடன் கலந்து எல்லா சமயங்களையும் (மதங்களையும்) சம்மதிக்கிறார்கள். இந்திய தேசத்திலுள்ள லப்பைகளுக்குள்ளேயும் அப்படிப்பட்டவர்கள் உண்டு. சன்னிகள் கொரான் மாத்திரமல்ல மகம்மது சொன்ன காரியங்களையெல்லாம் எழுதிக் கொண்டு அந்தப் பாரம்பரிய நியாயங்களின்படியும் நடக்க வேண்டுமென்கிறார்கள்.

மகம்மது யூதருடைய பாரம்பரிய நியாயப்பிரமாண புஸ்தகங்களையும் கிறிஸ்தவ மத

தள்ளுபடியாகமங்களையும் வாங்கி அவைகளிலுள்ள தப்பிதங்களையெல்லாம் தன் கொராவில் சேர்த்துக் கொண்டான். ''பர்னபா சுவிஷேசம்'' என்ற ஒரு தள்ளுபடி ஆகமத்திலிருக்கிறபடி. இயேசுவானவர் மாசில்லாமல் உற்பத்தியானாரென்றும், அற்புதங்களைச் செய்தாரென்றும் உண்மையாய் சொன்னாலும், இயேசுவானவர் சிறு வயதாயிருக்கும் பொழுது மண் குருவிகளைச் செய்து அவைகளுக்கு உயிரைக் கொடுத்தாரென்றும், சிலுவையில் இயேசுவானவர் மரணம் அடையாமல் யூதர்கள் யூதாஸ்காரியோத்தைப் பிடித்து அவரென்று நினைத்து சிலுவையில் அறைந்தார்களென்று சொல்லியிருக்கிறது.

மகம்மது, கொரான் அல்லாவினால் அருளிச் செய்யப்பட்டதென்பதற்கு அதின் அலங்காரமான பாஷை நடையே திருஷ்டாந்தம் என்று சொன்னான். சிலவிடங்களில் அலங்காரமாயிருந்தாலும் அப்படியிருப்பதே அது மனுஷரால் உண்டானதென்பதற்கோர் அத்தாட்சியாயிருக்கிறது. ஞான காரியங்களில் பாஷை அல்ல கருத்தே முக்கியம். கொரானில் அநேகவிடங்களில் கூறியது கூறல், மிகைப்பட கூறல், மாறு கொளக் கூறல், மயங்க வைத்தல், மற்றொன்று விரித்தல், நின்று பயனின்மை முதலிய குற்றங்களை ஞானிகள் விஸ்தாரமாய்க் காணலாம். கொரானுக்கு விரோதமாய் அம்சாபின்வாதாத் என்பவன் கொரானிலுள்ள அலங்காரத்துக் கொத்ததாய் ஒரு நூலை எழுதினான். இந்தக் காரியத்தைக் குறித்து நாம் அப். பவுல் கொரிந்து சபைக்கு எழுதியிருக்கிறதை கவனிப்போம். ''சகோதரரே நான் உங்களிடத்தில் வந்த போது தேவனைப் பற்றிய சாட்சியை சிறந்த வசனிப் போடாவது, ஞானத்தோடாவது அறிவிக்கிறவனாக வரவில்லை. உங்கள் விசுவாசம் மனுஷருடைய ஞானத்திலல்ல தேவனுடைய பலத்தில் நிற்கும்படிக்கு என் பேச்சும் என் பிரசங்கமும் மனுஷ ஞானத்துக்குரிய நயவசனிப்புள்ளதாயிராமல் ஆவியினாலும், பெலத்தினாலும் உறுதிப்படுத்தப்பட்டதாயிருந்தது (I கொரி 2:1,4,5) என்று எழுதினார்.

அரபிப் பாஷையில் எழுதப்பட்ட கொரான் பார்ஸ், மலாய், உருது, லத்தீன், ஆங்கிலம், தமிழ் இன்னும் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது (Ref : Sales Koran and Qanoon-e-Islam).

கொரானில் அநேக தப்பறைகள் இருந்தாலும் சில உண்மைகளும் உண்டு. அந்த தன்மைகளெல்லாம் சத்திய வேதத்திலிருந்து (Holy Bible) எடுத்தவைகளே தேவன் ஒருவரேயுண்டென்பதும், விக்கிரகாராதனையாகாதென்றும், ஆத்துமா சாகாதென்பதும், உயிர்த்தெழுதலும் நியாயத் தீர்ப்பும் உண்டென்பதும், மோட்ஷமும் நரகமும் உண்டென்பதும், சம்மனசுகளும் (தேவ தூதர்கள்) தும்மனசுகளும் (பேய்கள்) உண்டென்றும், ஆபிரகாம், மோசே, இயேசுகிறிஸ்து முதலியவர்கள் மகாத்மாக்கள் என்பதும், மோசேயின் ஆகமங்களும், சங்கீத புஸ்தகங்களும், புதிய ஏற்பாடும், சத்திய வேதம்தான் என்பதும் கொரானிலுள்ள விசேஷித்த உண்மைகளே. ஆனால் இந்த திவ்வியமான உண்மைகளோடே பதினாயிரம் பொய்களும் கலந்திருக்கின்றன. 'அமிர்தத்தோடே சேர்ந்த விஷமும் கொல்லுமே'. கள்ளத் தீர்க்கத்தரிசிகள் எழும்பி அநேகரை வஞ்சிப்பார்கள் என்றும் (மத் 24:11) சத்தியத்துக்கு செவியை விலக்கி கட்டுக்கதைகளுக்குச் சாய்ந்து போகும் காலம் வரும் (II தீமோ 4:4) என்று வேதத்தில் சொல்லிருக்கிறபடியே தந்திரவாதியாகிய மகம்மது சூரிய ஒளியிருக்க கந்தைகளையெல்லாம் சேர்த்து ஒரு பந்தம் கட்டி அதிலே அருமையாய் கிடைத்த கொஞ்சம் நல்லெண்ணெயை விட்டு தன் வல்லமையாகிய பொறியினால் அதைக் கொழுத்தி வீர வைராக்கியத்தோடு வெளிச்சம் உண்டாக்கினான். ஆனால் அதை சமீபத்தில் போய் பார்க்கும் பொழுது புகையும், பகையும், நாற்றமும் தோன்றுவதேயொழிய ஒளியும் அதினால் உண்டாகும் இன்பமும் இல்லை.

சத்திய வேதத்தில் (Bible) தேவன் திரியேகராய் இருக்கிறாரென்ற மனோவாக்குக் கெட்டாத பரமராகிய உண்மையை சிற்றறிவாளனாகிய மகம்மது விசுவாசியாமல் ஒருவரும் அறியக் கூடாத தேவனுடையத் தன்மை இன்னதென்று தான் அறிந்தவன் போல தேவனே தன்னைக் குறித்து கிருபையாக நமக்கு

சத்திய வேதத்தில் (Bible) அருளிச் செய்திருக்கிற திவ்வியமான திரியேகத்துவ உபதேசத்தைத் தூஷணித்திருக்கிறான்.

இதுவுமன்றி "தேவன் ஒருவரே, தேவனுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே, எல்லாரையும் மீட்கும் பொருளாக தம்மை ஒப்புக் கொடுத்த மனுஷனாகிய கிறிஸ்து இயேசு அவரே" (I தீமோ 2:5) என்ற கிறிஸ்து மார்க்கத்தின் ஆதாரத்தையும் சற்குருவும், பாவநாசகரும், உலக ரட்சகருமான இயேசு பெருமான் ஒருவருக்கே தகும் கனத்தையும் மகம்மது தனக்குரியதாக அபகரித்துக் கொண்டு (தான்தானே ஏற்றுக் கொண்டு) மெய்யான அல்லாவொழிய வேறெல்லாமில்லை, மகம்மதே அவருடைய நபியாயிருக்கிறார் என்று துணிந்துரைத்தான்.

மகம்மதுவையும், இயேசு கிறிஸ்துவையும் ஒத்துப் பார்ப்போமானால் அவர்களிருவராலும் உண்டாக்கப்பட்ட வேதங்களில் எது சத்தியம் என்று விளங்கும். மகம்மது மஹ்ஹாவில் லௌகிக கனமும் பொருளும் சேனையுமுடையவனாயிருந்தான். இயேசு நாதரோ எருசலேமில் லௌகிக கனமும், பொருளும் இல்லாதவராய், தலைசாய்க்க இடமில்லாத ஏழையாயிருந்தார். மகம்மது மனப்பூர்வமாய் தன் அசுத்த இச்சைகளையெல்லாம் நிறைவேற்றி அவைகளெல்லாவற்றிற்கும் அல்லா கட்டளையுண்டு என்று பொய்யாய் போக்குச் சொன்னான். இயேசுநாதரோ பரிசுத்தமும், குற்றமில்லாதவரும், மாசற்றவரும், குறையற்றவரும், பாவிகளுக்கு விலகினவருமாயிருக்கிறார். "அவருடைய வாயிலே வஞ்சனை காணப்படவில்லை" ஒருவராலும் குற்றஞ்சாட்டப்படாதவராயிருந்தார் (எபி 7:26, I பேது 2:22; ஏசா 53:4). மகம்மது மூர்க்கனும், கொடூரனும், கொலைபாதகனுமாயிருந்தான். இயேசு நாதரோ இரக்கமும், சாந்தமும், சமாதானமுள்ளவராயிருந்தார். மகம்மது கள்ளத் தீர்க்கதரிசியாய் தோன்றுவானென்று வேதத்தில் அவனைக் குறித்து ஒரே ஒரு இடத்தில் குறிக்கப்பட்டிருக்கிறதேயொழிய (வெளி 9:1-11) அவனைக் குறித்து மற்றொரு தீர்க்கதரிசனமுமில்லை.

(தொடரும்)

"அந்த மிருகம் வலு சர்ப்பத்தைப் போல பேசினது" (வெளி 13:11)

---

## வேத பாடம் (தொடர்ச்சி)

**லேவி 12:1-4 :-** ஒரு ஸ்திரி கர்ப்பவதியாகி ஆண்பிள்ளை பெற்றால் சுத்திகரிக்கப்பட வேண்டிய பிரமாணமாவது. சூதக ஸ்திரி விலக்கமாயிருக்கும் நாட்களுக்குச் சரியாக 7 நாட்கள் விலக்கமாயிருப்பாள். பின்பு 33 நாட்கள் சுத்திகரிப்பின் நிலையிலிருந்து பின்பு சுத்திகரிப்புக்குரிய பலியிட்டு பரிசுத்த ஸ்தலத்திற்குள் வரலாம்.

**வச. 5 :-** ஒரு ஸ்திரி கர்ப்பவதியாகி பெண்பிள்ளையைப் பெற்றாளாகில் அவள் இரண்டு வாரம் சூதக ஸ்திரியைப்போல் தீட்டாயிருந்து பின்பு 66 நாட்கள் சுத்திகரிப்பின் நிலையிலேயிருந்து பின்பு பலியிட்டு பரிசுத்த ஸ்தலத்துக்குப் போகலாம்.

**வச. 6, 7 :** ஆண் பிள்ளையைப் பெற்றால் 40 நாட்கள் தீட்டாயிருப்பாள். அவள் பரிசுத்த ஸ்தலத்துக்குள் வரக் கூடாது. பெண்பிள்ளையைப் பெற்றால் 80 நாட்கள் தீட்டாயிருந்து பரிசுத்த ஸ்தலத்திற்குள் வரக்கூடாது.

ஆண்பிள்ளைக்கானாலும், பெண்பிள்ளைக்கானாலும் ஒரே விதமான பலியே செலுத்தப்பட வேண்டும்.

ஐசுவரியமுள்ள ஸ்திரீயானால் ஒரு வயதான ஆட்டுக்குட்டியை சர்வாங்க தகன பலியாக வும், ஒரு புறாக்குஞ்சியையாவது, ஒரு காட்டுப் புறாவையாவது பாவ நிவாரண பலியாகக் கொண்டு வரவேண்டும் (வச. 6, 7).

ஏழையான தாயானால் அவள் இரண்டு காட்டுப் புறாக்களையாவது அல்லது இரண்டு புறாக் குஞ்சுகளையாவது ஒன்றை சர்வாங்க தகன பலியாகவும், மற்றொன்றை பாவநிவாரண பலியாக வும் செலுத்தக் கொண்டு வர வேண்டும். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் தாயா கிய மரியாள் ஏழையாயிருந்தபடியினால் ஒரு ஜோடி காட்டுப் புறாவை அல்லது இரண்டு புறாக் குஞ்சுகளை பலியாக செலுத்தக் கொண்டு போனார்கள் என்று வாசிக்கிறோம் (லூக் 2:22-24).

லேவி 12:8 :- ஆசாரியன் ஆட்டுக்குட்டியை அல்லது புறாக்குஞ்சுகளை பலியிட்டு அவர் களுக்குப் பாவநிவிர்த்தி செய்து சுத்திகரிக்க வேண்டும். ஒரு குழந்தை (ஆண் குழந்தையோ, பெண் குழந்தையோ) பிறக்கும்போது ஆதாம் செய்த பாவம் நினைவு கூறப்படுகிறது. ஆண் பிள்ளைக்குக் குறைந்த நாட்களும், பெண்பிள்ளைக்கு நீண்ட நாட்களும் சுத்திகரிப்பின் நிலையி லிருக்கும்படி கட்டளையிடப்பட்டிருக்கிறபடியினாலே முதலாவது ஆதாம் உருவாக்கப்பட்டான். இரண்டாவது ஸ்திரீ உருவாக்கப்பட்டாள். முதலாவது வஞ்சிக்கப்பட்டது ஏவாள், ஆதாமல்ல வென்று ஞாபகப்படுத்தப்படுகிறது (ஆதி 3-ம் அதி. 1 தீமோ 2:13-15). மேலும் இரத்தப் போக்கு உண்டாகிறதினிமித்தம் சரீர சம்பந்தப்பட்ட சுத்திகரிப்பு சுத்திகரிப்பிற்காகவும் சுத்தி கரிப்பின் நாட்கள்குறிப்பிடப்பட்டுள்ளது. ஆணில் பெண் அடக்கம். இதினிமித்தம் ஆண்க ளுக்கு நாட்கள் குறைவாயும், பெண்களுக்கு அதிக நாட்களும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## லேவி 13 அதி- குஷ்டரோகத்துக்கு அடுத்த பிரமாணம் :

லேவி 13:1 to 14:32:- ஒரு மனிதனுடைய சரீரத்தில் குஷ்டரோகம் போலிருக்கிற ஒரு தடிப்பாவது, இரண மாம்சமாவது உண்டாயிருந்தால் அவன் ஆசாரியனிடத்தில் கொண்டு வரப்படக்கடவன். ஆசாரியன் அவனை 7 நாள் அடைத்து வைத்து 7-ஆம் நாளில் அவனைப் பார்க்க வேண்டும். ரோகம் இருக்கிற இடத்தில் வெளிர்த்தும், மற்ற சரீரத்தைப் பார்க்கிலும் குழிந்துமிருந்தால் அது குஷ்டரோகம். அசறு தோலில் அதிகமாய் படர்ந்திருந்தாலும், இரண மாம்சம் காணப்பட்டாலும் அது குஷ்டரோகம், அது தீட்டு. அவன் தீட்டுள்ளவன் என்று ஆசாரியன் தீர்க்கக்கடவன்.

லேவி 13:18-28 :- சரீரத்தில் புண்ணுண்டாயிருந்து அது ஆறிப்போய் அவ்விடத்தில் வெள்ளைத் தடிப்பாவது, சிவப்புக் கலந்த வெள்ளை படராவது உண்டானால் அல்லது சரீரத்தில் தீ பட்டு வெந்து அந்த இடத்தில் வெள்ளை தடிப்பாவது, சிவப்புக் கலந்த படராவது உண்டா னால் அது குஷ்டம், அவன் தீட்டுள்ளவன். ஆசாரியன் 7 நாட்கள் அவனை அடைத்து வைத்து 7-ஆம் நாளில் அவனைப் பார்க்கக் கடவன். அப்பொழுது படரானது தோலில் பெருகாமல் அவ்விடத்திலே நின்றிருந்தால் அது சுட்டினால் உண்டான தழும்பு. ஆசாரியன் அவனை சுத்த முள்ளவன் என்று தீர்க்கக் கடவன். படராவது தோலில் அதிகமாய் படர்ந்திருந்தால் ஆசாரி யன் அவனை தீட்டுள்ளவன் என்று தீர்க்கக் கடவன்.

லேவி 13:29-37 :- புருஷனுக்கானாலும், ஸ்திரீக்கானாலும் தலையிலாவது, தாடியிலா வது சொறி உண்டானால் ஆசாரியன் அதைப் பார்த்து அவ்விடம் மற்ற இடத்தைப் பார்க்கிலும் பள்ளமும், மயிர் வெண்ணிறமும் மிருதுள்ளதுமாக இருக்கக் கண்டால் ஆசாரியன் அவனைத் தீட்டுள்ளவன் என்று தீர்க்கக் கடவன். ஆசாரியன் அந்த மனிதனை 7 நாள் அடைத்து வைத்து பின்பு பார்க்கக் கடவன். அந்த சொறி நீங்கி கருப்பு மயிர் முளைத்ததேயானால் சொறி நீங்கிற்று அவன் சுத்தமுள்ளவன்.

லேவி 13:38, 39 :- ஒரு புருஷனுக்காகிலும், ஸ்திரீக்காகிலும் அவர்கள் சரீரத்தின் மேல் வெள்ளைப் புள்ளிகள் உண்டாயிருந்தால் அல்லது சரீரத்திலே மங்கின வெள்ளைப் புள்ளிகள் இருந்தால் அது தோலிலே எழும்புகிற வெள்ளைத் தேமல். அவர்களைப் பார்த்து அவர்கள் சுத்தமுள்ளவர்கள் என்று ஆசாரியன் தீர்க்கக் கடவன்.

லேவி 13:40, 41:- ஒருவனுடைய தலைமயிர் உதிர்ந்து அவன் மொட்டையானால் அவன் சுத்தமாயிருக்கிறான். அவனுடைய முன்னந் தலைமயிர் உதிர்ந்தால் அவன் அரை மொட்டையன் அவன் சுத்தமாயிருக்கிறான்.

லேவி 13:42-44 :- மொட்டைத் தலையிலாவது, அரை மொட்டையிலாவது சிவப்புக் கலந்த வெண்மையான படர் உண்டானால் அது அதில் எழும்புகிற குஷ்டம். அவன் தீட்டுள்ளவன். ஆசாரியன் அவனைத் தீட்டுள்ளவன் என்று தீர்க்கக் கடவன்.

பொதுவாக ஒருவன் குஷ்டரோகி என்றோ அல்லது சுத்தமுள்ளவன் என்றோ, இன்னது பாவம், இன்னது பாவமில்லை என்றோ ஆசாரியன்தான தீர்க்க வேண்டும். பரிசுத்தமுள்ளதற்கும், பரிசுத்தமில்லாததற்கும், தீட்டில்லாததற்கும், தீட்டுள்ளதற்கும் உள்ள வித்தியாசத்தைக் காண்பிப்பது ஆசாரியனுடைய கடமை (லேவி 10:10; எசே 44:23). லேவியராகமம் புஸ்தகம் ஆசாரியர்களின் கையேடாகும். குஷ்டரோகி ஆரோக்கியமுள்ள ஜனங்களோடு கூட வாசம் பண்ணக் கூடாது.

லேவி 13:45-46 :- அந்த வியாதி உண்டாயிருக்கிற குஷ்டரோகி வஸ்திரங் கிழிந்தவனாயும், தன் தலையை மூடாதவனுமாயிருந்து பாளயத்திற்குப் புறம்பே தனியே குடியிருக்க வேண்டும். யாதாமொருவன் அந்தப் பக்கம் வந்தால் அவன் தாடியை மூடிக் கொண்டு தீட்டு, தீட்டு (பாவி, பாவி) என்று சத்தமிட வேண்டும்.

குஷ்டரோகம் பாவத்திற்கு அடையாளமாக இருக்கிறது. குஷ்டரோகம் முதலாவது கொஞ்சமாய் மறைவான இடத்தில் ஆரம்பமாகிறது. உடனே ஆசாரியனிடத்தில் காண்பித்து வைத்தியனிடத்தில் காண்பித்து அதை Treatment பண்ணி சுகப்படுத்தி விடலாம். அப்படி செய்யாவிட்டால் அது படர்ந்து வெளிப்பட ஆரம்பிக்கும். இவர்கள் நீள அங்கிகளைப் போட்டு மறைக்கலாம். ஆனால் அது மறைக்க முடியாத இடங்களில் வெளிப்படும். கால், கைகளின் விரல்கள், முகம் ஆகிய பாகங்களில் வெளிப்படும். இப்பொழுது மறைக்க முடியாது. கேவலமாக இருக்கும். எல்லாருக்கும் வெளிப்படையாய்த் தெரிய வரும். இப்பொழுது சுகமாக்குவதும் கஷ்டம். அப்படியே பாவமானது சிறிதாக இரகசியமாக ஆரம்பமாகிறது. ஆரம்பமாகும் பொழுதே குருவினிடத்தில் காண்பித்து பாவ அறிக்கை செய்து சுகப்படுத்திக் கொள்ள வேண்டும். மறைத்து வைத்துக் கொண்டு ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தால் உன்னுடைய இரட்சிப்பின் வஸ்திரம் கிழிந்துபோம். ஒரு நாள் வெளிப்படையாய் எல்லாரும் கேவலமாய் பேசும் அளவுக்கு உன் பாவம் வெளிப்படையாய் வெளிப்படும்.

குஷ்டரோகம் உள்ளவன் தீட்டு தீட்டு (பாவி பாவி) என்று சத்தமிட வேண்டும். ஆரோக்கியமுள்ளவர்களுடன் ஐக்கியமாயிருக்கக் கூடாது. இன்றைக்கு எவ்வளவோ பெரிய பாவிகள் பாவத்தை மறைத்துக் கொண்டு பரிசுத்தவான்கள் போல குருக்களாய், ஊழியர்களாய், விசுவாசிகளாய் நடித்துக் கொண்டிருக்கிறார்கள். இது தேவனுடைய கட்டளையை மீறி வாழ்வதாகும்.

(தொடரும்)

---

"ஒரு பாவி மிகுந்த நன்மையைக் கெடுப்பான்" (பிர 9:18).

---

# கிறிஸ்தவ திருமணம்

(தொடர்ச்சி)

## கண்களின் இச்சை

கிறிஸ்தவர்களாகிய நாம் ஆவியின்படி நடக்க வேண்டும். அத்துடன் நம்முடைய வாழ்க்கையை தேவன் ஒழுங்குபடுத்துவதற்கு நாம் தேவனோடு சேர்ந்து ஒத்துழைக்க வேண்டும். அப்பொழுதுதான் நிரந்தரமான வெற்றி வாழ்க்கையை நாம் அநுபவிக்க முடியும். நம்முடைய கண்களையும், காதுகளையும் சீராக வைக்க வேண்டும். இச்சையைத் தூண்டும் புத்தகங்களைப் படிப்பது, காட்சிகளைக் காண்பது, பேச்சுகளைக் கேட்பது ஆகியவற்றிலிருந்து நாம் விலகியிருப்பதின் மூலம் நாம் இதனைச் செய்யலாம். இல்லையென்றால் நம்முடைய எண்ணங்களை நாம் சீர்படுத்த முடியாது போய் விடும். நம் உடலையும், மனதையும் சீரான நிலைமையில் வைத்துக் கொள்வதின் மூலமே இச்சையான எண்ணங்களிலிருந்து நாம் விடுதலை பெறமுடியும். பெரிய பரிசுத்தவான்கள் வெற்றிபெறும் நோக்கத்தோடு தங்கள் உடலையும், மனதையும் அடக்கி ஆளுகிறார்கள். யோபு திருமணமானவர். பத்து குழந்தைகளுக்குத் தகப்பன். ஆனாலும் இச்சையான எண்ணங்களிலிருந்து விடுதலை பெற வேண்டுமானால் கண்களைக் காத்துக்கொள்ள வேண்டும் என்கிறார். ''என் கண்களோடு உடன்படிக்கை பண்ணின நான் ஒரு கன்னிகையின் மேல் நினைப்பாயிருப்பது எப்படி'' (யோபு 31:1). தன் கண்களைக் கட்டுப்பாட்டுக்குள் வைக்கப் பொருத்தனை பண்ணினார். பயங்கரமான அநேக சோதனைகள் கண்ணின் வழியாகத்தான் வந்து மனிதர்களைத் தாக்குகின்றன. சற்று கவலையீனமாக இருந்தால் கண்ணின் வழியாக ஒரு அசுத்தமான எண்ணமோ, காட்சியோ மனதிற்குள் நுழைய இடம் கொடுத்துவிட்டால் பிறகு அதை அங்கேயிருந்து அப்புறப்படுத்துவது மிகச் சிரமமாய்ப் போய்விடும்.

நம்முடைய வாழ்க்கையை சீர்படுத்த வேண்டுமா? காலையில் படுக்கையை விட்டு துள்ளி எழும்ப வேண்டும். அப்படிச் செய்யாமல் உறங்கி விழித்து படுக்கையில் வெகுநேரம் புரண்டு கொண்டிருப்போமானால் தீய எண்ணங்கள் மனதில் நிறைந்துவிட நாம் இடம் கொடுத்துவிடுவோம். விழிப்பு வந்தவுடனே எழுந்து முகம், கை, கால்களை கழுவி சிரம பரிகாரம் செய்து கொண்டு ஒரு டம்ளர் குளிர்ந்த தண்ணீர் அருந்திவிட்டு முழங்கால் படியிட்டு இறைவனிடத்தில் இறைஞ்ச வேண்டும். அன்றைய தின வாழ்க்கையை ஆசீர்வதித்து பாதுகாத்துத் தரும்படி இறைவனிடம் இறைஞ்சி ஒப்படைத்து விட்டு எழுந்து காலைக் கடன்களை அவசர வேலைகளை முடிக்க வேண்டும். குளித்து ஸ்நானம் செய்துவிட்டு வேதாகமத்தை திறந்து முறைப்படி வாசித்து தியானித்து நம்முடைய இருதயத்தை தேவனுடைய வார்த்தைகளால் நிரப்ப வேண்டும். இப்படி செய்து ஆவியானவரின் நடத்துதலின்படி ஜெபம் செய்ய வேண்டும். வேத வாக்கியங்களால் மனம் நிரம்பும் பொழுது அசுத்த எண்ணங்களுக்கு அங்கு இடமில்லை. தாவீது ராஜா சொல்லுகிறதையும் கேளுங்கள். ''நான் உமக்கு விரோதமாய் பாவம் செய்யாதபடிக்கு உமது வார்த்தைகளால் என் இருதயத்தை நிரப்பி வைத்தேன்'' அவைகள் என்னை பாவம் செய்யாதபடி காக்கின்றன (சங் 119:11; 1:2; 119:9).

இறைவன் நம்மை பாராட்ட வேண்டுமானால் நேர்மையானதும், தூய்மையானதும், அழகானதும் நன்மையுமான காரியங்களிலே உங்கள் மனதை செலுத்துங்கள் என்று வேதம் சொல்லுகின்றது. இந்தியாவுக்கு தெய்வீக வழியமாக வந்த ஒரு சிறந்த மிஷனரி ஹென்றி மார்ட்டின் (Hentry Martin) இப்படிச் சொல்லியுள்ளார். ஒரு பெண்ணைப்பற்றி இச்சையான எண்ணம் உண்டானால் அவர் ஜெபம் செய்வாராம்: ''கடவுளே இந்தப்பெண் தன் எண்ணத்திலும், சிந்தையிலும் தூய்மைப் பெற்று உமது மகிமைக்கும், சேவைக்கும் ஏற்றபடி பரிசுத்த ஆவியானவரின் ஆலயமாய் விளங்கட்டும்'' என்று. அதன்பிறகு கெட்ட எண்ணங்கள் அவர் உள்ளத்தில் தங்க முடியாதபடி ஓடி விடுமாம். அசுத்த எண்ணங்கள் வராதபடி மனதை சுத்தமாக வைப்பது அவ

வளவு எளிதான காரியம் இல்லை என்று சிலர் சொல்லலாம். அப்படியல்ல. எந்த எண்ணத்தையும் கிறிஸ்துவுக்கு சிறைபடுத்த, கீழ்ப்படுத்த முடியும் (II கொரி 10:5). ஜீவனுக்குப் போகிற வாசல் இடுக்கமும் வழி நெருக்கமுமாயிருந்தாலும் நாம் அதில் தொடர்ந்து செல்லும்போது பரிசுத்த ஆவியானவர் நம்மை பாதுகாப்பார். நமக்குப் பக்க பலமாயிருப்பார்.

ஆண்கள் பெண்களை வெறுக்கவும், பெண்கள் ஆண்களை வெறுக்கவும் வேண்டுமென்று நாம் சொல்லுகிறதில்லை. பிறபாலரின் அழகைக் கண்டு நாம் அதிசயப்படுகிறதில் ஒன்றுமில்லை. அது இயற்கையே. ஒரு அழகான முகத்தைப் பார்க்கும் போது தெய்வீக கலைஞரின் (கடவுள்) கைத்திறனை, அழகு ரசனையை அதிலே பார்த்து இறைவனுடைய ஞான செயலுக்காய் அவரைப் போற்ற வேண்டும். அவ்வளவுதான். ஆனால் வீழ்ச்சிப் பெற்ற மனித இனத்தைச் சேர்ந்த நாம் இதில் சற்று கவனக்குறைவாய் இருப்போமானால், மறுபடியும் திரும்பிப் பார்ப்போமானால் கொஞ்ச நேரத்தில், உடலழகை கவனிக்கத் தொடங்கி கடைசியில் இச்சைக்கு இடம்கொடுத்து விடுவோம். அழகைக் காண்பது பாவமாகாது. ஆனால் அதில் பாவம் செய்ய ஏதுவிருக்கிறது. இதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். இது கிறிஸ்தவ வளர்ச்சிக்கு ஓர் அடிப்படைத் தேவை. மேஜையில் வைக்கப்பட்டிருக்கும் ஒரு தங்கக் கட்டியை ஒரு குருடன் களவாடவில்லை என்பதற்காக அவனை யாரும் மெச்சவதில்லை. கண் பார்வையுள்ள ஒருவன் அதைப் பார்த்தும், அதை எடுக்க வேண்டும் என்ற உணர்ச்சிக்கு ஆளாகியும், சந்தர்ப்பம் இருந்தும் அதைக் களவு செய்யக்கூடாது என்று தீர்மானித்தால் அங்கே தான் நேர்மை இருக்கிறது. பரிசுத்தம் இருக்கிறது. தங்கத்தை கண்டறிந்த பிறகு அல்லது ஒரு பெண்ணின் அழகைப் பார்த்த பிறகு அதை தவறாகப் பயன்படுத்துவதே குற்றம் என்று சொல்லுகிறார் ஒரு பரிசுத்தவான். நம்முடைய கண்ணையும், மனதையும் வேறு பக்கம் திருப்பும்படி நமக்குப் போதித்து ஆவியானவர் நம்மை நடத்துகின்றார். நமக்குள் பேசும் பரிசுத்த ஆவியானவரின் குரலுக்கு உடனே செவி கொடுப்பதில்தான் நம்முடைய பரிசுத்த வாழ்க்கை இருக்கிறது. நான் ஜெயிக்க முடியாத சோதனைக்கு நான் எதிர்படாதபடி ஆண்டவரே என்னைப் பாதுகாத்துக் கொள்ளும் என்று ஜெபிப்போம் (மத் 6:13).

நாம் தினசரி வாழ்க்கையில் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருக்க பார்த்துக் கொள்ள வேண்டும். நம்முடைய மனமும், உடலும் ஏதாவது ஒரு வேலையில் நாள் முழுவதும் ஈடுபட்டுக் கொண்டிருப்பது நல்லது. வேலை செய்யாமல் சோம்பிக் கிடக்கும் உடலில்தான் பால் வேட்கை தலைதூக்க ஆரம்பிக்கும். கடுமையாக உழைப்பவர்களுக்கு இந்தப் பிரச்சினையே கிடையாது. மனிதன் பாடுபட்டு உழைக்க வேண்டுமென்பது இறைவனுடைய கட்டளை. நெற்றி வேர்வை நிலத்தில் விழ பாடுபட்டே சாப்பிட வேண்டும் என்று ஆண்டவர் ஆதாமுக்குச் சொன்னார் (ஆதி 3:19). நவீன வசதிகள் பெருகிவிட்டபடியினால் மனிதனுக்கு அதிகமான காலம் மிச்சமாகிறது. இதனால் இளைஞர்களுக்கு சோம்பியிருக்க அதிக நேரமுண்டு. இதனை பிசாசானவன் நன்கு பயன்படுத்துகிறான். ஆகவே ஓய்வு நேரங்களை பயனுள்ள ஆக்க வேலைகளில் செலவிட நாம் முயற்சிக்க வேண்டும்.

உடல் உழைப்பு, உளச் செயல், மனவெழுச்சி அனுபவம், பால் உறவு செயல்கள் ஆகிய நான்கு வழிகளில் நாம் நம்முடைய உடல் சக்தியை செலவிடலாம். முதல் மூன்று வழிகளில் நாம் உடற்சக்தியை செலவிடாவிட்டால் நான்காவது காரியத்தில் உடற் சக்தியை செலவிடுவதற்கான மிக நெருக்கடியான நிலைமை ஏற்படும். அங்ஙனம் நாம் பால் உறவு செயலில்ஈடுபடும்பொழுதுஉடலிலுள்ள நரம்பு சக்தியும், உடற்சக்தியும், ஆண்மையும் அதிக அளவில் விரயமாகிவிடுகின்றன. இது அடிக்கடி நிகழ்ந்தால் அவன் பெலவீனமாகி நிதானித்துத் தீர்மானிக்கும் சக்தியிழந்து தன்னுடைய கடமையை சுறுசுறுப்பாய் செய்ய முடியாதவனாய் போய்விடுவான். மிஞ்சிப் போனால் எல்லாத் தீமைக்கும் ஆளாவான். பால் உணர்ச்சி சிலருக்கு மந்தமாகவும், சிலருக்கு அதிகமாகவும் இருக்கும். அப்படிப்பட்டவர்கள் தங்களை மோசமான பிறவிகள் என்று நினைக்கத் தேவையில்லை. இவர்கள் ஆக்க வேலைக்கான சக்தியை மிகுதியாய் உடையவர்

கள் என்றே அர்த்தம். இவர்கள் அச்சக்தியை அடக்கி ஆண்டு நல்ல பயனுள்ள வழிகளில் பயன்படுத்த வேண்டும். நாம் எப்போதும் இச்சைகளை எதிர்த்துப் போர் செய்து கொண்டிருந்தால் மட்டும் போதாது. நம்மிடமுள்ள அளவுக்கு அதிகமான உடற்சக்திகளை (பால் உணர்வு எண்ணங்களுக்கும், செயல்களுக்கும் தூண்டுகிற சக்திகளை) நம்முடைய உடன் வாழும் மனிதர்களுக்குப் பயன்படும் வகையிலும், கடவுள் மகிமைப்படும் வகையிலும் நல்ல பணிகளில் நாம் செலவு செய்ய வேண்டுமென்றே இறைவன் விரும்புகின்றார். கிறிஸ்தவ இளைஞர்களுக்கு :-

(தொடரும்)

''ஏனெனில் மாம்சத்தின் இச்சையும், கண்களின் இச்சையும், ஜீவனத்தின் பெருமையாகிய உலகத்திலுள்ளவைகளெல்லாம் பிதாவினாலுண்டானவைகளல்ல. அவைகள் உலகத்தினாலுண்டானவைகள்'' (I யோ 2:16)

# சேராபீன்கள் (தொடர்ச்சி)



அந்த சேராபீன் ஜெபம் என்னும் செட்டையினால் பறந்து கொண்டிருந்தான் :-

''என் விண்ணப்பம் உமக்கு முன்பாகத் தூபமாகவும், என் கையெடுப்பு அந்திப் பலியாகவும் இருக்கக் கடவது'' (சங் 141:2). வானங்களும் வானாதி வானங்களும் அவரைக் கொள்ளக் கூடாதிருக்க அவருக்கு ஆலயத்தைக் கட்ட வல்லவன் யார்? அவருடைய சந்நிதியில் தூபங் காட்டுகிறதற்கேயொழிய வேறே முகாந்தரமாய் அவருக்கு ஆலயங் கட்டுகிறதற்கு நான் எம்மாத்திரம் (II நாளா 2:6). தேவ ஜனங்கள் கூடிவரும் இடமாகிய தேவனுடைய வீடாகிய ஆலயமானாலும் சரி, அல்லது தேவனுடைய ஆவியானவர் வசமாயிருக்கும் அவருடைய வீடாகிய நாம் ஆனாலும் சரி தூபங்காட்டுகிறதற்கேயொழிய வேறொன்றுக்கும் கட்டவில்லை என்ற சாலமோன் ராஜாவுடைய வார்த்தையின்படி நாம் அவருடைய வாசஸ்தலமாக தெரிந்து கொள்ளப்பட்டிருப்பதே ஜெபமாகிய தூபம் எப்பொழுதும் நம்மிலிருந்து தேவனை நோக்கி ஏறெடுக்கப்பட வேண்டும் என்பதற்காகவே என்று நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். ஆகவேதான் இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள், ஸ்தோத்திரத்துடன் ஜெபத்தில் விழித்திருங்கள் (கொலோ 4:2) என்று வேதம் சொல்லுகின்றது.

பரிசுத்தமான கிறிஸ்தவ ஜீவியத்திற்கும், அன்றாட வாழ்க்கையில் உண்டாகும் சகலவித மான சோதனைகளை ஜெயித்து வெற்றியுள்ள வாழ்வு வாழவும் ஜெபம் மிகவும் அவசியமாகும். கிறிஸ்தவ ஜீவியத்தின் வெற்றி ஜெபத்தையே சார்ந்திருக்கிறது என்றால் மிகையாகாது. ஜெபிக்கா விட்டால் என்னால் ஜெய ஜீவியம் செய்ய முடியாதா? என்னால் கிறிஸ்துவில் நிலைத்திருக்க முடியாதா? என்று ஒருவேளை நீங்கள் கேட்கலாம். இதைக் கவனியுங்கள், நாம் இடைவிடாமல் சுவாசிக்கிறோம், அப்படி சுவாசிக்காவிட்டால் மரித்துப் போவோம். அப்படியே ஜெபிக்காவிட்டால் மரித்துப் போவோம் (ஆத்தும ஜீவனை இழந்து விடுவோம்) பாவத்துக்குள் மரிப்போம் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும்.

உலக ஐசுவரியத்தைப் பெற வாஞ்சிக்கும் ஒரு மனிதன் எப்படியெல்லாம் பிரயாசப் படுகிறான். பாருங்கள் : ஏன் அவன் அப்படி பிரயாசப்படுகிறான்? தன்னுடைய ஜீவியத் திற்கு அது அவசியம் என்று அவன் உணர்ந்ததி னால்தானே! ஐசுவரியத்தையும் சம்பாதிக்க என்னென்ன வழிகள் உண்டோ அவைகள் எல்லாவற்றிலும் கருத்தாக அவன் தன் மனதை செலுத்துகிறான். ஏனோதானோவென்று அவன் செயல்படவில்லை. ஏனோதானோவென்று செயல்பட்டால் தன்னால் ஒன்றும் சம்பாதிக்க முடியாது என்று அவன் அறிந்திருக்கிறான். ஒழிந்துபோகும் உலக ஐசுவரியத்தைத் தேடும் ஒருவன் இவ்விதமாக செயல்பட்டால் ஆவிக் குரிய ஐசுவரியத்தை நாடும் நாம் இனி எவ்வ ளவு கருத்தாக செயல்பட வேண்டும். நாம் பிச்சைக்காரர்களாகவும், ஒட்டாண்டிகளாக வும் இருக்க வேண்டுமென்று விரும்புகிற சாத் தானானவன் நாம் ஜெபிக்காதபடி தடை செய் கிறான் என்பதை நீங்கள் நன்றாய் அறிந்து கொள்ள வேண்டும். நாம் ஜெபிக்காவிட்டால் கொடிய தரித்திரராயிருப்போம். உங்களு டைய ஆவிக்குரிய தரித்திரம் நீங்க வேண்டு மானால் நீங்கள் ஜெபியுங்கள். நீங்கள் ஜெபம் ஏறெடுக்கும்படியே தேவன் உங்களைத்தெரிந்து கொண்டிருக்கிறார் என்பதை அறிவீர்களா!

ஜெபம் என்பது பொதுவாக ஒரு காரி யத்தைக் குறித்து திரும்பத் திரும்ப தேவ சமு கத்தில் சொல்லிக் கொண்டிருப்பதுதான் என் றாலும் இப்படி நாம் சொல்லிக் கொண்டிருப் பதின் மூலமாக நாம் தேவ சமுகத்தை நாடு கிறவர்களாகவும், தேவனைச் சார்ந்திருக்கிற வர்களாகவும், தேவனை நம்பி அவரைப்பற்றிக் கொண்டிருக்கிறவர்களாகவும், அவரோடு ஐக் கியமாய் உறவாடுகிறவர்களாகவும் இருப் போம்.

ஜெபியாதவனுக்கு இறைவனோடு உறவு மில்லை, ஐக்கியமுமில்லை. ஆகவே இவனுக்கு தேவ ஆலோசனையுமில்லை. தேவ நடத்துத லும் இல்லை. இவன் மனம் போல போக்கில் நடந்து மாறுபாடானவைகளைச் செய்து தேவ னற்றவனாகி விடுகிறான். இதை அவன் உணருவ தில்லை. ஆகவே தேவ ஆலோசனையையும், தேவ நடத்துதலையும் பெற ஜெபியுங்கள். அப். பேதுரு ஜெபித்தார். தேவன் அவருக்கு ஒரு தரிசனமருளி அவர் நடக்க வேண்டிய பாதையை அவருக்குக் காண்பித்தார் (அப். 10:9-16). எந்த மனிதனும் தீட்டுள்ளவன் என்றும் அசுத்தன் என்றும் அவர் சொல்லாத படிக்கு தேவன் அவருக்குக் காண்பித்தார் (அப் 10:28). மனிதனை தேவனோடு ஒன்ற வைப்பது ஜெபம். ஜெபிக்கும் மனிதன் தேவ சாயலைக் காணுகிறான். அந்த ஒளியின் மகிமை யால் அந்தச் சாயலாகவே அவனும் மாறிவிடு கிறான் (யாத் 34:28-35).

நான் அவரை எங்கே கண்டு சந்திக்கலா மென்று யோபு சொன்னார் (யோபு 23:3-5). நாம் தேவனைக் கண்டு சந்திக்குமிடம் ஜெபம் என்றும் நாம் தேவனோடு உறவாடி அவர் சொல்லுவதை உணருமிடமும் ஜெபமே என் றும் அறிந்து கொள்வீர்களாக. அதுமட்டு மல்ல, ஜெபிக்கும் மனிதன் தேவனையே பற்றிக் கொள்ளுகிறான். ஆவபடியால் அப்படிப்பட்ட மனிதன் சொல்லுவதை தேவனும் அப்படியே கேட்கிறவராயிருக்கிறாரென்பதை மோசேயின் ஜீவியத்தில் நாம் காணலாம் (யாத் 32:1-16). ஒரு மனிதனின் விண்ணப்பம் ஒரு ஜனத்திரளை பெரிய அழிவினின்று இரட்சித்தது. ஒரு மனித னின் கெஞ்சுதல் ஒரு ஜாதியின் அழிவை தடுத்து நிறுத்தியது. எலியா என்னும் ஒரு மனிதரின் ஜெபமும், கிரியையும் இஸ்ரவேல் ஜனங்களை விக்கிரக ஆராதனையினின்று திருப் பியது (I ராஜா 18:29-31). அவர் ஜெபித்து வானத்தை அடைத்தார். பின்பு மழை பொழி யும்படிச் செய்தார் (யாக் 5:17, 18). நாமும் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபித்தால் அவை களையெல்லாம் பெறுவோம் (மத் 21:22; மாற் 11:23, 24). அந்த சேராபீனும் விசுவாசம், ஜெபம் என்னும் இரண்டு செட்டைகளால் பறந்து கொண்டிருந்தான், ஆவியினால் நிரம்பி ஜெபிக்க வேண்டும். ஜெபத்தில் பரிசுத்த ஆவியானவருடைய உதவியை நாடவேண்டும் (ரோம 8:26).

சோதனைக்குட்பட்டு வீழ்ச்சியடைகிறவர் கள் ஜெபிக்காததினால்தான் வீழ்ச்சியடை கிறார்கள். நீங்கள் சோதனைக்குட்படாத படிக்கு விழித்திருந்து ஜெபம் பண்ணுங்கள். அப். பவுல் பிரதானமாய் சொல்லுகிற புத்தி

மதி ஜெபம் பண்ணுங்கள் என்பதே (I தீமோ 2:1-4). ஆகவே ஜெபியுங்கள்.

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்! 26-8-1986 அன்று காலையில் நான் உபவாசித்து ஜெபித்துக் கொண்டிருக்கும்போது தேவனாகிய கர்த்தர் இப்பிரத்தியட்சமான தரிசனத்தை அருளினார். உன்னதத்தில் ஒரு சேராபீனைக் கண்டேன். அவனை உற்றுப் பார்க்கும்படி உணர்த்தப்பட்டேன். அப்பொழுது அவனுடைய முகம் "தேவ நீதி" "பரிசுத்தம்" என்னும் இரண்டு செட்டைகளால் மூடப்பட்டிருந்தது. அவனுடைய இரண்டு கால்களும் "கர்த்தருக்குப் பயப்படும் பயம்", "கீழ்ப்படிதல்" என்னும் இரண்டு செட்டைகளால் மூடப்பட்டிருந்தன. அவன் "விசுவாசம்" "ஜெபம்" என்னும் இரண்டு செட்டைகளால் பறந்து கொண்டிருந்தான். சேராபீன்கள் தேவனைத் துதித்தார்கள் (ஏசா 6:1-4). நாமும் அப்படியே செய்வோம். தேவன் உங்களை ஆசீர்வதிப்பாராக!

(முற்றிற்று)

"இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள்" (I தெச 5:17)

---

சாட்சி

# ஒரு விசுவாசியின் சாட்சி

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். இயேசு கிறிஸ்துவின் விலையேறப் பெற்ற இரத்தத்தினால் மீட்கப்பட்ட அடியேன் ஓர் நாள் என் கைகளினால் எவ்வளவு பிரயாசப்பட்டாலும் குடும்பத்திற்கு வருவாய் குறைச்சலாகவே இருக்கிறதே. என்ன செய்வது, எப்படி குடும்ப காரியங்களை சமாளிப்பது என்றும் பலவாறு மனக்கலக்கமுடையவனாக காணப்பட்டேன். பின்பு அன்றிரவு தினமும் போல் கர்த்தருடைய வேதத்தை வாசித்து ஜெபித்து நித்திரைக்கு சென்றேன். அப்போது கர்த்தர் ஒரு காட்சி தரிசனத்தின் மூலம் அறிவை உணர்த்தினார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

## தரிசனம்

ஓர் இடத்தில் சபை கூடியிருக்கிறது. தலைமை மேய்ப்பர் செய்தி கொடுக்கிறார்கள். அதை நானும் கவனமாக கேட்டுக் கொண்டிருக்கிறேன். என் கையில் பரிசுத்த வேதாகமமும் இருக்கிறது. தலைமை மேய்ப்பர் ஐயா போதனைக்காக எடுத்து வாசிக்கும்படி கூறும் பிரசங்க வசனம்: I கொரி. 6:20. ஆதியாகமம் முதல்வெளிப்படுத்தின விசேஷம்வரை தாராளமாக எடுத்து வாசிக்கும் அனுபவம் எனக்கு உண்டு. ஆனால் அந்த நேரம் பல முறை நான் அங்குமிங்கும் தேடுகிறேன். என் கண்களுக்கு அந்த வசனமே தெரியவில்லை. மீண்டும் தேடிக் கொண்டே இருக்கிறேன். தலைமை மேய்ப்பரும் அந்த வசனத்தையே திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டே நிற்கிறார்கள். நான் வசனத்தை எடுக்க முடியாமல் பரிசுத்த வேதாகமத்தை மூடி வைத்தேன். பின்பு தான் தரிசனம் என்பதை உணர்ந்தேன். உடனே பரிசுத்த வேதாகமத்திலிருந்து அந்த வசனத்தை எடுத்து வாசித்தேன்.

வசனம்: "கிரயத்துக்குக் கொள்ளப்பட்டீர்களே; ஆகையால் தேவனுக்கு உடையவைகளாகிய உங்கள் சரீரத்தினாலும், உங்கள் ஆவியினாலும் தேவனை மகிமைப்படுத்துங்கள்" (I கொரி. 6:20). கர்த்தருடைய பரிசுத்த ஆவியானவர் இதிலிருந்து அடியேனுக்கு போதித்தார். பரிசுத்த வேதாகமத்தில் அவ்வசனத்தை காண முடியாத நிலை. அந்த வசனத்தின் சாரத்தை அறிந்து அனுபவிக்க முடியாமல் ஆத்மீகக் கண்பார்வையற்றிருக்கிற தாகவும் அறிவித்தார். ஒரு மனிதன் பணம் கொடுத்து ஒரு மிருகத்தை வாங்கினாலும் அதற்கு தேவையான நேரம் ஆகாரமும், தண்ணீரும் கொடுக்க மறப்பதில்லை. இப்படியிருக்க

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

**எக்காளசத்தம் 89 - May 1991**

"புதிய எருசலேம் சபை"

வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத் 16:18) நான் உங்களுக்கு கட்டளை யிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத் 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப் 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். உலகம் ரொம்ப கெட்டுப் போய் விட்டது. அப்படியே கிறிஸ்தவ உலகத்திலும் சீர்கேடு மிகுந்துள்ளது. ஆவிக்குரிய மண்டலத்திலுள்ள அநேகர் உடன்படிக்கையை மீறவும், தாங்கள் தேவ சமூகத்திலேயும் தேவ மனிதர்களுக்கு முன்பாகவும் கொடுத்த வாக்கை மீறி நடக்கவும் எந்த ஒரு சத்தியத்துக்கும் கட்டுப்படாத ஒருமுறையாக நடந்து கொள்ள விரும்புகிறார்கள். அவரவருடைய விருப்பத்தின் பிரகாரம் விட்டுக் கொடுத்தால் அவர்கள் கடவுளுடைய ஊழியம் செய்வார்கள். இல்லையென்றால் கடவுளுடைய ஊழியத்தையும் உதாசீனம் செய்துவிட்டு பாதாளத்திற்குப் போக ஆயத்தமாக இருக்கிறார்கள். இவ்விதமாக உடன்படிக்கையை மீறுகிறவர்களாக இருப்பார்கள் என்று II தீமோ. 3-ம் அதிகாரத்தில் நாம் பார்க்கிற கடைசிக்கால, கொடியகால சம்பவங்களில் எழுதப்பட்டிருக்கிறது. மேலும் கிறிஸ்தவர்கள் தங்களுக்கு வாக்கு நாணயம் அவசியமென்று உணர்ந்து நடக்க வேண்டும். ஆணையிட்டதில தனக்கு நஷ்டம வந்தாலும தவறாதவனாய் ஆணையை நிறைவேற்றுகிறவனாய் இருக்கின்றவனே கர்த்தருடைய பரிசுத்த பர்வதத்தில் வாசம் பண்ணுவான் என்று சங்கீதம் 15ல் காணப்படுகிறது. பாவத்தினுடைய பட்டியலில் இரட்சிக்கப்படாத மக்களிலே காணப்படுகிற உணர்வில்லாதவர்களுமாய், உடன்படிக்கையை மீறுகிறவர்களுமாய், சுபாவ அன்பில்லாதவர்களுமாய், இணக்கமில்லாதவர்களுமாய், இரக்கமில்லாதவர்களுமாய் இருப்பார்கள். இப்படிப்பட்டவைகளை செய்கிறவர்கள் மரணத்திற்கு பாத்திரவான்களாய் இருக்கிறார்கள் என்று தேவன் தீர்மானித்த நீதியான தீர்ப்பை அவர்கள் அறிந்திருந்தும் அவைகளைத் தாங்களே செய்கிறதுமல்லாமல் அவைகளைச் செய்கிற மற்றவர்களுக்குப் பிரியப்படுகிறவர்களுமாய் இருக்கிறார்கள் என்று ரோமர் முதலாம் அதிகாரத்தில் காணப்படுகிற பாவமுடையவர்களாக, அந்தப் பாவத்திலே மறுபடியும் சிக்கிக் கொள்கிறவர்களாக தேவ ஜனங்கள் இராதபடி கவனமாய் இருக்க வேண்டும். தேவன் எல்லாவற்றையும் பார்க்கிறார் எல்லாவற்றையும் சரியாய்ச் செய்வார். நாம் நீதியாக இருப்போமென்றால் நம்மை யாரும் குற்றஞ்சாட்டவோ யாரும் எதுவும் செய்வதோ பலிக்காது. தேவசித்தமே ஆகும். கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம. கிறிஸ்தவ வாழ்க்கையாக இருக்கட்டும், ஊழியமாக இருக்கட்டும், நாம் கொடுத்த வாக்கை நிறைவேற்றி சத்தியத்துக்கு கட்டுப்பட்டிருப்பவனே தேவனால் ஆசீர்வதிக்கப்படுவான். அவன் தேவனுக்குப் பயப்படுகிறவன் என்பதும், உண்மையுள்ளவன் என்பதும் நிரூபிக்கப்படும். கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம. ஆனபடியினால் ஒருவரோடொருவர் உண்மை பேசுவோம், கொடுத்த வாக்கை நிறைவேற்றுவோம், நாணயமுள்ளவர்களாக நடந்து கொள்வோம, சத்தியத்துக்கு கட்டுப்பட்டு இருப்போம், நஷ்டம் வந்தாலும் ஆணையில் மாறாதிருப்போம். கர்த்தர் நம்மெல்லாரையும் ஆசீர்வதித்து தம்முடைய நன்மையினால் நிரப்புவார். ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR.)

# கர்த்தருக்குப் பயப்படுகிற பயம்

இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள் பல. நீங்களெல்லாரும் கர்த்தருக்குப் பிரியமானவர்களாய், ஆண்டவருடைய சித்தத்தைச் செய்கிறவர்களாய் தேவனுக்குப் பயந்து ஜீவிக்க வேண்டுமென்று இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே நான் கேட்டுக் கொள்கிறேன். கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் மனிதனுடைய வாழ்க்கைக்கு அத்தியாவசியமான தேவையாயிருக்கிறது. கர்த்தருக்குப் பயப்படுகிற பயமின்றேல் ஒருவன் கர்த்தரை நம்பவில்லை, விசுவாசிக்கவில்லை, அவரைப்பற்றி அறியவில்லை, அவர் இருக்கிறார் என்று அவனை ஏற்றுக் கொள்ளவில்லையென்று அர்த்தமாகிறது. கர்த்தருக்குப் பயந்தவர்கள் ஒருவரோடொருவர் பேசிக் கொள்வார்கள். கர்த்தர் அதைக் கவனித்துக் கேட்பார் கர்த்தருக்குப் பயந்தவர்களுக்காகவும் அவருடைய நாமத்தை தியானிக்கிறவர்களுக்காகவும் ஞாபக புஸ்தகம் ஒன்று அவருக்கு முன்பாக எழுதப்பட்டிருக்கிறது என்பதை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும் (மல 3:16). கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் சுத்தமாயிருக்கிறது. கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் ஞானத்தின் ஆரம்பமாயிருக்கிறது. கர்த்தருக்குப் பயப்படுதலே மனிதனுடைய வாழ்க்கையில் மிகவும் அத்தியாவசியமான காரியம.

வேதாகமமானது நாம் பயப்படத்தகாதவைகள் எவைகளென்றும, பயப்பட வேண்டியவைகளெவைகளென்றும அடையாளமிட்டுக் காட்டுகின்றன. நாம் அஞ்சத்தகாத அல்லது பயப்படத் தேவையில்லாத காரியங்களைக் குறித்து வேதாகமத்தில், ஆதியாகமம் 15:1ல் ஆபிராமே பயப்படாதே என்று இறைவன் இருவுளம் பற்றினதைக் காண்கிறோம் நாம் அஞ்சத் தேவையல்லாத அநேகக் காரியங்கள் உலகத்தில் இருக்கின்றன. அவைகளைக் கண்டு நாம் அஞ்ச வேண்டியதில்லை. ஆனால் அஞ்சத்தக்கவைகள் அல்லது பயப்படத் தக்க காரியங்கள் உண்டு. அவைகளில் முதலாவது காரியம் நாம் தேவனுக்குப் பயப்படும் பயமாக இருக்கிறது.

வேதாகமத்தில் நீதிபரராய் மனுஷரை ஆண்டு தெய்வபயமாய்த் துரைத்தனம்பண்ணுகிறவர் இருப்பார் (II சாமு 23:3) என்று வாசிக்கிறோம். தெய்வ பயமாய்த் துரைத்தனம் பண்ணுகிறவர் என்று இயேசுவானவரைக் குறித்து நாம் வாசிக்கிறோம். இத்தகைய தெய்வ பயம் இல்லாதிருத்தல் பாவத்தில் கொண்டுபோய் விட்டுவிடும். தொடர்ந்து பாவ மயக்கமும், இறுதியில் அழிவும் தெய்வ பயம் இல்லாதவர்களுடைய வாழ்க்கையில் நிகழப் போகின்றது. ஆபிரகாம் பொய் சொன்னதற்கு காரணம் சொல்லும்பொழுது இவ்விடத்தில் தெய்வபயமில்லையென்று நினைத்தேன். ஆனபடியினால் என்னுடைய மனைவியை சகோதரி என்று சொன்னேன் என்று சொன்னதாக ஆதி. 20:11ல் நாம் வாசிக்கிறோம். "அவர்கள் கண்களுக்கு முன்பாக தெய்வ பயமில்லை என்று ரோமர் 3:18ல நாம் வாசிக்கிறோம். சீர்கெட்ட மனிதனுடைய ஒவியம் இதுவாக இருக்கிறது.

### கர்த்தருக்குப் பயப்படும் பயம் அல்லது தேவனுக்குப் பயப்படும் பயம்

சர்வ வல்லவருடைய சமுகத்தில் நீ இருப்பதும், நடுங்குவதும் ஒரு புறம்பான பயம் என்று எண்ணாதே. கர்த்தருக்குப் பயப்படுதல் என்பதே பக்தி. தேவனுக்குரிய மக்கள், தேவனுடைய சமயக் கடமைகளை உணர்த்துமாறு இந்த பயபக்தி தேவையாக இருக்கிறது. தேவ பயமில்லாதவன் தேவனிடத்தில் பக்தியில்லாதவன். தேவனுடைய கடமைகளை, தேவன் தனக்கு ஒப்படைத்த ஊழியத்தை சரியாய்ச் செய்ய மாட்டான். தேவன் இவ்விதமாக இஸ்ரவேல் புத்திரருக்கு கட்டளையிட்டதாக வாசிக்கிறோம். மோசேயை அழைத்து இறைவன் இவ்விதமாக சொன்னார். "என் ஜனங்களை என்னிடத்தில் கூடிவரச் செய், என் வார்த்தைகளை அவர்கள் கேட்கும்படி பண்ணுவேன். அவர்கள் பூமியில் உயிரோடிருக்கும் நாளெல்லாம் எனக்குப் பயந்திருக்கும்படிக் கற்றுக் கொள்வார்கள்" (உபா. 4:9). இதி

லிருந்து தேவனுக்குப் பயப்படுதல் என்பது நமக்கு இன்றியமையாதொன்றாக இருக்கிறது என்று அறிந்து கொள்கிறோம். ஆயினும் தேவ விடத்திலிருந்து நாம் சுதந்தரித்துக் கொண்ட ஒரு சுபாவம் அல்ல அது. குழந்தைகளுக்கும், ஜனங்களுக்கும், திருச்சபையாருக்கும் கற்றுக் கொடுக்க வேண்டிய ஒன்றாக அது இருக்கிறது. ஒவ்வொரு சந்ததியாரும் கர்த்தருக்குப் பயப்படுதலை கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் என் சத்தத்தைக் கேட்கும்படி பண்ணுவேன். அவர்கள் பூமியில் உயிரோடிருக்கும் நாளெல்லாம் எனக்கு பயந்திருக்கும்படி கற்றுக் கொள்வார்கள் என்று தேவன் திருவுளம் பற்றினார். உன் தேவனாகிய கர்த்தருக்குப் பயந்து அவருக்கே நீ ஆராதனை செய்ய வேண்டும் (உபா. 6:13). காரியத்தின் கடைத் தொகையைக் கேட்போமாக! தேவனுக்குப் பயந்து அவர் கற்பனைகளைக் கைக்கொள் (பிர. 12:13).

## பயப்படத் தேவையில்லாதவைகள் :

விக்கிரகங்களையோ, அல்லது வேறு தெய்வங்களையோ கண்டு நாம் பயப்படத் தேவையில்லை. நான் உங்களோடு பண்ணின உடன்படிக்கையை நீங்கள் மறவாமலும் அந்நிய தேவர்களுக்கு பயப்படாமலும் இருங்கள் என்று இறைவன் சொன்னார் (2 இரா.17:38).

மனிதனைக் கண்டும் நாம் பயப்பட வேண்டியதில்லை. சவுல் ராஜாவினுடைய தவறு இதுதான். நான் ஜனங்களுக்குப் பயந்து அவர்கள் சொல்லைக் கேட்டேன் என்று சொன்னான் (1 சாமு. 15:24). மனுஷருக்குப் பயப்படும் பயம் கண்ணியை வருவிக்கும் நாம் கர்த்தர் ஒருவருக்கே பயப்பட வேண்டும் (நீதி. 29:25).

அடுத்தபடியாக, இவ்வுலகத்தில நேரிடும் அழிவுகளையும், நாச மோசங்களையும் கண்டு நாம் பயப்பட வேண்டியதில்லை. அவைகள நம்முடைய இரட்சகரின் இரண்டாம் வருகைக்குரிய அடையாளங்களாகும். பூமியின் மேல் வரும் ஆபத்துக்களுக்குப் பயந்து எதிர்பார்க்குதலினாலே மனுஷருடைய இருதயம் சோர்ந்து போகும். நீங்கள் நிமிர்ந்து பார்த்து உங்கள் தலைகளை உயர்த்துங்கள் என்று இறைவனாகிய இயேசு சொன்னார் (லூக். 21:25-28).

மெய்யான விசுவாசி வருங்காலத்தில் நேரிடும் சிட்சைகளைக் குறித்தும் பயப்பட வேண்டியதில்லை. நியாயத் தீர்ப்பைக் குறித்தும் பயப்பட வேண்டியதில்லை. நியாயத் தீர்ப்பு விரோதிகளைப் பட்சிக்கும் கோபாக்கினையாக இருக்கிறது (எபி. 10:27).

பயம் குறித்தும் தேவ ஜனங்கள் அஞ்ச வேண்டியதில்லை. இக்கட்டும், நெருக்கமும் அவனை, அல்லது இரட்சிக்கப்படாதவனை கலங்கப் பண்ணி அவர்களை முறியடிக்கலாம். ஆயினும் விசுவாசியோ தனது பூமிக்கடுத்த எல்லா பயங்களையும் கர்த்தர் மீது வைத்துவிட வேண்டும் (யோபு 15:24; 1 பேது. 5:7). உங்களுடைய கவலைகளையெல்லாம் அல்லது உங்களுடைய பயங்களையெல்லாம் அவர்மேல் வைத்து விடுங்கள் (1 பேது. 5:7). ஒரே ஒரு பயமே நம்மில் நிலைத்து நிற்க வேண்டும். இதையே, தேவனாகிய கர்த்தர் தம்மைக் குறித்துள்ள பரிசுத்த பயம் என்று சொல்கிறார். இது நம்மிடத்தில் தங்கி தரித்து அது வளர்ச்சியடைய வேண்டும். இப்படியாக கர்த்தருக்குப் பயப்படும் பயம் நமக்கு இறைவனால் கட்டளையிடப்பட்ட கட்டளையாக இருக்கிறது. நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தரைப் பின்பற்றி அவருக்குப் பயந்து அவர் கற்பனைகளைக் கைக்கொண்டு அவர் சத்தத்தைக் கேட்டு அவரைச் சேவித்து அவரைப் பற்றிக் கொள்வீர்களாக (உபா. 13:4). எல்லாரையும் கனம் பண்ணுங்கள், சகோதரரிடத்தில் அன்பு கூருங்கள், தேவனுக்குப் பயந்திருங்கள், ராஜாவைக் கனம் பண்ணுங்கள் (1 பேது. 2:17). கர்த்தருக்குப் பயப்படுகிறவர்களே அவரைத் துதியுங்கள்.

சபைகள் கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தோடும் நடந்து பெருகின (அப். 9:31). ஆதிச் சபையானது கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தோடும் நடந்து பெருகின என்று சொல்லி நாம் வேதாகமத்தில் வாசிக்கிறோம். ஆதிச் சபையினுடைய மாதிரி மிகவும் தெளிவாக இங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அதாவது பக்தி விருத்தியடைகிறது கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தோடும் பரிசுத்த ஆவியின் நிறைவோடும்தான் நடந்தேற முடியும். இதை நாம் அப். 9:31ல் வாசிக்கிறோம்.

அப்பொழுது யூதேயா, கலிலேயா, சமாரியா நாடுகள் எங்குமுள்ள சபைகள் சமாதானம் பெற்று பக்தி விருத்தியடைந்து கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தோடும் பரிசுத்த ஆவியின் ஆறுதலோடும் நடந்து பெருகின என்பவாம். பக்தனுகிய கொர்நெலியுவைக் குறித்து நாம் வாசிக்கும்போது அவன் தேவனுக்குப் பயந்தவனாய் இருந்தான் என்று வாசிக்கிறோம். அவன் தேவ பக்தியுள்ளவனும், தன் வீட்டாரோடும் தேவனுக்குப் பயந்தவனுமாய் இருந்தான் (அப். 10:2).

தேவனுக்குப் பயப்படும் பயம் மிகுந்த விழிப்புள்ள வாழ்க்கை வாழுமாறு நமக்குப் போதிக்கிறது. மாம்சத்திலும், ஆவியிலும் உண்டான எல்லா அசுசியும் நீங்க நம்மைச் சுத்திகரித்துக் கொண்டு பரிசுத்தமாகுதலை தேவ பயத்தோடே பூரணப்படுத்தக் கடவோம் என்று II கொரி 7:1ல நாம் வாசிக்கிறோம். ஆனபடியால் கர்த்தருக்குப் பயப்படும் பயம், கர்த்தருக்குப் பயந்திருங்கள், கர்த்தருக்குப் பயப்படுங்கள் என்பது இறைவனுடைய கட்டளையாக இருக்கிறது.

கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தினுடைய நம்பமுடியாத அளவு, அதனுடைய செயல்முறை தெளிவாக இருக்கிறது என்று வேதாகமத்தில் நாம் வாசிக்கிறோம். அது தீமையை வெறுக்கும் வெறுப்பாயிருக்கிறது. தீமையை வெறுப்பதே கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் (நீதி. 8:13). அது ஞானமாயிருக்கிறது. கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம் (சங் 111:10). அது விசுவாசிக்கு பொக்கிஷமாக இருக்கிறது. சஞ்சலத்தோடு கூடிய அதிக பொருளிலும் கர்த்தரைப் பற்றும் பயத்தோடு கூடிய கொஞ்சப் பொருளே உத்தமம். கர்த்தருக்குப் பயப்படுதலே அவனுடைய காலத்தின் பொக்கிஷமாக இருக்கிறது (ஏசா. 33:6). அது ஜீவ ஊற்று. கர்த்தருக்குப் பயப்படுதல் ஜீவ ஊற்று (நீதி 14:27). அது சுத்தமானது. கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் சுத்தமாயிருக்கிறது. அது பரிசுத்தமாயிருக்கிறது (சங். 19:9). அது என்றென்றைக்கும் நிலைத்திருக்கிறது. கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் சுத்தமும் என்றைக்கும் நிலைத்திருக்கிறதுமாயிருக்கிறது (சங். 19:9). அது பக்தியாயிருக்கிறது. நாம் பயத்தோடும் பக்தியோடும் தேவனுக்குப் பிரியமான ஆராதனை செய்யும்படி கிருபையைப் பற்றிக் கொள்ளக் கடவோம் (எபி. 12:28). கர்த்தருக்குப் பயப்படுவோமாக!

நமக்கு தேவ பயத்தை உண்டாக்கும் ஏதுகரணங்கள்.

தேவ பயம் நம்மில் உண்டாக வேண்டிய அவசியம் என்ன என்பதையும் பார்ப்போம்:–

1) தேவனுடைய பரிசுத்தம் நமக்கு அவரைப் பற்றும் பயத்தினை உண்டாக்குகிறது. கர்த்தாவே யார் உமக்குப் பயப்படாமலும் உமது நாமத்தை மகிமைப்படுத்தாமலும் இருக்கலாம். நீர் ஒருவரே பரிசுத்தர் (வெளி. 15:4; ஏசா. 6:1-5).

2) தேவனுடைய மகத்துவம்: இப்பொழுதும் இஸ்ரவேலே நீ உன் தேவனுகிய கர்த்தருக்குப் பயந்து கர்த்தரைச் சேவித்து அவருடைய கற்பனைகளையும், கட்டளைகளையும் கைக்கொள்ள வேண்டுமென்பதையல்லாமல் வேறு எதை உன் தேவனுகிய கர்த்தர் உன்னிடத்தில் கேட்கிறார். உன் தேவனுகிய கர்த்தர் தேவாதி தேவனும் கர்த்தாதி கர்த்தரும் மகத்துவமும் வல்லமையும் பயங்கரமுமாயிருக்கிறார் (உபா. 10:12-17).

3) தேவன் நமக்கு அருளும் ஏராளமான நன்மைகள் அவரைப் பற்றிய பயத்தை நமக்கு உண்டாக்குகிறது. நீங்கள் எப்படியும் கர்த்தருக்குப் பயந்து உங்கள் முழு இருதயத்தோடும் உண்மையாய் அவரை சேவிக்கக் கடவீர்கள். அவர் உங்களிடத்தில் எவ்வளவு மகிமையான காரியங்களைச் செய்தார் என்று சிந்தித்துப் பாருங்கள் (I சாமு. 12:24).

4) தேவனுடைய மன்னிப்பு நமக்கு அவரைப் பற்றிய பயத்தை உண்டாக்குகிறது. கர்த்தாவே, உமக்குப் பயப்படும்படிக்கு உம்மிடத்தில் ஏராளமான மன்னிப்பு உண்டு (சங். 130:4).

5) தேவனுடைய அற்புதமான கிரியைகள் நமக்கு அவரைப் பற்றிய பயத்தை உண்

டாக்குகிறது. யோசுவா தேவனுடைய கிரியைகளை மறுபடியும் நினைவு கூர்ந்ததாக நாம் வாசிக்கிறோம் (யோசு 24:1-24).

6) வரப்போகிற நியாயத் தீர்ப்புகள் நமக்கு தேவனைப்பற்றிய பயத்தை உண்டாக்குகிறது. மிகுந்த சத்தமிட்டு தேவனுக்குப் பயந்து அவரை மகிமைப்படுத்துங்கள். அவர் நியாயத் தீர்ப்பு கொடுக்கும் வேளை வந்தது என்று தூதன் அறிவித்ததாக நாம் வாசிக்கிறோம் (வெளி. 14:7).

இப்பொழுது நமக்கு மிகவும் அவசிய தேவை கர்த்தருக்குப் பயப்படுகிற பயமாயிருக்கிறது, உலகத்திலே தேவனைப் பற்றிய பயம் குறைந்து வருகிறது. சபைகள், சங்கங்களுக்குள் தேவ பயமில்லை, தேவாராதனையில் தேவ பயமில்லை. உலகத்தில் கிறிஸ்தவர்களிலும் பலர் பல காரியங்களில் அசட்டையாயிருக்கிறார்கள். இது அவர்களை ஆபத்தில் கொண்டு போய்விடும். இவ்விதமாக நாம் வேதாகமத்தில் வாசிக்கிறோம், உமது பரிசுத்த சந்நிதிக்கு நேரே பயபக்தியுடன் பணிந்து கொள்வேன் (சங். 5:7; 89:7). தேவ ஊழியத்திற்கு தேவ பயம் மிகவும் அவசியம். பயத்துடன் கர்த்தரைச் சேவியுங்கள், நடுக்கத்துடனே களிகூறுங்கள் (சங். 2:11). பாவத்தினின்று நாம் காக்கப்படுவதற்கு கர்த்தருக்குப் பயப்படும் பயம் மிகவும் தேவை. பயப்படாதிருங்கள்: உங்களைச் சோதிப்பதற்காகவும், நீங்கள் பாவம் செய்யாதபடிக்கு தம்மைப பற்றும் பயம் உங்கள் முகத்துக்கு முன்பாக இருப்பதற்காகவும் தேவன் எழுந்தருளினார் (யாத். 20:20).

இந்த உலகத்தில நல்லாட்சி செய்ய நீதி நியாயங்களுடன் நடந்து கொள்ள தேவபயம் தேவை.யோசபாத் தாம் நியமித்த அதிபதிகள் நியாயாதிபதிகளைப் பார்த்து இவ்விதமாக சொன்னதாக பார்க்கிறோம். நியாயம் விசாரிக்கிறது கர்த்தருக்கடுத்த காரியமாயிருக்கிறது. ஆதலால் கர்த்தருக்குப் பயப்படும் பயம் உங்களிடத்தில் இருக்கக்கடவது. எச்சரிக்கையாயிருந்து காரியத்தை நடத்துங்கள். உங்கள் தேவனாகிய கர்த்தரிடத்தில் அநியாயமும் முகதாட்சணியமும் இல்லை. பரிதானமும் அவரிடத்தில் செல்லாது என்று நியாயாதிபதிகளை எச்சரித்ததாக நாம் பார்க்கிறோம். II நாளாகமம் 19;6-9 வரை வாசிக்கும்பொழுது இவைகளை அறிந்து கொள்கிறோம். நீதிபரராய், தெய்வ பயமாய் மனுஷரை ஆண்டு கொண்டு துரைத்தனம் பண்ணுவார் என்று மேசியாவைக் குறித்து II சாமு 23:3ல் எழுதியிருக்கிற பிரகாரம் தெய்வ பயம், துரைத்தனம் பண்ணுகிறவர்களுக்கு பரிபாலனம் பண்ணுகிறவர்களுக்கு அவசியமாக இருக்கிறது.

அடுத்தபடியாக, நம்முடைய கிறிஸ்தவ வாழ்க்கையில பரிசுத்தத்தில் பூரணப்படுத்துவதற்கு நாம் கட்டளை பெற்றிருக்கிறோம் என்பதை மறந்து விடக் கூடாது (II கொரி 7:1).

தேவ பயத்தினால் நமக்கு உண்டாகும் நன்மைகள் அளவிறந்ததாக இருக்கிறது. கர்த்தருக்கு அது மிகுந்த மகிழ்ச்சியைக் கொண்டு வருகிறது. தமக்குப் பயந்து தமது கிருபைக்கு காத்திருக்கிறவர்கள் மேல் கர்த்தர் பிரியமாயிருக்கிறாரென்று (சங்:147:11)ல் நாம் வாசிக்கிறோம். ஆதலால், நாம் கர்த்தருக்கு மிகுந்த பிரியமுண்டாக நடந்து கொள்ள வேண்டும். தேவனுடைய பிள்ளைகள் மீது தேவனுடைய இரக்கம் பெருகுகிறதற்கு கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் அதிகமாய் தேவைப்படுகிறது. தகப்பன் தன் பிள்ளைகளுக்கு இரங்குகிறது போல கர்த்தர் தமக்குப் பயந்தவர்களுக்கு இரங்குகிறார் என்று சங் 103:13ல் வாசிக்கிறோம். நம்மை எப்பொழுதும் தேவனுக்கு உகந்தவர்களாக்குவதும் கர்த்தருக்குப் பயப்படுகிற பயமே எந்த ஜனத்திலாயினும் அவருக்குப் பயந்து நீதி செய்கிறவன் எவனோ அவனே அவருக்கு உகந்தவனென்று நிச்சயமாய் அறிந்திருக்கிறேன் (அப். 10:35). கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் தேவனுடைய கிருபையை நமக்கு கொண்டு வருகிறது. கர்த்தருடைய கிருபையோ அவருக்குப் பயந்தவர்கள் மேல் அநாதியாய் என்றென்றைக்குமுள்ளது. கர்த்தாவே உமக்குப் பயப்படும்படி எனக்குக் கற்பியும் (லூக். 1:50; சங்: 103:17) அது தேவனுடைய ஆசீர்வாதங்களைக் கொண்டு வருகின்றன. கர்த்தருக்குப் பயப்படுகிற மனிதன் பாக்கியவான் (சங். 112:1). அது மனி

தனுக்குத் திட நம்பிக்கையைக் கொண்டு வருகிறது. கர்த்தருக்குப் பயப்படுகிறவனுக்கு திட நம்பிக்கை உண்டு (சங். 104:25) அது தீமையை விட்டு விலகி மனிதனிலே பரிசுத்த வாழ்க்கையைக் கொண்டு வருகிறது. கர்த்தருக்குப் பயப்படுவதினுல் மனிதர் தீமையை விட்டு விலகுவார்கள் என்று நாம் வாசிக்கிறோம். கிறிஸ்தவ ஐக்கியத்தை உண்டு பண்ணுவதும் கர்த்தருக்குப் பயப்படுகிற பயமே. கர்த்தருக்குப் பயந்தவர்கள் ஒருவரோடொருவர் பேசிக் கொள்வார்கள் கர்த்தர் கவனித்துக் கேட்பார் என்று வேதாகமத்தில் குறிப்பிட்டிருக்கிறது. நான் அடிக்கடி ஞாபகப்படுத்துவதுண்டு கர்த்தருக்குப் பயந்தவர்கள் ஒருவரோடொருவர் பேசிக் கொள்வார்கள், ஐக்கியமாயிருப்பார்கள். கர்த்தருக்குப் பயப்படாதவன் பிரிந்து போவான். அவன் அதற்கான பலனை அடைந்தே தீருவான். மேலும் கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் மனித பயத்தை நம்மைவிட்டு அகற்றுகிறது. அவர்கள் பயப்படுகிற பயத்தின்படி நீங்கள் பயப்படாமலும் கலங்காமலும் இருந்து கர்த்தரையே பரிசுத்தம் பண்ணுங்கள். அவரே உங்கள் பயமும் அவரே உங்கள் அச்சமுமாய் இருப்பாராக என்று (ஏசா. 8:12,13ல்) வாசிக்கிறோம். மேலும் கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தினுல் நாம் ஜெபிக்கிறவைகளெல்லாம் பெற்றுக் கொள்வோம். இவ்விதமாய் நாம் வாசிக்கிறோம். அவர் தமக்கு பயந்தவர்களின் விருப்பத்தின்படி செய்து அவர்கள் கூப்பிடுதலைக் கேட்டு இரட்சிக்கிறுர் (சங். 145:19). மேலும், கர்த்தருக்குப் பயப்படுகிறவர்கள் நீண்ட ஆயுளைப் பெறுவார்கள் கர்த்தருக்குப் பயப்படுதல் ஆயுசு நாட்களை பெருகப் பண்ணும் (நீதி. 10:27). அவருக்கு பயப்படுகிற பயத்தினை நமக்கு தேவன் போதிக்கும்படி நாம் ஜெபத்தில் அவரிடம் வேண்டிக் கொள்வோமாக! பரிசுத்தவான்களிடம் கர்த்தருக்குப் பயந்து ஜீவிப்பது எப்படி என்று கேட்டு ஆலோசனை பெற்றுக் கொள்வோமாக! கர்த்தாவே, உமது வழியை எனக்குப் போதியும் நான் உமது சத்தியத்திலே நடப்பேன் உமது நாமத்துக்குப் பயந்திருக்கும்படி என் இருதயத்தை ஒருமுகப்படுத்தும் என்று சொல்லி நாம் ஜெபம் பண்ணுவோமாக (சங். 86:11; நீதி. 15:16;19:23). ஆம் தேவனுடைய பிள்ளைகளே. தேவனுக்குப் பயந்திருங்கள். தேவனுக்குப் பயந்தவர்களுக்கு குறைவு ஒன்றுமில்லை. தேவனுக்குப் பயப்படாதவன் எல்லாவற்றிற்கும் பயப்படும்படியாய் இறைவன் அவனை விட்டு விடுவார். ஆனபடியால் கர்த்தருக்குப் பயப்படுவீர்களாக. கர்த்தருடைய பயம் உங்கள் எல்லாருடைய இருதயத்தையும் நிரப்புவதாக!

''கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் சுத்தமும் என்றைக்கும் நிலைக்கிறதுமாயிருக்கிறது.''
(சங் 19:9)

---

# முகம்மது மார்க்கத்தை அறிந்து கொள்ளுதல்

(தொடர்ச்சி)

முகம்மது ராஜாவாக பெருமையாய் வாழ்ந்து மாண்டு போனுன். இயேசு கிறிஸ்துவோ இவ்வுலகத்தில் இரட்சகராக இவ்வுலகம் தம்முடைய ராஜ்யம் அல்லவென்று கூறி மன்னுயிருக்காக தம்முயிரைத் தந்து பாவ நாசகராக மரித்து கெம்பீரமாக மூன்றும்நாள் உயிரோடு எழுந்து நாற்பது நாட்கள் கழித்து பரமண்டலம் சென்றுள்ளவராய் கர்த்தருமாய் இருக்கிறுர். இவருக்கு தேவனுடைய சகல தத்துவங்களுமுண்டு. மனுஷர்களை நியாயந்தீர்த்து, நன்மை தீமைக்குத் தக்க பலனையளிக்க பிதாவின் வலது பாரிசத்தில் வீற்றிருக்கிறுர். இவரைக் குறித்து சுற்றிலும் நின்ற கல்வாரி சிலுவையைச் சுற்றி நின்ற போர் வீரர்களின் தலைவன் இவர் மெய்யாகவே தேவனுடைய குமாரனாய் இருக்கிறுர் என்று விளங்குகிறது என்றுன் .மேலும முகமதுவும் அவனைச் சேர்ந்தவர்களும் தங்கள மார்கத்தை வல்லமையினுலும் பட்டயத்தினுலும பிரபலபடுத்தினுர்கள். இயேசுகிறிஸ்துவும் அவருடை சிஷர்

களும் உலக வல்லமையற்றவர்களாக எண்ணி றந்த விரோதங்களுக்கு எதிராக சத்தியமான வசனம் என்னும் பட்டயத்தினுலே ஆச்சரிய மாய் ஜெயமடைந்தார்கள். இவ்விதமாக முகம் மதுவும் கிறிஸ்துவைப் பற்றிய சித்தாந்தங்க ளுக்குள் இன்னர் கூறிய சித்தாந்தம் யதார்த்த மானது என்றும் இன்னர் கூறியது இயல்புக்கு மாருவது என்றும் லேசாக அறிவுள்ளவர்கள் அறிந்து கொள்ளலாம். முகம்மது மார்க் கத்தை நன்ருய் விசாரித்து சத்திய வேதத் தோடு ஒத்துப் பார்க்கும்போது ''இப்படிப் பட்ட ஞானம் பரத்திலிருந்து இறங்கி வருகிற ஞானமாயிராமல் லௌகீக சம்பந்தமானதும் ஜென்ம சுபாவத்துக்குரியதும் பேய்த்தனத்துக் கடுத்ததுமாயிருக்கிறது'' (யாக். 3:15). முகம் மது மார்க்கத்தாருக்குள்ளிருக்கிற பல பிரிவினை களும் சில சோபிகள் என்னும் ஞானிகளும், கல்விமான்களும், கொரானை கண்டிக்கிற கண்டனமும் துலுக்கருடைய ராஜ்யமும் வல்ல மையும் குறைந்து போகிறதையும் அல்லாவின் பெயரைச் சொல்லி யுத்தம் செய்ய ஆரம் பித்து தோல்வியடைந்து சிதறி ஓடுகிறதையும் பார்க்கும்பொழுது இந்தக் காரியங்கள் உல கெங்கும் பிரபலமாக தெரிய வந்திருக்கிறது. முகம்மது மார்க்கம் சீக்கிரமாய் நாசமாகிக் கொண்டிருக்கிறது என்று நாம் அறிந்து கொள் ளலாம். மேலும் தேவன் மனித உள்ளத்தில் வேதத்தை ஸ்தாபிக்கிருர். அந்த வேதத்துக் கும் எழுதப்படுகிற வேதத்துக்கும் வித்தியாச மிருக்க முடியாது. மனிதன் பாவத்தினுல் தனக்கு விருப்பமான பிரகாரம் பல வேதங்களை உண்டாக்கிக் கொள்ளலாம். ஆனுல் வேதம் ஒன்றே. இப்பொழுது உலகத்திலே 5 வகை யான பிரதான வேதங்களுண்டு.

1) கிறிஸ்தவர்கள் கைக்கொண்டிருக்கிற வேதம்.

2) முகம்மது மார்க்கத்தார் கைக்கொண் டிருக்கிற வேதம்.

3) பார்சிக்காரர்கள் கைக்கொண்டிருக் கிற வேதம்.

4) இந்துக்கள் கைக்கொண்டிருக்கிற வேதம்.

5) சீனர் முதலிய பௌத்தர்கள் கைக் கொண்டிருக்கிற வேதம்.

இவ்வைந்து வேதங்களின் கோட்பாடு களும் ஒன்றையொன்று விரோதிக்கிறது. ஒவ் வாமைக்கு சித்த விகற்பம் காரணமல்லவோ. இயல்பில்லாத வேதப்பிரமாணங்கள் மாருத சத்தியமுள்ள கடவுளின் சித்தமாக இருக்க மாட்டாது. ''கடவுளோவ் ஒருவனுண்டே வேதம் ஒன்றே'' என்பதினுலே இவ்வைந்து வேதங்களில் ஒன்றே ஒன்றுதான் சந்தேகமற சத்திய வேதமாய் இருக்க வேண்டும். ஒவ் வொரு மதஸ்தரும் தங்களுடைய வேதக் கொள்கையை மெய்யென்று அவர்களுடைய மதங்கள் அவரவர்களுக்கு தகுதியான அருள் வேதம் என்று சாதிப்பார்கள். ஆயினும் அப் படி எளிதாக சாதிக்கிறதை திருஷ்டாந்தப் படுத்த முடியாது. திருஷ்டாந்தப்படுத்த அதற்கு சில ஆதாரங்கள் வேண்டும். மெய் யான வேதம் ஒன்று இருக்கிறபடியினுலே அநேக பொய்களும் கலந்த கள்ள வேதங் களும் உண்டாயிருக்கும் என்பதை இப் பொழுது நாம் அறிந்து கொள்ள வேண்டும். வெள்ளிப்பணம் இருக்கிறதென்ருல் அதைப் போலவே ஈயப் பணம் அடித்து உலகில் நட மாட விடுகிற பொய்யர்கள் அநேகர் உண்டல் லவோ? இதுபோலத்தான் காரியம். இதுதான் என்று ஆதாரப்படுத்த சத்திய வேதத்துக்கும் பொய் வேதத்துக்கும் இருக்கிற வித்தியா சத்தை நாம் விசேஷமாக அதன் குண லட்ச ணங்களைக் கொண்டு கண்டு கொள்ளலாம்.

1) அது சத்தியமானதை மாத்திரம் போதிக்க வேண்டும்.

2) அது மனிதனுடைய புத்தியிலே தோன்ருத பரம இரகசியங்களை அறிவிக்க வேண்டும். அவை புத்திக் கெட்டாதவை களாயிருந்தாலும் புத்திக்கு விரோதமாயிருக் கக் கூடாது.

3) அது எவ்விதத்தினுலும் நம்முடைய மனதை மெய்யான தேவனிடத்துக்கு நடத்த வேண்டும்.

4) அறிவின் மேலுள்ள பேராசைக்கு திருப்தி செய்யத்தக்க விசேஷங்களை அது நம் முடைய மனதுக்கு போதித்திருக்க வேண்டும்.

5) விசேஷமாய் தேவனிடத்திலே அன்பு கூரும்படிக்கும் அக்கிரமங்கள் யாவையும் வெறுத்து விடும்படிக்கும் பரிசுத்தப் பிரமாணங்கள் அதிலே காணப்பட வேண்டும். அது போதிக்க வேண்டும்.

6) அதிலுள்ள வாக்கியங்கள் ஒன்றுக்கொன்று விரோதமாய் இராமல் இசைவுள்ளவைகளாய் இருக்க வேண்டும்.

7) மனிதனுடைய கெட்ட குணங்களை மாற்றுகிறதற்கும் மனதில் நிச்சயமான சமாதானத்தினாலும், சந்தோஷத்தினாலும் நிரப்புவதற்கும் பூரணமாய் தேவனுடைய கற்பனைகளுக்கு கீழ்ப்படிய பண்ணுகிறதற்கும் ஏதுவான உபதேசங்களை அது போதிக்கவேண்டும்.

8) மனிதனுடைய புத்தியினால் அறியப்படாத நடக்கைகளை முன்னறிவிக்க வேண்டும்.

இந்த லட்சணங்களுள்ள வேதமே மெய்யெனத் தகும். கிறிஸ்து சமய வேதத்துக்கு இவ்வெட்டு லட்சணங்களும் உண்டு. உண்டோ இல்லையோ என்று நாம் பார்ப்போம்.

வேதம் சத்தியமானதை மாத்திரம் அறிவிக்க வேண்டும் என்ற முதலாம் இலட்சணம் இந்த வேதத்திற்குண்டு. நான்கு பிரமாணங்களைக் கொண்டு ஒரு வேதம் சத்தியமென்று நிச்சயிக்கலாம்.

1). சம்பவித்ததாக சொல்லிய காரியங்கள் சம்பவித்தபோது மனிதனின் கண்ணும் செவியுமாகிய இந்திரியங்கள் உணர்ந்து கொள்ளப்பட்டதாய் இருக்க வேண்டும்.

2) அந்தக் காரியங்கள் உலகத்தில் அநேகருக்கு முன் வெளியரங்கமாய் செய்யப்பட்டிருக்க வேண்டும்

3) அப்படி வெளியரங்கமாய் செய்யப்பட்ட காரியங்கள் இக்காலத்தில் நினைவு கூரப்படும்படிக்கு அவைகள் சம்பவித்ததற்கு தகுந்த குறிப்புகளும் அவைகளைக் குறித்து மனிதர்கள் செய்யத்தக்க தகுந்த கருமங்களும் ஸ்தாபிக்கப்பட்டிருக்க வேண்டும்.

4) அப்படிப்பட்ட குறிப்புகளும் கருமங்களும் காரியங்கள் சம்பவித்தது முதல் ஸ்தாபிக்கப்பட்டும் கைக்கொள்ளப்பட்டும் வர வேண்டும்.

இந்த நான்கு பிரமாணங்களில் முன்விருக்கிற இரண்டும் பிரத்தியட்ச பிரமாணங்களாய் இருக்கின்றன. அவைகளைக் குறித்து எவ்வளவேனும் சந்தேகம் தோன்றமாட்டாது. ஒரு எத்தன் சென்னைப் பட்டணத்திலிருக்கிற சமுத்திரத்தை ஓரிடத்தில் வற்றப் பண்ணி ஜலம் இருபுறமும் மதிலாக நிற்க அந்நகரத்தார் யாவரையும் அதில் நடக்கப் பண்ணினேன் என்று அபத்தமாய் சொலவானானால் மனிதர்கள் அவனை நம்புவார்களோ? அவனை பித்தன் என்பார்களல்லவா? அல்லாவிட்டால் அவன் பொய்யை நம்ப அவர்களாவது பித்தர்களாக இருக்க வேண்டுமல்லவா? ஒரு காரியம் மெய்யாய் இல்லாமற் போனால புத்திசாலிகளால் உடனே நம்பப்படமாட்டாது. ஆனால் ஒருவேளை இந்தக் காரியத்தை வெகுகாலத்துக்கு முன் சம்பவித்ததை பிற்காலத்தில் சொல்லி மனிதர்கள் அதை நம்புவதற்கு எத்தனப்படலாம். அவன் அப்படிச் செய்தாலும் மேற்கொண்டிருக்கிற இரண்டு கடைசிப் பிரமாணங்களினாலும் அவன் சொல்லும் காரியத்தில் பொய்யோ அல்லது மெய்யோ என்று விளங்கும். எப்படியெனில் அவன் இந்தச் சங்கதி 1000 வருஷத்துக்கு முன்னே நடந்தது என்று அபத்தமாய்ச் சொல்லும்போது ஜனங்கள் அவனை நோக்கி நீ சொல்லுகிற காரியங்கள் 1000 வருஷத்துக்கு முன் நடந்ததென்பதற்கு திருஷ்டாந்தம் என்ன,அதற்கடுத்த குறிப்புகள் என்ன, மனிதர்கள் அது சம்பவித்தது முதற்கொண்டு செய்து கொண்டுவரும் கருமங்கள் என்னவென்று கேட்டு, அக்கேள்விகளுக்கு நியாயமான உத்தரவு கிடையாமற் போனால் இவ்விதமான திருஷ்டாந்தமில்லாத காரியங்கள் அபத்தமென்று நிர்மாவிப்பார்களே. இந்த நியாயங்கள் யாவருக்கும் யதார்த்தமாய் தோன்றுமாகையால் மோசேயைக் குறித்தும் இயேசு கிறிஸ்துவைக் குறித்தும் உள்ள காரியங்களின் உண்மையை இந்த நான்கு காரியங்களினாலே திருஷ்டாந்தப்படுத்த முடியும்.

மேலும் சத்திய வேதமானது மனிதனது துர்ப்புத்திகளை மாற்றி அவர்களை கெட்ட பழக்க வழக்கங்களிலிருந்தும், பாரம்பரியங்

களிலிருந்தும், தீமைகளிலிருந்தும் இரட்சித்து நல்லவர்களாக மாற்றுகிறது. இதை இந்நாட்களிலேயும் வேதாகமம் செய்து கொண்டு வருகிறது. மனிதர்களுக்குத் தேவை மெய் வேதமாகும்.

''உலகிலே பிறந்த முன்னோர்
ஓதிய கலைகளெல்லாம் நிலையதாம்
சோதி தன்னை நிசமதாய் சொன்னதில்லை
பல பல பேதமான பாங்காக கூறுசெய்து
அலகைப்போல் பொய்யைப் பேசி
அரு நரகனில் அமுந்தினரே''

என்ற சித்தர்களுடைய பாடலின்படி ஜோதியை, பரகதி எங்கே என்று அவர்கள் தேடி அலைந்திருக்கிறார்கள்.

''சாத்திரத்தை சுட்டு சதிர் மறையை
பொய்யாக்கி,
சூத்திரத்தை கண்டு சுகம் பெறுவ
தெக்காலம்?''

என்று சித்தர்கள் பாடிய பிரகாரம், சூத்திரப் வேதாகமத்தின் மூலமாகவே மனு மக்களுக்குக் கிடைக்கின்றது. அதுவே மனிதர்களாக மாற்றுகிறது.

''எல்லா விளக்கும் விளக்கல்ல சான்
றோர்க்கு.
பொய்யா விளக்கே விளக்கு.'' என்று குறள் சொல்கிறது.

மேலும் வேதாகமம் தீர்க்கதரிசனங்களினால் ஆனது. உலக தோற்ற முதற் கொண்டு முடிவு மட்டுமுள்ள காரியங்கள் அதில் எழுதப்பட்டுள்ள பிரகாரம் சம்பவங்கள் நிகழ்ந்து வருகின்றன. இதில் உலகத்தில் உள்ள எல்லாரும் ஒப்புக் கொள்கிற விஷயமாகும். இனி மேலும் அதில் எழுதியிருக்கிற பிரகாரமாகவே காரியங்கள் நடந்து முடியும். வேதாகமம் (BIBLE) ஒன்றே மெய் வேதம் என்பது நடைமுறையின் மூலமாகவும் அனுபவ ரீதியாகவும் நிரூபிக்கப்படுகிறது. இனிமேலும் நிரூபிக்கப்படும்.

(தொடரும்)

''அவன் ஆதிமுதற் கொண்டு மனுஷ கொலை பாதகனாயிருக்கிறான், சத்தியம் அவனிடத்தில் இல்லாதபடியால் அவன் சத்தியத்தில் நிலைநிற்கவில்லை, அவன் பொய்யனும் பொய்க்கு பிதாவுமாக இருக்கிறபடியால், அவன் பொய் பேசும் போது சொந்தத்தில் எடுத்து பேசுகிறான்'' (யோவா 8:44)

# நம்முடைய சகோதர கிறிஸ்தவர்களின் கோபம்

இந்தக் கடைசி நாட்களில் தேவன் தாம் தெரிந்து கொண்ட ஒரு அப்போஸ்தலனை எழுப்பி, திருச்சபையின் அஸ்திபார உபதேசங்களை கையளித்து, அதைப் பிரசங்கிக்க, நடைமுறைப்படுத்த அதிகாரம் கொடுத்து, அவரைக் கொண்டு புதிய எருசலேம் சபையைக் கட்டி, இரட்சிக்கப்படுகிறவர்களை அநுதினமும் கூட்டிச் சேர்த்து, தம்முடைய ஜனத்தை, தமது வருகைக்காக பரிசுத்தப்படுத்தி ஆயத்தப்படுத்த கிரியை செய்து கொண்டிருப்பதை உணர்ந்து கொள்ள முடியாத கிறிஸ்தவ சகோதரர் பலர், இது என்ன புதுமையாயிருக்கிறது, நம்மெல்லாரையும் விட வித்தியாசமாக இருக்கிறார்களே, புதுமையான உபதேசங்களை பிரசங்கிக்கிறார்களே, இது என்ன? யாரும் அங்கே போகாதீர்கள், எந்த சபைக்கு வேண்டுமானாலும் போங்கள் (நரகத்துக்கு வேண்டுமானாலும் போங்கள்) புதிய எருசலேம் சபைக்கு மாத்திரம் போகாதீர்கள் என்று கூறி புதிய எருசலேம் சபைக்கு விரோதமாய் எதிர் பிரச்சாரம் செய்கிறவர்களைக் கண்டு பரிதாபப்படுகிறோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சிறு பையனாக இருந்தபொழுது, அவருடைய தாயாரும், யோசேப்பும் அவரை எருசலே

முக்கு பண்டிகைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். பண்டிகை நாட்கள் முடிந்து அவர்கள் திரும்பி வந்த போது இயேசுவான வர் அவர்களுடனே வராமல் எருசலேமில் தங்கி விட்டார். இதை அறியாத மரியம்மாவும், யோசேப்பு ஐயாவும் ஒரு நாள் பிரயாணப்பட்டு வந்து விட்டார்கள் பின்னர் பிள்ளையைத் தேடிப் பார்த்தும் காணாதபடியால் எருசலேமுக்கு திரும்பி வந்தார்கள். அவரோ தேவாலயத்தில் போதகர் நடுவில் உட்கார்ந்து அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டும், அவர்களிடம் கேள்விகள் கேட்டுக் கொண்டும் இருந்தார். தாய் தகப்பன்மார் அவரைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். அப்பொழுது அவருடைய தாயார் அவரை நோக்கி 'மகனே ஏன் எங்களுக்கு இப்படிச் செய்தாய்?' இதோ உன் தகப்பனும் நானும் விசாரத்தோடே தேடினோமே என்றாள். அதற்கு அவர்: நீங்கள் ஏன் என்னைத் தேடினீர்கள், என் பிதாவுக்கடுத்தவைகளில் இருக்க வேண்டியதென்று அறியீர்களா என்றார். அவர் சொன்ன வார்த்தைகளை அவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை (லூக் 2 42-50).

இயேசுவானவரின் செயல் ஆச்சரியமாக இருந்தது. இந்த 12 வயது பையன் விளையாடுவதை விட்டுவிட்டு இப்படிப் போதகர்கள் நடுவே உட்கார்ந்திருக்கிறாரே என்று ஆச்சரியப்பட்டார்கள். இந்நாட்களில் புதிய எருசலேம் சபையில் தேவ வல்லமை வெளிப்பட்டு கொடிய துன்மார்க்கர்கள் மனந்திரும்பி பரிசுத்த வாழ்க்கை வாழ்வதையும், நிர்வியாதியஸ்தர்கள் அற்புத சுகம் பெறுவதையும், சீர்கெட்ட குடும்பங்கள் சீர் பொருந்தி சுகவாழ்வு வாழ்வதையும், அழுக்கடைந்த பலர் சுத்தமாகி வெண் வஸ்திரம் தரித்து அழகாய் தேவாலயம் செல்வதையும், வருஷக்கணக்கில் காத்திருந்தும், பரிசுத்த ஆவி பெறாமல் அலைந்து திரிந்து, புதிய எருசலேமுக்குள் வந்து அபிஷேகம் பெறுவதையும், ஊர் சுற்றி திரிய வேண்டிய திரளான வாலிபர்கள் சபையையே தங்கள் உறைவிடமாக்கி தேவகாரியங்களில் ஈடுபடுவதையும், தீர்க்கதரிசனம் உண்டாகி பாவங்கள் கண்டுபிடிக்கப்படுவதையும், வரப்போகிற காரியத்தை அறிவதையும், வாலிபர்கள், பெரியவர்கள் தரிசனங்கள், சொப்பனங்கள் காண்பதையும் கர்த்தர் சொல்கிறார் என்று சொல்வதையும், ஒருவரும் எதிர்பேச முடியா வாக்கு வல்லமை வெளிப்படுவதையும், அற்புத அடையாளங்கள் ஏராளமாய் நடைபெறுவதையும் கண்டும் கேட்டும் கேள்விப்பட்டும் பிற கிறிஸ்தவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள்.

இயேசு நாதரின் செய்கையைக் கண்டு மரியம்மா ஆச்சரியப்பட்டாலும்; மகனே, ஏன் எங்களுக்கு இப்படிச் செய்தாய் (எங்களோடே வராமற் போனாயே) நாங்கள் உன்னை விசாரத்தோடே தேடினோமே என்று கேட்டு, இயேசு ஏதோ செய்யத் தகாததை செய்ததாக குறைவுபட்டுக் கொண்டார்கள். மற்ற சபைகளைப் போல புதிய எருசலேம் சபை இல்லாததைக் கண்டவுடன், தப்பிதமான வழியிலே போகிறார்கள் என்று அவர்கள் வைத்திருக்கிற அளவு கோலால் அளந்து தீர்ப்பளிக்கிறார்கள். இறைவன் வைத்திருக்கிற அளவுகோலால் அளந்தால் எது உண்மை என விளங்கும்.

இயேசுவானவர்: என் பிதாவுக்கடுத்தவைகளில் நான் இருக்க வேண்டியதென்று அறியீர்களா? என்று சொன்னார். ஆனால் அவருடைய வார்த்தைகளை அவர்களால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. புதிய எருசலேமில் செய்யப்படுகிற எல்லாக் கிரியைகளும் வசன ஆதாரத்துடன இறைவன் வெளிப்படுத்தினவைகளாகும். எழுதப்பட்டுள்ள வசனத்தை உணர முடியாமல் தூஷிக்கிறார்கள் கள்ளக் கிறிஸ்தவ சகோதரர்கள். பாருங்கள், தேவன் ஆவியாயிருக்கிறார், ஆவியோடும் உண்மையோடுந்தான் தொழுது கொள்ள வேண்டும் என்று வசனத்தைச் சொன்னால், அதை உணராத R.C. காரர்கள் புரட்டஸ்டன்ட் (Protestant) காரர்களை பதிதையர் என்கின்றனர்.

மனந்திரும்பி, பாவ மன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் முழுகி எடுக்க வேண்டுமென வசனத்தைச் சொன்னால், அப்படிப்பட்ட ஞானஸ்நானம் தேவையில்லை என்கிறார்கள் வசனத்தை உணர முடியாத C.S.I., லுத்தரன் போன்ற சபைக்காரர்கள். சும்மா பிறந்த சில நாட்களில் தண்ணீர் தெளித்துவிட்டு விட்டால் போதுமென்கிறார்கள். ஆதியிலே விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றவர்கள் அப்போஸ்தலர் மூலம் பரிசுத்த ஆவியைப்பெற்று, அந்நிய பாஷை பேசினார்கள் என்று வசனத்தைக் காண்பித்தால் அதை உணராத பாப்

டிஸ்ட் (Baptist), பிரதரன் (Brethren) காரர்கள் விசுவாசித்தால் போதுமென்கிறார்கள். மனந்திரும்பி, ஞானஸ்நானம், பரிசுத்த ஆவி (அந்நிய பாஷை அடையாளத்துடன்) பெற்று விட்டால் பூரணப்பட்டாயிற்று என்று எண்ணுகிற பெந்தெகொஸ்தேகாரர்கள் மூல உபதேசங்களில் சிலவற்றை மட்டும் அறிந்து, மற்றவற்றை விட்டு பூரணமாக கைக்கொள்ள வேண்டிய உபதேசங்களை வேதத்திலிருந்து விவரித்துக் காண்பித்தாலும் உணராமல் புதிய எருசலேம் சபையின் மூலம் தேவன் அருளும் உபதேசங்களை கைக்கொள்கிறவர்களை என்னமோ கிறிஸ்தவத்துக்கு அப்பாற்பட்டவர்களாக வெறுத்து குதர்க்கமாய் பார்க்கிறபடியால் ஏசாயா தீர்க்கன் உரைத்த தீர்க்க தரிசனத்தை நிறைவேற்றுகிறார்கள். "கர்த்தருடைய வசனத்துக்கு (மனித அபிப்பிராயங்களுக்கல்ல) நடுங்குகிறவர்களே அவருடைய வார்த்தையைக் கேளுங்கள்: என் நாமத்தினிமித்தம் உங்களைப் பகைத்து, உங்களை அப்புறப்படுத்துகிற உங்கள் சகோதரர், கர்த்தர் மகிமைப்படுவாராக என்கிறார்களே, அவர் உங்களுக்கு சந்தோஷம் உண்டாகும்படி காணப்படுவார், அவர்களோ வெட்கப்படுவார்கள்" (ஏசா. 66:5). இந்த வசனத்தின்படியே இதுவரை புதிய எருசலேமை பகைத்தவர்கள் வெட்கப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிறார்கள். ஊழியத்தை இழந்தவர்கள் உண்டு. இரட்சிப்பை இழந்தவர்கள் உண்டு. பாவப் படுகுழிக்குள் விழுந்து அவலை நிலைக்குள்ளானவர்கள் உண்டு. தங்களுக்கிருந்த கிருபை வரங்களை இழந்தவர்கள் உண்டு. இது கன்மலை, இதன் மீது எவன் மோதுகிறானோ அவன் நொறுங்குவதும், இது எவன் மேல் விழுகிறதோ (புதிய எருசலேமில் யாருக்கு விரோதமாய் ஜெபம் ஏறெடுக்கப்படுகிறதோ) அவன் நசுங்குவதும் கண்கூடு.

இதை யாரும் அசைக்க முடியாது. முள்ளுகளுக்குள் (கிறிஸ்தவ சகோதரர்களுக்குள்) லீலி புஷ்பம் (புதிய எருசலேம் சபை) எப்படி இருக்கிறதோ அப்படியே சபை இருக்கிறது. நீங்கள் அதைகுறித்து வேதனைப்படுத்தினாலும் நேசர் பிரியப்படுகிற அதன் வாசனையை அழிக்க இயலாது (உன். 2:2). புதிய எருசலேம் பூலோகமெங்கும் பரவும்.

---

"நீதியை அறிந்தவர்களே, என் வேதத்தை இருதயத்தில் பதித்திருக்கிற ஜனங்களே, எனக்குச் செவி கொடுங்கள்; மனுஷரின் நிந்தனைக்குப் பயப்படாமலும், அவர்கள் தூஷணங்களால் கலங்காமலும் இருங்கள்."

(ஏசா 51:7)

---

# வேத பாடம் (தொடர்ச்சி)

லேவி 14:1-32. குஷ்டரோகியினுடைய குஷ்டம் நீங்கி அவன் சுத்தமானால் அவன் செலுத்த வேண்டிய பலியும் அவன் சுத்தமாகும் விதமும் எழுதப்பட்டிருக்கிறது. அவன் சுத்தமானான் என்று தெரிந்தால், ஆசாரியன் பாளையத்துக்குப் புறம்பே போய் குஷ்டரோகியின் குஷ்ட வியாதி சொஸ்தமாயிற்றென்று கண்டால், அவன் இவ்விதமாக தன்னை சுத்திகரித்துக் கொண்டு பலி செலுத்தி பாவ மன்னிப்பைத் தேட வேண்டும். ஆசாரியன் அவனுக்காக பாவ நிவிர்த்தி செய்யக்கடவன். அப்பொழுது அவன் சுத்தமாவான்.

லேவி 14:33-53 வீட்டில் குஷ்டரோகம் தோன்றுகிறதைக் குறித்து எழுதியிருக்கிறது. வீட்டின் சுவர்களிலே தோஷம் தோன்றினால் அந்த வீடு, சுவர் பச்சையாயும், கொஞ்சம் சிவப்பான குழி விழுந்ததுமாய் இருக்கும். மற்ற சுவரைப் பார்க்கிலும் பள்ளமாய் இருக்கும் அப்படிக் கண்டால் அந்த வீட்டை அடைத்து வைத்து ஏழு நாள் பார்த்து பின்பு அந்த வீட்டின் எல்லாவற்றையும், சாந்தை எடுத்து விட்டு, கல்லுகளைப் பெயர்த்து அந்த வீட்டை புதிய கற்களினால் புதிய சாந்தை வைத்துக் கட்டி அதைத் திரும்பவும் அடைத்து வைத்துப் பார்க்க வேண்டும் குஷ்டம் மேலும் அந்த வீட்டில் காணப்பட்டால் அந்த வீட்டை முற்றிலுமாக

இடித்து அதன் கல்லுகளையும், மரங்களையும் சாந்துகள் எல்லாவற்றையும் பட்டணத்துக்குப் புறம்பே அசுத்தமான இடத்துக்கு கொண்டு போய் அதை கொட்டி விட வேண்டும். வீட்டிலே குஷ்டரோகம் தோன்றி [ அது நிவிர்த்தியாகி விட்டதென்றால் அதற்கு பலி செலுத்தி, இப்படி வீட்டிற்கு பிராயசித்தம் செய்ய வேண்டும். அப்பொழுது அந்த வீடு சுத்தமாக இருக்குமென்று கர்த்தர் கட்டளையிட்டார்.

லேவி 15:1-15 மேக நோய் அல்லது வெட்டை நோய் என்று சொல்லப்படுகிற நோய்க்கு பிரமியம் என்று இங்கே எழுதப்பட்டுள்ளது. இந்த நோய் கண்டவர்களும் தீட்டுள்ளவர்களே. அவர்களைத் தொட்டவர்களும்கூட தீட்டுள்ளவர்களே. அவர்கள் இந்த வியாதி நீங்க, தீட்டு நீங்க சுகமான பின்பு ஆசாரியர்களிடம் வந்து பலி செலுத்தி பாவ நிவிர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்று எழுதப்பட்டுள்ளது.

லேவி. 15:16-18 இந்திரியம் கழிந்தவனும் தீட்டுள்ளவன். அவனைத் தொடுகிறவனும் தீட்டாயிருப்பான். அன்று முழுவதும் அவர்கள் தீட்டாயிருப்பார்கள் என்று எழுதப்பட்டுள்ளது சாயங்காலம் அவன் வஸ்திரங்களைத் தோய்த்து, முழுகி சுத்தமடைய வேண்டும்.

லேவி. 15:19-24 சூதகஸ்திரீ அல்லது பெண்களுக்குரிய வழிபாடு, அந்தத் தீட்டு நீங்க அவள் சுத்திகரிக்கப்படுவதற்கு ஏழு நாட்கள் ஆகும் என்று எழுதப்பட்டிருக்கிறது. 8ம் நாள் பாவ நிவிர்த்திக்கு பலி செலுத்த வேண்டும் (வச 28-30). அவளைத் தொடுகிறவனும் அப்படியே ஏழு நாள் தீட்டாயிருப்பான் (வச. 24).

லேவி. 15:25-30 ஸ்திரீகளுக்குண்டாகிற உதிரப் போக்கு தொடர்ந்து மேலும் காணப்பட்டால் அது வியாதி என்று எழுதப்பட்டிருக்கிறது. அந்த உதிர ஊற்று அவளில் காணப்படும் நாட்கள் எல்லாம் அவள் சூதக ஸ்திரீயைப் போல தீட்டாயிருப்பாள். அதிலிருந்து அவள் சுத்திகரிக்கப்படும் பொழுது, அவள் பாவ நிவிர்த்திக்காக பலி செலுத்தி, அவள் பாவ நிவிர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்று எழுதப்பட்டுள்ளது.

லேவி. 15:31-33 கர்த்தருடைய வாசஸ்தலம் இஸ்ரவேல் புத்திரரின் மத்தியிலே இருக்கிறபடியினாலே தீட்டானவர்கள் தீட்டோடுகூட பரிசுத்த ஸ்தலத்திற்குள் பிரவேசிக்கக் கூடாது. அவர்கள் சாகாதபடிக்கு விலகி இருக்க வேண்டும். இந்த விதமாக சுத்திகரித்துக் கொள்ள வேண்டும் என்று பிரமியமுள்ளவன், இந்திரியம் கழிந்தவன், தீட்டான சூதகஸ்திரீ, பிரமியமுள்ள ஸ்திரீபோன்ற இவர்களைக் குறித்தும், இன்னும் குஷ்டரோகம், வஸ்திரக் குஷ்டம் வீட்டுக் குஷ்டம், தடிப்பு, அசறு, வெள்ளைப்படர் போன்ற இவைகளுக்கடுத்த பிரமாணங்கள் கொடுக்கப்பட்டுள்ளது.

ஆனால் இந்நாட்களிலே ஸ்திரீகள் இந்தக் காரியங்களிலே மீறுதல் செய்கிறதாகத் தெரிகிறது. பொதுவாக அவர்கள் மாதவிடாய் உண்டாயிருக்கிற நாட்களிலே பரிசுத்த ஆராதனையில் கலந்து கொள்ளக் கூடாது. அது நீங்கி சுத்தமாகி ஏழு நாட்களுக்குப் பின்பே அவர்கள் பரிசுத்த ஆராதனையில் கலந்து கொள்ளலாம். பரிசுத்த ஆராதனையில் கர்த்தருடைய பந்தி (Holy Communion) ஆசரிக்கப்படுகிற படியினால் அந்தப்பந்தி பரிசுத்தமாயிருக்கவும் தேவப் பிரசன்னம் உண்டாயிருக்கிறபடியினாலும், அவர்கள் சுத்தமாக இருக்க வேண்டும். இவ்வித பரிசுத்தத்திற்கான கட்டளையானது மெய்யான திருச்சபையில் மாத்திரம் காணப்படுகிறது. மற்றவர்களெல்லாரும் இதற்கு மீறி எல்லா சமயங்களிலும் எல்லாவற்றையும் செய்கிறவர்களாகயிருக்கிறார்கள். ஸ்திரீகளும், புருஷரும் சுத்தமில்லாமல் கட்டுப்பாடில்லாமல் நடந்து கொள்கிறார்கள். இது கிறிஸ்தவ உபதேசமல்ல. கர்த்தருடைய பந்தியை ஆசரிக்க நாம் ஆயத்தப்பட வேண்டும். ஆயத்தமாயிருக்கிறவர்கள் பழைய புளித்த மாவை புறம்பே

# கிறிஸ்தவ திருமணம் (தொடர்ச்சி)

## கிறிஸ்தவ இளைஞர்களுக்கு---

வீண் பேச்சுகளில் ஈடுபடாமல் திருமறையை ஆழ்ந்து படிப்பதிலும், ஜெபத்திலும் தங்கள் ஓய்வு நேரங்களை செலவிடுவது அவசியம். இது மனதிற்கு சிறந்த பயிற்சியாகும். இங்ஙனம் அவர்கள் செய்து வந்தால் ஒவ்வொரு நாள் முடிவிலும் பல நல்ல காரியங்களை செய்து முடித்தோம் என்ற மன நிறைவோடும், நல்ல களைப்போடும் படுக்கைக்குச் செல்லவும், படுக்கையில் படுத்தவுடனே தூங்கி விடவும் செய்வார்கள். இச்சையான எண்ணங்களில் மனதை அலைக்கழிக்காமல், சுய புணர்ச்சிபோன்ற அருவருப்பான காரியங்களில் ஈடுபடாமல் தேவன் அருமையான தூக்கத்தை அவர்களுக்குக் கொடுப்பார். கடின உழைப்பு நல்ல தூக்கத்தைக் கொடுக்கும் என்று பிர. 5:12ல் பார்க்கிறோம். உறக்கம், உணவு போன்ற விஷயங்களில் நாம் நம்மைச் சரியாக வைத்துக் கொண்டால், பால் உணர்ச்சியை சுலபமாக கட்டுப்படுத்தி விடலாம். இவ்விஷயத்தில் சற்று அஜாக்கிரதையாய் இருப்பவர்கள் தான் பால் உணர்ச்சியை தங்களால் கட்டுப்படுத்த இயலாமல் தோல்வியுறுவார்கள். அதிக அளவு உணவு உட்கொள்ளக்கூடாது. பால் வேட்கை அல்லது அசுத்த எண்ணங்களுக்கும் உணவுக்கும் தொடர்பு உண்டு. அதிக உணர்வுக்கும் தொடர்பு உண்டு. அந்நாட்களில் சோதோம், கொமோரா பட்டணங்களில் வசித்த மக்களின் அசுத்த வாழ்க்கைக்குக் காரணம் அந்தப் பட்டணத்தின் செழிப்பு, அதாவது உணவு செழிப்பு என்று எசே 16:49 முதல் வாசிக்கும் போது அறியலாம். இதோ, கர்வமும், ஆகாரத்திரட்சியும், நிர்விசாரமுமான சாங்கோபாங்கமான இவைகளே உன் சகோதரியான சோதோமின் அக்கிரமம். இவைகள் அவளிடத்திலும் அவள் குமாரத்தியிடத்திலும் இருந்தன என்று வாசிக்கிறோம். ஆனபடியினால், தேவனுடைய பிள்ளைகள் பெருந்தீனிக்கு இடங் கொடுக்கக் கூடாது. உணவு விஷயத்தில் கட்டுப்பாடு தேவை. எல்லாவற்றிலும் கர்த்தரின் பிரசன்னத்தை உணர உயிர்த்தெழுந்த கர்த்தர் தங்களை பார்த்துக் கொண்டிருக்கிறார், நம்முடைய அருகில் இருக்கிறார் என்பதை உணர பயிற்சிக்க வேண்டும். தேவ சமூக பயிற்சியானது

அவர்களுக்கு பெரிய வல்லமையாக, ஆசீர்வாதமாக இருக்கும். ஒருவர் தங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று அவர்களுக்குத் தெரிந்தால் அவர்கள் பால் உணர்வு போன்ற தகாத காரியங்களில் ஈடுபடமாட்டார்கள் என்பது திண்ணம். தனிமையாக இருக்கும் போது சோதனைகள் உண்டாகலாம். கெட்ட சிந்தனைகள் வந்தது என்றால் உடனே எழுந்திருந்து யாராவது விசுவாசியினிடத்திற்குக் கடந்து சென்று அவர்களிடத்தில் தெய்விக காரியங்களைப் பேசலாம், தெய்விக வேலைகளில் ஈடுபடலாம். இடத்தை மாற்றி விடுவது அநேக சமயங்களில் வெற்றியைக் கொண்டு வரும்.

## விபச்சாரம்

ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே முதன் முதலாக ஏற்படும் உடலுறவுச் செயலானது அவர்கள் இருவரையும் அற்புதமான ஒரு இணைப்பில் இணைக்கிறது. ஒருவன் ஒரு வேசியோடு சேரும் போது அவர்கள் இருவரும் ஒருடல் ஆகிவிடுகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாதா? ''இருவரும் ஒரே மாம்சமாயிருக்கிறார்கள்'' என்று வேதத்தில் வாசிக்கிறோம் (I கொரி. 6:16). ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே நடைபெறும் பாலுறவுச் செயல் பழைய ஏற்பாட்டில் ''அறிதல்'' என்று பேசப்படுகிறது. உடலில் சில மாற்றங்களை ஏற்படுத்துவதோடு பால் உறவு நிற்பதில்லை. அது எளிதில் மறக்கப்பட்டுப்போகின்ற செயலும் அல்ல. இச்செயலில் ஈடுபடும் இருவரையும் அது அற்புதமாக இரண்டற கலந்துவிடச் செய்கிறது. எனவே, ஒழுக்கக்கேடான பாலுறவுச் செயல்களை தடுப்பதற்கு கடவுள் எத்தனையோ விதமான தடைகளை உண்டாக்கி வைத்திருக்கிறார். உதாரணமாக சில வியாதிகள் அவர்களுக்குத் திட்டமாக வரும். சிபிலிஸ் (Syphillis), கொனெரியா (Gonorrhoea) போன்ற வியாதிகளும், புதிதாக எய்ட்ஸ் (AIDS) போன்ற வியாதிகளும், இறைவனால் தங்களுக்கு அடாத அந்நிய உடலைச் சேருபவர்களுக்கு தண்டனையாக, தீர்ப்பாக தேவன் கொண்டு வருகிறார். நித்திய தீர்ப்பும் அவர்கள் மேல் உண்டாகும். எபி. 13:4ல் விபசாரரையும், வேசிக் கள்ளரையும் தேவன் நியாயம் விசாரிப்பார் என்று திட்டமாக வேதம் நமக்கு எழுதிக் கொடுத்துள்ளது. ஆவபடியினால், தகாத உறவானது ஒரு சிறுகதையாக முடியாமல், தொடர் கதையாக மாறிவிடும். விபச்சாரம், வேசித்தனத்திற்கு விலகி ஓடுங்கள். நேராக நரகத்திற்கு வழி இதுதான் (நீதி. 7:17; 5:5,6; பிர. 7:26).

பொதுவாக இந்நாட்களிலுள்ள இளைஞர்கள், பெண்கள் எவ்வித பொறுப்புமின்றி உரிமைகளையும், இன்பங்களையும் அனுபவிக்க வேண்டுமென்று எண்ணுகிறார்கள். திருமண வாழ்க்கையின் பொறுப்புகள் எதுவும் இல்லாமல் பால் உறவுச் செயல்களில் ஈடுபட்டு இன்பமாய் இருக்க வேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். இது பாலுறவு என்று இறைவன் கொடுத்திருக்கிற தூய உணர்வை இழிவு படுத்துவதாகும். இப்படிப்பட்டவர்கள் தங்கள் வாழ்க்கையில் நியாயத் தீர்ப்பையும், சாபத்தையும் அடைய வேண்டியது வரும்.

சில இளைஞர்களுக்கு அவர்கள் நண்பர்கள் சவால் விட்டு பாலுறவுச் செயல்களில் ஈடுபடாதவன் சரியான ஆண்பிள்ளை இல்லை என தூண்டி விடுவது, பெண்களோடு தொடர்பு கொள்ளாதவன் ஆண்பிள்ளை இல்லை என்று சொல்வது பேடித்தனம். தவறான செயல்களில் ஈடுபடுவதா, மனதை அடக்கி ஆண்மையோடு நடந்து கொள்கிறதா, எது ஆண்மை? மனதை அடக்கி ஆண் மகனாய் நடந்து கொள்வதுதான் ஆண்மையாகும். இச்சையடக்கமில்லாமல் தப்பிப் போன அநேகரைக் குறித்து வேதாகமத்தில் நாம் வாசிக்கிறோம். கடமையாற்ற வேண்டிய சமயத்தில் சோம்பியிருந்ததும், தங்களுடைய கண்களை பறக்க விட்டதுமே அதற்குக் காரணம். தாவீது ராஜாவை அதற்கு ஒப்பிடலாம். யுத்த நேரத்தில், யுத்த களத்தில் இல்லாமல் வீட்டில் சும்மா படுத்து தூங்கி விட்டு, மாலையில் உப்பரிகையில் உலாத்திக் கொண்டிருக்கையில் பத்சேபாளைக் கண்டான். தன் கண்களைக் கட்டுப்படுத்தாமல் அவள் மீது தொடர்ந்து பார்வையை செலுத்தினான், பாவத்தில் விழுந்தான். கட்டுப்பாடற்ற இச்சையினால் முற்றுமாய் வலுவிழந்துபோன சிம்சோனைப் பற்றியும் வாசிக்கிறோம். அழகான பெண், அவள் எனக்குப் பிரியமானவள் என்று சொல்லி

அவளை அடைய முயற்சித்தான். தான் ஒரு தேவ ஊழியக்காரன் என்பதை அவன் உணராமல் தொடர்ந்து அவனுடைய வாழ்க்கையில் அவன் மாம்ச இச்சையில் விழுந்ததினாலே தேவனுடைய ஊழியத்தை இழந்து அவமானத்துக்குள்ளானான். அதே சமயத்தில் யோசேப்பைப் பாருங்கள். தாவீதைப் போல ஆடம்பரமான அரச பதவியோ, சிம்சோனைப் போல பெரிய தெய்வ ஊழியத்துக்கு அழைப்போ அவருக்கு இல்லாவிட்டாலும் ஆதி. 39:7 படிக்கும் போது எவ்வித முன்னறிவிப்புமின்றி எதிர்பாராத சமயத்தில் சோதனை வந்தது. போத்திபாரின் மனைவி இரகசியமாக அவரைப் பாவஞ் செய்ய அழைத்தாள். ஆனால் யோசேப்போ, தேவனோடு வாழ்ந்து, தெய்வ பிரசன்னத்தை அனுபவித்து அவருடைய இருதயம் தேவபயத்தினால் நிரப்பப்பட்டதாயிருந்தபடியினால் 9-ம் வசனத்தில் அவர் மறுக்கிறதைப் பார்க்கிறோம். தனக்குத் தண்டனை கிடைக்குமென்றும் மற்றவர்கள் பார்த்து விடுவார்கள் என்று யோசேப்பு பயப்படவில்லை. அவர் தேவனுக்குப் பயந்தவராயிருந்தபடியினாலே பாவத்திலிருந்து தப்பிக் கொண்டார். 10-வது வசனத்தில் மறுபடியும் மறுபடியும் அவள் நித்தம் நித்தம் யோசேப்பை தொந்தரவு பண்ணின போதிலும் அதை மறுத்து எதிர்க்கவும், அதே சமயத்தில் யோசேப்பு அவ்வித சோதனையான பெண் பக்கத்திலே இருக்கிறதை தவிர்க்கவும் முயற்சித்து அந்த இடத்தை விட்டு ஓடினார். அவருக்கு மிகவும் பாதுகாப்பான இடம் சிறைச்சாலை என்று கண்டு கொண்டார். ஆனபடியினாலே, அவர் வாழ்க்கையில் உன்னத ஸ்தானத்திற்கு உயர்த்தப்பட்டார். ஒருவேளை இந்நாட்களிலுள்ள இளைஞர்கள் இச்சையடக்கமுள்ளவர்களாய் நடந்து தேவனுக்குப் பயப்படாமல் இருப்பதால் வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்கு உயர்த்தப்படாமல் இருந்தாலும் இருப்பார்கள் என்று எண்ணுகிறோம். யோசேப்பினுடைய வாழ்க்கையில் நாம் பார்க்கும் சம்பவம் என்னவென்றால் அவர் பாவஞ் செய்யக் கூடாது என்ற திட்டம் உடையவராய் இருந்தார். அவருக்கு கிடைத்த நேரங்களில் தேவனுடைய கற்பனைகளை கட்டளைகளை தியானித்து, தன்னுடைய இருதயத்தை தேவ பயத்தினால் நிரப்பி இருந்தார். எனவே, அவருக்கு சோதனை வந்த பொழுது அந்த தெய்வீக வல்லமையினாலே எதிர்த்து அதை விட்டு விலகி ஓடினார். நம்முடைய உடல் தேவ ஆவியானவர் வாசம் பண்ணும் ஆலயமாக இருக்கிறது. நாம் கிரயத்துக்குக் கொள்ளப்பட்டோம். சாதாரண கிரயமல்ல, இயேசுவின் இரத்தம். நம்முடைய உடல் மூலம் நாம் தேவனுக்கு மகிமை கொண்டு வர வேண்டும். அதை ஒரு வேசியினுடைய அவயவமாக நாம் ஆக்க முடியாது, ஆக்கக் கூடாது. இச்சையான எண்ணங்களை இளைஞர்கள் பெறுவதற்குக்காரணமான எல்லாக் காரியங்களையும் விட்டு விலக வேண்டும் (II தீமோ. 2:21,22). இதை யோசேப்பு செய்தார். நாஷிக்கப்படுவதைப் பற்றியோ, சிறையில் தள்ளப்படுவதைப் பற்றியோ அவர் கொஞ்சமும் கவலைப்படவில்லை. தேவனுக்குப் பயந்து இச்சைக்கு இடமளிக்க மறுத்து விட்டார். எனவே கடவுள் அருளக் கூடிய உயர்வுகளை இன்றும் அநேகர் அடையாமல் போவதற்கு பாவமே காரணம். மேலும்,

(தொடரும்)

"இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்" (மத். 5:8)

---

# முக்காடு

பக்தியுள்ள கிறிஸ்தவ ஸ்திரீகள் தேவாலயங்களிலும், ஜெபவேளைகளிலும் தங்கள் தலையிலே முக்காடு போட்டுக் கொள்கிறார்கள். ஆனால் பல கிறிஸ்தவ பெண்கள் தங்கள் தலையை மூடிக் கொள்வதில்லை. மூடிக் கொள்வது இவர்களுக்கு அநாகரீகமாகவும், அவசியமில்லாமலும் இருக்கிறது. ஸ்திரீகள் தலையில் முக்காடிட்டுக் கொள்ள வேண்டுவதின் அவசியத்தை பரி.அப். பவுல் வெளிப்படுத்திக் காண்பிக்கிறார். (I கொரி 11:3-16).

14 வசவங்கள் முக்காட்டின் காரியமாக எழுதப்பட்டுள்ளது. பரி. அப். பவுல் எழுதுவது பரிசுத்தாவியால் உண்டானவைகள் என்று ஒப்புக் கொள்ளுகிற எந்த ஸ்திரீயும் அவர் எழுதினபடி ஜெபம் பண்ணுகிற போதாவது, தீர்க்க தரிசனம் சொல்லுகிற போதாவது(வச. 5) ஸ்திரீயானவள் தலையின் மேல் முக்காடிட்டுக் கொள்ள வேண்டும் (வச 10). இதைக் குறித்து இது தேவையா, தேவையில்லையா? என்று வாக்குவாதம்செய்யமனதாயிருக்கிறவர்களுக்கும் பரி.அப். பவுலுக்கும் சம்பந்தமில்லை. வாக்குவாதம் பண்ணுகிறவர்கள் தேவனுடைய சபைக்குப் புறம்பே இருக்கிறவர்களாவார்கள் (வச,16).

தீர்க்கதரிசனம் சபையின் பக்திவிருத்திக்கு ஏதுவாக சபையார் கூடி வந்திருக்கும் போது சொல்லப்படுகிறது. சபையார் ஊழியக்காரர்கள் முன்பாகக் கூடி வருகிறார்கள். ஊழியர்களே தேவனுடைய தூதர்களாக இருக்கிறார்கள். மாம்சத்தில் வெளிப்பட்ட இயேசுவானவர் தேவதூதர்களால் காணப்பட்டார். கட்டளைப்பெற்றவர்களால் பிரசங்கிக்கப்பட்டார் (1 தீமோ 3:16). ஆகவே வசனம் 10ல் சொல்லப்பட்ட தூதர்கள் ஊழியக்காரர்களே. இந்த ஊழியக்காரர்களினிமித்தம் (தூதர்கள்) ஸ்திரீகள் முக்காடிட்டுக் கொள்ள வேண்டும். ஏனெனில் இவர்கள் ஆண்கள். ஸ்திரீகள் ஆண்களைப் பார்க்கும் போது அவர்கள் தேவனுடைய சாயலாய் இருக்கிறபடியால் தேவனைக் காண்பது போலாகிறது. தேவனுடைய சாயலிலுள்ள ஆண்களைப் பார்க்கிற ஸ்திரீகள் இச்சைக்குட்பட நியாயமில்லை. பெண்களுடைய சுபாவ இயல்பு இதுவாகும். இச்சை மயக்கத்தை உருவாக்கும் அசுத்த ஆவி பிடித்தவர்கள் இந்த சுபாவ இயல்புக்கு மாறாக இருப்பார்கள்.

கர்த்தருக்குள் ஸ்திரீயில்லாமல் புருஷனில்லை, புருஷனில்லாமல் ஸ்திரீயில்லை. ஸ்திரீ புருஷனிலிருந்து தோன்றுகிறாள். புருஷன் ஸ்திரீயிலிருந்து தோன்றுகிறான் (வச. 11,12). இருந்தாலும் புருஷன் ஸ்திரீக்காக சிருஷ்டிக்கப்பட்டவன் அல்ல, ஸ்திரீயே புருஷனுக்காக சிருஷ்டிக்கப்பட்டவள் (வச. 9). ருசியுள்ள பழங்கள் மனுஷர்கள் புசிக்க உருவானவைகள். ஆகவே பழங்களை பார்க்கையில் மற்றவர்கள் புசிப்பதைக் காண்கையில் மனுஷர்களுக்கு ஆசை உருவாவது சுபாவ இயல்பு।

ஆகவே ஆண்களுக்காய் சிருஷ்டிக்கப்பட்ட பெண்கள் தங்கள் தலையை தூதர்கள் (ஊழியர்கள்) நிமித்தம் மூடிக் கொள்ளவேண்டும் (வச. 10). தலையில் ஒரு ஸ்திரீ முக்காடிட்டுக் கொண்டால் அவள் தலை மொட்டையடிக்கப்பட்டது போல் இருக்குமல்லவா (வச. 5). மொட்டையடிக்கப்பட்ட ஒரு ஸ்திரீயைக் காண்கையில் கவர்ச்சிக்கேதுவான அழகு மறைந்து இருக்குமே. ஆகையால் மற்றவர்கள் முன் உங்கள் அழகை மறைக்கும்படியாய் முக்காடிட்டுக் கொள்ள வேண்டும். அப்படி முக்காடு போட உங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் தலையை சிரைத்து மொட்டைத் தலையுடன் வந்து ஜெபத்தில், சபையில் உட்காருங்கள் (வச. 6). ஒன்று முக்காடிட்டுக் கொள்ள வேண்டும் அல்லது மொட்டை அடித்துக் கொள்ள வேண்டும். இரண்டில் ஒன்றை ஸ்திரீகள் தெரிந்து கொள்ள வேண்டும். ஸ்திரீகள் மயிரை நீளமாய் வளர்ப்பது சுபாவத்தின்படி (Bynature)மகிமையாய்,அழகாய் இருக்கிறதல்லவா (வச. 15). ஆகையால் மொட்டை அடிக்க உங்களுக்கு வெட்கமாக இருந்தால் ஒழுங்காக முக்காடிட்டுக் கொள்ளுங்கள் (வச. 6).

காரியம் இப்படியிருக்கிறபடியால் ஸ்திரீகள் தேவனை நோக்கி ஜெபம் பண்ணுகையில் முக்காடிட்டுக் கொள்வது இலட்சணமாயிருக்குமா? முக்காடில்லாமலிருப்பது இலட்சணமாயிருக்குமா? என்று நிதானித்து (பரிசுத்தாவிக்குள் சோதித்து) பாருங்கள்,

பரிசுத்தமும் பக்தியுமுள்ள சகோதரிகளே, பரிசுத்த ஆவியினால் பரி. அப். பவுல் மூலம் கொடுக்கப்பட்ட தேவ வசனத்திற்குக் கீழ்ப்படிந்து உங்கள் அழகை மறைக்கும் வகையில் தலையை மூடிக் கொள்ளுங்கள். கர்த்தர் உங்கள் அழகில் பிரியப்படுவார்.

''...பரிசுத்தவான்களுடைய சபைகளெல்லாவற்றிலேயும் அப்படியே இருக்கிறது.''

(I கொரி 14:33)

# சாட்சி

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக. என்னுடைய சொந்த ஊர் கன்னியாகுமரி மாவட்டம் ஆரல்வாய்மொழி. நான் தற்போது சென்னையில் ஒரு கம்பெனியில் வேலை பார்த்து கொண்டிருக்கிறேன். அக்கிரமத்திலும் பாவத்திலும் சாத்தானின் பிடியிலும் சிக்கியிருந்த என்னை தேவனாகிய கர்த்தர் சந்தித்து இந்நாள் வரைக்கும் என்னுடைய சரீரத்துக்கு சுகமும் ஆத்துமாவிற்கு சமாதானமும் அளித்து வருகிறார். இம்மானுவேல் என்பதற்கு தேவன் நம்மோடிருக்கிறார் என்ற வார்த்தையின்படி தேவனாகிய கர்த்தர் என்னோடிருந்து செய்த சில நன்மைகளை எழுதுகிறேன். 10-10-89 அன்று காலை வேளையில் நான், வேலைக்கு சீக்கிரமாக போக வேண்டுமென்று எண்ணி காலை மணி 7-30க்கு ஸ்டவ் (Stove) பற்ற வைத்து பாத்திரத்தில் தண்ணீர்விட்டு உடனே அரிசியும் போட்டு மாடியில் தங்கி இருந்த என்னுடைய வீட்டை விட்டு மாடியின் கீழே இருக்கின்ற கம்பெனிக்கு வேலை செய்ய வந்துவிட்டேன். எனக்கு ஹெல்ப்பர் வேலைக்கு பாக்யராஜ் என்ற மனிதரும் வந்திருந்தார். நாங்கள் இருவரும் வேலை செய்து கொண்டிருந்தோம். சுமார் 8-30க்கு எனக்கு ஒரு உணர்வு உண்டானது. அரிசி வெந்திருக்கிறதா என்று போய் பார்க்க வேண்டுமென்று சரி 10 நிமிடம் கழித்து போய் பார்க்கலாம் என்றெண்ணி வேலை செய்து கொண்டிருந்தேன். 3 அல்லது 4 நிமிடங்கள் கழித்து ஒரு சத்தம் கேட்டது சுந்தர்ராஜ் மேலே போய்ப் பார் என்று. என்னோடு வேலை செய்தவரும் என்னைப் பார்த்து உங்களை யாரோ கூப்பிடுகிறார்கள் என்று சொன்னார். உடனே இருவரும் வெளியே வந்து பார்த்தோம் யாரும் இல்லை. உடனே நான் அவரைக் கம்பெனியில் இருக்கச் சொல்லிவிட்டு நான் மட்டும் மாடிக்குப் போய் என் அறையைத் திறந்து ஸ்டவ்வில் இருக்கும் பாத்திரத்தைத் திறந்து பார்க்கும் போது மிகவும் ஆச்சரியமாக இருந்தது. அரிசி நன்றாக வெந்திருந்தது. அதிகமான தண்ணீர் கிடையாது. இரண்டு அல்லது மூன்று நிமிடங் கழித்து பார்த்திருந்தால் சோறு கூழ்போல மாறியிருக்கும். சாப்பிட முடியாத நிலமை உண்டாயிருக்கும். பக்தனாகிய ஆபிரகாமை பெயர் சொல்லி அழைத்த தேவன், பக்தனாகிய சாமுவேலை பெயர் சொல்லி கூப்பிட்ட தேவன் பாவியாகிய என்னை பெயர் சொல்லி கூப்பிட்டு காரியத்தை செய்தபடியினால் அவருக்கு சதா காலமும் நன்றியுள்ளவனாக காணப்படுவேன். பின்பு இந்தக் காரியத்தை என்னுடன் வேலை செய்தவரிடம் சொன்னேன். அவர் மிகவும் ஆச்சரியப்பட்டார். இதற்கு முன் நான் பல முறை அவரிடம் இயேசு கிறிஸ்துவைப் பற்றி கூறியதுண்டு. ஆனால் அவர் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கவில்லை. ஆனால் இந்த முறை அவர் காதாரக் கேட்ட கர்த்தருடைய சத்தத்தை அறிந்து வீட்டிலும் அவர் மனைவியிடம் சொல்லி. ஆச்சரியப்பட்டிருக்கிறார். கர்த்தருக்கு மகிமையுண்டாவதாக!

ஒருநாள் நான் கம்பெனியில் வேலையை முடித்துவிட்டு சைக்கிள் ஸ்டாண்டில் இருந்து சைக்கிளை எடுக்கும்போது கர்த்தர் என்னோடு பேசினார். சைக்கிளை வேகமாக ஓட்டக்கூடாது மெதுவாக ஓட்ட வேண்டும் என்று. நான் கர்த்தருடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து மெதுவாக சைக்கிளை ஓட்டிக் கொண்டிருந்தேன். கொஞ்ச தூரம் போகும்போது ஒரு லாரி நான் போகிற இடது பக்கம் வேகமாக வந்து கொண்டிருந்தது. எனக்கு சைக்கிளை எந்தப் பக்கம் திருப்புவது என்று தெரியவில்லை. இருட்டாக இருந்தபடியால் வண்டி பள்ளத்தில் இறங்கியது. வண்டி எந்த வழியாக போகிறது என்று தெரியவில்லை. சைக்கிளை ரோடு பக்கமாக திருப்பும்போது ரோட்டில் விழுந்து விட்டேன். கர்த்தர் காத்துக் கொண்டார். வழிகளில் எல்லாம் உன்னை காக்கும்படி தம்முடைய தூதர்களுக்கு கட்டளை இடுவார் என்ற வார்த்தையின்படி கர்த்தர் என்னைக் காத்துக் கொண்டார். கர்த்தருக்கு மகிமையுண்டாவதாக.

ஒருமுறை நான் கம்பெனியில் ஒரு இரும்பு ஆங்கிள் வெட்டிக் கொண்டிருந்தேன். எதிராக ஒருவர் சம்மட்டி அடித்தார். நான் வெட்டக்கூடிய இரும்பை கையில் பிடித்துக் கொண்டிருந்தேன். ஒருமுறை அவர் சம்மட்டி அடிக்கும்போது சம்மட்டியின் கைப்பிடி கழன்று சம்மட்டி மட்டும் என்னுடைய பக்கத்தில் ½ அடி வித்தியாசத்தில் கீழே விழுந்தது. அவர் சம்மட்டி அடித்த விதத்தைப் பார்க்கும்போது

'தேவன் ஒருவரே'
THERE IS ONE GOD...

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

அது என்னுடைய தலையில்தான் விழ வேண்டும். சம்மட்டி கீழே தரையில் விழுவதற்கு சந்தர்ப்பமே கிடையாது. இப்படி மூன்று நான்கு முறை சம்மட்டி கழன்று என்னுடைய பக்கத்தில் விழுந்திருக்கிறது. நீதிமானுக்கு வரும் துன்பம் அநேகமாய் இருக்கும். கர்த்தர் அவைகளெல்லாவற்றிலும் நின்று அவனை விடுவிப்பார் என்ற வேத வசனப்படி என் தேவனுகிய கர்த்தர் என் சரீரத்தை அழிவுக்கு ஒப்புக் கொடுக்காமல் காத்துக் கொண்டார். தேவனுக்கு மகிமையுண்டாவதாக!

புதிய எருசலேம் சபையில் தேவனுகிய கர்த்தர் ஏழைஅடிமையை கூட்டி சேர்த்ததினிமித்தம் என்னுடைய வாழ்க்கையில் எண்ணுக் கடங்கா நன்மைகளை தேவன் செய்திருக்கிறார் செய்துகொண்டு வருகிறார். இந்த உலகத்தில் எத்தனையோ கிறிஸ்தவ சபைகள் இருக்கலாம். ஆனால் புதிய எருசலேமில் தேவன் வெளிப்படுகிறார். கர்த்தர் எனக்கு ஒரு வெளிப்படுத்தல் கொடுத்தார். ஒரு கிணற்றில் ஒரு ஸ்திரீ தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தாள். அங்கு மற்றொரு ஸ்திரீ தண்ணீர் இறைக்க அங்கு வருகிறாள். அவள் இவளிடம் எனக்குத் தண்ணீர் இறைக்க வாளி வேண்டும். அது எங்கு கிடைக்கும் என்று கேட்கிறாள். அதற்கு அந்த ஸ்திரீ இந்த வாளி புதிய எருசலேமில்தான் கிடைக்கும் வேறு எங்கும் கிடைக்காது என்று கூறுகிறாள். ஆண்டவருடைய ஜீவத் தண்ணீரை எடுக்க தேவனுடைய வார்த்தையை பருக புதிய எருசலேமில் சத்தியத்தை சத்தியத்தின்படி போதிக்கிறார்கள். இந்த போதனை வேறு எங்கும் கிடையாது. புதிய எருசலேமில் மட்டுந்தான் உண்டு என்று தேவன் எனக்கு வெளிப்படுத்தினார். கர்த்தருக்கு மகிமையுண்டாவதாக!

**Bro. Sundar Raj.**
N J C Madras.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   *28 (செவ்வாய்) மே 1991*
   *27 (வியாழன்) ஜூன் 1991*

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15/- (பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

6. புதிய எருசலேம் செய்திமலர் தேவைப்படுவோர் ரூ. 19/- (தனிப்பிரதி ரூ. 15/- தபால் செலவு ரூ. 4/-) அனுப்பி உடனே பெற்றுக் கொள்ளவும்.

   வெளிநாடு: ரூ. 50/- சில பிரதிகளே உள்ளன. பிரதிக்கு முந்துங்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at: PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph: 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 90 - June 1991



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் ... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும் அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4 : 11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத் 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுக்கொண்டு (அப் 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நி.நி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

ஜனங்கள் ஊக்கமாக ஜெபித்து, தேவ சித்தம் செய்யும் காலத்தில் நாம் இருக்கிறோம். ஜெபம் என்பது தேவனுடைய திட்டத்துக்குள் இருக்கிற காரியமாக இருக்கிறது. தேவன் உலகத்தை சிருஷ்டித்த பொழுதே அது முடிவுமட்டுமுள்ள காரியத்தை திட்டமிட்டுள்ளார். அந்தத் திட்டத்துள் நாம் ஜெபம் செய்வதும் உட்படும். தேவ ஜனங்கள் தேவனை அறிந்து,தேவன் விரும்புகிற பிரகாரம் ஜெபிக்கிறவர்களாக இருக்க வேண்டும். ஜெபம் என்று சொல்லும்பொழுது ஏதோ நெருக்கடி, ஆபத்து, துன்ப துக்கங்கள், நோய், பிணிகள் வரும்பொழுது ஜெபிக்கிறதை நான் சொல்லாமல், எப்பொழுதும் தேவ ஜனங்கள் ஜெபிப்பதும் உலகத்தில் என்ன நடைபெற வேண்டுமென்று நாம் விரும்புகிறோமோ, நமக்குத் தூண்டப்படுதோ அவைகளுக்காக நாம் ஜெபிக்கவும் தூண்டப்படுகிறோம் என்பதை மனதிற் கொண்டு தேவ சித்தம் இந்த உலகத்தில் நிறைவேற ஊக்கமாக தேவ ஜனங்கள் ஜெபிக்க வேண்டும். ஜெபத்திற்கு பதில் கொடுக்கிறதின் மூலமாகவே தேவன் உலகத்தில் கிரியை செய்வார், கிரியை செய்கிறார். நாம் ஜெபிக்கவில்லையென்றால் தேவன் கிரியை செய்யமாட்டார். உலகத்தில் நிகழும் எந்த ஒரு சம்பவத்தையும், தேவனும் நாமும் சேர்ந்தே நிகழ்த்த வேண்டுமென்று தேவன் திருவுளம் கொண்டுள்ளார். இவ்விதமாக தேவன் தம்முடைய திட்டத்தில் மனிதர்களாகிய நமக்கு பங்கு கொடுத்திருக்கிறார். இது மகா மேன்மையான காரியமாகும். ஜெபிக்க நேரமில்லை, ஜெபம் பண்ண மனமில்லை, ஜெபம் பண்ண அவசியமில்லை என்று எண்ணுகிறதைப் போல் ஆபத்தான வாழ்க்கை எதுவுமே இல்லை தேவன் நமக்காயிருக்கட்டும், உலகத்திற்காயிருக்கட்டும், பிறருக்காயிருக்கட்டும் எதையாவது தருகிறது ஜெபத்தின் மூலமாக என்று எழுதியுள்ளார். ஆனபடியினால் தங்களுடைய நன்மைக்காகவும், உலக இரட்சிப்புக்காகவும், திருச்சபையின் ஆசீர்வாதத்தின் நிறைவுக்காகவும், திருச்சபையின் தலைவர்களுக்காகவும், தேவ ஜனங்கள் எவ்விதமாய் திருச்சபை இருக்க வேண்டுமென்று விரும்புகிறார்களோ அவ்விதமாய் இருக்கும்படியாகவும் ஊக்கமாக ஜெபிக்கவும், கர்த்தருடைய வருகைக்கு நம்முடைய ஜெபத்தின் மூலம் ஆயத்தம் செய்யவும் விழிப்பாயிருப்போமாக. கர்த்தருடைய கிருபை உங்களெல்லார் மேலும் இருக்கும் எசேக். 22:30, 31.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR.)

# கைகளை வைக்குதல்

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, ''கைகளை வைக்குதல்'' என்பது தேவனுடைய கர்த்தர் தம்முடைய சரீரமாகிய சபைக்கு உபதேசிக்கும்படி கட்டளையிட்ட (மத். 28:19,20) மூல உபதேச வசனங்களில் ஒன்றாகக் காணப்படுகிறது (எபி, 6:1,2). எதற்காக கைகளை வைக்க வேண்டும், யார் யார் மேல் கைகளை வைக்க வேண்டும் என்பதற்கெல்லாம் வேதாகமத்தில் ஆதாரங்கள் காணப்படுகிறது. யாக்கோபு அந்திய காலத்தில் யோசேப்பின் பிள்ளைகளாகிய எப்பிராயீமையும், மனாசேயையும் ஆசீர்வதிப்பதற்காகத் தம்முடைய கரங்களை அவர்களுடைய தலையின் மேல் வைத்தார் (ஆதி. 48:14-20) என்று வாசிக்கிறோம். ஆரோன் இஸ்ரவேல் மக்களுடைய அக்கிரமங்களையும், அவர்களுடைய எல்லாப் பாவங்களையும் அறிக்கையிட்டு தன் இரண்டு கைகளையும் ஓர் வெள்ளாட்டுக்கடாவின் தலைமேல்வைத்து இஸ்ரவேல் மக்களுடைய பாவங்களை அந்த வெள்ளாட்டுக் கடாவின் மேல் சுமத்தி, அந்த வெள்ளாட்டுக் கடாவை வனாந்திரத்திற்கு அனுப்பி விடுவார் (லேவி. 16:21) என்று எழுதப்பட்டிருக்கிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் தம்மைத் தேடி வந்த மக்களுக்கு அற்புதமான சுகமளிப்பதற்காக தமது கைகளை அவர்கள் மேல் வைத்தார் (லூக். 13:13), ஆதிச் சபையில் அப்போஸ்தலர்கள், மூப்பர்களை (deacons) நியமிப்பதற்காக அவர்கள் மேல் தங்கள் கைகளை வைத்தார்கள் (அப். 6:1-7). இதனால் தேவ வசனம் விருத்தியடைந்தது. சீஷர்களுடைய தொகையும் எருசலேமில் பெருகிற்று. ஆசாரியர்களில் அநேகரும் விசுவாசித்துக் கீழ்ப்படிந்தார்கள். சமாரியாவில் சுவிசேஷகனாகிய பிலிப்பு மூலம் ஏராளமான மக்கள் மனந்திரும்பி ஞான ஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள், ஆனால் இவர்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொள்ளவில்லை. அப்போஸ்தலனாகிய பேதுருவும், யோவானும் அங்கே வந்து இந்த மக்களுக்காக ஜெபம் பண்ணி இவர்கள் மேல் தங்கள் கைகளை வைத்த பொழுது இவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொண்டார்கள் (அப். 8:12-17) என்றும் காண்கிறோம். அப்போஸ்தலனாகிய பவுல், சவுலாய் இருந்த காலத்தில் தேவனுடைய சபைகளைத் துன்பப்படுத்தி, தேவ ஜனங்களை சிறைச்சாலையில் அடைத்து சித்திரவதை செய்து கொண்டு வந்த காலத்தில், தேவனுடைய ஜனங்களை துன்பப்படுத்துவதற்காக தமஸ்கு பட்டணத்திற்கு போகும் வழியில் தேவன் சவுலைச் சந்தித்தார். இதனால் அவர் கீழே விழுந்து, இரண்டு கண்களும் பார்வையிழந்தவரானார். தேவன், இந்த சவுலுக்கு பார்வை கிடைக்கும்படியாகவும், பரிசுத்த ஆவி கிடைக்கும்படியாகவும் இவருக்காக ஜெபிப்பதற்கு அந்நாட்களில் தமஸ்குவில் வாசம் பண்ணின அனனியா என்ற சீஷனிடத்தில் ஆண்டவர் பேசினார். இந்த அனனியா கடந்துபோய் சவுல் தங்கியிருந்த வீட்டில் சவுலுக்காக சவுலின் தலையில் கைகளை வைத்து ஜெபம் பண்ணினார். சவுல் பார்வையடைந்து பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் பெற்றுக் கொண்டார் (அப். 9:17-18).

அப்போஸ்தலனாகிய பவுலையும் பர்னபாவையும் அப்போஸ்தல ஊழியத்துக்காக தேவன் பிரித்தனுப்ப சித்தங் கொண்டபொழுது அந்நாட்களில் பவுல் பர்னபா என்பவர்களுடன் தீர்க்கதரிசிகளாகவும் போதகர்களாகவும் ஊழியம் செய்து கொண்டிருந்த நீகர் என்னப்பட்ட சிமியோனும், மனாயீனும் ஜெபித்து இவர்கள் மேல் தங்கள் கைகளை வைத்தார்கள் (அப். 13:1-4) என்றும் வேதம் கூறுகிறது.

மேலும் நாம் பார்க்கும் பொழுது ஆவிக்குரிய வரங்களை பகிர்ந்து கொடுப்பதற்காகவும் கைகளை வைத்து ஜெபித்தார்கள் (I தீமோ 4:14, II தீமோ. 1:6). மேலே நாம் வாசித்த வேத வாக்கியங்களிலெல்லாம் தேவனால் அதிகாரம் பெற்றவர்கள் (கட்டளை பெற்றவர்கள்) இவ்வாறு கைகளை வைத்து ஜெபித்தார்கள் என்று பார்க்கிறோம். இந்நாட்களில் தேவனால் தேவனுடைய மனிதர்களால் கட்டளை பெறாத பலர் பிசாசுகளைத் துரத்துகிறோம், குணமாக்குகிறோம், வரங்களைத் தருகிறோம் என்று கூறி

மக்கள் தலைகளில் துணிகரமாய் கைகளை வைத்து ஜெபித்து பலவிதமான வேதனைகளுக்குள்ளாக்கிவிட்டார்கள். அநேகர் மாற்கு சுவிசேஷம் 16-ம் அதிகாரம் 17, 18 வசனங்களை ஆதாரங் காட்டி விசுவாசிக்கிற எல்லோரும் கைகளை வைக்கலாம் என்று எண்ணி ஏமாற்றங்களையும் அடைந்துள்ளனர்.

விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: முதலாவது, "என் நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்துவீர்கள்" என்பதாம். பிரதான ஆசாரியனாகிய ஸ்கேவா என்னும் ஒரு யூதனுடைய குமாரர் ஏழு பேர்கள் கர்த்தராகிய இயேசுவின் நாமத்தைச்சொல்லி பிசாசுகளைத் துரத்தினார்கள். நடந்தது என்னவென்றால் பொல்லாத ஆவியையுடைய மனுஷன் அவர்கள் மேல் பாய்ந்து, பலாத்காரம் பண்ணி அவர்களை மேற்கொள்ள அவர்கள் நிர்வாணிகளும் காயப்பட்டவர்களுமாகி அந்த வீட்டை விட்டே ஓடிப் போனார்கள் (அப். 19:13-16) என்று பார்க்கிறோம். இந்நாட்களிலும் அநேகர் இவ்விதமாய் தங்களுக்கு விசுவாசம் உண்டென்று நம்பி இயேசுவின் நாமத்தினால் பிசாசுகளைத் துரத்த முயன்று இரட்சிப்பின் வஸ்திரத்தை இழந்து சரீரத்திலும், ஆவியிலும் பலவிதமான தாக்குதலுக்குள்ளாகியுள்ளனர். இலங்கையில் (Sri Lanka) ஒரு ஊழியக்காரர் தன் உடன் ஊழியர் இருவருடன் ஒரு பிசாசு பிடித்த அம்மாவுக்காக ஜெபிக்க போயிருக்கிறார்கள். அந்த அம்மாவிடமிருந்த பிசாசு மிகவும் அகங்காரம் கொண்டு ஜெபிக்கச் சென்ற ஊழியர்களை எதிர்த்திருக்கிறது. உடனே ஊழியர்களில் முதன்மையானவர் தன்னுடைய அரையில் கட்டியிருந்த அகலமான தோல் பெல்ட்டை கழற்றி அந்த பிசாசு பிடித்த அம்மாவை சரியாக அடித்து விளாசி விட்டார். ஆவியும் அடங்கிவிட்டது. பின்னர் பாட்டுப் பாடி ஜெபம் பண்ணி ஆசீர்வாதம் கூறி முடித்து விட்டார்கள். இரவில் ஊழியர்கள் தங்கள் இடங்களுக்குச் செல்வதற்கு பஸ் வசதியில்லாதபடியால், சாப்பிட்டுவிட்டு அந்த வீட்டின் வராந்தாவில் படுத்துக் கொண்டார்கள். நள்ளிரவில் எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கும் நேரம், அந்த அம்மாவுக்குள் இருந்த அசுத்த ஆவி கிரியை செய்ய ஆரம்பித்தது. அவள் தன்னுடைய கையில் நீளமான தடிக்கம்பை எடுத்து வந்து தன்னை பெல்ட்டால் அடித்த ஊழியரை சரியாய் அடித்துப் புடைத்துவிட்டாள். அடியின் வேதனை தாங்க முடியாதபடி பெரிய ஊழியர் ஐயோ என்னைக் காப்பாற்றுங்களேன் என்று அலறினார். இவர் போட்ட சத்தத்தில் உடன் படுத்திருந்த ஊழியர்கள் எழுந்து தூரமாய் ஓடிப்போய் நின்று கொண்டார்கள். அடிபட்ட போதகர்: டேய் கள்ளப் பசங்களா ஒரு பிசாசு என்னை அடிக்கும்பொழுது நீங்கள் இப்படிப் பார்த்துக் கொண்டு நிற்கிறீர்களே உங்களுக்கு இது நன்றாயிருக்குதா என்று கேட்டார். அதற்கு அவர்கள், நீர் பிசாசை அடித்தீர், இப்பொழுது பிசாசு உம்மை அடிக்கிறது நாங்கள் என்ன செய்வோம் என்று பதில் கூறினார்கள். இதற்கிடையில் சப்தம் கேட்டு விழித்துக் கொண்ட அந்த அம்மாவின் கணவர் ஓடிவந்து அவளிடமிருந்த தடியை பிடுங்கி எறிந்துவிட்டு மனைவியை வீட்டிற்குள் இழுத்துச் சென்றுவிட்டார். அடிபட்ட ஊழியக்காரர் தன்னுடைய உடன் ஊழியர்களிடம் "டேய் இந்த சம்பவங்களை வெளியே எங்காவது சொன்னீர்களேயானால் நான் பொல்லாதவனாய் மாறி விடுவேன் ஜாக்கிரதை என்று மிரட்டினாராம்.

நாங்கள் மலேசியா சென்றிருந்தபொழுது ஒரு ஊழியர் தன்னுடைய ஊழியத்தில் ஏற்பட்ட ஒரு தோல்வியைக் கூறி ஆண்டவர் இப்படி ஏன் என்னைக் கைவிட்டார் என்று கேட்டுக் கொண்டிருந்தார். இவர் இரட்சிக்கப்பட்ட ஒரு விசுவாசி. ஒருநாள் ஊழியரொருவர் இவருக்கு தீர்க்கதரிசனமாய், "உன்னை என்னுடைய ஊழியத்துக்கு அழைத்துள்ளேன், உன்னுடைய கரத்தினால் அற்புத அடையாளங்களைச் செய்வேன், உன்னைக் கொண்டு மரித்தோரையும் எழுப்புவேன்" என்று கூறினாராம். இப்படிக் கள்ளத் தீர்க்கதரிசனம் சொல்லுகிற அநேகர் உண்டு. இவரும் அந்த வார்த்தைகளை விசுவாசித்து கர்த்தருடைய ஊழியத்துக்கு தன்னை ஒப்புக்கொடுத்து தேவனுடைய ஊழியத்தை செய்து வரும்போது, ஒரு அம்மாவுக்கு கொடிய வியாதி (நோய்) ஒன்று தாக்கியது. இவரை ஜெபிக்கும்படி அழைத்திருக்கிறார்கள். இவரும் இதை தேவனுடைய அழைப்பு என்றெண்ணி தன்னுடனிருந்த ஒரு விசுவாச சகோதரரையும் அழைத்துச் சென்று ஜெபித்

தார்கள். ஏற்கெனவே கிடைத்துள்ள வெளிப்படுத்தல்களை நினைவிற்கொண்டு கர்த்தர் நமது கரத்தினால் இன்று பெரிய காரியங்களைச் செய்வார் என்று விசுவாசித்தார். அந்த அம்மா மேல் கைகளை வைத்து ஜெபித்தார். ஆனால் அந்த அம்மாவின் வியாதியில் எந்தவிதமான மாற்றமும் கிடையாது. வியாதி கூடிற்று. இருவரும் வீட்டிற்கு வந்துவிட்டார்கள், இரு தினங்களில் அந்த நோயாளி மரித்துப் போனதாக செய்தி வந்திருக்கிறது. மீண்டும் இவர் தனக்கு சொல்லப்பட்ட வெளிப்படுத்தல்களை நினைவு கூர்ந்தார். ''உன்னைக் கொண்டு மரித்தோரையும் உயிரோடே எழுப்புவேன்'' என்று தேவன் சொன்னாரே, இந்த அம்மாவை மரணத்தினின்று உயிரோடே எழுப்புவதற்காகத்தான் வியாதி நேரத்தில் தேவன் நம்முடைய ஜெபத்தைக் கேட்கவில்லை என எண்ணிக் கொண்டு, முன்பு கூட்டிச் சென்ற நண்பனையும் அழைத்துக் கொண்டு, மரித்துப்போன அந்த அம்மாவின் வீட்டிற்குள் பிரவேசித்து, அழுது புலம்புகிற யாவரையும் வெளியே அனுப்பி விட்டு (மாற். 5:38-40), இவர்கள் இருவரும் பிரேதத்தின் அருகில் உட்கார்ந்து விசுவாசத்தோடு போராடி ஜெபித்திருக்கிறார்கள். ஒரு மணி நேரம் ஜெபித்தும் சடலம் அசையவேயில்லை. இவர்கள் ஏமாற்றமடைந்து வெட்கி வீட்டிற்கு வந்துவிட்டார்களாம். இப்படி ஏன் ஆண்டவர் செய்ய வேண்டும்? நான் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறேன், அவருடைய நாமத்தினால்தான் இவைகளைச் செய்தேன், பின்னர் ஏன் கர்த்தர் என்னுடைய ஜெபத்தைக் கேட்கவில்லை என்று அங்கலாய்ப்போடே கேட்டார். விளக்கம் கொடுத்தோம். இப்படி அநேகருடைய அனுபவங்கள்.

இரண்டாவதாக, விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன, நவமான பாஷைகளைப் பேசுவார்கள் என்றெழுதியிருக்கிறபடியால் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிற எல்லாருக்குள்ளும் பரிசுத்த ஆவியானவர் இருக்கிறார். அவர்கள் சொல்லுகிற "Praise the Lord Jesus, "Glory to God, 'Halleluyah' என்ற வார்த்தைகளெல்லாம் நவமான பாஷைகள்தானே என்று சிலர் கூறுகிறார்கள்; இன்னும் சிலர் அந்த நவமான பாஷைகள் ஆதிச்சபையின் காலத்தில், கர்த்தரை ஏற்றுக் கொள்வதற்காக வசனத்தை உறுதிப்படுத்த யூதர்களிடமும், புறஜாதிகளிடமும் இந்த அடையாளங்களை வெளிப்படுத்தினார். இப்பொழுது நாம் நிறைவடைந்து விட்டோம் ஆகையால் குறைவானவைகள் ஒழிந்து போய் விட்டது (I கொரி. 13:9-10) என்று கூறுகின்றனர். இன்னும் சிலர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறார்கள், ஆனால் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெறவில்லை. அவர்கள் எப்படி நவமான பாஷைகளைப் பேசுவார்கள். இவர்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றால்தான் நவமான பாஷைகள் பேச முடியும்.

மூன்றாவதாக, இவர்கள் சர்ப்பங்களை எடுப்பார்கள் (மாற் 16:18) என்று எழுதியிருக்கிறது. அப்போஸ்தலனாகிய பவுலுடைய கையில் விஷப் பூச்சி ஒன்று கடித்திருந்தது. கடித்துக் கொண்டிருந்த அந்த விஷப்பூச்சியாகிய பாம்பிற்கு பயப்படாமல், அதை தீயினுள் உதறிவிட்டார் (அப். 28:3-6). ஆனால் இந்நாட்களில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்களில் பெரும்பகுதி மக்கள் பாம்பைக் கண்டாலே பயந்து நடுங்குகின்றனர். அப்படியானால் இவர்களுடைய விசுவாசம் எத்தகையது? இவர்கள் விசுவாசிக்கவில்லையா? விசுவாசித்தால் பாம்பைக் கையில் எடுக்க வேண்டுமே.

நான்காவதாக, இவர்களில் காணப்படும் அடையாளம் சாவுக்கேதுவான யாதொன்றைக் குடித்தாலும் அவர்களைச் சேதப்படுத்தாது (மாற். 16:18) என்பதாகும். இன்றைக்கு எத்தனையோ விசுவாசிகள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள் விஷமருந்தைக் (Poison) குடித்து செத்திருக்கிறார்களே, இது என்னவாகும்?

ஐந்தாவதாக, வியாதியஸ்தர் மேல் கைகளை வைப்பார்கள், அப்பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள் (மாற். 16:18) என்பதாகும். இந்த வேத பாகத்தையே ஆதாரமாக வைத்துக் கொண்டு, இந்நாட்களில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறோம் என்று சொல்லுகிறவர்களில் பெரும் பகுதியினர் எல்லோருடைய தலைகளிலும் கை வைக்க ஆரம்பித்து விட்டனர். மாற். 16:17,

18ன் விளக்கமாவது பிசாசுகளைத் துரத்துவதற்கும், நோய்களை குணமாக்குவதற்கும் சர்ப்பங்களை எடுப்பதற்கும், விஷம் (Poison) குடித்து சாகாமல் இருப்பதற்கும், கர்த்தர் அவ்வப்பொழுது பேச வேண்டும். அவ்வார்த்தைகளை அப்படியே விசுவாசித்து, இயேசுவின் நாமத்தில் செயல்பட வேண்டும். கர்த்தர் அங்கே கிரியை செய்து தம்முடைய நாமத்தை மகிமைப்படுத்துவார். ''பிதாவானவர் செய்யக் குமாரன் காண்கிறதெதுவோ, அதையேயன்றி வேறொன்றையும் தாமாய் செய்யமாட்டார். அவர் எவைகளைச் செய்கிறாரோ அவைகளைக் குமாரனும் அந்தப்படியே செய்கிறார்'' (யோ. 5:19) என்று அருமை ஆண்டவர் கூறியிருக்கிறார் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறோம் என்று சொல்லுகிறவர்களில் பெரும் பகுதியினர் தங்களுக்கு பெயர் வரவேண்டும் என்று விரும்பி பல காரியங்களைச் செய்கிறபடியால் தெய்வீக காரியங்களில் தோல்வியடைகின்றனர். மேலும் இந்த சத்தியங்களில் நாம் அறிந்து கொள்ள வேண்டிய ஒரு காரியம், விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளம் என்று எழுதியிருப்பதைக் காண்கிறோம். ''அந்நிய பாஷைகள் விசுவாசிகளுக்கு அடையாளமாயிராமல், அவிசுவாசிகளுக்கு அடையாளமாயிருக்கிறது. தீர்க்கதரிசனமோ அவிசுவாசிகளுக்கு அடையாளமாயிராமல் விசுவாசிகளுக்கு அடையாளமாயிருக்கிறது'' (I கொரி. 14:22) என்று அப்போஸ்தலனாகிய பரிசுத்த பவுல் எழுதுகிறார். மனிதனோடு தேவன் வாசம் செய்யமாட்டார் என்று சொல்லுகிற ஓர் அவிசுவாசிக்கு மனிதனுடன் தேவன் வாசமாயிருக்கிறார் என்பதை நிரூபிப்பதற்காக அந்நிய பாஷை என்னும் அடையாளத்தை தேவன் கொடுக்கிறார். இந்த அடையாளம் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்ட எல்லோரிடமும் காணப்படும் (காணப்பட வேண்டும்) விதிவிலக்கு இல்லை (ஏசா. 28:11-12). ஆனால் தீர்க்க தரிசனம் சொல்லுதல் விசுவாசிகளுக்கு அடையாளமாயிருக்கிறது (I கொரி. 14:22) என்று பவுல் கூறுகிறார். அதாவது தேவனிடம் நம்பிக்கையாயிருக்கும் ஒரு விசுவாசி அதிகமாய் தேவனிடம் நெருங்கி ஜீவிக்கிறார், காத்திருந்து ஜெபிக்கிறார் என்பதற்கு அடையாளமாக தேவன் அப்படிப்பட்டவர்களுக்கு வரங்களைக் கொடுக்கிறார். அந்த வரங்கள் எல்லோருக்கும் ஒரே மாதிரியான வரங்களல்ல, ''எல்லோரும் அப்போஸ்தலர்களா? எல்லோரும் தீர்க்கதரிசிகளா? எல்லோரும் போதகர்களா? எல்லோரும் அற்புதங்களைச் செய்கிறவர்களா? எல்லோரும் குணமாக்கும் வரங்களையுடையவர்களா? எல்லோரும் அந்நிய பாஷைகளைப் பேசுகிறார்களா? எல்லோரும் வியாக்கியானம் பண்ணுகிறார்களா?'' (I கொரி. 12:29-30) என்று எழுதியிருப்பதால் எல்லோருக்கும் ஒரே மாதிரியான வரத்தைக் கொடாமல் வெவ்வேறு வரங்களை (I கொரி 12:7-11) அடையாளமாய் கொடுக்கிறார். இவ்விதமான தெய்வீக வரங்களைத் தங்களில் பெற்றுக் கொண்டவர்களால் நடக்கும் அடையாளங்களே மாற்கு 16:17-18ல் கூறியிருப்பதாகும். காதானது சரீரத்தின் அவயவமாயிருந்தும், கண் செய்கிற வேலையை நானும் செய்வேன் என்று முயற்சித்து தோல்வியடைவது போலவே இந்நாட்களிலும் பல ஆவிக்குரிய மக்கள் தோல்வியடைகின்றனர்.

ஒரு நாள் குமரி மாவட்டத்தில் நாங்கள் ஊழியத்திற்காக சென்றிருந்த பொழுது வேறொரு ஆவிக்குரிய சபையில் கன்வென்ஷன் நடந்தது. கன்வென்ஷனுக்கு சென்னையிலிருந்து ஒரு ஆவிக்குரிய தலைவர் அழைக்கப்பட்டிருந்தார். இவர் செய்தி முடிந்ததும் காரில் சென்று விட்டார். இவரிடம் ஜெபிப்பதற்காக ஒரு கூட்டம் மக்கள் நின்றிருந்தனர். பிரசங்கியார் வருவார் என்று எதிர்பார்த்திருந்த மக்களுக்கு அது ஏமாற்றம் போலாகி விட்டது. அந்த சபையின் போதகர் எங்களிடம் வந்து சகோதரரே (Brother), நீங்கள் இந்த நோயாளிகளுக்கெல்லாம் கொஞ்சம் ஜெபிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். நானும் கர்த்தரிடம் ஜெபித்து அனுமதி பெற்று அங்கு முழங்காலில் நின்று கொண்டிருந்த நோயாளிகளுக்காக ஜெபித்து ஒவ்வொருவருக்கும் தேவ ஆலோசனைகளைக் கொடுத்து வந்தேன். இறுதியாக, ஒரு பாட்டியம்மாவுடைய தலையில் கை வைத்து ஜெபிக்க என்னுடைய வலது கரத்தை நீட்டினேன். நீட்டப்பட்ட கை தானாக பின்னுக்கு வந்தது. நீண்ட நேரம் ஜெபித்தபடியால் கையில் இரத்த ஓட்டம் குறைந்து இப்படியொரு பலவீனம் ஏற்படுகிறதோ என்றெண்ணி இடது கையினால் என்னுடைய வலது கையை நன்றாக தடவிவிட்டு மீண்டும் அந்த பாட்டியம்மா தலையில் என்னுடைய வலது கையை வைக்க நீட்டினேன். மீண்டும் என்னுடைய கை பின்னாக

வந்துவிட்டது. இது என்னக் காரணம் என்று சிந்தித்து, ஜெபித்த பொழுது ''இவளுடைய தலையில் நீ கை வைக்காதே. இவளும் இவளுடைய வீட்டாரும் சபிக்கப்பட்டவர்கள் இவர்களை நான் ஆசீர்வதிப்பதில்லை'' என்று எனக்குள்ளிருந்து கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். நான் பின்வர் ஜெபிக்க முயற்சிக்கவில்லை. அந்த இடத்தைக் கடந்து வந்துவிட்டேன். சபையின் போதகர் இவைகளைக் கவனித்துக் கொண்டு இருந்திருக்கிறார். அவர் என்னிடம் வந்து என்ன பிரதர் அந்த அம்மாவுக்கு ஜெபிக்கவில்லையே என்று கேட்டார். ஆவியானவர் ஜெபிக்கக் கூடாது என்று சொன்னதை அவரிடம் கூறினேன். அவர் ஆச்சரியப்பட்டார். இந்தக் குடும்பத்தினர் தேவனுடைய ஊழியர்களுக்கும் இங்கு வருகிற தேவனுடைய பிள்ளைகளுக்கும் பில்லிசூனியம் செய்பவர்கள். புதிதாக வரும் ஊழியர்களிடம் ஜெபம் பண்ணிக் கொள்ளவும் வருவார்கள். ஆனால் தேவன் உங்களிடம் இவர்களைப் பற்றி வெளிப்படுத்தினதற்காக நான் தேவனை ஸ்துதிக்கிறேன் என்று கூறினார். ''ஒருவன் மேலும் சீக்கிரமாய் கைகளை வையாதே; மற்றவர்கள் செய்யும் பாவங்களுக்கும் உடன்படாதே. உன்னை சுத்தவானாகக் காத்துக் கொள்'' (I தீமோ. 5:22) என்று அப்போஸ்தலனாகிய பவுலும் கூறியிருக்கிறாரே. இந்த வேத பாகம் சபை நீக்கம் செய்தவர்களை சீக்கிரமாய் மன்னித்து தலையில் கை வைத்து அங்கீகரிக்காதே என்கிறார். இப்படியிருக்க, இந்நாட்களில் சில பெண்களுக்கு ஆண்கள் தலையில் கை வைக்க வேண்டும் என்று ஆசை. சில ஆண்களுக்கு பெண்கள் தலையில் கை வைக்க வேண்டும் என்று ஆசையில் சுற்றித் திரிந்து கைகளை வைத்து அநேகர் சாத்தானுடைய பிடியில் அகப்பட்டுக் கொண்டார்கள்.

ஒரு சம்பவத்தை இங்கே குறிப்பிடுகிறேன். ஒருநாள் ஒரு கணவனும் மனைவியும் தங்களுடைய 14 வயது நிரம்பிய மகனை மாலை வேளையில் ஆலயத்துக்கு அழைத்து வந்தார்கள். என்ன விஷயம் என்று கேட்டதற்கு, ஐயா, இவன் எங்க மகன், இவனுக்கு ஒரு வயிற்று வலி வந்து பலமாதங்களாக கஷ்டப்படுகிறான். மருத்துவர்களால் குணமாக்க முடியவில்லை. எல்லா ஜெபப்பிறைகளுக்கும் போனோம் முடியவில்லை. இங்கு ஜெபிக்கும்படியாக அழைத்து வந்தோம் என்று கூறினார்கள். பையன் வந்ததுமே படுத்துவிட்டான். வயிற்று வலி வரும்போதெல்லாம் குடலை வெளியே இழுப்பது போல் இருக்குமாம். இவர்களுடைய காரியங்களை கேட்டுவிட்டு இவர்களுக்கான ஆலோசனையைக் கூறிக் கொண்டிருக்கும் பொழுது ஆவியினால் ஏவப்பட்டு இப்படிச் சொன்னேன்.

இந்நாட்களில் அநேக பெற்றோர்கள் செய்கிற தவறுகளினாலும் பிள்ளைகள் தண்டிக்கப் படுகிறார்கள் (யோ. 9:1,2). அப்படிப்பட்ட பாவங்கள் பெற்றோர்களிடம் காணப்படுமானால் அவைகளை தேவ சமுகத்தில் அறிக்கை செய்து விட்டுவிட வேண்டும். இந்நாட்களில் பலர் ஞானமில்லாமல் சில நோயாளிகளுக்கு அவர்களுடைய சரீரத்தில் கைவைத்து ஜெபிக்கிறார்கள். அப்படி ஜெபிக்கும்போது அவர்களிடமுள்ள பிசாசு விலகி இவர்களையோ, இவர்களுடைய பிள்ளைகளையோ தாக்கி இவர்கள் கைவைத்து ஜெபித்த நபரிடமுள்ள அதே பலவீனத்தை இவர்களில் உண்டு பண்ணி விடுகிறது என்றும் கூறினேன்,

இந்த வார்த்தை என்னுடைய வாயிலிருந்து வெளிவந்ததும் பையனுடைய தாயார் ஐயா, எனக்கு இப்பொழுது நீங்கள் கூறின வார்த்தைகளைக் கேட்டதும் ஒரு காரியம் ஞாபகத்திற்கு வந்தது. அதாவது ஒரு நாள் மாலையில் நான் வேலையிலிருந்து வீட்டிற்கு வரும்பொழுது எங்கள் வீட்டிற்கு அருகேயுள்ள வீட்டில் தாத்தா ஒருவர் வயிற்று வலியால் மிகவும் துடிதுடித்துக் கொண்டிருந்தார். என்னைக் கண்ட அவர் மகளே, கொஞ்சம் என் வயிற்றை தடவி விடு என்றார். நானும் தாத்தாவுடைய பரிதாப நிலையைக் கண்டு அவருடைய வயிற்றை தடவிக் கொடுத்தேன். மகளே, எனக்கு இப்பொழுது சிறிது ஆறுதலாக இருக்கிறது. நீ கொஞ்சம் ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டு தடவினால் எனக்கு நன்றாக சுகமாகிவிடும் என்று கேட்டுக் கொண்டார். நானும் உற்சாகமாய் ஸ்தோத்திரம் சொல்லி இயேசுவின் இரத்தம் ஜெயம் என்று கூறி ஜெபம் செய்து கொண்டு தாத்தாவின் வயிற்றை தடவினேன். சில வினாடிகளில் தாத்தாவுக்கு அற்புத சுகம் கிடைத்துவிட்டது.

ஆனால், ஐயா நீங்கள் சொன்னதுபோல், அன்றைய தினம்தான் என்னுடைய மகனுக்கு இந்த வயிற்றுவலி ஆரம்பமானது. அந்த தாத்தாவைப் போல் வயிற்றுவலியில் உருளுகிறானே என்று நாங்கள் கூறிக் கொள்வோம். ஆனால், ஏன் இந்த வலிவந்தது என்பதை நாங்கள் அறியவில்லை. யாரும் இதுவரை சொல்லவும் இல்லை என்று பையனுடைய தாயார் கூறி வருந்தினார்கள். தேவனுடைய அதிகாரமின்றி இந்த நோயாளியின் வயிற்றில் கைவைத்து ஜெபித்தது தவறு தேவ சமூகத்தில் உங்கள் குறைகளை அறிக்கையிடுங்கள். தேவன் உங்கள் பாவத்தை மன்னித்து உங்கள் பையனுக்கு நற்சுகம் அளிப்பார் என்று கூறினோம். அந்த அம்மாவும் ஒத்துக் கொண்டு உடனே தன்னுடைய குறையை முழங்காலில் நின்று அறிக்கை செய்தார்கள். நான் கை வைத்து ஜெபித்தேன். என்ன ஆச்சரியம்! பையனுக்கு உடனடியாக பூரணசுகம் கிடைத்தது. கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

ஆகையால் சகோதரனே, சகோதரியே, ஒருவர் மேலும் சீக்கிரமாய் உன் கைகளை வைக்காதே; மற்றவர்கள் செய்யும் பாவங்களுக்கு உடன்படாதே (1 தீமோ. 5:22). உனக்கு அடாத ஊழியத்தில் தலையிடாதே. அதிகாரமுடையவர்களே கைகளை வைக்கலாம். தேவன் கிரியை செய்வார்.

"அப்பொழுது உபவாசித்து ஜெபம் பண்ணி அவர்கள் மேல் கைகளை வைத்து அவர்களை அனுப்பினார்கள்" (அப். 13:3)

## முகம்மது மார்க்கத்தை அறிந்து கொள்ளுதல்

(தொடர்ச்சி)

மேலும் இஸ்லாமியர்கள் ஏதோ ஒரு காலத்தில் முஸ்லிம் ஒருவர் சொன்ன வசனத்திற்கு ஒப்பான வசனம் யாதோ ஒரு கிறிஸ்தவன் சொல்ல முடியவில்லையென்றும், பேச்சிலே இவர் ஜெயித்துவிட்டார்கள்என்றும் பெருமையாய் பேசிக் கொள்வார்கள். அப்படியே இந்துக்களும் அமெரிக்காவில் போய் ஒரு இந்து பேசி ஜெயித்து விட்டார் என்று பெருமையாய் பேசிக் கொள்வதுண்டு. இப்படி இவர்கள் பெருமை பாராட்டி நடக்க யாதொரு காரணமும் இல்லை. அந்த சமயம் சரியான ஒரு தேவனுடைய மனிதன் அங்கே இருந்திருந்தால் இவர்கள் முறியடிக்கப்பட்டிருப்பது உறுதி. இப்படி சொல்லி வாக்குவாதம் பண்ணின எவ்வளவோ முஸ்லிம்கள் எம்மிடத்தில் வந்து தோல்வியடைந்து போனதுண்டு. அதற்கு ஒரு உதாரணமும் சொல்கிறேன். 27-11-1989 அன்று பம்பாயில் சீதா கேம்ப், டிராம்பே, பம்பாய்-88 (Cheeta Camp, Trombay, Bombay-88) என்ற இடத்திலிருந்து இஸ்லாமியர்கள் பிரசாரக் குழு (Islamic Propagation Council) என்றதொரு இயக்கம் "நம் வாழ்க்கையின் வழிகாட்டி" என்ற தலைப்பில் இயேசுநாதர், புத்தர், காரல்மார்க்ஸ், முகம்மது நபி, திருவள்ளுவர் ஆகியோரைப் பற்றி பிரசித்தப்படுத்த நாங்கள் சர்வமதக் கூட்டம் ஒன்றை ஏற்பாடு பண்ணியிருக்கிறோம். ஆனபடியினால் "இயேசுநாதர் நம் வாழ்க்கையின் வழிகாட்டி" என்ற தலைப்பில் பேச நீங்கள் வர வேண்டும் என்று எனக்கு அழைப்பு கொடுத்தார்கள். லெட்டர் மூலமாகவும் அழைப்பு கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இவ்விதமான கூட்டங்களுக்குப் போக நான் பிரியப்படுகிறதில்லை, எனவே வேறு யாரையாவது அழைத்துக் கொள்ளுங்கள் என்று பதில் சொன்னேன். பம்பாயில் போல்டு இந்தியா (Bold India) என்றதொரு தமிழ்தினசரி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அதன் நிருபர் முத்துராமன் என்பவரும், இவர்களுமாக மறுபடியும் என்னை வந்து சந்தித்து நீங்கள் கண்டிப்பாக வந்து இயேசுநாதரைப் பற்றி பேசவேண்டும், அப்படியென்றால் தானே பிறமதத்தைப் பற்றி நாங்களும் அறிந்துகொள்ள முடியும் என்றெல்லாம் என்னோடு சொன்னார்கள்.

பொதுவாக முஸ்லிம்கள் துஷ்ட ஜனங்கள்; ஆவிக்குரிய காரியத்துக்கும் இவர்களுக்கும் சம்பந்தமேயில்லே. இவர்கள் மத்தியில் போய்ப் பிரசங்கம் பண்ணி பிரயோஜனம் இல்லே என்று எண்ணி, எனக்கு போதுமான நேரமில்லேயென்று பதில் கொடுத்தேன். ஆனாலும் அவர்கள் மறுபடியும் ஒரு வட்டரோடு 14-12-89 அன்று வந்து என்னே சந்தித்து அழைப்பு கொடுத்தார்கள். அப்படி அழைப்பு கொடுக்கும்போது இவர்கள் நமக்கு ஒரு சவால் விடுகிறதுபோலச் செய்கிறார்கள் என்று எனக்குத் தெரிய வந்தது. சரி எப்படி இருந்தாலும் இயேசுநாதரைப் பற்றி இரண்டொரு வார்த்தை சொல்ல ஒரு சந்தர்ப்பம் உண்டாகும். இந்த துஷ்டசந்ததி ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் நாம் இந்த சந்தர்ப்பத்தை அலட்சியம் பண்ணாமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்; இல்லாவிட்டால் அலட்சியப் படுத்துவதினால் தாங்கள் ஜெயித்து விட்டதாக இவர்கள் சொல்ல வழி உண்டாகுமே என்று அறிந்து சரி நான் வருகிறேன் என்று சொன்னேன். அந்தப் பிரகாரம் 17-12-'89 ஞாயிறு மாலே 5-00 மணிக்கு ஐடியல் ஸ்கூல் மைதானம், D. செக்டர், சீதா கேம்ப், பம்பாய்-400 088 (IDEAL SCHOOL GROUND. D. SECTOR, CHEETA CAMP, BOMBAY-88) என்கிற இடத்தில் நடைபெறும் கூட்டத்திற்கு வர வேண்டுமென்று அனுமதி பெற்றுக் கொண்டார்கள்.

அப்பொழுது நான் இந்த முன்னறிவிப்பைக் கொடுத்தேன். நான் கடைசியில் பேசுவேன். அதற்கு முன் மற்ற மதத் தலேவர்கள். பேசட்டும் என்றேன். சரி என்று ஒப்புக் கொண்டார்கள். அந்தப் பிரகாரம் 17-12-89 மாலே 5-00 மணிக்கு நானும், உடன் ஊழியர்களும், சபை மக்களனேவருமாக மைதானத்திற்கு போய்ச் சேர்ந்தோம். ஆனல் இவர்கள் எந்த ஏற்பாடும் செய்யாமல் சுமார் 2-00 மணி நேரம் எங்களே காக்க வைத்து விட்டார்கள். சுமார் 7-00 மணிக்கு கூட்டம் ஆரம்பமானது. முஸ்லிம் இயக்கப் பேச்சாளராக யார் வருகிறார் என்று கேட்ட பொழுது செம்பூரிலுள்ள பஷீர் அகமது என்று தெரிவித்தார்கள். பின்பு விளம்பர நோட்டீஸில் நான் பார்க்கும் போது S. N. சிக்கந்தர் என்ற ஒரு இஸ்லாமிய பேச்சாளர் வரப் போகிறார் என்று தெரிய வந்தது. சரி வரட்டும் என்று நாங்களும் சென்றிருந்தோம். முஸ்லிம் போதகர் Mr. சிக்கந்தருக்குப் பதிலாக அவரது பிரதிநிதி ஒருவர் திருச்சியிலிருந்து விமானம் மூலமாக தாமதமாக வந்து சேர்ந்தார். எப்படியும் கூட்டம் ஆரம்பமாகிவிட்டது. கூட்டத்தில் பேசும்படியாக வந்திருந்தவர்கள்: C. ராகவன் B.Com., M.B.A., செயலர், டாக்டர் அம்பேத்கார் இயக்கம், தாராவி; சகோ. V. S. பாலசுப்பிரமணியம், முன்னாள் செயலர், பம்பாய் தமிழ்ச் சங்கம்; சகோ. P. வெங்கடாசலம் B.Sc., முன்னாள் தலேவர், தமிழ் இலக்கிய பேரவை, பம்பாய் ஆகியோர் வந்திருந்தனர். கூட்டத்தில் ஒலி ஒளி நாடா பதிவு (VIDEO) செய்வதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்ததையும் கண்டேன்.

கூட்டத்திற்கு சில நிபந்தனேகள் விதிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொருவரும் தங்களுக்கு கொடுக்கப்பட்ட தலேப்பில் பேச வேண்டும் என்றும், பிற மதத்தைப் பற்றி எந்தக் காரியமும் பேசக் கூடாது என்று அறிவிக்கப்பட்டு ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது. முதலாவது C. ராகவன் புத்தரைப் பற்றி பேசினர். அதன் பின்பு பாலசுப்பிரமணியம் பேசினர். பின்பு சகோ. P. வெங்கடாசலம் காரல்மார்க்ஸை பற்றிப் பேசினர். இடைவெளியாக சுமார் 10 அல்லது 15 நிமிடம் விடப்பட்டது. அப்பொழுது இஸ்லாமிய சங்கத்தின் செயலரும், தலேவரும் என்னிடத்தில் வந்து, இடைவெளி முடிந்ததும் நீங்கள் முதலாவது பேசி விடுங்கள் ஜனங்கள் உங்களுடைய பிரசங்கத்தைக் கேட்க ரொம்ப வாஞ்சையாயிருக்கிறார்கள் என்றார். அப்பொழுது நான்: இல்லேயே, நான் கடைசியில் பேசுகிறேன் என்று அல்லவா சொன்னேன், ஆகவே கடைசியில் பேசுகிறேன் என்றேன். இல்லே, நீங்கள் முதலில் பேசுங்கள் என்று சொல்லி என்னே பிகு பண்ண ஆரம்பித்தார்கள். ஏதோ அவர்கள் தந்திரம் கையாடுகிறார்கள், எப்படியும் இருக்கட்டும் வந்து விட்டோம்; இவர்கள் ஒழுங்கற்ற மதக்காரர்கள் என்று நாம் அறிவோம்; ஒரு இந்து விஷயத்திலாவது மனச்சாட்சி உண்டு. இவர்கள் மனசாட்சிக்கு விரோதமாக ஜீவிக்கிற மக்கள் என்று நான் அறிந்திருந்தபடியால், பேச ஆரம்பித்தேன்.

முதலிலேயே ''அல்லேலூயா'' என்று இடி முழக்கத்துடன் கூட பேச ஆரம்பித்தேன். விடியோ, ஆடியோ கேசட்டுகள் இயங்கிக்

கொண்டிருந்தன. பேசும்படி கொடுக்கப்பட்ட நேரம் 30 நிமிடமாக இருந்தது. நான் ஏற்கெனவே சொன்னேன், 30 நிமிடத்தில ஒரு செய்தியை அவ்வளவு திறமையாக பேச முடியாது என்று, இல்லை; அவ்வளவுதான் நேரம் என்று சொல்லியிருந்தார்கள். முன்னமே பேசினவர்கள 5 நிமிடம், 10 நிமிடம், 20 நிமிடங்களில் தங்கள் பேச்சை முடித்துக் கொண்டார்கள். நான் பேச ஆரம்பித்து இறைவனின் சிருஷ்டிப்பையும், மனித சிருஷ்டிப்பின் மேன்மையையும் எடுத்துக் கூறி, மனிதன் ஒருவனுக்கே மதம, சமுதாயம், கொள்கை, சட்டம், நீதி, நியாயங்கள் எல்லாம தேவைப்படுகிறது என்றும், மனிதன் இறைசாயலில சிருஷ்டிக்கப்பட்டவன். எனவே இவனுக்கு வழிகாட்டியாக இருக்கிறவர் மாதிரியாக இருக்க வேண்டும், அந்த மாதிரி, கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என்றும் அழகாக பேசி தேவ ஆவியானவரின் வல்லமையோடு கூட்டம் நடந்து கொண்டிருக்கும்போது, முஸ்லிம் மக்களில் பெரும்பான்மையோர், விசேஷமாக வாலிபர்கள் மிக வாஞ்சையோடு கேட்கவும், வரவேற்கவும், சாயவும ஆரம்பித்தார்கள். இதற்குள்ளாக சங்கச் செயலர் என்னிடத்தில் சீட்டு ஒன்றை நீட்டினார். இன்னும் 5 நிமிஷந்தான இருக்கிறது முடித்து விடுங்கள என்று அதில் எழுதியிருந்தது. எனக்கு ஒரே சிரிப்பு. என்றாலும் சுவிசேஷத்தை மகிமைப்படுத்தி முடித்தேன்

அடுத்தபடியாக, முஸ்லிம் போதகர் ஆரம்பித்தார். அவருக்கு ஏற்கெனவே வயிற்றெரிச்சல். இயேசு கிறிஸ்து தேவ குமாரன் ஆனபடியால் அவர் சரியாக ஜீவித்தார்; முகம்மது நபி மனிதன் ஆனபடியால் முகம்மது நபியைப் பாருங்கள், குரானைப் பாருங்கள இங்கே இருக்கிற முஸ்லிம்களை நம்பாதிர்கள் என்றும், எல்லாம் தப்பு, குரான்தான் சரி என்றும், ஆக வழிகாட்டி முகம்மது நபி என்று சொல்வதை விட்டு விட்டு, குரானைப்பற்றி பேச ஆரம்பித்து கிறிஸ்தவ மதத்தை தாக்கியும், தூஷித்தும் பேச ஆரம்பித்தார். நேரம் கடந்தும் பேசினார். அவர் முடித்ததும் தலைவர் பஷீர் முகம்மது வயிற்றெரிச்சலுடன் எழும்பி கிறிஸ்தவத்தை ஸ்தாபித்துவிட்டாரே இந்த மனுஷன் என்று, உலகமே முஸ்லிமாக மாறுகிறது, பாருங்கள் இப்பொழுது எய்ட்ஸ்(AIDS)நோய கூட கன்னத்து பண்ணிக் கொண்டால் வராது என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனபடியினாலே உலகமே முஸ்லிமாக மாறுகிறது என்று பேச ஆரம்பித்து கன்னா பின்னா என்று உளர ஆரம்பித்தார். அவையடக்கம் என்ற முறையும், மேடை பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணமும் இருந்தபடியினால் அமைதியாய் நான் இருந்துவிட்டு, முஸ்லிம் தலைவர் பேச்சு முடிந்ததும் உடனே மேடையை விட்டுக் கீழே இறங்கி ஒழுங்கோ, எந்தவிதமான சிரமமோ இன்றி நியதிக்கு மாறாக நீங்கள் நடந்து கொள்கிறீர்கள்; ஏற்கெனவே இஸ்லாமியர்கள் என்றால் குழப்பவாதிகள், தவறான அடிப்படையில் இருக்கிறவர்கள் என்று எனக்குத் தெரியும். மதத்தைப் பற்றி பேச வேண்டுமென்றால் உங்களை ஐந்தே நிமிடத்தில் நான் தொலைத்து கட்ட முடியும். நாளைய தினத்தில் விவாதக் கூட்டமொன்றுக்கு(Debate) ஏற்பாடு செய்யுங்கள் நான் வந்து உங்களை முறியடிக்கிறேன், நீங்கள் ஒழுங்கற்றவர்கள என்று, மேடையிலிருந்து கீழே இறங்கி கடிந்து கொண்டேன். வாலிபர்கள ஓடிவந்து மிகவும் கவனமாக கேட்டார்கள். அது எப்படி முகம்மது நபி வழிகாட்டியாக இருக்க முடியும்? அவர் 5 பெண்டாட்டி கட்டுவார் 40 பெண்டாட்டியும் கட்டுவார் நான் அப்படி கட்ட முடியுமா? இவர் ஒரு வழிகாட்டியா? எனவே நாளைய தினத்தில் நான் உங்களை எதிர்பார்க்கிறேன். நீங்கள இதற்கு ஏற்பாடு செய்து, வீடியோ ஒழுங்குகள் செய்து, பத்திரிகைகளில் விளம்பரம் செய்துவிட்டு என்னை அழையுங்கள நான் வந்து உங்களை முறியடிக்கிறேன் என்று சொல்லிவிட்டு காரில் ஏறி நானும் சபை மக்களும் வந்துவிட்டோம். இதற்கிடையில் கூச்சல் எழும்பிவிட்டது. எப்படியென்றால் கன்னத்து செய்தால் Aids வராது என்றால் பெண்களுக்கு என்ன செய்வது என்று ஒரு சிலருடைய கேள்வி. இப்படி இஸ்லாமியர்களில் 70% மக்கள இயேசுவை விசுவாசிக்கவும், ஃபாதர் (Father) பேசியதுதான் சரியென்று சத்தமிடவும் ஆரம்பித்தார்கள். இவ்விதமாக இஸ்லாமிய பிரச்சாரக் குழு மிகவும அவமானமடைந்தது. வெட்கி நின்று விட்டார்கள். மறுநாள் பார்த்தேன், ஒரு வாரம், ஒரு மாதம பார்த்தேன். அவர்கள மீட்டிங் வைப்பதாக இல்லை. ஆனால் இதில் ஒரு காரியம். கூட்டம் முடிந்ததும் ஆள் அனுப்பி ஆடியோ

(audio cassettes) கேசட்டுகளை கைப்பற்றி எடுத்துக் கொண்டு வந்துவிட்டேன். பின்பு வீடியோ கேசட்டு (Video Cassettes)களைக் கேட்டு கடந்த ஒரு வருஷமாக ஆள் அனுப்பியும், பலவிதத்தில் முயன்றும் அதைக் கொடுக்க மறுக்கிறார்கள். நாங்கள் வந்த பிறகு பெரும்பகுதி மக்கள் (இஸ்லாமியர்கள்) கூட்டத்தில் சத்தமிட்டு வெளியேறிவிட்டதாக அறிந்தோம். ஃபாதர்(Father) பேசினது சரி, பஷீர் முகம்மதும், இந்த சங்கமும் நடத்தினது தவறு என்று சொல்லிவிட்டு மக்கள் கலைந்து போனதாக செய்தி அறிந்தோம் பின்பு நமது செக்ரடரியினிடத்தில் ஃபாதர் முகத்தில் எப்படி விழிப்பது? பெரிய தப்பாகிவிட்டது என்று சொல்லி மன்னிப்பு கேட்டிக்கிறார்கள். எனினும் அந்த Video Cassettesஐ அவர்கள் கொடுக்கவில்லை.

ஆனபடியினால், கிறிஸ்தவ தலைவர்களுக்கு நான் அறிவிப்பது யாதெனில்,இந்த இஸ்லாமியர்கள் பொதுவாக சர்வமதக் கூட்டமென்றோ அல்லது ஏதாவது ஒரு காரியத்திற்காக பேச அழைத்தால் சரியான நிபந்தனை, எழுத்து இல்லாமல்,தகுந்த பாதுகாப்பில்லாமல் கிறிஸ்தவ தலைவர்கள் எவரும் இஸ்லாமியர்கள் கூட்டும் கூட்டத்திற்கு போக வேண்டாமென்று கர்த்தருடைய நாமத்தில் கேட்டுக் கொள்கிறேன். அப்படி ஏதாவது பெரிய காரியம் செய்யும் போது என்னையும் விரும்பினால் வரவழையுங்கள். அங்கே ஒரு கிறிஸ்தவன் தோல்வியடைந்தான், இங்கே ஒரு முஸ்லிம் ஜெயித்தான், இங்கே ஒரு இந்து ஜெயித்தான் என்பதெல்லாம் பொய். சத்தியமே உண்மை. சத்தியத்தை நிரூபிக்க தேவன் நம்மை கருவியாக எடுத்து உபயோகிப்பாராக. இஸ்லாமியர்கள் துஷ்ட ஜனங்கள். எனவே, ''இயேசு இன்றேல் சமாதானமில்லை'' (No Christ, No Peace), கிறிஸ்துவை அறி, சமாதானத்தை அறிவாய் (Know Christ, Know Peace).

(முற்றும்)

''அவன் துஷ்ட மனுஷனாயிருப்பான்; அவனுடைய கை எல்லாருக்கும் விரோதமாகவும், எல்லாருடைய கையும் அவனுக்கு விரோதமாகவும்; தன் சகோதரர் எல்லாருக்கும் எதிராக குடியிருப்பான் என்றார்'' (ஆதி. 16:12).

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | நாள் | இடம் |
|---|---|---|---|
| Pastor வில்சன் | Sis.செல்வராணி | 11—4—91 | வள்ளியூர் |
| Bro. பிலிப் | Sis.கிறிஸ்டி | 22—5—91 | கரூர் |

## ஆலய பிரதிஷ்டை

சென்னை-18, கணேசபுரத்தில் புதிதாய் கட்டப்பட்ட புதிய எருசலேம் சபை (கிளை) ஆலயம் அப்போஸ்தலர் S. சுந்தர்ராஜ் அவர்களால் 19-3-91 அன்று பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# வேத பாடம்

(தொடர்ச்சி)

## லேவியராகமம் 16-ம் அதிகாரம்

லேவி. 16:1, 2: ஆரோனின் இரண்டு குமாரரும் கர்த்தருடைய சந்நிதியிலே சேர்ந்து மரித்துப்போன பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி கிருபாசனத்தின் மேல் ஒரு மேகத்தில் நான் காணப்படுவேன். ஆதலால் உன் சகோதரனாகிய ஆரோன் சாகாதபடி பரிசுத்த ஸ்தலத்திலே திரைக்கு உட்புறத்திலிருக்கிற பெட்டியின் மேலுள்ள கிருபாசன மூடிக்கு முன்பாக சகல வேளையிலும் வரவேண்டாம் என்று அவனுக்குச் சொல் என்றார். லேவியராகமம் 16-ம் அதிகாரத்தில் பாவநிவாரண நாள் அல்லது பாவ நிவாரண சுத்திகரண நாளைக் குறித்து எழுதப்பட்டுள்ளது. இந்த அதிகாரம் விசேஷமாக நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து நமக்காக இரத்தஞ் சிந்தி மரித்ததற்கு முன்னடையாளமான அதிகாரமாகும். இதிலே உன் சகோதரனாகிய ஆரோன் சாகாதபடி பரிசுத்த ஸ்தலத்திலே திரைக்கு உட்புறத்திலிருக்கிற கிருபாசன மூடிக்கு முன்பாக சகல வேளையும் வரவேண்டாம் என்று அவனுக்குச் சொல் என்றார் என்பதாக வாசிக்கிறோம். உன் சகோதரனாகிய ஆரோன் என்று வேதாகமத்தில் பத்துமுறை குறிப்பிடப்பட்டுள்ளது (யாத். 4:14; 7:1,2; 28:1, 2, 4, 41; எண் 20:8; 27:13; உபா. 32:51). உன் சகோதரனாகிய ஆரோன் என்று இந்த பத்து முறையும் தேவன் முக்கியப்படுத்திச் சொல்வதாக வாசிக்கிறோம். ஆகையினால் உடன் சகோதரர்கள் தேவ ஊழியத்தில் பயபக்தியாய் கலந்துகொள்வது சரிதான். ஆரோனின் குமாரர்கள் கர்த்தர் கட்டளையிடாத அந்நிய அக்கினியை தேவ சந்நிதானத்தில் கொண்டு வந்ததினிமித்தம் கர்த்தருடைய சந்நிதியிலிருந்து அக்கினி புறப்பட்டு அவர்களை பட்சித்துப் போட்டது (லேவி. 10:1, 2, 3). அவர்கள் ஒருவேளை குடித்தும் இருந்திருக்கலாம் லேவி. 10:8-11ல் ஆசாரியன் தேவ சந்நிதானத்தில் பிரவேசிக்கும்பொழுது திராட்ச ரசமும், மதுவும் குடிக்க வேண்டாமென்றும் கர்த்தர் கட்டளையிட்டிருக்கிறபடியினால் ஆரோனின் குமாரர்களாகிய நாதாபும், அபியூவும் இந்த தவறுகளையும் செய்திருப்பார்கள் என்று எண்ண இடமுண்டு.

பாவ நிவாரண நாள் அல்லது பாவ நிவிர்த்தி சுத்திகரண நாள், வருஷத்தில ஒருமுறை அறிவிக்கப்பட்டது. அது உபவாச நாளும், ஓய்வு நாளும் பரிசுத்த நாளுமாக இருக்கிறது. சுதேசியானாலும், பரதேசியானாலும் அன்றைய தினம் உபவாசித்து ஒரு வேலையும் செய்யாமல் பாவநிவிர்த்தி செய்யப்படும்படி அந்த நாளை ஆசரிக்க வேண்டும். தேவ சந்நிதானத்திலே கூடி வர வேண்டும் (லேவி 16:29). லேவியராகமம 16-ஆம் அதிகாரம் எபிரெயர் 9-ம் அதிகாரத்தை நமக்கு சுட்டிக்காட்டுகிறது. பாவநிவாரண பலி: ஆரோன் தனக்காகவும், தன் குடும்பத்தாருக்காகவும், முதலாவது பலி செலுத்த வேண்டும்.

லேவி. 16:3-7, 11-14: ஆரோன் தேவ சந்நிதானத்தில் பிரவேசிக்கிறதற்கு தனக்காகவும், தன் குடும்பத்தாருக்காகவும் ஒரு காளையை பாவநிவாரண பலியாகவும், ஒரு ஆட்டுக் கடாவை சர்வாங்க தகன பலியாகவும், ஒரு ஆட்டுக் கடாவை சர்வாங்க தகன பலியாகவும் செலுத்தி பிரவேசிக்க வேண்டும் (லேவி. 16:3). அவன் தன்னுடைய பாவநிவாரண பலியை அடித்து அதனுடைய இரத்தத்திலே கொஞ்சம் எடுத்து கிழ்ப்புறமாக நின்று தன் விரலினால் கிருபாசனத்தின் மேல் தெளித்து, அந்த இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து, கிருபாசனத்தின் முன்பாக ஏழுதரம் விரலினால் தெளிக்க வேண்டும். ஜனங்களுக்காக அவன் இரண்டு வெள்ளாட்டுக் கடாக்களையும், சர்வாங்க தகனபலியாக ஒரு ஆட்டுக்கடாவையும் வாங்க வேண்டும். [illegible] வெள்ளாட்டுக் கடாக்களில் ஒன்று பாவநிவாரண பலியாக அடிக்கப்பட்டு, அதனுடைய இரத்தம் பரிசுத்த ஸ்தலத்திற்குள், மகாபரிசுத்த ஸ்தலத்திற்குள் கொண்டு வரப்பட்டு, காளையின் இரத்தத்தை தெளித்ததுபோல இதின் இரத்தத்தையும் கிருபாசனத்தின் மேலும் அதற்கு முன்பாகவும் தெளித்து, இஸ்ரவேல் புத்திரருடைய தீட்டுகளினிமித்தம் அவர்களுடைய சகல பாவங்களி

ருலுண்டான அவர்களுடைய மீறுதல்களினிமித்தம் பரிசுத்த ஸ்தலத்திற்காக பிராயச்சித்தம் செய்து, அவர்களிடத்தில் அவர்களுடைய தீட்டுகளுக்குள்ளே இருக்கிற ஆசரிப்புக் கூடாரத்துக்காகவும் அப்படிச் செய்ய வேண்டும். அவன் இப்படி பரிசுத்த ஸ்தலத்துக்கும், ஆசரிப்புக் கூடாரத்துக்கும், பலிபீடத்துக்கும் பிராயச்சித்தம் செய்து தீர்ந்த பின்பு என்று வாசிக்கிறோம்.

லேவி. 16:15, 16, 18-20: ஜனங்களுக்காக பாவநிவிர்த்தி செய்கிறது மாத்திரமல்ல, ஜனங்களுடைய பாவத்தினிமித்தம் தீட்டான பரிசுத்த ஸ்தலத்துக்கும், கிருபாசனத்திற்கும் பலிபீடத்திற்கும் பாவநிவிர்த்தி செய்யும்படியாக எழுதப்பட்டுள்ளது. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து,இந்த உலகத்தில் தொடர்ந்து இருக்க முடியாமல் போனதற்கு காரணம் ஜனங்களுடைய பாவங்களை அவர் ஏற்றுக் கொண்டதினிமித்தம் தேவ மகிமை தங்கியிருந்த அவருடைய சரீரம் பாவமாக்கப்பட்டது. பாவ உலகத்தில் அவர் தொடர்ந்து இருக்க முடியாதென்பதை நமக்கு ஞாபகமூட்டுகிறது. ஜனங்களின் ஆட்டுக் கடாவில் மற்றொன்றை ஆரோன் தேவ சந்நிதானத்தில் நிறுத்தி இஸ்ரவேல் புத்திரருடைய சகல அக்கிரமங்களையும், அவர்களுடைய எல்லாப் பாவங்களையும், மீறுதல்களையும் அந்த ஆட்டுக் கடாவின்மேல் சுமத்தி அறிக்கையிட்டு சுமத்தி, தனது இரண்டு கைகளையும் அதின்மேல் வைக்கிறதின் மூலம் சுமத்தி, அதற்கான ஆள்வசம அந்த ஆட்டுக்கடாவை ஒப்படைத்து, வனாந்தரத்தில் கொண்டுபோய் குடியில்லாத தேசத்தில் அதை விட்டுவிட வேண்டும் அது ஜனங்களுடைய பாவங்களையும், அக்கிரமங்களையும் சுமந்து கொண்டு காணாமல் போகும். இது எதைக் காண்பிக்கிறதென்றால் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, நம்முடைய பாவங்களை சுமந்து கொண்டு காணாத தேசத்திற்கு கடந்து சென்றுவிட்டதைக் குறிப்பிடும். லேவி 16-ம் அதிகாரம் லேவியராகம புஸ்தகத்தில் முக்கிய பகுதியாகும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, நம்முடைய பாவங்களுக்காய் பூமியிலல்ல, பரலோகத்திலுள்ள மகா பரிசுத்த ஸ்தலத்திற்குள் பிரவேசித்து தம்முடைய சொந்த இரத்தத்தினால் நமக்கு பாவநிவிர்த்தி செய்தார் (எபி. 9:11-14, 23, 24). இது வருஷத்தில் ஒருமுறை அக்டோபர் மாதம் 10-ந் தேதி, யூத கணக்கின் பிரகாரம் ஏழாம் மாதம் 10-ந் தேதி செய்யப்பட வேண்டிய நியமமாகும் (லேவி. 16:29, 34). இஸ்ரவேலின் பிரதான பண்டிகையில் இதுவும் ஒன்று (லேவி. 23:26-32).

(தொடரும்)

---

"வெள்ளாட்டுக் கடா, இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல, தம்முடைய சொந்த இரத்தத்தினாலும் ஒரே தரம் மகா பரிசுத்த ஸ்தலத்திலே பிரவேசித்து, நித்திய மீட்பை உண்டு பண்ணினார்." (எபி. 9:12.)

---

## கிறிஸ்தவ திருமணம் (தொடர்ச்சி)

**எச்சரிக்கை :**

ஆண், பெண் என்று சொல்லப்படுவது இருஉருவங்களாக இருக்கின்றன. ஒன்றையொன்று ஈர்க்கும் தன்மையுள்ளது. தன்னுடைய பாலினத்தைச் சேர்ந்த நபரைக் கவர்வதைவிட மிக எளிதாக பிற பாலினத்தைச் சேர்ந்தவர்களைக்கவர மனிதன் முயற்சிக்கிறான். அதில் குறைவுபடும்போது அவனுக்கு அதிர்ச்சியுண்டாகிறது. பிற பாலினத்தைச் சேர்ந்தவர் நம்மைச் சிறிது அசட்டை செய்தாலும் அது நமக்கு பெரும் ஏமாற்றத்தை உண்டாக்குகிறது. பால்நிலை முதிர்ச்சி ஏற்பட்ட ஒருவரிடம், பிற பாலினத்தவர் நடந்து கொள்ளும் முறையில் மன அளவில் ஒரு மாற்றம் காணப்படும். அவனுக்கு 14 வயதுமுதல் 16 வயதுக்குள்ளாக பால்முதிர்ச்சி ஏற்படுகிறது. பெண் 12 முதல் 14 வயதுக்குள்ளாக பூப்பெய்துகிறாள். இந்த வயதை இவர்கள் அடையு முன்பாக பையன்கள் பையன்களோடும், பெண்கள் பெண்களோடும் பழக விரும்புவார்கள். பால் முதிர்ச்சி ஏற்பட்டவுடன் பையன்களின் ஆர்வம் பெண்களை நோக்கித் திரும்புகிறது. பெண்களின் ஆர்வம் பையன்களை நோக்கித் திரும்பு

றது. தினமும் இந்த ஆர்வத்தை அணியும் ஆடைகளின் மூலமும், தம்முடைய தோற்றத்தை பிற பாலினத்தின் முன்னிலையில் கவர்ச்சியாக வைத்துக் கொள்வதின் மூலமும் காண்பிக்க விரும்புகிறார்கள். இது இயல்பானது, தவிர்க்க முடியாதது. இதனை ஒரு பாவச் செயல் என்று கருத அவசியமில்லை. நம்மை ஆணும் பெண்ணுமாக படைத்த இறைவன், ஆண் பெண்ணோடும், பெண் ஆணோடும் பழகும் விதத்திற்கு கட்டுப்பாடு வைத்திருக்கிறார், நட்புறவோடு கூட ஒருவரையொருவர் பழகுகிறதும், அன்போடு நடந்து கொள்வதும் தவறல்ல. ஆனால் இது அளவுக்கு மீறிச் செல்லக் கூடாது. அப்படிச் செல்லுமானால் ஆபத்தில் போய் முடியும். பிற பாலரோடு உறவு கொள்ளாமலேயே நான் ஓடி விடுவேன் என்று சொல்லி சிலர் சொல்லலாம், அது கூடாத காரியம். உலக முழுவதிலும் ஆய்வு செய்த பிரகாரம் அநேக சிறுவர்கள் அல்லது சிறுமிகள் கெடுக்கப்பட்டுப் போவது தங்கள் சொந்த உறவினர்களாலே என்று தெரிய வந்துள்ளது. சகோதர சகோதரி, சித்தப்பா, சில சொந்த தகப்பன்மார், நெருங்கிய உறவினர்கள் இவர்களை குடும்பத்தார்கள் நம்பி தனித்துவிட, இதனால் சிறுவயதிலே இவர்கள் கெடுக்கப்பட்டு, சொல்லவும் முடியாமல், கக்கவும் முடியாமல் விக்கவும் முடியாமல் கறைபட்டுப் போன மக்கள் அநேகருண்டு, இது மாத்திரமல்ல தன் தன் பாலினத்தோடு கூட மகா அருவருப்பான காரியங்கள் தேவ சாபத்துக்குரிய செயல்கள் மனித சமுதாயத்துக்குள் பெருகி வருகிறதை அறிவுள்ள எந்த மனிதனும் மறுக்க மாட்டான். ஆவிக்குரிய ஜீவியத்தில் பிறபால் வகுப்பினரோடு பேசாமல் இருந்து விடுவது ஒரு உயர்ந்த நிலை என்று சிலர் நினைக்கிறார்கள். இது ஆவிக்குரிய தன்மையல்ல, இயற்கைக்கு மாறுவ தன்மையைக் காட்டுகிறது. பிற பாலினத்தவரோடு நட்புறவு கொள்வது சரியில்லை என்று நினைப்பது சரியாயிருந்தாலும், வீட்டிலேயும், வெளியிலேயும், சபையிலேயும் வேலைக்குச் செல்லும் இடங்களிலேயும், பிற பாலினத்தவரோடு பேச, பழகுவதற்கான சந்தர்ப்பங்களுண்டு. இத்தகைய நேரங்களில் தவித்திருக்க அதிகமாக சிநேகம் பிடிக்க ஒருவரும் முயற்சி பண்ணக் கூடாது. மேலும் சிலர், பிற பாலினத்தை வெறுத்துவிட்டு தன் தன் பாலினத்தோடு கூட தகாத உறவு உடையவர்களாக மாறும் அபாயம் உலகத்தில் பெருகி வருகிறது.

இளைஞர்கள், பெண்களை தூய உள்ளத்தோடு சகோதரிகளாக கருதி நடத்த வேண்டுமென்று திருமறை நமக்கு போதிக்கிறது (I தீமோ. 5:2). சற்று விளக்கமாகச் சொன்னால் நம்முடைய சகோதரியை மற்றவர்கள் எப்படி நடத்த வேண்டுமென்று நாம் விரும்புவோமோ, அப்படியே நாம் பெண்களிடம் நடந்து கொள்ள வேண்டும். எப்போதும் நாம் கடைபிடிக்கதக்க ஒரு நல்ல வழி இது. இருபாலருமே ஒருவரிடம் ஒருவர் மதிப்போடும், கண்ணியத்தோடும் நடந்துகொள்ள வேண்டும். சற்று விலகி கட்டுப்பாடோடு இருப்பது நல்லது. பிறபாலரோடு மனம்விட்டுப்பேசவோ அதிகமாக ஒருவரையொருவர் அறிந்து கொள்ள முயல்வதோ தவறு. சிரித்து மகிழலாம். வேடிக்கை பேசலாம். ஆனால் கட்டுப்பாடோடும், சரியான மனநிலையோடும் நடந்து கொள்ள வேண்டும். பிறபாலினத்தவரோடு சற்று அதிகமாக வாயாட வேண்டும்போல் மனிதனுக்கு இருக்கும். இது ஒரு ஆபத்தான பெலவீனம். நாங்கள் ஆவிக்குரிய காரியங்கள் தானே பேசிக் கொள்கிறோம் என்று பிறபாலினத்தவரோடு தனித்துப் பேசவோ, ஜெபம் பண்ணவோ கூடாது. விவாகமாகாத ஊழியர்களிடம் வாலிப ஸ்திரீகள் ஆலோசனை கேட்கக் கூடாது.

பிறபாலரோடு நமக்குள்ள நட்புறவு வெகு விரைவாக வளர்ந்து விடும். இவ்வுறவில் ஆண் தன்னுடைய திறமையையெல்லாம் காண்பிக்க விரும்புவான். பெண் தன் கவர்ச்சியையெல்லாம் உபயோகிக்க விரும்புகிறாள். இதன் காரணமாக இந்த நட்பு வேகமாக வளரத் தொடங்குகிறது. உள்ளத்தில் ஆழமான வேறு நோக்கங்களோடு சிலர் பழகுகிறார்கள். எனவே, நாம் கவனமாக இருக்க வேண்டும். கிறிஸ்தவ இளைஞன், பெண்களிடம் உள்ள பெலவீனத்தை பயன்படுத்தி, தான் விரும்பாத ஒரு பெண்ணை விரும்புவதுபோல் நடித்து, ஆசைகாட்டி மோசம் போக்கக் கூடாது. பெண்கள் ஒன்றுமில்லாத வார்த்தைகளில்கூட அர்த்தம் இருப்பதாக சட்டென்று நினைக்கத் தொடங்குவார்கள். இதை வாலிபர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். கடிதங்கள்

எழுதுவதோ, பரிசு கொடுப்பதோ சரியல்ல; தாயானாலும் தன் மூத்த மகனுக்கு கணவனுக்குத் தெரியாமல் பரிசு வழங்கக் கூடாது. மேலும், வாழ்த்துதல் எழுதுகிறேன் என்று சொல்லி கர்த்தருடைய வசனத்தை தூஷிக்கிற, தேவ நாமத்தை வீணிலே வழங்குகிற வேலைகளையும் விட்டுவிடுங்கள். ஆவிக்குரிய காரியங்களைக் கூட கடித மூலம் எழுதுவது தவறு. பிறபால் வகுப்பைச் சேர்ந்த திருமணமாகாத நபர்களிடம் சென்று அல்லது திருமணமானவராயிருந்தாலும், ஆவிக்குரிய விஷயங்களையும், சொந்த விஷயங்களையும் குறித்து தனித்து ஆலோசனை பெற எக்காரணத்தைக் கொண்டும் முயற்சிக்கக் கூடாது. தகுதியுள்ள தேவ ஊழியர்களிடமே ஆலோசனை பெறலாம். புதிய எருசலேம் சபையினுடைய கட்டுப்பாடு தெய்வீக கட்டுப்பாடாகும், மிகவும் கண்டிப்பானதாகும், இவ்வாறு சொல்லும்போது பிறபால் இனத்தைச் சேர்ந்த ஒருவரை வருங்காலத்தில் மணந்துகொள்ள நினைப்பது கூட தவறோ என்று நீங்கள் கேட்கலாம். பிறபால் இனத்தைச் சேர்ந்த ஒருவரிடம் மட்டும் தனித்த உறவு கொள்வது தவறு. இதை இளைஞர்கள் மாணவ பருவத்தில் தவிர்க்கவேண்டும். மாணவர்களாயிருக்கும் போது படிப்பில் மட்டுமே கவனம் செலுத்த வேண்டும். ஆண் 25 வயதுக்கு பின்பும் பெண் 21 வயதுக்கு பின்பும் விவாகத்தைப் பற்றி சிந்திக்கலாம். விவாகமான பின்பு மேற்கொண்டு படிக்கவோ, முன்னேறவோ முடியாது, நிறைய பொறுப்புகள் வந்துவிடும். திருமணம் பற்றி யோசிக்கும் நாள் வரை பிறபாலரோடு நட்புறவு மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். பேசும் சந்தர்ப்பம் உண்டாகுமென்றால் பையன்களோ பெண்களோ ஒருவரோடொருவர் பழகும் போது நேர்மையாக இருப்பது அவசியம். உறவாடும் பொழுதெல்லாம் இரு தரப்பிலும் முழு நேர்மை காணப்பட வேண்டும். இந்த விதியை கடை பிடிக்க தவறினால் உணர்ச்சி பிறழ்வுகளுக்கும், மன முறிவுகளுக்கும் வாழ்க்கையின் தோல்விகளுக்கும் இடமுண்டாகும். இவ்விதமாக, விவாகமானவர்களுக்கும் நாம் எச்சரிப்பு கொடுக்கிறோம். கிறிஸ்துவுக்கு சாட்சியாக வாழ்ந்து வரும் வாழ்க்கையை ஒருவர் இழந்து போவதை நான் விரும்பவில்லை. நீங்கள் செய்யும் காரியம் உங்களுக்கு சரியாக இருந்தாலும் அது மற்றவர்களுடைய பார்வையில் தவறாக காணப்பட்டால் அதை நீங்கள் செய்யக்கூடாது, தவிர்க்க வேண்டும்.

1 கொரி. 7ம் அதிகாரத்தில் சொல்லப்பட்ட விஷயத்தில் பழகுதல் என்ற இந்தக் காரியத்துக்கு தொடர்பு படுத்தி நான் எழுத முற்பட்டால் அது பின் வருமாறு அமையும். பழகிக் கொண்டிருக்கிறவர்கள் ஒருவரைத் தொட்டு உறவாடாமல் இருக்க முடியாத காரியமாகிவிடும். முதலில் கைகளை கோர்த்து நடப்பார்கள்; பிறகு முத்தமிடுதல், வருடுதல், என்று ஒன்றைத் தொடர்ந்து ஒன்று உண்டாகும். ஒவ்வொரு நாளும் ஒரு படி முன்னேறும். நெருங்கி உறவாட வேண்டுமென்கிற உணர்ச்சி பெண்ணை விட ஆணுக்கு அதிகம் உண்டு. காரணம் பெண்களை விட ஆண்கள் பால் உணர்ச்சி மிக்கவர்கள். அவர்கள் எளிதாக இவ்வுணர்ச்சிக்குள்ளாவார்கள். அவர்கள் பெறும் உணர்ச்சி அவர்கள் கட்டுப்பாடை மீறிவிடும். பழகப் பழக ஒரு படியிலிருந்து இன்னொரு படிக்கு முன்னேறிக் கொண்டு இருப்பார்கள். அதினால் பாதிக்கப்படுவது பெண்ணே. பெண்கள் அறிய வேண்டியது காலை சுற்றிய பாம்பு கடிக்காமல் விடாது. ஒரு ஆண் ஒரு பெண்ணோடு கூட நான் உனக்காக உயிரே விடுவேன் என்று சொல்லிவிட்டு காரியம் நிகழ்ந்த பின்பு கைவிட்டு விடலாம். ஆனால் பெண்ணுக்கு இது அவளுடைய வாழ்க்கை முழுவதும் பாதிக்கக் கூடியதாக இருக்கும். இருவரும் வெவ்வேறு விவாகம் முடித்துக் கொண்டாலும் அது இவர்களுடைய மனநிலையைப் பாதிக்கும். பெண்ணோடு பெண்ணும் அதிகமாக நெருக்கமாக பழகக் கூடாது. ஆண்களோ, பெண்களோ சேர்ந்து படுக்கக் கூடாது. சில வேளை படுக்க வேண்டிய சந்தர்ப்பம் உண்டானாலும் ஒருவருக்கொருவரிடையே குறைந்தது மூன்று அடி தூரம் இடைவெளி இருக்க வேண்டும். சில வேளைகளில் கூட்ட நாட்களிலும், பல சந்தர்ப்பங்களிலும் சேர்ந்து படுக்கும் சந்தர்ப்பம் உண்டாகலாம். ஆண்களாயிருந்தாலும், ஆண்களும் ஆண்களுமாக நெருங்கி படுக்கக்கூடாது. பெண்களாயிருந்தாலும் ஒருவருக்கொருவர் நெருங்கிப் படுக்கக் கூடாது ஒருவர் உடலை மற்றவர் தொடக் கூடாது. தொட அனுமதிக்கக் கூடாது. இந்த எச்சரிப்பைக் கவனித்து நடக்கிறவர்கள் பரிசுத்தமாயிருப்பார்கள், பரிசுத்தமடைவார்கள்.

(தொடரும்)

# சாட்சி

பிரியமானவர்களே! தேவன் எனக்குச் செய்த நன்மைகள் அதிகமாவது. அல்லேலூயா! என் பெயர் ராமச்சந்திரன் பிலிப்பு என்பது. இந்து மதத்தில் ஒரு சிறிய குடும்பத்தில் கடைசி மகனாக பிறந்தேன். ஒரே மகனாக இருந்ததால் பக்தியோடும் பாசத்தோடும் வளர்க்கப்பட்டேன். ஏழ்மையான சூழ்நிலையில் வளர்ந்ததால் ஏழைகளின் ஏக்கமும் அவர்களின் தாகமும், மனிதர்களின் மூட வழக்கங்களும் என்னை அதிகமாக தாக்கியது.

மனிதர்கள் எல்லாரும் எல்லாமும் பெற முடியவில்லையே சமத்துவமும், சத்தியமும் இல்லையே என்று ஏங்கினேன். எனவே பக்தியாய் வாழ்ந்து பெரிய ஆளாகி மனிதர்களைக் காப்பாற்ற வேண்டுமென்று உள்ளத்தில் எண்ணினேன். ஆனால் என் உள்ளத்தில் பல கேள்விகள் உண்டானது.

என் உள்ளத்தில் தோன்றிய கேள்விகள்:

வானத்தையும் பூமியையும் உண்டாக்கியது யார்? மனிதனையும் விலங்குகளையும் உருவாக்கியது யார்? எல்லாவற்றிற்கும் ஒரு வாழ்க்கையையும், திட்டத்தையும் ஏற்படுத்தினது யார்? என்று கேட்டு அந்த தெய்வத்தைக் கண்டு கொள்ள இந்து மதத்திலுள்ள எல்லா தெய்வங்களையும் வழிப்பட்டேன் இதனால் என் ஆத்துமாவில் திருப்தியில்லை. அந்த தெய்வங்களை வழிபட்டால் முக்தியடையலாம் என்று எண்ணி இப்படி வழிபாடு செய்தேன்.

வழிபாடு

சக்தி வழிபட்டால் சகலமும் கிடைக்கும் என்பார். பக்தியோடு வழிபட்டேன் பலன் ஒன்றுமில்லை.

பிள்ளையாரை வழிபட்டால் பிறவியிலேயே லாபமென்பார். பட்டை போட்டு தொழுது கொண்டேன் பாவ வாழ்க்கை திரவில்லை. தின்றேன் வேப்பிலையை, தேடிவேன் தேவனை மொட்டையடித்திட்டேன், மோதினேன் தனிமையிலே. கத்தி சொன்னேன் மந்திரம். காலையிலே கற்பூரம். சுத்தத்தை நாடி சோகத்தில் மூழ்கிவேன். இந்து மத பெரியோர்கள், ஏக்கமுள்ள சிறியோர்கள், சரித்திர தலைவர்கள், சாகா தல்லவர்கள், எங்கு தேடினும் தேவனை காணவில்லை. நம்பகூடிய தெய்வத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. எனவே சன்மார்க்கமாக ஜீவித்தேன். என்னுடைய இருதயத்திலிருந்த தீய எண்ணங்களிலிருந்தும், கிரியைகளிலிருந்தும் விடுபட முடியவில்லை.

பள்ளிப் படிப்பை முடித்து கல்லூரிக்குச் D.M.E. படிப்பதற்காக வெளியூர் சென்றேன். ஆங்கிலத்தில் பாடம் கற்பிக்கப்பட்டதால் படிப்பை சரியாக படிக்க முடியவில்லை. எனவே வாழ்க்கையில் பல கஷ்டங்கள் உருவானது. சினிமாவைப் பார்த்து போலியான ஆடம்பரத்தால் என் உள்ளத்தை தேற்றினேன். அதிலும் ஆத்துமா திருப்தியாகவில்லை. என்னை படிக்க வைக்க என் தந்தை படும் கஷ்டங்களினாலும் சமுதாயம் நம்மை ஏளனமாக பேசுமே என்பதற்காக வெளியரங்கமான பாவங்களைச் செய்யாது பக்தியுள்ளவனாகவும், நல்லவனாகவும் என்னைப் பாதுகாத்து வந்தேன். ஆனால் என் ஆத்துமாவில் போராட்டம் நீங்கவில்லை.

உண்மையான அன்பையும் சத்தியத்தையும் விரும்பினேன். எனவே பெரியவனாக மாறி சத்தியத்தை இந்த உலகில் நிலைநாட்ட வேண்டும் என்ற தாகத்தால் என்னை நல்லவனாக சமுதாயத்திற்கு காண்பித்தேன். விசேஷமாக தர்மம் செய்யவும் மற்றவர்களுக்கு உதவி செய்யவும், போதனை செய்யவும், ஆடையில்லாத சிறுவர்களுக்கு ஆடை கொடுக்கவும், கண் தெரியாதவர்களை அவர்கள் போகும் இடத்திற்குக் கொண்டு செல்வதும், அனாதைகள், ஆதரவற்றவர்கள் பிள்ளைகளின் தலைமுடியைச் சுத்தம் செய்வதும் எனக்கு விருப்பமாயிருந்தது. இந்த நற்கிரியைகளிலும் நான் தேவனை காண முடியவில்லை. இந்து மத பெரியவர்களையும், கோயில்களையும், தத்துவங்களையும், நீதிகதைகளையும் ஆராய்ந்து பார்த்தேன். இவைகள் அனைத்திலும் எனக்கு சமாதானம் கிடைக்கவில்லை.

## தேவன் என்னை தேடி வந்தார்

1981 ஏப்ரல் மாதம் ஒரு வயதான பெண் மூலமாக இயேசுவைப் பற்றி அறிந்தேன். இவர் தேவனானால் இவரையும் தொழுது பார்ப்போம் என்று என்னுடைய அறையிலே ஜெபம் செய்தேன். இயேசுவே நீர் உண்மையான தெய்வமானால், நீரே இந்த உலகத்தை படைத்தது உண்மையானால், என்னை தாயின் வயிற்றில் உருவாக்கியது உண்மையானால் எனக்கு உம்முடைய வல்லமையை காணச் செய்யும் என்று வேண்டினேன். உடனே தேவன் என் கண்களால் பார்க்கக் கூடிய அற்புதத்தை செய்தார். அல்லேலூயா! அதன் பிறகு நான் தேவனை கண்டு கொண்டு அவரை உறுதியாக பற்றிக் கொண்டேன். வேத புத்தகத்தின் மூலமாக உண்மையான அன்பையும், கருணையையும், தேவனையும், இயேசு என்ற நாமத்தில் கண்டு என் தேவனைத் துதித்து மெய் சமாதானத்தைப் பெற்றுக் கொண்டேன்.

பற்றிக் கொண்டேன் பரம் பொருளை
பாருலகின் பேரருளை
மாற்றிக் கொண்டேன் என் மனதை
மகிமையின் சாயலிலே
தேற்றுவாரில்லாமல் தேடினேன் தேவனை
நீவினை அகன்று போக
தெரிந்து கொண்டேன் என்ன வரை
அவரின் பாசம் அதுவே
என் நேசம் - அவர்
அன்று சிந்திய இரத்தம்
இன்றும் அன்போடு பேசும்.

இவ்விதமாக மகிழ்ச்சியோடு கவிபாடி எதிர் நோக்கி வந்த துன்பங்களைத் தாங்கிக் கொண்டு கிறிஸ்தவ சபைகளிலும், மனிதர்களிடமும் சாட்சி சொல்லி வந்தேன். இந்த நாட்களில் கிறிஸ்தவ சபைகளிலும், போதகரிடமும் உண்மையும், சத்தியமும் இல்லாததால் ஆத்துமாவில் மிகவும் வேதனை அடைந்தேன். எனவே ''உண்மையான பாதை எது'' பெயரில் புரட்சி கவிதையை கைப்பிரதியாக வெளியிட்டேன். எனக்குத் தெரிந்தவற்றைக் கொண்டு தைரியமாக சாட்சி சொல்லி வந்தேன்.

1983-ம் ஆண்டு எனக்கு திருமண ஏற்பாடு செய்யப்பட்டது. திருமணமான பின்பு இருவரும் சேர்ந்து சில இடங்களில் சென்று சாட்சி சொல்லி வந்தோம். ஆனாலும், சரியான பாதையில் செல்லக் கூடிய ஆலோசனையும் போதகமும் இல்லாததால் என் ஆத்மா இறைவனை நோக்கி கதறினது. பிரசங்கிக்கவும், சாட்சி சொல்லவும், ஆலோசனை சொல்லவும் காணப்பட்ட நான் நிற்பதற்கு பெலனில்லாமல் வேதனையோடு இந்தக்காரியங்களை செய்து வந்தேன். ஆனால் என் தேவனை நோக்கி உண்மையான சபையையும், தேவனுடைய பிள்ளைகளையும் காட்டும்படியாக தேவனிடம் ஜெபம் செய்தேன். கர்த்தர் என் ஜெபத்தைக் கேட்டு சபையைக் காண்பித்தார்.

### திருச்சபையைக் கண்டு கொள்ளுதல்:

1984-ம் ஆண்டு சென்னையில் நடந்த புதிய எருசலேம் சபை கன்வென்ஷனைக் குறித்து விளம்பரங்களில் பார்த்தேன். பல சபையைக் குறித்து அறிந்திருந்த நான் உண்மையான சபையைத் தேடின நான் இந்தச் சபையைக் குறித்தும் அறிய விரும்பி கூட்டத்திற்கு வந்தேன். அப்போது ஜனங்களின் எழுச்சியும், தேவ ஜனங்கள் மற்றும் தேவ ஊழியர்களின் அமைப்பும் என்னை வெகுவாகக் கவர்ந்தது. சற்று தொலைவில் உட்கார்ந்து செய்தியைக் கேட்டேன்.

புதிய எருசலேம் சபையின் தலைமை ஐயா அவர்கள் பாவத்தைக் குறித்தும், பாவ மன்னிப்பின் தன்மையைக் குறித்தும் பேசினார்கள். இது தேவனுடைய சத்தியமாகவும், அதை சொல்லுகின்ற வார்த்தை அதிகாரமாகவும் இருந்ததால் இதுவே தேவனுடைய உண்மையான சட்டம் என்பதை அறிந்து பரிசுத்த ஐயா அவர்களிடம் ஜெபம் செய்து மறுநாளில் என் மனைவியோடு வந்து ஆலோசனைப் பெற்று ஞானஸ்நானம் பெற்றோம் (இதற்கு முன்னும் ஞானஸ்நானம் பெற்றிருந்தோம். தேவனுடைய திட்டத்தின்படி பாவ அறிக்கை செய்து ஞானஸ்நானம் எடுக்காததால் மறுபடியும் எடுத்துக் கொண்டோம்). பிறகு சபையாக சேர்ந்து தேவனை ஆராதித்து வந்தோம். தேவனுடைய திட்டம், சரியாகவும், விவரமாகவும்

செய்தியின் மூலம் அருளப்பட்டது. மெய்ச் சபையில் தேவன் என்னை இணைத்துவிட்டார் என்று ஆனந்தக் களிப்படைந்தேன். தேவனை ஸ்துதித்துக் கொண்டிருக்கிறேன்.

மற்றவர்களிடம் வைராக்கியமாகவும், அதிகாரமாகவும் இருந்த நான் ஆலோசனை சொல்லவும், போதிக்கவும் தயார்படுத்தியிருந்த நான், தேவனுடைய சபையில் வந்தவுடன் குழந்தையைப்போல மாறிவிட்டேன். தேவனே என்னை அப்படி மாற்றிவிட்டார். இங்கு போதிக்கவும், ஆலோசனை சொல்லவும் அவசியமில்லை. எனவே அமைதியாக இருந்தேன்.

குடும்பமாக பலவாறு கஷ்டமடைந்தோம். வறுமையினாலும், பற்றுக்குறையினாலும் வாடினோம். இந்த நிலையில் தமிழ்நாடு பரிசுத்தவான்களாகிய அப்போஸ்தலர் ஐயாவும், தீர்க்கதரிசி ஐயாவும் எங்களுக்கு ஆலோசனை தந்தார்கள். அவர்களது தியாக வாழ்க்கையையும், சத்தியத்தை ஸ்தாபிக்க அவர்கள் படும் பிரயாசமும் என்னில் அதிக பக்தியை ஏற்படுத்தியது. சென்னை சபையின் ஊழியர் என்னை தனது சொந்த சகோதரனைப்போல பாவித்து, அன்பு பாராட்டி, நான் வாழும் வகையை எனக்கு அடிக்கடி போதித்து, என்னிலுள்ள பெலவீனங்களை மாற்றிக் கொள்ள ஆலோசனை தந்ததோடல்லாமல் என் குடும்பத்திற்குத் தேவையான உதவிகளையும் செய்து விசுவாசத்தில் தாங்கி வந்தார்.

இப்படி, பரிசுத்தவான்களின் ஆசீர்வாதம் எங்களுக்கு கிடைத்தபடியினாலே நாங்கள் சபையில் வளர்ச்சியடைந்து வந்தோம். தேவன் எங்களை ஊழியத்திற்கு அழைத்து இருந்தார். ஊழியஞ் செய்ய விருப்பமுண்டு. ஆனால் அதை நிறைவேற்ற அக்கறையற்றவனாக இருந்தேன். கர்த்தர் நம்முடைய தீர்க்கதரிசி மூலமாக எச்சரித்தார். அதற்குக் கீழ்ப்படியாததால் தேவன் என்னை சிட்சித்தார் என்னுடைய இடது காலில் இரும்புத் துண்டு விழுந்ததால் கால் வீங்கி தாங்கித் தாங்கி நடந்து வந்தேன். மருத்துவம் பல செய்தும் பலனில்லாமல் போய் விட்டது. கடைசியாக, ஊழியத்திற்கு ஒப்புக் கொடுத்தால் சரியாகும் என்று தேவன் உணர்த்தியதால் சபையிலே அதை அறிக்கை செய்து ஒப்புக் கொடுத்தேன். உடனே என் காலில் இருந்த பெலவீனம் மறைந்து போனது

1988-ம் ஆண்டு ஊழியத்திற்கென்று என்னை ஒப்புக் கொடுத்தேன். அன்றிலிருந்து தேவன் என்னை ஆசீர்வதித்து வருகிறார். எனக்கு ஏற்பட்ட கஷ்டங்களிலிருந்து தேவன் என்னை மீட்டெடுத்தார். என்னை மீட்டெடுத்த தேவனுக்கு உண்மையுள்ளவனாக ஊழியஞ் செய்ய முழு நேர ஊழியத்திற்கு ஒப்புக் கொடுத்து (1990ல்) நான் தற்போது பள்ளி கொண்டா என்ற ஊரில் ஊழியம் செய்து வருகிறேன்.

கடைசியாக என் வார்த்தைகள் :

''புதிய எருசலேம் சபை' இது தேவனுடைய நகரம். தேவன் இதில் வாசம் செய்கிறார். இங்கே அன்பு உண்டு. ஆலோசனையுண்டு. ஆத்துமாக்களுக்கு அடைக்கல பட்டணமுண்டு; சத்தியமுண்டு, அமைதியுண்டு. இது எங்கள் ராஜாதி ராஜாவாக இருக்கும் இயேசுவின் தோட்டமாய் இருக்கின்றது. எனவே கிறிஸ்தவ போதகர்களே, நண்பர்களே, உண்மையை விரும்பும் சகோதரர்களே, ஒழுக்கமுள்ள கிறிஸ்தவர்களே, சத்தியத்தை நிலை நாட்ட விருப்பமுள்ள இளைஞர்களே, தியாக தலைவர்களே, ஜாதி பேயால் விரட்டப் பட்ட நல்லவர்களே, ஞானிகளே, பண்பாளர்களே, சிறியோர்களே, பெரியோர்களே, இதை வாசிக்கும் அன்பர்களே தேவன் நம்மை அழைக்கின்றார். அவருடைய திருச்சபையாயிருக்கும் புதிய எருசலேமில் நம்மை பூரணப் படுத்துகின்றார். இதை நான் என் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவிடமிருந்து பெற்றுக் கொண்ட பாக்கியமாகயிருக்கிறது. எனவே நீங்களும் இந்த தேவனுடைய சபையில் வந்து தேவனுடைய திட்டத்திற்கு செவி சாய்த்து பரிசுத்த வாழ்க்கையைப் பெற்றுக் கொள்ள உங்களை அன்பாய் வேண்டுகிறேன். இந்த சபையிலே இறைவனை ஆராதிப்பதினால் தேவனுடைய வார்த்தை வெளிப்படுகின்றது. நமது ஆத்துமாவிற்கு தேவையான விருந்தை கிடைக்கின்றது. நமக்கு பாதுகாப்பு கிடைக்கிறது. பாவ வாழ்க்கையில் வெற்றி கிடைக்கிறது. இதுவே என் சாட்சி. இதன் மூலமாய் தேவன் செலுத்துகின்றார் மனுமக்களிடம் ஆட்சி. இதை வாசிக்கும் உங்களுக்கோ இதுவே தேவனின் சாட்சி. வாழ்க இயேசுவின் நாமம்! அல்லேலூயா!!

Eld.Bro.Ramachandran Philip
New Jerusalem Church
Pallikonda Branch, N A Dist

'தேவன் ஒருவரே'
THERE IS ONE GOD...
Regd. No. 040088/84
Postal Regd No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

## ஞானஸ்நானம்

சேலம், நெய்வேலி, சென்னை, பள்ளப்பட்டி ஆகிய இடங்களிலுள்ள கிளை சபைகளில், ஞானஸ்நானம் பெற்று சபையோடு சேர்க்கப் பட்டவர்களின் விவரம் :

| நாள் | இடம் | நபர்கள் |
|---|---|---|
| 26—1—91 | சேலம் | 11 |
| 1—5—91 | நெய்வேலி | 6 |
| 10—5—91 | சென்னை | 18 |
| 1—6—91 | பள்ளப்பட்டி | 35 |

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   27 (வியாழன்) ஜூன் 1991
   26 (வெள்ளி) ஜூலை 1991

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும் பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15/- (பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளுமபடி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்

6. புதிய எருசலேம் செய்திமலர் தேவைப்படுவோர் ரூ. 19/- (தனிப்பிரதி ரூ. 15/- தபால் செலவு ரூ. 4/-) அனுப்பி உடனே பெற்றுக் கொள்ளவும்.

   வெளிநாடு ரூ. 50/- சில பிரதிகளே உள்ளன. பிரதிக்கு முந்துங்கள்.

Edited, Printed and Published by Chief Pastor N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at : PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph : 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 91-92 Jul./Aug. 91

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.
(எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி. (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் – யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப் 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். இது கடைசிக் காலமாயிருக்கிறது. நாம் கிறிஸ்தவ ஜீவியத்தில் உன்னத நிலையை அடைய வேண்டும். நான் சாவாமல் பிழைத்திருந்து கர்த்தருடைய கிரியைகளை அறிவிப்பேன் (சங். 118:17) என்று கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது. நம்முடைய தேவன் இரட்சிப்பை அருளும் தேவன்; ஆண்டவராகிய கர்த்தரால் மரணத்திற்கு நீங்கும் வழிகளுண்டு என்று சங். 68:20ல் எழுதப்பட்டுள்ளது. மரணத்துக்கு தப்பும் வழி, சாவாமல் பிழைத்திருக்கும் பாக்கியம், உன்னதமான அனுபவம் கிறிஸ்துவின் மூலமாக மனிதனுக்கு வாக்கருளப்பட்டிருக்கிறது. அவ்விதமாக அடைந்தவர்களுமுண்டு. நாம் பரிசுத்தத்தின் மேல் பரிசுத்தமடைந்து, நாம் பெலத்தின் மேல் பெலனடைந்து சீயோனிலே, பரம சீயோனிலே தேவ சந்நிதானத்திலே போய் நிற்க வேண்டும். அதற்காக நாம் நம்மைப் பரிசுத்தப்படுத்தி, நம்முடைய ஆத்துமாவையும் சரீரத்தையும் பெலப்படுத்தி ஆவியில் தெளிவுள்ளவர்களாய் தேவ ஆவியினால் நிரம்பி ஆவியானவரோடு கூட சேர்ந்து நாம் அவருக்கு கீழ்ப்படிந்து ஒத்துழைப்புக் கொடுப்போமென்றால் பரிசுத்த ஆவியானவர் நம்மை மறுருபப்படுத்துவார். கர்த்தராகிய ஆண்டவரால், கர்த்தருடைய ஆவியினால் நாம் அந்த சாயலாகத்தானே மகிமையின் மேல் மகிமையடைந்து மறுருபப்படுகிறோம். பரிசுத்த ஆவியானவரே நம்மை அந்த நிலைக்கு பெலப்படுத்தக் கூடியவராக இருக்கிறார். கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். காலம் கொடியதாக இருக்கிறது. மக்கள் தேவனுடைய சித்தத்துக்கு மாறாய் ஜீவித்து, அதற்கு சுய விளக்கங் கொடுத்து, அதற்கு கர்த்தருடைய வசனங்களையும் தங்களுக்கு சாதகமாக பயன்படுத்திக் கொண்டு கர்த்தரை வஞ்சிக்கக் கூடிய காலமாக, வேஷதாரிகள் நிறைந்து போன உலகமாக இந்த உலகம் காணப்படுகிறது. ஆகையால், தேவனுடைய பிள்ளைகள் பூரண வளர்ச்சியடைந்த பரிசுத்தவான்களின் ஐக்கியத்தை (பூரண வளர்ச்சியடைந்த என்பது வயது சென்றவர்களைக் குறிப்பிடாமல் ஆத்மீக நிலையில் வெற்றியடைந்தவர்களைக் குறிப்பிடும்) அதாவது எபி. 5:13,14ல் காணப்படுகிற பரிசுத்தவான்களின் ஐக்கியத்தைக் காத்துக் கொள்ள வேண்டும். பாவமாயிருக்கட்டும், பரிசுத்தமாயிருக்கட்டும் ஒட்டுவார் ஒட்டியாகவே இருக்கிறது. பாவம் பாவிகளான மக்களோடு சேரும்போது, ஐக்கியம் வைக்கும் பொழுது அந்த பாவம் அவர்களைத் தொடரும். அப்படியே பரிசுத்தவான்களின் ஐக்கியம் பரிசுத்தத்தை உண்டாக்கும். கண்களின் ஒளி இருதயத்தைப் பூரிப்பாக்கும்; நற்செய்தி எலும்புகளைப் புஷ்டியாக்கும் (நீதி. 15:30) என்று வேதம் சொல்லுகிறது. உன் கண்களின் ஒளியல்ல, ஞானியினுடைய கண்களைக் கவனி உன் இருதயத்துக்கு பூரிப்புண்டாக்கும் என்று பரிசுத்த ஆவியானவர் எழுதி இருக்கிறார். ஆனபடியினால் பரிசுத்தவான்களோடுகூட ஐக்கியப்பட்டு அவர்களுடைய ஆலோசனையைக் கேட்கிறவர்கள் கர்த்தருடைய வருகைக்கு வேகமாய் ஆயத்தப்படுவார்கள். இந்தக் கிருபையை பற்றிக் கொண்டு தேவ ஜனங்கள் கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுவீர்களாக! திருச்சபையே மக்களை கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுத்தும். நாமெல்லாரும் ஆயத்தப்படுவோமாக!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# அமைதியான தியான வேளை

''விடியற்காலத்தில் ஆபிரகாம் எழுந்து தான் கர்த்தருக்கு முன்பாக நின்ற இடத்திற்குப் போனான்'' (ஆதி 19:27. காண்: ஆதி 18:22). காலையில் அமைதியான தியான வேளைக்கு ஆபிரகாம் மிகச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறார். கிறிஸ்தவர்களின் அனுதின வாழ்க்கையின் இரகசியம் அமைதியான, குறித்த வேளையில் வேதத்தைவாசித்து தியானம் செய்து ஜெபிக்கிறதில், தேவ சந்நிதானத்தில் காத்திருக்கிறதில் இருக்கிறது. இதில் குறைபாடுள்ளவர்கள் வாழ்க்கையில் நாளடைவில் குளிர்ந்து பின் மாற்ற நிலை அடைய ஏதுவாகும்.

தேவ ஊழியம் யார் நன்றாகச் செய்வார்களென்றால் இந்த குறித்த வேளையில், அமைதியான தியான வேளையில் தேவ சமூகப் பழக்கத்தை தினந்தோறும் காத்துக் கொள்ளுகிறவர்களே, தேவ ஊழியத்தில் வல்லவர்களாவார்கள். இந்த வேளையை உறுதியாகக் கைக்கொள்ளுகிற கிறிஸ்தவனே, கர்த்தரோடு படிப்படியாக வளர்ந்து முன்னேற முடியும். ஆபிரகாமைக் குறித்து நாம் மேற்கண்ட வசனத்தில் நாம் இவ்விதமாக வாசிக்கிறோம். விடியற்காலத்தில் ஆபிரகாம் எழுந்து தான் கர்த்தருக்கு முன்பாக நின்ற இடத்திற்குப் போனான். ஆபிரகாம் அதிகாலையில் எழுந்திருந்தான். இது ஒரு கிறிஸ்தவனுக்கு இருக்க வேண்டிய தன்மையாகும். அதிகாலையில் எழும்பி தேவ சமூகத்தில் நாம் போய் காத்திருக்க வேண்டும். கர்த்தாவே காலையில் என் சத்தத்தைக் கேட்டருள்வீர், காலையிலே உமக்கு நேராய் வந்து ஆயத்தமாகி காத்திருப்பேன் (சங். 5:3). காலையில் எழுந்திருக்க தேவனுடைய வாக்குதத்தத்தை விசுவாசித்து காலை எழுந்திருக்க வேண்டுமென்று வாஞ்சித்து இந்த வாக்குத்தத்தத்தை சுதந்தரித்துக் கொள்ள ஊக்கமாக நாம் ஜெபம் பண்ணுவோமென்றால் இந்த வாக்குத் தத்தம் நம்முடையதாகும்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே அதிகாலையில் எழுந்திருந்ததாக இந்த தீர்க்கத் தரிசனத்திலே எழுதப்பட்டிருக்கிறது. இளைப்படைந்தவனுக்கு சமயத்துக்கேற்ற வார்த்தை சொல்ல நான் அறியும் படிக்கு கர்த்தராகிய ஆண்டவர் எனக்கு கல்விமானின் நாவைத் தந்தருளினார். காலைதோறும் என்னை எழுப்புகிறார். கற்றுக் கொள்ளுகிறவர்களைப் போல நான் கேட்கும்படிக்கு என் செவியை கவனிக்கச் செய்கிறார் (ஏசா 50:4).

தேவன் அதிகாலையிலே கிறிஸ்துவை எழுப்பி பரிசுத்த ஆவியானவர் அவருக்கு அன்றைய தின சகல வேலைகளைக் குறித்தும், அவர் பேச வேண்டியதைக் குறித்தும் கற்பித்தார் என்றும் இந்த வேத வாக்கியத்தின் மூலமாக நாம் அறிந்து கொள்கிறோம். விடியும் மட்டும தூங்குகிறவர்கள், விடிந்தும், சூரியன் வந்த பின்பும் தூங்குகிறவர்கள் உண்மைக் கிறிஸ்தவர்களாக இருக்க மாட்டார்கள். எல்லா பரிசுத்தவான்களும் அதிகாலையில் எழுந்து ஆயத்தமாகி அவருடைய சந்நிதானத்தில் போய் அன்றைய தின ஆசீர்வாதத்திற்காக காத்திருந்தார்கள், தேவ சமூகத்தைத் தேடினார்கள் என்று வேதாகமம் முழுவதிலேயும் வாசிக்கிறோம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் அதிகாலையில் இருட்டோடே எழுந்திருந்து போய் வனாந்திரமான இடத்திலே ஜெபிக்கும் பழக்கமுடையவராக இருந்தார் (மாற் 1:35).

காலையில் எழுந்திருந்து முகம், கை கால்களைக் கழுவிக் கொண்டு சிரம பரிபாலனம் செய்து கொண்டு ஒரு டம்ளர் குளிர்ந்த தண்ணீரை குடித்து விட்டு, குளிக்கிறதென்றால் குளித்து விட்டு தலைமுடி, உடைகளை சரிபடுத்திக் கொண்டு ஆயத்தமாகி தேவ சந்நிதானத்தில் போய் அன்றைய தின வேலைகள் ஆரம்பிக்குமுன்பாக தேவ சமூகத்தில் காத்திருப்பது நல்லது. அவ்விதமாய் அதிகாலையில் நேரம் கிடைக்காதவர்களும் காலையில் கருத்தாய் ஜெபித்துவிட்டு மாலையிலாவது தங்களுக்கு வசதியான ஒரு நேரத்தைத் தெரிந்தெடுத்து தேவ ஜனங்கள் தியானம் செய்ய வேண்டும். ஆபிரகாம் அதிகாலையில் எழுந்திருந்தார். தேவனை சந்திக்கும்படி அவருக்கு ஒரு தனி இடம் இருந்தது. நமக்கும் அவ்விதமாக

ஒரு தனி இடம் இருக்க வேண்டும். வீட்டிலே பல அறைகள் இருந்தால் ஒரு அறையை ஜெப அறையாக ஒதுக்கலாம். அந்த இடத்திலே படுத்து தூங்கக் கூடாது. அந்த இடத்தை சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். அந்த இடத்திலே வேற்று ஆட்களை உட்கார விடக்கூடாது. அந்த இடத்திலே நாற்காலி போட்டு உட்காரக் கூடாது. இவ்விதமாக அந்த இடத்தை பத்திரமாகப் பாதுகாத்து நாம் ஜெபிக்க வேண்டிய சமயத்தில் அந்த இடத்தில் பாயையோ அல்லது ஒரு போர்வையையோ விரித்து நாம் தேவ சமுகத்தைத் தேடலாம். நாள் தோறும் அவர் அந்த தனி இடத்திற்குச் சென்றார். ஈசாக்கு அப்படிச் செய்தார். ஆபிரகாம் கர்த்தருக்கு முன் நின்றார். பேசிக் கொண்டு காத்திருந்தார்.

ஒரு செடி வளர்வதற்கு காற்று, சூரிய வெளிச்சம், தண்ணீர், உணவு ஆகிய நான்கும் வேண்டும். நம்முடைய இந்த பரு உடலுக்கும் வளரும்படி உணவு, சுத்த காற்று, சூரிய வெளிச்சம், தண்ணீர், உடற் பயிற்சி ஆகியவை தேவைப்படுகிறது. நம்முடைய ஆவிக்குரிய வாழ்க்கையும் இவ்வாறே ஊட்டம் பெற வேண்டும். இயேசு அதிகாலையில் ஜெபம் பண்ணினதோடன்றி சில வேளைகளில் இரவெல்லாம் ஜெபம் பண்ணினார். அந்நாட்களிலே அவர் ஜெபம் பண்ணும்படி மலையின் மேல் ஏறி இரா முழுதும் ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தார் (லூக். 6:12; மத். 14:23). இறைவனோடும் அவருடைய விலையேறப் பெற்ற வசனத்தோடும் இடைபடுமாறு தினந்தோறும் அமைதியான ஒரு வேளையை நாம் அனுசரிக்க வேண்டும். இயேசுவின் மாதிரியும், ஆதிக் கிறிஸ்தவர்களின் மாதிரியும் அதுவே.

### அமைதியான தியான வேளையின் நோக்கம்:

அமைதியான தியான வேளையின் அடிப்படை நோக்கம் தேவனோடுள்ள ஐக்கியமாகும். நம்முடைய பிதாவாகிய தேவன் நமது அனுதின ஆராதனையையும் தொழுகையையும் விரும்புகிறார். பொதுவாக உலகத்தில் காதலர்களைப் பார்க்கிறோம். காதலர்கள் ஒன்றாகக் கூடி தனித்து இருக்க விரும்புகிறார்கள். இறைவன் மேல் நமக்கு காதல், சிநேகம், அன்பு உண்டாயிருந்தால் நாம் அப்படி அடிக்கடி செய்வோம். குறைந்தபட்சம் அந்தக் குறித்த வேளையையாவது நாம் கடைபிடிக்க வேண்டும்.

### அமைதியான தியான வேளையை அனுசரிப்பதின் மூலமாக நமக்கு கிடைக்கும் பலன்:

தேவ ஐக்கியம் மாத்திரமல்ல. ஆவிக்குரிய வாழ்க்கையில் வல்லமை (பெலன்) நமக்கு உண்டாகும். பாவம், உலகம், பிசாசு இவைகளை எதிர்த்துப் போராட நமக்கு பெலன் அருளும். பொல்லாத ஆவிகளாகிய பகைவர்களோடு கூட நமக்கு எப்பொழுதும் போராட்டம் இருக்கிறது (எபே. 6:12). ஒழுங்காக இந்த ஜெப வேளையை உபயோகிக்கிறவர்கள் ஆவிக்குரிய பெலத்தையடைவார்கள். இந்த ஜெப வேளையை உபயோகிக்க சில காரியங்களை நாம் ஒழுங்குபடுத்த வேண்டும்.

△ குறித்த நேரத்தில் படுக்கைக்குச் செல்ல வேண்டும்.

△ நீண்ட நேரம் விழுகைப் பேசிக் கொண்டு இரவிலே விழித்திருக்கக் கூடாது.

அப்படி விழித்திருக்கிறவர்கள் அதிகாலையில் எழுந்திருந்து ஆயத்தப்பட முடியாது. அதிகாலையில் எழுந்திருந்து காலை ஜெபம் முடித்துவிட்டு மறுபடி இந்த ஜெபதியான வேளைக்காய் அமரலாம். முதலாவது ஒரு சிறிய ஜெபம், பின்பு குறிப்பிட்ட நியதிகளின் படியான வேத வாசிப்பு. வேத வாசிப்பு முறையாக ஒழுங்கும் கிரமமுமாக இருக்க வேண்டும். வேதாகம பயிற்சிமுறை திட்டம் ஒன்றை உபயோகிக்கலாம், அல்லது அதிகாரங்களாக, புத்தகங்களாக அல்லது அவைகளிலுள்ள பாடப் பொருட்களை கற்கலாம் அல்லது தான் வாசிக்கிற வேதபாகத்தில் தன் ஆத்துமாவுக்கு தென்படுகிற வசனத்திற்கான ஒத்த வாக்கியங்களை ஆராய்ந்து அதின் மூலமாக இறை சித்தத்தை அறியலாம். இப்படி வேதத்தை வாசித்து, தியானித்து பின்பு ஜெபிக்க ஆரம்பிக்க வேண்டும். ஒருமணி நேரம் இதற்கு உபயோகிக்கிறோமென்றால் அரைமணி நேரம் வேதம் வாசித்தும், அரைமணி நேரம் அல்லது முக்கால்மணி நேரமாவது ஜெபிக்கவும் உபயோகிக்கலாம்.

இந்த அமைதியான ஜெபவேளையில் ஜெபம் பண்ணுகிறது மாத்திரமல்ல, நாம் அமர்ந்திருந்து தேவன் நம்மோடு பேசுகிற சத்தத்தைக் கேட்க வேண்டும். நீங்கள் அமர்ந்திருந்து நானே தேவனென்று அறிந்து கொள்ளுங்கள் (சங். 46:10). வேதத்தை வாசிக்கும்பொழுது சில காரியங்களை நாம் குறிப்பெடுக்க வேண்டும். கவனமாய்ப் பார்க்க வேண்டும்.

1) இன்று நான் வாசித்த வேத பாகத்திலிருந்து நான் புதிதாய்க் கற்றுக் கொண்டது என்ன?

2) கீழ்ப்படியும்படி எனக்கு ஏதேனும் இதில் கட்டளையுண்டா?

3) பின்பற்றும்படி எனக்கு எடுத்துக் காட்டுகள், உதாரணங்கள் (Examples) ஏதாவது இருக்கிறதா?

4) நான் விட்டுவிடும்படியான குறைகள் என்னிடத்தில் உண்டா?

5) நான் விட்டுவிடும்படியான ஏதேனும் பாவம் என்னிடத்தில் உண்டா?

6) நான் உரிமையாக்கிக் கொள்ளும்படி வாக்குத்தத்தம் உண்டா?

7) தேவனைக் குறித்து புதிய சிந்தனை, வெளிப்பாடு ஏதேனும் உண்டா?

என்று நாம் ஒரு நோட்டுப் புத்தகத்தில் தினந்தோறும் குறித்து வைப்பது நலம். இவ்விதமாய் வேதத்தை நாம் கற்கிறதின் மூலமாக வேதாகமம் நம்முடைய இருதயத்தில் பதியும். நம்முடைய வாழ்க்கையும் தெளிவுறும்.

இந்த அமைதியான தியான வேளையைக் குறித்த திட்டம் மிகக் கண்டிப்பாக கடைபிடிக்க வேண்டும். சாத்தான், ஒவ்வொரு நாளும் இந்தக் குறித்த வேளையில் உங்களை ஜெபம் பண்ணவிடாதபடி தடுக்க உங்களோடு போராடுவான். ஒருநாள் விடுபட்டுப் போனால் அதனால் நீங்கள் தோல்வியடைந்து விட்டதாக அர்த்தமல்ல மறுபடியும் நீங்கள் அதே வேளையில் தேவ சமுகத்தைத் தேடி ஜெயங்கொள்ள வேண்டும்.

## ஜெபிக்க சில குறிப்புகள் :

1) தேவ சமுகத்தில் நாம் கடந்து சென்று முதலாவது தேவனைப் போற்றிப் புகழ்ந்து பாடி துதித்து, அவருக்கு முன்பாக பணிய வேண்டும்.

2) நமக்குள் ஏதாவது பாவம் உண்டென்றால் உடனே தேவ சமுகத்தில் ஒத்துக்கொள்ள வேண்டும். அதை அறிக்கை செய்து சரி செய்ய ஒப்படைக்க வேண்டும், பாவ மன்னிப்பைத் தேட வேண்டும்.

3) தேவன் நமக்கு நமது ஜெபங்களைக் கேட்டு செய்த நன்மைகள், ஆசீர்வாதங்கள் இவைகளை எண்ணி, நன்றியோடு தேவனை ஸ்துதி செலுத்தி தேவனை மகிமைப்படுத்த வேண்டும். மகிழ்ச்சியானாலும், துக்கமானாலும், வெற்றியானாலும், தோல்வியானாலும் தேவனை ஸ்துதிக்க வேண்டும் (பிலி. 4:6).

4) அடுத்தபடியாக நாம் தேவ சமுகத்திலே இரங்கி மன்றாட வேண்டும். மற்றவர்களுக்காக, திருச்சபைக்காக, திருச்சபைத் தலைவர்களுக்காக, உலக இரட்சிப்புக்காக, நம்முடைய ஆத்மீக சரீர நன்மைகளுக்காக, குடும்பத் தேவைகளுக்காக, இரட்சிப்புக்காக நாம் ஜெபிக்கலாம்.

அமைதியான ஜெபதியான வேளையின் போது இடையூறு இராதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். வேதம் வாசிக்கும் போது பக்கத்தில் தினசரி பத்திரிகைகளோ, ஏதாவது படங்களோ, கடிதங்களோ இராதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். குழந்தைகள் தொந்தரவு செய்வார்களாதலால், குடும்பத்திலுள்ள மற்றவர்களை அனுசி இடையூறில்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். நாம் தினந்தோறும் இந்த ஜெப தியான வேளையை அனுசரித்து தேவனிடமிருந்து வல்லமையையும், வரங்களையும், கிருபைகளையும் பெற்று, தொடர்ந்து கிறிஸ்தவ ஜீவியத்திலே வளர, இறைவனை அறிகிற அறிவிலும் அவருடைய கிருபையிலும் வளர தேவன் உங்கள் எல்லாருக்கும் அனுக்கிரகம் செய்வாராக!

---

''ஈசாக்கு சாயங்காலவேளையிலே தியானம் பண்ண வெளியிலே போயிருந்து, தன் கண்களை ஏறெடுத்துப் பார்த்த போது, ஒட்டகங்கள் வரக்கண்டான்''

(ஆதி. 24:63)

---

# மறுரூபம்

மறுரூபம் என்பது நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகையின் போது நமக்கு முழுமையாய் நிறைவடையப் போகிற நிறைவேறப் போகிற ஒரு உன்னத நிலை மாற்றமும் அனுபவமுமாக இருக்கிறது. கிறிஸ்தவ நம்பிக்கையே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாவது வருகையை சம்பந்தப்படுத்தி இருக்கிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இரண்டாம் முறை வரும் பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது மகிமையாக உயிர்த்தெழுவார்கள். உயிரோடிருக்கிற பரிபூரணப்பட்ட பரிசுத்தவான்கள் மறுரூபமடைந்து எடுத்துக் கொள்ளப்படுவார்கள். இதைக் குறித்து அப். பவுல் I கொரி 15:51-57 முடிய இவ்விதமாய்ச் சொல்கிறார். ''இதோ ஒரு இரகசியத்தை உங்களுக்கு அறிவிக்கிறேன்; நாமெல்லாரும் நித்திரையடைவதில்லை; ஆகிலும் கடைசி எக்காளம் தொனிக்கும் போது, ஒரு நிமிஷத்திலே ஒரு இமைப் பொழுதிலே, நாமெல்லாரும் மறுரூபமாக்கப் படுவோம். எக்காளம் தொனிக்கும் அப்பொழுது மரித்தோர் அழிவில்லாதவர்களாய் எழுந்திருப்பார்கள்; நாமும் மறுரூபமாக்கப் படுவோம். அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சாவுக்கேதுவாகிய இது சாவாமையையும் தரித்துக் கொள்ள வேண்டும். அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சாவுக்கேதுவாகிய இது சாவாமையையும் தரித்துக் கொள்ளும் போது, மரணம் ஜெயமாக விழுங்கபபட்டது என்று எழுதியிருக்கிற வார்த்தை நிறைவேறும். மரணமே! உன் கூர் எங்கே? பாதாளமே! உன் ஜெயம் எங்கே? மரணத்தின் கூர் பாவம். பாவத்தின் பெலன் நியாயப் பிரமாணம் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினலே நமக்கு ஜெயம் கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம்!

மறுரூபமானது கிறிஸ்தவ ஜீவியத்தில் உன்னதமும் முடிவானதுமான அனுபவமாக இருக்கிறது. இந்த உலகத்திலே மனதிலே ஆவியிலே மறுரூபமடைந்து கொண்டிருக்கிற மக்கள் (II கொரி 3:18ல் நாம் இவ்விதமாக வாசிக்கிறோம். ''நாமெல்லாரும் திறந்த முகமாய்க் கர்த்தருடைய மகிமையைக் கண்ணாடியிலே காண்கிறது போலக் கண்டு ஆவியாயிருக்கிற கர்த்தரால் அந்தச் சாயலாகத்தானே மகிமையின் மேல் மகிமையடைந்து மறுரூபப் படுகிறோம்.'') நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரும் பொழுது கிறிஸ்தவர்களாகிய, மெய்தேவனுடைய பிள்ளைகளாகிய கிறிஸ்துவுக்குள் இருக்கிறவர்களாய், கிறிஸ்துவை உடையவர்களாய் கிறிஸ்துவினுடையவர்களாயிருக்கிற தேவனுடைய பிள்ளைகள் மறுரூபமாக்கப்படுவார்கள். கர்த்தர் வருவார் நாம் மறுரூபமாக்கப்படுவோம் என்று I தெச. 4:16,17; பிலி. 3:21 ஆகிய வசனங்களில் எழுதப்பட்டிருக்கிறது.

மறுரூபம் என்ற உடனே நமக்கு ஞாபகம் வருகிறது நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய மறுரூபமாகும். மத். 17ம் அதிகாரத்திலும் மாற். 9-ம் அதிகாரத்திலும் லூக். 9ம் அதிகாரத்திலும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மறுரூபமாக்கப் பட்ட சம்பவமானது எழுதப்பட்டிருக்கிறது. மத். 17:1-9; மாற். 9:1-9; லூக். 9:28-36 ஆகிய இந்த மூன்று வேத பாகங்களில் மாத்திரமல்ல இன்னும் பிற இடங்களிலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய மறுரூபம் எழுதப்பட்டிருக்கிறது. மோசே, எலியா என் னப்பட்ட பரிசுத்தவான்கள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மறுரூபமாக்கப்பட்ட பொழுது அந்த பரிசுத்த மலையில் அவரோடு கூட பேசிக் கொண்டிருந்தார்கள் என்றும் இந்த வேத பாகங்களில் எழுதப்பட்டிருக்கிறது. மத். 17 மற்றும் மாற் 9ம் அதிகாரத்தைக் காட்டிலும் லூக்காவில் சில விசேஷித்த வார்த்தைகள் (லூக். 9:28-36) எழுதப்பட்டுள்ளது. லூக். 9:29ல் அவர் ஜெபம் பண்ணுகையில் அவருடைய முகரூபம் மாறிற்று. அவர் வஸ்திரம் வெண்மையாய் பிரகாசித்தது அன்றியும், மோசே எலியா என்னும் இரண்டு பேரும் மகிமையோடு காணப்பட்டு அவருடனே சம்பாஷணை பண்ணினார்கள் என்று எழுதியிருக்கிறது.

மறுரூபம் என்று சொல்லும் பொழுது பிதாவாகிய தேவனால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மறுரூபமாக்கப்பட்டார் என்றே இந்த வேத வாக்கியத்தில் எழுதப்பட்டிருக்கிறது. மூல பாஷையின் அர்த்தத்தின்படியும் அவர் மறுரூபமாக்கப்பட்டார் என்றே எழுதியிருக்கிறது. இயேசுகிறிஸ்து, தாமே மறுருபமாகாமல் பிதாவினால் மறுரூபமாக்கப்பட்டார் என்று நாம் வாசிக்கிறோம். மோசேயும், எலியாவும் இறைவனோடு பேசின பழைய ஏற்பாட்டு பரிசுத்தவான்கள். மோசே இறைவனோடு சம்பாஷித்து விட்டு கீழே இறங்கி வரும் போது அவருடைய முகரூபம் மாறிற்று, அவருடைய முகம் பிரகாசித்தது என்று யாத். 34:28 முதல் எழுதப்பட்டிருக்கிற வேத பாகங்களை நாம் வாசித்தால் அறிந்து கொள்ளலாம். யாத்.34:30ல் ஆரோனும் இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் மோசேயை பார்க்கும் போது அவன் முகம் பிரகாசித்திருப்பதைக் கண்டு அவனிடத்தில் சேர பயந்தார்கள். 35-வது வசனத்தில் ''இஸ்ரவேல் புத்திரர் அவன் முகம் பிரகாசித்திருப்பதைக் கண்டார்கள் என்றும் வாசிக்கிறோம். குமாரனை மகிமைப்படுத்துவது பிதாவே. பிதாவுக்கு குமாரனால் மகிமை கொடுக்கப்பட்டது (யோ. 17:22, 24). ஆனபடியினால், இயேசுவானவரை பிதாவாகிய தேவன் மறுரூபப்படுத்தினார் என்பதே சரி. பிதாவாகிய தேவன் குமாரனைக் குறித்து சாட்சியும் கொடுத்தார் (மாற். 9:7). ஆதலால், நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பிதாவினால் மகிமையடைந்தார், மகிமை பெற்றுக் கொண்டார் அல்லது மறுருபமடைந்தார் என்று நாம் சொல்லலாம். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொல்லும் பொழுது ''நான் என்னை குறித்து சாட்சி கொடுக்கிறவனாயிருக்கிறேன். என்னை அனுப்பின பிதாவும் என்னைக் குறித்து சாட்சி கொடுக்கிறார் என்றார் (யோ. 8:18).

மேலும், இதற்கு அப்போஸ்தலனுடைய வாக்கும் ஒத்திருக்கிறது. II பேது. 1-ம் அதிகாரத்தில் அப்போஸ்தலனாகிய பேதுரு மேற்படி மறுரூப சம்பவத்தை ஞாபகப்படுத்துகிறார் II பேது. 1:16 முதல் நாம் வாசித்தோமென்றால் அங்கே நாம் இவ்விதமாக அறிந்து கொள்ளலாம். ''இவர் என்னுடைய நேசகுமாரன் இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று சொல்லுகிற சத்தம் உன்னதமான மகிமையிலிருந்து அவருக்கு உண்டாகி பிதாவாகிய தேவனால் அவர் கனத்தையும் மகிமையையும் பெற்ற போது அவரோடு கூட நாங்கள் அந்த பரிசுத்த பர்வதத்திலிருந்து வானத்திலிருந்து பிறந்த அந்த சத்தத்தைக் கேட்டோம்'' என்று திட்டமாக சொல்லியிருக்கிறார் ஆனபடியினால் பிதாவாகிய தேவனால் இயேசுவானவர் கனமும் மகிமையும் பெற்றார், பிதாவாகிய தேவனால் அவர் வாழ்த்துதல் பெற்றார் என்று அப்போஸ்தலர்கள் மிகவும் பிந்தியகாலத்திலே மேற்படி சம்பவத்தை ஞாபகப்படுத்தி, அது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகையின் போது அவர் எவ்விதமாய் இருப்பாரென்பதைக் காண்பிக்கிறதாகவும் இவ்விதமான உறுதியான தீர்க்கதரிசனம் இது என்று சொல்லியும் இங்கே குறிப்பிட்டிருக்கிறார்கள்.

மறுரூபம்:

பொதுவாக கிறிஸ்தவர்கள பாட்டுப்பாடுவர். இயேசு வருவார் தேவ சாயலடைந்து இயேசுவோடு கூட பறந்து போவோம், எடுத்துக் கொள்ளப்படுவோம்,மறு ரூபமடைவோம் பறப்போம் என்று பாடுகிறதும், பேசுகிறதும் உண்டு. ஆனால், மறுரூபம் என்றால் என்ன? தேவசாயல் என்றால் என்ன என்றே அறியாமல் அநேகர் இப்படி இருக்கின்றனர்.

முதலாவது தேவ சாயல் என்றால் என்ன என்பதை விளங்கிக் கொள்ள வேண்டும். தேவ சாயலைக் குறித்து எபே. 4:24ல் மெய்யான நீதியிலும், பரிசுத்தத்திலும் தேவனுடைய சாயலாய் சிருஷ்டிக்கப்பட்ட புதிய மனிதன் என்று எழுதப்பட்டுள்ளது. மெய்யான நீதியிலும், பரிசுத்தத்திலும் தேவனுடைய சாயலாய் சிருஷ்டிக்கப்பட்ட புதிய மனிதன் என்பது, கொலோ. 3:10-ல் தன்னை சிருஷ்டித்தவருடைய சாயலுக்கு ஒப்பாய் பூரண அறிவடையும்படி புதிதாக்கப்பட்ட புதிய மனிதன் என்றும் வாசிக்கிறோம். அப்படியென்றால் தேவ சாயல் என்றால் மெய்யான நீதி, பரிசுத்தம், பூரண அறிவடைதல் என்று அர்த்தமாகும். அநேகருக்கு நீதி வேண்டாம், பரிசுத்தம் வேண்டாம், அறிவு வேண்டாம்; மூட பக்தியுள்ளவர்

களாக, எந்த அறிவு வளர்ச்சியையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்ள விருப்பம் கிடையாது. தேவ ஆவியானவருக்கும் இடம் கொடுக்கிறதில்லை, தேவ சாயலில் இப்பொழுது அவர்கள் வளர்ச்சியடையவில்லை. இதை நோக்கமாகக் கொண்டு அவர்கள் தேவசாயலைப்பூரணப்படுத்தவில்லையென்றால் இயேசு கிறிஸ்துவின் வருகையின்போது மறுரூபமடைந்து பறக்கப் போவதாக எண்ணிக் கொண்டிருக்கிற எண்ணம் வீணாகும். உங்கள் சரீரத்தை தேவனுக்குப் பிரியமான பலியாக ஒப்புக் கொடுக்க வேண்டும். அதை இந்த உலகத்திற்கு ஒத்தபிரகாரம் வேஷந் தரித்து, உலகத்தாரைப் போல் அலங்காரம் செய்யக் கூடாது என்றும் தேவனுடைய நன்மையும், பரிபூரணமான சித்தம் இன்னதென்று பகுத்தறியத்தக்கதாக மனமானது தினந்தோறும் புதிதாகி மறுரூபமடைந்து கொண்டிருக்க வேண்டுமென்றும் எழுதப்பட்டிருக்கிறது. இந்தத் தகுதி இருக்கிறவர்களே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகையின்போது மறுரூபமடைவார்கள்.

மறுரூபமடைய மக்களில் காணப்பட வேண்டிய தகுதிகள் :

1. அவர்கள் கிறிஸ்துவுக்குள் இருக்க வேண்டும் (I தெச. 4:14,16; II கொரி. 5:17, 18). ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புது சிருஷ்டியாய் இருக்கிறான். பழையவைகள் எல்லாம் ஒழிந்து போயின எல்லாம் புதிதாயின. I தெச. 4ல் என்ன வாசிக்கிறோம், கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது உயிரோடு எழும்புவார்கள். இவ்விதமாக கிறிஸ்துவுக்குள் இருக்கிறவர்களே மறு ரூபமடைவார்கள். நாமும் மறுரூபமடைவோம் என்று அப். சொல்கிறார். ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் பழையவைகள் எல்லாம் ஒழிந்து போகும். இங்கே, பாரம்பரியம், ஜாதி, பழைய சுபாவம் பழக்க வழக்கங்கள், பழைய அபிப்பிராயங்கள், தத்துவங்கள் இவைகளெல்லாம் ஒழிந்து போக வேண்டும். கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் பழையவைகள் ஒழிந்து இருக்கும்.

2. அவன் கிறிஸ்துவினுடையவனாக காணப்பட வேண்டும். கிறிஸ்துவினுடையவனாக இருக்க வேண்டும். I கொரி. 15:23ல் அவருடையவர்கள் (கிறிஸ்துவினுடையவர்கள்) என்கிற வார்த்தையை நாம் வாசிக்கிறோம். ''அவனவன் தன் வரிசையிலே உயிர்ப்பிக்கப்படுவான்; முதற் பலனானவர் கிறிஸ்து; பின்பு அவர் வருகையில் அவருடையவர்கள் உயிர்ப்பிக்கப்படுவார்கள் என்று எழுதியிருக்கிறது. கலா. 5-24ல் கிறிஸ்துவினுடையவர்கள் தங்கள் மாம்சத்தையும் அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையில் அறைந்திருக்கிறார்கள் என்று வாசிக்கிறோம். சிலர் கிறிஸ்துவுக்குள் இருக்கமாட்டார்கள். கிறிஸ்து இவர்களிலே இருப்பார். இவர்கள் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தபடியினால், கிறிஸ்து இவர்கள் இருதயங்களிலே வாசம் பண்ண வந்திருப்பார். ஆனால், இவர்கள் கிறிஸ்துவுக்குள்ளிருக்கமாட்டார்கள். இரண்டாவதின்படி, அநேகர் கிறிஸ்துவினுடையவர்களாக இருக்கிறதில்லை. கிறிஸ்துவினுடையவர்கள் என்று சொல்லும்பொழுது ஒரு மணவாட்டியானவள், மணவாளனுடையவளாய் மணவாளனுடைய சொத்தாகயிருக்கிறாள்.

3) தேவனுக்குப் பிரியமாகவும், பரிசுத்தமாகவும் அவர்களது வாழ்க்கை இருக்க வேண்டும் (வெளி. 20:4-6 மற்றும் எபி. 12:14லும் நாம் இப்படி வாசிக்கிறோம்).

தேவனுக்குப் பிரியமாக தேவசித்தம் செய்கிறவர்கள், அந்திக் கிறிஸ்துவையோ, அவனுடைய அடையாளத்தையோ தரித்துக் கொள்ளாதவர்கள், பரிசுத்தமுடையவர்கள் இயேசு கிறிஸ்துவின் வருகையின்போது மறுரூபமடைவர். ஏனோக்கைக் குறித்து பரிசுத்த ஆவியானவர் குறிப்பிடும்பொழுது அவன் எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்பே தேவனுக்குப் பிரியமானவன் என்று சாட்சி பெற்றான் என்று வாசிக்கிறோம் (எபி. 11:5). எனவே தேவனுக்குப் பிரியமான வாழ்க்கை வாழ வேண்டும்.

4) நல்லவர்களாக இருக்க வேண்டும் (யோ. 5:28,29). நீதிமான்கள் உயிரோடு எழுப்பப்பட்டு நித்திய ஜீவனை பூரணமாக பெற்றுக் கொள்வார்கள். பொதுவாக கிறிஸ்தவர்கள் என்றாலே நல்லவர்கள் என்று அர்த்தம். பெரும்பாலான மக்கள் அதைக் கவனிப்பது கிடையாது. சகல தந்திரங்களையும், வஞ்

சகங்களேயும், கபடையும் உறுதியாய்ப் பற்றிக் கொண்டிருக்கிறார்கள். அப்படி இருக்கிறவர்கள் மறுரூபப்பட்டியலிலே வரமாட்டார்கள்.

5) விழித்திருக்கிறவர்களாக இருக்க வேண்டும்.

ஆவிக்குரிய வாழ்க்கையில் விழிப்பு நிலை தேவை. லூக். 21:34-36ல் நம்முடைய இருதயமானது பெருந்திண்டியினாலோ, வெறியினாலோ, லௌகீக கவலைகளினாலோ பாரமடையாதபடிக்கும், மனுஷ குமாரன் வரும் பொழுது அவருக்கு முன்பாக நிற்க பாத்திரவான்களாக எண்ணப்பட, அல்லது தகுதியுள்ளவர்களாக அவருக்கு முன்பாக நிற்க எப்பொழுதும் ஜெபம் பண்ணி, விழித்திருங்கள் என்று சொன்னார். பொதுவாக கொல்லும் கொடிய பாவங்களில் ஒன்று பெருந்திண்டி, வெறி, எந்தவிதமான மதுபானமானாலும் அது இறைவனால் விலக்கப்பட்டிருக்கிறது. பெருந்திண்டி, வெறி, லௌகீகக் கவலை, உலகத்துக் கடுத்த காரியங்களில் சிக்கிக் கொண்டு அந்தக் கவலையாக இருக்கிறவர்களும் கர்த்தருடைய வருகையின் போது விழிப்பற்ற நிலையில் இருப்பார்கள். ஆவபடியினால், பெருந்திண்டியை விலக்கவும். எவ்விதமான மதுபானத்தையும் அருந்தாதிருப்போமாக, போதை வஸ்துவை உபயோகியாமல் இருப்போமாக. உலகக்கவலைகளில் சிக்கிக் கொள்ளாமல், ஜெபித்து கர்த்தரிடத்தில் ஒப்படைத்து விட்டு சந்தோஷமாக முன்னேறிச் செல்வோம். கர்த்தருடைய வருகையின் போது அவருக்கு முன்பாக நிற்க பாத்திரவான்களாக இருக்கும்படி எப்பொழுதும் விழித்திருப்போமாக!

6) சபையின் அங்கமாக இருக்க வேண்டும் (I கொரி. 12:13; எபே. 1:20; 4:4-6; 5:27; கொலோ. 1:18,24).

இந்த வசனங்களில் நாம் பார்க்கிறது என்னவென்றால், ஒரு கிறிஸ்தவனே, கிறிஸ்துவினுடைய சரீரத்தின் அங்கமாக இருக்க கடமைப்பட்டிருக்கிறான். கர்த்தர் காண்பிக்கிற, காணப்படுகிற மெய்யான சபையில் அவன் அங்கமாக இருக்க வேண்டிய கடமை உண்டு. இந்தியாவிலிருந்து எழும்பி, ஊழியம் செய்து கடந்து சென்றுவிட்ட ஒரு தேவனுடைய ஊழியரைக் குறித்து இவ்விதமாய்த் தேவன் வெளிப்படுத்தல் கொடுத்தார். அவன் இந்தப் பூமியில் உயிரோடு இருந்த நாட்களில் காணப்பட்ட சுவிசேஷ சத்தியத்திற்கொத்த ஏதாவது ஒரு சபையில் அங்கமாய் இருக்கும்படி நான் சொன்னேன். அப்படியில்லாமல் பொதுவாக கிறிஸ்தவ பிரசங்கியாக இருந்து கடந்து சென்று விட்டான். எனவே, என்னுடைய இரண்டாம் வருகையில் அவன் எடுத்துக் கொள்ளப் படமாட்டான். அல்லது மறுரூபமாக மாட்டான் என்று கர்த்தர் சொன்னார். இன்றும் அநேகருக்கு சபை வேண்டாம்; இன்னும் அநேகர், எதில் இருந்தாலும் சபையின் அங்கமாகத்தானிருக்கிறோம் என்பார்கள். எபே. 4:4-6ல் ஒரே ஒரு சபை உண்டென்றும், ஒரே உபதேசம் உண்டென்றும், அந்த சபையின் அங்கமாக இருக்கும்படி குறிப்பிடப்பட்டுள்ளது.

7) சுத்தமானவர்களாக இருக்க வேண்டும். I யோ. 3:2, 3ல் அவர் வரும்போது அவர் இருக்கிற பிரகாரம் அவரை சந்திக்கப் போகிறோம் என்றும், இப்படிப்பட்ட நம்பிக்கை கொண்டவர்கள் அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது போல தன்னேயும் சுத்திகரித்துக் கொள்கிறான் என்று எழுதியிருக்கிறது. சுத்தமாயிருப்பதற்கு அவன் சுத்திகரிக்கப்பட வேண்டும், பாவ அறிக்கை செய்து தன்னைக் கழுவிக் கொள்ள வேண்டும். சுத்திகரித்துக் கொள்ள வேண்டும். நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார் என்று I யோ. 1:9ல் பரிசுத்த ஆவியானவர் மிகவும் அருமையாக எழுதியிருக்கிறார்.

8) பிழையில்லாத வாழ்க்கை :

எபே. 5:27ல் நாம், கிறிஸ்துவின் மணவாட்டியானவள் எப்படிப்பட்டவளாக இருக்க வேண்டும் என்பதைக் குறித்து வாசிக்கிறோம். எபே. 5:26, 27ல் "தாம் அதைத் திருவசனத்தைக் கொண்டு தண்ணீர் முழுக்கினால் சுத்திகரித்து பரிசுத்தமாக்குகிறதற்கும், கறை திரை முதலானவைகள் ஒன்றும் இல்லா

மல் பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ள சபையாக அதைத் தமக்கு முன் நிறுத்திக் கொள்வதற்கும் தம்மைத் தாமே அதற்காக ஒப்புக் கொடுத்தார்'' என்று எழுதியிருக்கிறது.

இந்தக் கடைசிக் காலத்திலே நவீனக் கொள்கை ஒன்று (a modern doctrine) மேல் நாட்டிலிருந்து இறக்குமதியாயிருக்கிறது. மனந்திரும்ப வேண்டாம், ஜெபம் பண்ண வேண்டாம், கர்த்தரைத் தேட வேண்டாம், அவரைத் தொழுது கொள்ள வேண்டாம், பரிசுத்தமடைய வேண்டாம், இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தால் போதும் பாவமன்னிப்புக் கிடைக்கும், எடுத்துக் கொள்ளப்படுவோம் என்கிற சாத்தானுடைய தந்திரமான உபதேசமாகும் அது. பெரும்பாலான பெந்தெகொஸ்தேகாரர்கள் இதையே நம்பி, எல்லாப் பாவங்களையும் செய்து கொண்டும், விசுவாசித்துக் கொண்டும் போக வேண்டிய இடத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறார்கள். இன்னும் சிலர், ஆதிச் சபையில் சில பிழைகளிருந்தது, அதனால் சபைகளில் பிழைகள் இருக்கத்தான் செய்யும்; இயேசு கிறிஸ்து வரும்பொழுது பூரணப்படுத்தி எடுத்துக் கொள்வார் என்று பொய்யாய் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். அப்படி இருந்தது, அப்படி இருக்கக் கூடாது, இப்படித்தான் இருக்க வேண்டும் என்றே வேதாகமத்தில் எழுதப்பட்டிருக்கிறதேயொழிய அப்படி இருக்க வேண்டும் என்று எழுதவில்லை. ஆரம்பகால சபையிலே சில குறைபாடுகள், பிரச்சினைகள் இருந்தது. அவைகளை நீக்கும்படிக்கே அப்போஸ்தலர்கள் நிருபங்களை எழுதினார்கள். அவைகள் நீங்கிப் போயின. இறைவன் எதிர்பார்த்த சபையாய் இந்தக் கடைசிக் காலத்தில் திருச்சபை எழும்பி பூரணப்படுகிறது.

9) ஆவியினால் ஜீவித்து, ஆவியினால் நடந்து, ஆவிக்குள் இருக்கிற அனுபவம். கலா. 5:16 முதல் நாம் வாசித்தோமென்றால் ஆவிக்கேற்றபடி நடந்து கொள்ளுங்கள், ஆவியினால் நடத்தப்படுங்கள் என்று வாசிக்கிறோம். ரோ. 8:14-ல் எவர்கள் தேவனுடைய ஆவியினால் நடத்தப்படுகிறார்களோ அவர்கள் தேவனுடைய புத்திரராய் இருக்கிறார்கள் என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆவியின்படி நடக்கிறவர்கள் ஆவிக்குரியவைகளை சிந்திக்கிறார்கள், ஆவிக்குரிய மக்கள் ஆவியினாலே சரீரத்தின் செய்கைகளை அழித்து ஆவியினால் நடக்கிறார்கள் அல்லது ஆவியானவரால் நடத்தப்படுகிறார்கள் (ரோமர் 8:5, 13).

10) வெளிச்சத்தில் நடத்தல் (I யோ. 1:7).

கிறிஸ்தவர்கள் ஐக்கியமாக இருக்க வேண்டும் ஐக்கியமாயிருக்க ஒருவருக்கொருவர் உண்மை பேச வேண்டும். ஒருவரோடொருவர் ஐக்கியமாயிருக்க வெளிச்சத்தில் நடக்க வேண்டும். வெளியரங்கமாக்குகிறதெல்லாம் வெளிச்சமாக இருக்கிறது. ஒளியில் நடத்தல் கிறிஸ்தவ வாழ்க்கையின் முக்கிய தேவையாகும். கொலோ. 2:6-ல் கிறிஸ்துவுக்குள்ளாக வேர் கொண்டு, பலங் கொண்டு அவர்கள் வளர்ந்து பெருக வேண்டும், விசுவாசத்தில் உறுதியாக இருக்க வேண்டும், விசுவாசக் கடமைகளை நிறைவேற்ற வேண்டும் என்று நாம் பார்க்கிறோம். அப்படியினாலே, திருச்சபையாயிருந்து, கர்த்தருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதும், திருப்பந்தியை ஆசரித்து அவருடைய வருகைக்கு காத்திருப்பதும் அவசியம் (I கொரி. 11:23-26, எபி. 9:28).

இந்த பத்து விதமான தகுதிகளும் மறுரூபமடையப்போகிறவர்களுக்கு இருக்க வேண்டும். ஆதலால் மனிதன் தன் சரீரத்தை தூய்மையாயும், பெலமாகவும், ஆரோக்கியமாகவும், களங்கமாயும் காத்து, கடவுளுக்குப் பிரியமான ஜீவபலியாக சமர்ப்பித்து இந்த பிரபஞ்சத்திற்கு ஒத்த வேஷந்தரியாமல் (II கொரி. 7:1; ரோ. 12:1,2) தன்னுடைய சரீரத்தை அவன் மறுரூபத்திற்காக ஆயத்தப்படுத்த வேண்டும் மனதிலே தினமும் மறுரூபமடைந்து, கிறிஸ்துவுக்குள் வளர்கிறது மாத்திரமல்ல, மறுரூபம் சரீரத்தில் நிகழப்போகிற சம்பவமாதலால், சரீரத்தைப் பரிசுத்தப்படுத்தி, தூய்மையாக கர்த்தருடைய சித்தத்தின்படி அதை ஆண்டு கொண்டு அவருடைய வருகைக்காக ஆவிக்குரிய பயிற்சி பெற்று காத்திருக்கிற பரிசுத்தவான்களுடைய சரீரமே மறுரூபமடையும், எடுத்துக் கொள்ளப்படுவார்கள்.

''தம்முடைய குடியிருப்போ பரலோகத்தி லிருக்கிறது, அங்கேயிருந்து கர்த்தராயிருக்கிற இயேசு கிறிஸ்து என்னும் இரட்சகர் வர எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அவர் எல்லா வற்றையும் தமக்குக் கீழ்ப்படுத்திக் கொள்ளத் தக்க தம்முடைய வல்லமையான செயலின் படியே, நம்முடைய அற்பமான சரீரத்தைத் தம்முடைய மகிமையான சரீரத்திற்கு ஒப்பாக மறுரூபப்படுத்துவார் (பிலி. 3:20-21) என்று அறிவிக்கிறோம்.

''பலமான ஆகாரமானது நன்மை தீமை இன்னதென்று பயிற்சியினால் பகுத்தறியத் தக்கதாக முயற்சி செய்யும் ஞானேந்தி ரியங்களை உடையவர்களாகிய பூரணவயது உள்ளவர்களுக்கே தகும்'' (எபி 5:14.)

# வேத பாடம் (தொடர்ச்சி)

## லேவியராகமம் 17:1-9

இஸ்ரவேல் புத்திரர்களானாலும், அந்நியர்களானாலும் அவர்கள் பலியிடுகிறதை ஒரே தேவனுக்கு ஆசரிப்புக் கூடார வாசலுக்கு முன்பாகக் கொண்டு வந்து பலியிட வேண்டும். கண்ட கண்ட இடத்தில் பலி செலுத்தக் கூடாது. இஸ்ரவேலன் தான் செலுத்துகிற பலியை பேய்களுக்கு செலுத்தாதபடி தேவன் குறிப்பிட்ட இடத்தில் கொண்டு வந்து, ஆசாரியருக்கு முன்பாக பலி செலுத்தும்படி கட்டளையிட்டார். ஆனால் புசிப்புக்காக அவர்கள் மிருகங்களை அடித்து புசிக்க வேண்டுமென்றால் அதை கர்த்தருடைய நியமத்தின்படி தங்கள் வீடு வாசல் களிலோ எங்கேயும் அடித்துப் புசிக்கலாம் (உபா. 12:15,21).

லேவி : 17 : 10 - 14 : இரத்தத்தை புசிப்பதற்கு விரோதமான தேவனுடைய கட்டளை. எந்த மிருகத்தின் இரத்தத்தையும் புசிக்கக் கூடாது. மாம்சத்தின் உயிர் இரத்தத்தில் இருக்கிறது ஆகையால் உயிரைப் புசிக்கக் கூடாது என்று தேவன் கட்டளையிட்டார் (லேவி. 17:14). மேலும், இரத்தம் பாவ நிவிர்த்திக்கென்று பலி பீடத்தின் மேல் செலுத்தப்பட வேண்டும். மாம்சத்தின் உயிர் இரத்தத்திலிருக்கிறது. ஆனபடியால், இரத்தத்தை ஆத்துமா விற்காய் பாவ நிவிர்த்தி செய்யும்படி பலிபீடத்தின் மேல் கட்டளையிட்டேன் என்பது தேவனு டைய உன்னதமான பிரமாணம் (லேவி. 17:11). இஸ்ரவேலர்களில் ஒருவரும் தானாய் இறந்து போனதை புசிக்கக் கூடாது (உபா.14:21; அப். 15:20, 28). புற ஜாதிகள் செத்துப் போனதை புசிக்கிறார்கள். இஸ்ரவேல புத்திரர்கள் ஒருவரும் தானாய் செத்ததைப் புசிக்கக் கூடாது. இரத் தத்தைக் குடிக்கக் கூடாது. புற ஜாதிகள் பலியிடுகிறதை பேய்களுக்கே பலியிடுகிறார்கள். அவர்கள் தங்கள் பலிகளோடும், பேய்களோடும் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் இரத் தத்தையும் புசிக்கிறார்கள், குடிக்கிறார்கள் (1 கொரி. 10:20). தேவ ஜனங்கள் இவைகளுக்கு விலகி இருக்கும்படி பரிசுத்த ஆவியானவர் மிகவும் திட்டமாய் கட்டளையிட்டிருக்கிறார். அவர்கள் புசிக்க வேண்டுமென்றால் சுத்தமானவைகளாகப் பார்த்து அவைகளை ஜெபம் பண்ணி, அடித்து அதின் இரத்தத்தை தரையிலே ஊற்றிப் போட்டு அதை சுத்தமாக இரத்தமற கழுவி புசிக்கலாம (லேவி. 17:14,16).

லேவி: 18 : 1 - 5. புற ஜாதிகள் கீழ்க்கண்ட அருவருப்பான செய்கைகளையுடையவர் களாகயிருக்கிறார்கள். அவர்களுடைய அருவருப்பான செய்கைகள் 92க்கும் அதிகமானவை களாயிருக்கின்றன.

லேவி. 18 : 6 : தகாப்புணர்ச்சி

திருமண உறவு கொள்ளத்தகாதவரின் பாலுறவு தடை செய்யப்பட்டுள்ளது. அப்படிப் பட்ட இருபது (20) கட்டளைகள் இங்கே கொடுக்கப்பட்டுள்ளது.

1. நெருங்கின உறவினர்கள் : அதாவது அண்ணன், தங்கை, தம்பி, அக்கா இவர்களை திருமணம் செய்யக் கூடாது அல்லது அவர்களோடு உடல் உறவு செய்யக் கூடாது.
2. தகப்பனோடு உடல் உறவு செய்யக் கூடாது (ஆதி. 19:31-38; லேவி. 18:7).
3. தாயோடு (லேவி. 18:7)
4. தகப்பனுடைய மனைவியோடு (வச. 8)
5. சகோதரியோடு (வச. 9)
6. தகப்பனுடைய மகளோடு (வச. 9)
7. தாயினுடைய மகளோடு (வச. 9)
8. குமாரனுடைய மகளோடு, அதாவது பேத்தியோடு (வச. 10)
9. மகளுடைய மகளோடு, பேத்தியோடு (வச. 10)
10. தகப்பனுடைய மனைவியின் மகளோடு (வச. 11)
11. தகப்பனுடைய சகோதரியோடு அல்லது மாமியோடு (வச. 12)
12. தாயினுடைய சகோதரியோடு (வச. 13) சின்னம்மா அல்லது பெரியம்மாவோடு
13. தகப்பனுடைய சகோதரனோடு (வச. 14)
14. தகப்பனுடைய சகோதரனுடைய மனைவியோடு (வச 14)
15. மருமகளோடு (வச. 15)
16. சகோதரனுடைய மனைவியோடு (வச. 16) ஆனால் சகோதரன் மரித்துப் போனால் அவனுடைய பேர் சந்ததியில் அற்றுப் போகாமலிருக்க அவனுடைய மனைவியை விவாகம் பண்ணி பிறக்கும் முதல் பிள்ளைக்கு சகோதரனுடைய பெயரை வைத்து, சகோதரனுடைய சொத்தை அந்த பிள்ளைக்குக் கொடுக்க வேண்டும் (உபா. 25:25 முதல்).
17. ஒரு ஸ்திரீயையும் அவளுடைய மகளையும் விவாகம் பண்ணக் கூடாது, சேரக்கூடாது.
18. அவளுடைய மகனுடைய மகளை சேரக் கூடாது
19. அவளுடைய மகளுடைய மகளை சேரக் கூடாது.
20. மனைவியினுடைய சகோதரியை சேரக் கூடாது.

இவ்விதமான விவாகம் அல்லது இப்படிப்பட்டவர்களுடன் உடலுறவு கொள்வது இஸ்ரவேலரது சட்டத்தால் தடுக்கப்பட்டுள்ளது. இவ்விதமாய் புற ஜாதிகள் சீர்கேடான பழக்கமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். தேவ ஜனங்கள் இப்படி முறைகேடான வாழ்வு செய்யக் கூடாது என்று தேவ ஆவியானவர் கட்டளையிட்டிருக்கிறார்.

மேலும் உடலுறவு சம்பந்தப்பட்ட 5 (ஐந்து) விதி விலக்குகள் :

1. ஸ்திரீ சூதகமாக இருக்கும் போது அவளோடே கூட சேரக கூடாது (வச. 19).
2. விபசாரம் செய்யக் கூடாது, [பிறனுடைய மனைவியோடு] (வச. 20; யாத. 20:14)
3. பெண்ணோடு உடலுறவு கொள்வது போல ஆணோடு ஆண் உடலுறவு கொள்ளக் கூடாது (வச. 22; 20:13).
4. யாதொரு மிருகத்தோடும் மனிதன் புணர்ச்சி செய்யக கூடாது.
5. யாதொரு மிருகத்தோடும் புணர்ச்சி செய்யும்படி ஸ்திரீ அதற்கு முன்பாக நிற்கக்கூடாது

## லேவி. 18 : 24 - 30

மேற்கண்டவைகள் ஒன்றினாலும் நீங்கள் உங்களைத் தீட்டுப்படுத்திக் கொள்ளாதிருங்கள் என்று இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் எச்சரித்தார். இறைவன் அவர்களுக்கு முன்பாக இருந்து துரத்தி விடுகிற ஜாதிகள் இவைகளெல்லாவற்றினாலும் தங்களைத் தீட்டுப்படுத்தி இருக்கிறார்கள். தேசமும் தீட்டுப்பட்டுப் போய்விட்டது. இங்கு அருவருப்புகளையெல்லாம் முன்

விருந்த அந்த தேசத்தின் மனிதர் செய்ததினாலே தேசம் தீட்டாயிற்று. அதினிமித்தம் தேசம் அவர்களை கக்கிப் போட்டது. உங்களையும் அது கக்கிப் போடாதபடிக்கு நீங்கள் இப்படிப்பட்ட அருவருப்புகள் யாதென்றையும் செய்ய வேண்டாம். அப்படிச் செய்து உங்கள் ஆத்துமாக்களைக் கெடுத்துக் கொள்ள வேண்டாம். அப்படிச் செய்கிறவனுடைய ஆத்துமா ஜனங்களின் மத்தியில் இராதபடி அறுப்புண்டு போகும் ஆகையால் உங்களுக்கு முன் செய்யப்பட்ட அருவருப்பான முறைகள் யாதொன்றை நீங்கள் செய்து அவைகளால் உங்களைத் தீட்டுபடுத்திக் கொள்ளாதபடிக்கு என் கட்டளைகளைக் கைக்கொள்ளுங்கள், நான் உங்கள தேவனாகிய கர்த்தர் என்று சொல் என்றார் என்பதே.

தேவ ஜனங்கள் புற ஜாதியாருடைய மார்க்கத்தைக் கற்றுக் கொள்ளாமல், அவர்கள் செய்கிறபடி செய்யாமல் அவர்கள் பயப்படுகிறபடி பயப்படாமல் அவர்களுடைய அருவருப்புகளை பின்பற்றாமல் இருக்கும்படி தேவ ஆவியானவர் கட்டளையிடுகிறார்.

(தொடரும்)

---

''...பரிசுத்தமுள்ளவர்களாயிருக்கவும் நாடுங்கள்; பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே.'' (எபி. 12:14)

---

(தொடர்ச்சி)

# கிறிஸ்தவ திருமணம்

விரத்தராயிருப்பதைக் குறித்து சுருக்கமாக பெப்ருவரி மாத செய்தியிலே எழுதியிருக்கிறது. திருமணத்தைப் பற்றி மனிதனுடைய ஆசாபாசத்தைக் குறித்து விவரமாய் எழுதி வரும்பொழுது அதைக் குறித்தும் கவனிப்பது அவசியமென்று எண்ணுகிறேன். அப்படி இல்லை என்றால் சிலர் ஒரு பக்கமே நாம் சாய்ந்து நிற்பதாக எண்ணுவர். பிரம்மச்சரியம் என்று பொதுவாக இந்து மதத்தில் சொல்லப்படுவதுண்டு. அதனுடைய அர்த்தம் பிரம்மனை காண முயற்சித்தல் என்பதாம். மனிதன் தன் சக்தியை விணடிக்காமல் அதைத் தங்க வைத்து தன் உடலோடு கூட ஐக்கியப்படுத்துவதின் மூலம் அறிவு, தேஜஸ், மூளை வளர்ச்சி போன்றவை உண்டாகுமென்றும், பிரம்மனை தனக்குள்ளே அவன் காணமுடியுமென்றும் இந்து மார்க்கத்தில் சொல்லுவார்கள். வேதாகமம் இச்சையடக்கத்தைப் பற்றி மிகவும் தெளிவாக நமக்குக் கட்டளையிட்டுள்ளது. இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிற ஒவ்வொருவரும் இச்சையடக்கமுடையவர்களாக இருக்க வேண்டும். கண்கள், காதுகள், நாவு ருசி போன்றவற்றைக் கட்டுப்படுத்த வேண்டும். இவற்றின் உணர்ச்சிகளின் வழியாக நாம் செல்லக் கூடாது. அவைகளைக் கட்டுப்படுத்தி மேலான நோக்கத்துக்கு ஏதுவாக அவைகளை நாம் கையாள வேண்டும். புலனடக்கம் என்று சொல்லும்பொழுது ஐம்பொறிகளையும் அடக்கி, நம்முடைய விருப்பப் பிரகாரம் அவைகள் செயல்படும்படி கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதாகும். அப். பவுல் பந்தயத்திற்கு போராடுகிற யாவரும் எல்லாவற்றிலும் இச்சையடக்கமாயிருப்பார்கள் என்று I கொரி 9:25-ல் சொல்லியிருக்கிறார். அவர்கள் அழிவுள்ள கிரீடத்தைப் பெறும்படிக்கு அப்படிச் செய்கிறார்கள். நாமோ அழிவில்லாத கிரீடத்தைப் பெறும்படி அப்படிச் செய்கிறோம். மற்றவர்களுக்குப் பிரசங்கம் பண்ணுகிற நான் தானே ஆகாதவனாய்ப் போகாதபடிக்கு என் சரீரத்தை ஒடுக்கி கீழ்ப்படுத்துகிறேன் என்று அப்போஸ்தலன் I கொரி. 9:27-ல் மிகவும் தெளிவாக சொல்லியிருக்கிறார்.

சரீரத்தை அடக்க வேண்டும். உணர்ச்சிகளின் இருப்பிடம் நம்முடைய சரீரமாகும். சரீரம் ஆரோக்கியமுள்ள மனிதனுக்கு, ஆத்மீகமுள்ள மனிதனுக்கு கட்டுப்பட்டு இருக்கிறது. பெலவீனம், ஆத்தும ஆரோக்கியமில்லாமை இச்சைகளை கட்டுப்படுத்த முடியாமல்போகிறதற்கு காரணமாயிருக்கிறது. நாம் புளியங்

காயைப் பார்க்கும்பொழுது உடனே வாயில் எச்சில் ஊறும் - அதைப் பறித்து புசிக்க வேண்டுமென்று நினைவு வரும். அடிக்கடி புளியங்காயை நாம் பார்த்து அதைப் புசிக்காமல் எச்சிலை ஜீரணத்துக்கு விழுங்கிவிட்டு அதைப் பார்க்க ஆரம்பித்தோமென்றால் பின்பு அந்த எச்சில் ஊறுது, நின்றுவிடும். அப்படியே ஒரு அழகான பெண்ணைப் பார்க்கும்பொழுது இச்சையுண்டாகிறது இயல்பே. அப்படியே ஒரு அழகான வாலிபனை பார்க்கும்பொழுது பெண்களுக்கும் இச்சையுண்டாகலாம். ஆனால் அடிக்கடி பார்க்கிறதினால் பார்த்தும் இச்சிக்காமல் இருக்க முடியும். அந்த இச்சையை யடக்கியொடுக்கிவிட வேண்டும். பொதுவாக நாம் எதையடக்க வேண்டுமென்று எண்ணுகிறோமோ அது நமக்கு அடங்கிவிடும். நாம் அதற்கு இடங்கொடுத்து அதில் ஈடுபாடு கொள்ளும்பொழுது அது நம்முடைய கட்டுப்பாட்டை மீறிச் சென்றுவிடும். பின்பு, அது அடக்க முடியாததாகி விடும். ஆனபடியினால், இச்சையடக்கம் கிறிஸ்தவ வாழ்க்கைக்கு மிகவும் அவசியமாக இருக்கிறது. ஒன்றை மாத்திரம் அடக்கிக்கொள்கிறது முடியாத காரியம். எல்லாவற்றையும் அடக்குகிறதற்கு இந்த காரியத்திலேயும் இச்சையடக்கம் உண்டாகும். கண்ணடக்கம், காதடக்கம், கண்கள் கெட்ட காரியங்களை, கெட்ட படங்களை, கெட்ட காட்சிகளை பார்க்கவோ, கெட்ட புஸ்தகங்களை படிக்கவோ விரும்பாமல் இருப்பது. காதடக்கம் - கெட்ட வார்த்தைகள் கேட்கவோ, கேலி கிண்டல் கேட்கவோ, பரியாசம் கேட்கவோ, கெட்ட கதைகளைப் பாடல்களை கேட்கவோ விரும்பாமல் காதுகளை அடக்க வேண்டும். நாவடக்கம்—

> ''யாகாவராயினும் நாகாக்க காவாக்கால்
> சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு''.

என்று குறளில் சொல்லப்பட்டு இருக்கிறது. நாவை காக்காமல் வாயில வந்ததைப் பேசுகிறது மாத்திரமல்ல, நாவைக் காக்காமல் நாவு ருசிக்கு உட்பட்டு புசிக்கிறதையும் இது குறிப்பிடும். நாவின் ருசிக்காக நாம் புசியாமல், உடல் ஆரோக்கியத்திற்கும், நம்முடைய நோக்கத்திற்குத் தக்கதாக ஆகாரங்களை கட்டுப்பாடோடு குறைந்த அளவே புசிக்க பழக வேண்டும். பொதுவாக குழந்தைகளுக்கு இனிப்பு என்றால் ரொம்பப் பிரியம். கசப்பு என்றால் அவர்களுக்கு வேண்டாம். வியாதியுண்டாக்குவதற்கு காரணமாயிருக்கிறவைகளை அவர்கள் விரும்புவார்கள். அப்படியே, நாமும் இருக்கக் கூடாது. நமமுடைய நாவை எல்லாவிதத்திலும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவேண்டும். சிலர் உயர்ந்த ரகமான ஆகாரங்களை புசித்து, பழகிவிட்டால் மெலிந்த ஆகாரங்கள் அவர்களுக்குச் செல்லாது. இடையிடையே மெலிந்த ஆகாரங்களையும் சாப்பிட்டு இந்த நாவை கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர வேண்டும். கண்ட நேரத்தில் கண்டதை சாப்பிடக் கூடாது. நல்ல பொருள் என்று சொல்லி பசியில்லாதபோது புசிக்கக் கூடாது. ''பசித்திரு'', ''தனித்திரு'' ''விழித்திரு'' என்று பொதுவாக ஆன்மீக போதனை கொடுப்பார்கள். பசித்து புசிக்க வேண்டும். பசியாதிருக்கும்பொழுது புசிக்கக் கூடாது. பசித்தாலும் புசியாதிருப்பது பிரம்மச்சரியம். இது எல்லா நிலையிலும் பொருந்தும். தனித்திரு - தனியாயிருந்து தியானிக்க, அமைதியாய் இருக்க, இறைவனோடு பழக பயிற்சிக்க வேண்டும். விழித்திரு - எப்பொழுதும் விழிப்பாயிருக்க வேண்டும். உஷாராயிருக்க வேண்டும். அசமந்தமாயிருக்க இடங்கொடுக்கக் கூடாது. விழிப்பாயிருக்க முயற்சிக்க வேண்டும்.

தேவ ஊழியர்கள் விவாகம் பண்ணக் கூடாது என்று இயேசுவானவர் வேதாகமத்தில் சொன்னதேயில்லை, விவாகரத்தைக் குறித்து கர்த்தரிடத்தில் கேட்டு, அப்படியானால் விவாகம் பண்ணுகிறது நல்லதல்ல என்று சீஷர் சொல்ல, தாயின் வயிற்றிலிருந்து அண்ணகர்களாய்ப் பிறந்தவர்களும் உண்டு; மனுஷர்களால் அண்ணகர்களாக்கப்பட்டவர்களும் உண்டு, பரலோக ராஜ்யத்தினிமித்தம் தங்களை அண்ணகர்களாக்கிக் கொண்டவர்களும் உண்டு என்று இயேசுவானவர் திருவுளம்பற்றினார். இங்கே மனுஷர்களால் அண்ணகர்களாக்கப்படுகிறவர்களும், தங்களைத் தாங்களே அண்ணகர்களாக்கிக் கொள்கிறதும் ஆறுவை சிகிச்சையின் மூலமாக (through operation) செய்யப்படுகிறதாகும். இந்த நாட்களில் நாம்

பார்க்கிறோமல்லவா - ஆண்களை பெண்களாகவும், பெண்களை ஆண்களாகவும் மாற்றுகிறார்கள். அப்படியே அண்ணகர்களாக்கிக் கொள்கிறதென்றால் ஆபரேஷன் செய்து கொள்வது என்று திட்டமாக தேவ ஜனங்கள் அறிந்து கொள்ள வேண்டும் (மத், 19:12). மத்தேயு 19-ம் அதிகாரத்தில் தள்ளி விடுதலைப் பற்றிச் சொல்லும்பொழுது மனைவியைப் பற்றி புருஷனுடைய காரியம் இப்படியென்றால் விவாகம் பண்ணுகிறது நல்லதல்ல என்றுதான் சீஷர்கள் சொன்னார்களேயொழிய, சீஷர்கள் விவாகம் பண்ணலாமா, பண்ண வேண்டாமா என்று கேட்கவில்லை. சீஷர்கள் விவாகம் பண்ணக் கூடாது என்று கர்த்தர் சொல்லவும் இல்லை. ஏனென்றால் இந்த சம்பாஷணைக்கு அடுத்த வசனத்திலே (மத். 19:13, 14, 15) அவர் சிறு பிள்ளைகளை ஏற்றுக் கொண்டு அவர்கள் மேல் தமது கரங்களை வைத்து அவர்களை ஆசீர்வதித்தார் என்றும் பார்க்கிறோம். திருமணத்தின் மூலமாக உண்டாகிற ஆசீர்வாதத்தை அவர் அங்கீகரித்து ஆசீர்வதிக்கிறார். விவாகமானவன் தன் மனைவிக்கு எப்படியிருக்கலாமென்று கவலைப்படுகிறான். விவாகமில்லாதவன் தேவனுக்கு எப்படி பிரியமாயிருக்கலாமென்று கவலைப்படுகிறான் என்றும், அப்படியே மனைவியானவளுக்கும் கன்னிகைக்கும் வித்தியாசமுண்டு. விவாகமில்லாதவள் சரீரத்திலும், ஆத்துமாவிலும் பரிசுத்தமாயிருக்கும்படி கர்த்தருக்குரியவைகளுக்காக கவலைப்படுகிறாள், விவாகம் பண்ணினவள், தன் புருஷனுக்கு எப்படி பிரியமாயிருக்கலாமென்று உலகத்துக்குரியவைகளுக்காகக் கவலைப்படுகிறாள் என்று I கொரி, 7:32, 34-ல் அப். பவுல் எழுதியிருக்கிறார். 32-ம் வசனத்தில் கவலையற்றவர்களாக இருக்க வேண்டும் என்று எழுதியிருக்கிறார்.

யாதாமொருவன் தேவ ஊழியஞ் செய்கிறதற்கு விவாகமில்லாமல் கர்த்தருக்கு தீவிரமாய் பணி செய்ய விரும்பி தங்களை விரத்தராக ஒப்புக் கொடுக்கிறதென்றால் அது வரவேற்கத்தக்கதே. அப்படிச் செய்யலாம். ஆனால், I கொரி, 7-ம் அதிகாரத்தில் அப். பவுல் எழுதியிருக்கிற காரியங்களில் சிலவற்றை கொரிந்து சபையார் கேட்டு எழுதியிருந்தார்கள், அதற்குப் பதிலும், கொரிந்து சபையிலுள்ள சில காரியங்களை கேள்விப்பட்டதற்கு பதிலுமாக அக்கால நிலமைக்கு அந்த நிருபம் அப்படி எழுதப்பட்டிருக்கிறது (I கொரி.7:26) கன்னிகைகளைப் பற்றிய விஷயம் அவர்கள் கேட்டிருந்ததற்கு அவர் பதில் எழுதியிருக்கிறாரேயொழிய இது இறைவனுடைய சட்டமென்று அவர் சொல்லவில்லை (I கொரி 7:25, 28, 36). விரத்தராய் இருக்கிறதானாலும், விவாகம் பண்ணிக் கொண்டாலும் கட்டுப்பாடோடு இருக்கிறது மிகவும் அவசியமானது.

விரத்தராயிருக்கிறவர்களும் கட்டுப்பாடோடு இருக்கிறவர்களும் சமமே. விரத்தராயிருந்தும், மனம் ஒன்றை சிந்தித்து அசைபோட்டுக் கொண்டிருக்கிற புறம்பான நடபடிகளும், வேறுவிதமாயிருக்கிறதும் குழப்பத்தை உண்டாக்கும். ஆனபடியினால், வேகிறதைப் பார்க்கிலும் விவாகம் பண்ணுகிறது நலம் என்று அப். பவுல் சொன்னார் (I கொரி. 7:9). விரத்தராயிருக்கிறவர்கள் அல்லது பிரம்மச்சாரியாய் இருக்க விரும்புகிறவர்கள் அதற்காக பயிற்சி செய்து ஐம்புலன்களையும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர வேண்டும். தங்களுடைய சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்த வேண்டும். அது அவர்களுடைய ஆளுகையில் இருக்க வேண்டும். எல்லாக் காரியத்திலேயும் இச்சையடக்கமாயிருக்க வேண்டும். இப்படியிருந்து வெற்றியடைய வேதாகமம் வழி காண்பிக்கிறது. அது நல்லது. விவாகமானவர்களும் கட்டுப்பாடோடே இருந்து மேற்சொன்ன ஆலோசனை பிரகாரம் ஸ்திரீகளும் புருஷரும் நடந்து கொள்கிற போது அவர்களுக்கு ஆரோக்கியமும், அறிவு தீட்சணியமும், ஆவிக்குரிய ஜீவியத்தில் வளர்ச்சியும், ஞானமும் உண்டாயிருக்கும். எக்காரணத்தைக் கொண்டும் யாரும் களவுறவு செய்யக் கூடாது, விழ்ச்சியடையக் கூடாது. தேவ கிருபையைப் பற்றிக் கொள்ள வேண்டும்.

இரத்தீட்டுகள் : தீவிரமான அசுத்த எண்ணங்களினால் ஸ்கலிதமாகிறது. இவ்விதமான அசுத்த நிலையில் இருக்கிறவர்கள் உடனே தேவாலோசனை பெற்று அதற்குரிய பயிற்சிகளை கையாண்டு தங்களுடைய ஆரோக்கியத்தையும், மனநிலையையும் ஸ்திரப்படுத்திக் கொள்ள வேண்டும். இறைவன் யார் யாருக்கு விரத்தராயிருக்க அனுக்கிரகம் செய்

இருப்போர் அவர்கள் பாக்கியவான்கள். ஆனால் விரத்தராக ஒப்புக் கொடுத்துவிட்டு பின்பு விவாகத்தைத் தேடாதே. விவாகமானவன் மனைவியை விட்டுவிட்டு விரத்தனாக ஓடிவிட எண்ணாதே. தேவ ஊழியத்தைக் காரணமாக காட்டி வசனத்தைத் திரித்துக் கூறக் கூடாது. லூக். 14:26ஐ சிலர், தாரக மந்திரம் போல் உளறிக் கொண்டு இருப்பதற்கு ஆதாரமாக எண்ணி இருக்கிறார்கள். ''யாதொருவன் என்னிடத்தில் வந்து, தன் தகப்பனையும் தாயையும் மனைவியையும் பிள்ளைகளையும் சகோதரரையும் சகோதரிகளையும், தன் ஜீவனையும் வெறுக்காவிட்டால் எனக்குச் சீஷனாயிருக்க மாட்டான்'' என்று கர்த்தர் சொன்ன வார்த்தை ஊழியரைக் குறித்து சொன்னதல்ல, ஒவ்வொரு விசுவாசியைப் பற்றியும் கர்த்தர் சொன்னதாகும். சீஷன் என்பதற்கு ஊழியக்காரன் என்று சிலர் தவறாக வியாக்கியானிக்கிறார்கள். மத் 28: 18, 19, 20ல் ''...நீங்கள் புறப்பட்டுப் போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து...'' என்று கர்த்தர் சொல்லியிருக்கிறார். சீஷரானவர்களுக்குத்தான் ஞானஸ்நானம் கொடுக்கப்படுகிறது இந்தச் சீஷர்களிலிருந்துதான் ஊழியர்கள் எடுக்கப்படுகிறார்கள். ஊழியர்கள் விவாகம் பண்ணக் கூடாது என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோ, அப். பவுலோ எந்த ஒரு இடத்திலும் சொன்னதில்லை. விவாகம் பண்ணக் கூடாதென்பது பிசாசினுடைய உபதேசம் என்று அப்.பவுல் திட்டமாக வேறொரு இடத்தில் எழுதியுள்ளார்(1தீமோ.4:1-4). ஆனபடியால், விசுவாசிகளோ, ஊழியர்களோ விவாகம் பண்ண மனதில்லாதவர்கள், அப்படியே இருக்கலாம். விவாகஸ்தர்களாக இருந்து தேவனை சேவிக்க விரும்புகிறவர்கள், விவாகம் செய்து கொண்டு, குடும்பமாக கர்த்தரை சேவிக்கலாம்.ஏனோக்கு விவாகஸ்தர் தம் 65ம் வயதில் மெத்துசலாவைப் பெற்றபின் 300 வருஷம் தேவனோடு ஜீவித்தார். விவாகம் அவரது ஆவிக்குரிய ஜீவியத்திற்கோ, ஊழியத்திற்கோ எந்த ஒரு தடையையும் ஏற்படுத்தவில்லை. அநேக குமாரரையும், குமாரத்திகளை பெற்றார் (ஆதி. 5:22-24). எலியா தீர்க்கதரிசி விரத்தர். திடீர் என்று தோன்றி திடீரென்று மறைந்து விடுகிறார் (I இரா. 17 அதி; II இரா. 2 அதி). எந்த நிலையிலும் நீ உன்னதமான நிலையைப் பெறலாம்.

(தொடரும்)

''...உன்னைச் சுத்தவானாகக் காத்துக் கொள்.'' (1தீமோ. 5:22)

---

சாட்சி

# முன்னாள் CPM சபையின் தற்போதைய நிலவரம்

நான் இந்து மதத்திலிருந்து, மனந்திரும்பி மெய் இறைவனாகிய இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு இரட்சிக்கப்பட்டவன். தூய வாழ்வை அதிகமாய் விரும்பினேன் வேத வசனத்தின்படி வாழ்க்கையை அமைக்க பிரயாசப்பட்டேன். உன்னத அனுபவங்களை எதிர்பார்த்து ஒவ்வொரு சபைகளாகச் செல்ல ஆரம்பித்தேன். என்னைக் கிறிஸ்துவுக்குள் நடத்திய என் மாமா CPM சபையின் விசுவாசியின் மூலம் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர். என்னை, தேவன் புதிய எருசலேம் சபைக்கு வழி நடத்தி, வெளிப்படுத்தல் கொடுத்து ஸ்திரப்படுத்தினார். நான் வாஞ்சித்த தூய வாழ்வு எனக்கு கிடைத்தது. இறைவனோடு உறவாடும் அனுபவமும் எனக்கு உண்டானது. என்னோடே என் மைத்துனனும் சபையிலிருந்தார். அவர் புதிய எருசலேமில் ஸ்திரப்படுமுன் அவரது பெற்றோர் அவருக்கு CPM சபையில் ஒரு பெண்ணை விவாகம் செய்து வைத்தமையால் அவர் CPM சபைக்குப் போக ஆரம்பித்தார். இந்த சமயத்தில் இறைவன் CPM சபையைப் பற்றி ஒரு வெளிப்படுத்தல் தந்தார்.

நான் தரிசனத்தில் கண்டதாவது : ஒரு புருஷனும் எனது மைத்துனனும் இரண்டு கெம்பீரமான குதிரைகளின் மீது ஏறி CPM சபைக்குள் நுழைகிறார்கள். அங்கே ஒரு அழகுள்ள ஸ்திரீயைக் கண்டு அவள் மீது அந்த புருஷன் பிரியங் கொள்கிறார். ஸ்திரீயை உள்ளறைக்கு அழைத்துச் செல்கிறார். அவள் ஸ்திரீயின் தோற்றத்தைக் கொண்டிருந்தாலும் அவள் ஸ்திரீ அல்ல, அவள் ஒரு அலி என்று (ஆணும் அல்ல பெண்ணுமல்ல) கண்டு சீ என்று அருவருத்து வெளியேறுகிறார். தரிசனம் முடிந்தது. முன்னாள் CPM சபையை அந்த ஸ்திரீ என்று கர்த்தர் காண்பித்தார். (உன் 8:8). பூரண புருஷனாகிய மணவாளனாகிய இயேசு கிறிஸ்துவோ பழுதொன்றுமில்லாத பூரண ருபவதியின் மேலல்லவா பிரியப்படுகிறார் (உன் 4:8-5; 8:10). ஆண் என்றும் பெண் என்றும் இல்லாத அலியின் மேல் எந்த புருஷன் பிரியங் கொள்வான். முன்னாள் CPM சபையே மணவாட்டி என்று எண்ணி ஏமாற்றமடைகிற என் மைத்துனனே, அதனுடைய பரிதாபகரமான நிலை இதுவே என்று என் மைத்துனனுக்கு புத்தி சொல்லும்படி கர்த்தர் கொடுத்த வெளிப்பாடாகும் இது.

முன்னாள் CPM சபையில் தற்போது ஊழியராக இருக்கும் ஒருவரை எனக்குத் தெரியும். அவர் விசுவாசியாக இருந்த காலத்தில், புதிய எருசலேம் சபையில் உள்ள ஊழியர்கள் மூலம் பாவத்தை, தேவனால் அனுப்பப்பட்ட தேவ மனிதர்களிடம் அறிக்கை செய்து விடுதலை பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற சத்தியத்தை விளங்கிக் கொண்ட பின், தனது பாவங்களை தன்னுடைய போதகர்களிடம் அறிக்கை செய்து கொள்ள விரும்பினார்.

அவருக்கு தேவன் ஒரு தரிசனம் கொடுத்திருக்கிறார் அதென்னவெனில் பாவ அறிக்கை செய்யும்படி அவருடைய சபைக்கு போகிறாராம் தலைமை போதகர் அறைக்குள். ஆனால் அவர் யாரிடம் அறிக்கை செய்ய வேண்டும் என்று எண்ணினாரோ அந்த நபர் அறையிலே நிர்வாணமாக கிடந்தாராம். இதைக் கண்ட அவர், ''நான் இவரிடம் பாவ அறிக்கை செய்ய வேண்டும் என்று வந்தேன், இவர் இப்படிக் கிடக்கிறாரே என்று திரும்பினாராம். தரிசனத்தை பெற்றவுடன் இவர் தன்னுடைய பாவத்தை அறிக்கை செய்ய பம்பாய் சென்று புதிய எருசலேம் சபை போதகரிடம் பாவ அறிக்கை செய்தார். ஆனாலும் அவருடைய சபையை விட்டு வெளியேற மனதில்லாமல் அதிலே ஊழியராகவும் ஆகிவிட்டார். இந்த ஊழியர் ஒருநாள் மாலை என்னை சந்திக்க வந்திருக்கிறார். நான் விட்டில் இல்லை. ஆகையால் நாளைக் காலை வருகிறேன் என்று ஒரு துண்டு காகிதத்தில் எழுதிக் கொடுத்துவிட்டு போய் விட்டார். அன்று இரவு நான வந்து செய்தி அறிந்து, கர்த்தாவே, இந்த நபர் என்னை அவருடைய சபையில் சேர்க்கலாம் என்ற எண்ணத்தோடே குழப்ப இவர் வந்திருக்கிறாரே இந்தக் காரியத்தை உம்மிடம் ஒப்படைக்கிறேன் என்று ஜெபம் பண்ணிவிட்டு படுத்து விட்டேன். இரவு அவருடைய சபையின காரியத்தை வெளிப்படுத்தினார். நான் கண்டதாவது :

ஆவியிலே நான் ஒரு இடத்திற்கு கடந்து செல்கிறேன். அங்கே மிகவும் பலமான வெள்ளைக் கட்டிடம் காணப்படுகிறது. பார்ப்பதற்கு உறுதியாகவும், முற்றிலும் வெள்ளை அடிக்கப்பட்டு இருக்கிறது. ஆவலோடே ஆவியிலே பறந்த வண்ணம் உள்ளே செல்கிறேன். விஸ்தாரமான ஒரு ஹால் இருந்தது. ஆனால், தரை முழுவதும் எங்கு பார்த்தாலும் ஒரே மலமாக காணப்படுகிறது. அந்த ஹாலுக்குள்ளாக ஆண்களும் பெண்களும் மலத்தை மிதித்துக் கொண்டு அங்குமிங்கும் நடக்கின்றனர். அதை மிதித்துக் கொண்டு நடபபதைத் தவிர கால் ஊன்ற அவர்களுக்கு வேறு இடமில்லை. அந்த அருவருப்பை என்னால் சகிக்க முடியவில்லை. அப்படியே ஆவியில் மேல் அறைக்குச் செல்கிறேன். அங்கே வராந்தாவில் மொசைக் தரையிலும் வெள்ளை அடித்திருக்கிறார்கள். கீழே இருந்து மேலே வந்தவர்கள் மிதித்த இடங்களில் கீழே உள்ள அசுத்தம் ஆங்காங்கு இருக்கிறது. 'சீ' என்று வெறுப்படைந்து அந்த கட்டடத்தை விட்டு வெளியேறி விட்டேன்.

இவ்விதம், கர்த்தர் அச்சபையின் உள்ளான நிலையைக் காட்டினார். வெளியே நின்று பார்த்தால் பலமான வெள்ளையான கட்டிடந்தான். உள்ளே போனால் அசுத்தம். வேகிறதைப் பார்க்கிலும் விவாகம் பண்ணுகிறது

நின்றது என்று சொல்லப்பட்டிருக்கையில், சாகப் பணமில்லாததால் சிலோன் கிடையாது என்று எண்ணி தங்களை விரத்தராக்கி அனுதின செத்து, மனசாட்சியை அசுசிப்படுத்திக் கொண்டு, வேறே வழியறியாமல் இருக்கிறார்கள் என்று சிந்தனை மோசைக் தரையிலும் வெள்ளி அடித்திருப்பது மிஞ்சின நிதியைக் காக்கும், மேல் மட்டத்திலிருக்கிறவர்களும், அதில் அமைந்திருப்பதாய் தெரிகிறது.

இந்த தரிசனம் மெய் என்பதை அனுதினம் தன்னை அசுசிப்படுத்திக் கொண்டிருக்கிற, "சீயோனிலுள்ள பாவிகள் திகைக்கிறார்கள்" (ஏசா. 33:14) என்று ஏசாயா சொன்னபடி வகையறியாமல் தவித்துக் கொண்டிருக்கிறவர்கள் அறிந்து கொள்வார்கள். இறைவன் இப்படிக் காண்பித்து அந்த ஊழியரின் முயற்சி ஒன்றும் பலிக்காதபடி செய்தார். இந்த சபையைப் பற்றி தேவன் கொடுத்த இன்னொரு தரிசனம் இதுவே.

மகா பெரிய வெண்மையான கட்டிடத்தைக் கண்டேன். அதன் உள்ளே எண்ணிமுடியாத அளவுக்கு அறைகளும், தூண்களும் இப்படி மிகவும் பெரிதான கட்டிடம் ஊர் முழுவதற்கும் மின்சாரம் வழங்கக் கூடிய மின்சார இலாகாவின் அலுவலகம் அது. அதனுள் திரளான அலுவலர்கள் இருக்கிறார்கள். அப்படிப்பட்டதான கட்டிடத்திற்குள் தீ பற்றிவிட்டது. அந்த தீ படிப்படியாய் பரவி வருகிறது. அதை அணைப்பார் யாருமில்லை. எப்படியும் அந்த கட்டிடம் அழியப் போகிறது எனத் தெரிகிறது. உள்ளேயிருந்து ஊழியர்கள் சிலர் வெளியேறி தப்புகிறார்கள், நெருப்புக்குத் தப்பும்படி பலர் வெளியேற தீவிரப்படுகிறார்கள். ஆனால் அது மகா விஸ்தாரமானதால் உள்ளே இருந்து எப்படி வெளியே வருவது என்று வகையறியாமல் தவிக்கிறார்கள். உயர்மட்ட அதிகாரிகள் சிலர் இவ்வளவு பெரிய ஸ்தாபனத்தை அழியவிட்டு நாம் போகக் கூடாது என்ற நல்ல எண்ணத்தில் உள்ளேயே கடைகாத்து வேலைகளை கவனிக்க விரும்புகிறார்கள். தரிசனம் முடிந்தது. இதின் அர்த்தம் வெளிப்படையாயிருக்கிறது.

அந்த மகா பெரிய வெண்ணிறக் கட்டடம் முழுவதும் CPM ஸ்தாபனமே. ஊருக்கெல்லாம் வெளிச்சம் கொடுக்கும்படியாகத்தானிருந்தது. அது மகா விஸ்தாரமாய், பல தேசங்களிலும் பரவி இருப்பது மெய்யே. திரளான ஊழியர்கள் சேவையும் செய்கிறார்கள். ஆனால் சபையையும், ஊழியர்களையும், ஜனத்தையும் அழிக்க வல்ல பாவத் தீ பற்றி பிடித்துவிட்டதே. இனியேதும் இந்த சபையில் இருந்தால் நாம் பாவத்தில் விழுவோம் என்று பயந்த அநேகர் சபையைவிட்டு வெளியேறி தங்கள் ஆத்துமாக்களை தப்புவிக்கிறார்கள். இன்னும் பல ஊழியர்கள் ஐயோ பாவம் நெருக்குகிறதே ஆனாலும் நாம் எப்படி இந்த சபையை விட்டு வெளியேறுவது, இதுவே மேலான உபதேசம் என்றல்லவா நம்புகிறோம். வேறு எங்கு நல்ல சபை இருக்கிறது. மேலும் எல்லாவற்றையும் விட்டு வந்துவிட்டோமே வெளியே போனால் நமக்கு யார் ஆதரவு கொடுக்கப்போகிறார்கள் என்று பாவத்துக்கு தப்பும்படி வெளியேற விரும்பியும் வகையறியாதிருக்கிறார்கள். உயர் மட்டத்திலிருக்கிற ஊழியர்களில் சிலர், சபை பாவத்தில் சிக்குண்டு கிடக்கிறது என்று நன்கு அறிகிறார்கள். ஆனாலும் இவ்வளவு நாள் கட்டிக் காத்த சபையை எப்படி விடுவது, கர்த்தர் விட்ட வழி ஆகட்டும். இவ்வளவு நாள் இப்படியே ஓடியாகிவிட்டது. இனிமேலும் இதிலே நம்முடைய ஓட்டத்தை முடிப்போம் என்று தீர்மானித்து சபைக்குள் இருக்கிறார்கள்.

"ஆனாலும் ஞானமானது அதன் பிள்ளைகளெல்லாராலும் நீதியுள்ளதென்று ஒப்புக் கொள்ளப்படும் என்றார்" (லூக். 7:35).

ஒரு ஊழியன்
New Jerusalem Church,
Madras - Branch.

---

சிறுவர் பகுதி

## கர்த்தாவே துணையாக்கும்

"காலையில் துதிப்போம்" என்ற பாடலின் சத்தம் கேட்டு கண்விழித்த எப்சிக்கு தன் கண்களையே நம்ப முடியவில்லை. ஏனென்றால், அவளுடைய மாமா பர்னபாஸ் அப்பொழுது தான் ஊரிலிருந்து வந்திருந்தார். ஐந்து வயது சிறுமியான அவளுக்காக அவர் நிறைய சாக்லெட் வாங்கி வந்திருந்தார். சாக்லெட் என்றால் போதும் எப்சிக்கு மிகவும் பிடிக்கும். ஆனால் அன்று ஏனோ அவளுக்கு சாக்லெட் மீது மனமே செல்லவில்லை. ஏனெனில், எப்சியின் அருமையான தாத்தா சாமுவேல் உடல்நலமில்லாமல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருந்தார். அவரைப் பார்ப்பதற்காகத்தான் எப்சியின் மாமா அங்கு வந்திருந்தார்.

தாத்தாவின் மீது எப்சி உயிரையே வைத்திருந்தாள். தினமும் இரவில் தூங்குவதற்கு

‘தேவன் ஒருவரே...’
**THERE IS ONE GOD...**

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

முன்பு தாத்தா எப்பிக்கு "தாவீது ராஜா, யோசேப்பு, தானியேல், மோசே போன்ற பரிசுத்தவான்களைப் பற்றிய அருமையான கதைகளைச் சொல்லி வருவார். இதை கேட்டு முடித்தால்தான் எப்பிக்கு தூக்கமே வரும்.

அன்று ஞாயிற்றுக்கிழமையாதலால் எல்லோரும் காலையில் ஆராதனைக்கு கிளம்பிக் கொண்டிருந்தார்கள். எப்பியும் உடன் சென்றான். ஞாயிறு பள்ளியில் வழக்கத்துக்கு மாறாக எப்பி உற்சாகமில்லாமல் உட்கார்ந்திருந்தான். சிந்தையெல்லாம் தாத்தாவின் மேலிருந்தது. அன்று 'எசேக்கியா ராஜாவைப்பற்றிய கதை சொல்லப்பட்டது. எசேக்கியா ராஜா, தான் வியாதிப்பட்டு சாகும் தருவாயில் கர்த்தரை நோக்கி அழுது ஜெபித்தான். அதைக்கேட்டு தேவன் தமமுடைய தீர்க்கதரிசியான ஏசாயாவின் மூலமாக பேசி, அத்திப்பழ அடையை அந்தப் பிளவையின் மேல் போடச் சொன்னார். அவ்விதமாக எசேக்கியா ராஜா பூரண குணமடைந்தான். இவ்வாறு, ஞாயிறு பள்ளியின் ஆசிரியர் அக்கதையை சொல்லி முடித்தார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த எப்பியின் மனதில் மகிழ்ச்சி கரை புரண்டது. வீட்டுக்குத் திரும்பியதும் முதலாவது வேலையாக தனது மாமாவிடம் ஞாயிறு பள்ளியின் கதையைக் கூறி, "மாமா, மாமா அந்த ஆண்டவர் அந்த ராஜாவை மட்டுந்தான் சுகப்படுத்துவாரா நம்முடைய தாத்தாவைக் காப்பாற்ற மாட்டாரா? என்று கேட்டான். அதற்கு அவர், "அப்படியில்லே எப்பி, இயேசுநாதர் நம் எல்லோருக்கும் இறைவனானதால், தாத்தாவையும் நம்மையுங்கூட அவர் காப்பாற்றுவார் என்று சொன்னார். "அப்படியானால் நாமும் விசுவாசத்துடன் அந்த ராஜாவைப் போல் கண்ணீர் விட்டு தாத்தாவிற்காக ஜெபித்தால் நிச்சயம் ஆண்டவர் தாத்தாவை பிழைக்க வைப்பார் அல்லவா?" என்றான் எப்பி.

அன்றுமாலே ஜெபத்தில் எப்பியும் அவனது பெற்றோரும், மாமாவும் "தாத்தா குணமடைவதற்காக" மன உருக்கத்தோடும், விசுவாசத்தோடும் ஜெபம் செய்தார்கள். எப்பி ஆண்டவரிடம் கர்த்தாவே தாத்தாவை குணமாக்கும் என்று வேண்டிக் கொண்டான். அவனது நம்பிக்கை வீண்போகவில்லை. அவர்களுடைய ஜெபத்தைக் கேட்டு இரங்கிய தேவன், சாமுவேல் தாத்தாவைக் குணப்படுத்தினார். அப்புறம் என்ன எப்பிக்கு ஒரே கொண்டாட்டந்தான். இப்பொழுது எப்பிக்கு, அவனுடைய தாத்தா தினமும் இரண்டிரண்டு கதைகளை மட்டுமல்லாமல் வேத வசனங்களையும் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

இதை வாசித்துக் கொண்டிருக்கிற அருமையான தம்பி, தங்கையரே! நாமும் எப்பியைப் போல் வாஞ்சையோடும், விசுவாசத்தோடும் நம்முடைய தாய் தந்தைக்காகவும், தாத்தா பாட்டிக்காகவும் இன்னும் எல்லோருக்காகவும் ஜெபம் செய்வோமா; ஆண்டவர் நம்முடைய ஜெபத்தைக் கேட்டு அற்புதம் செய்வார் தானே!

"உன் விண்ணப்பத்தைக் கேட்டேன், உன் கண்ணீரைக் கண்டேன்; இதோ, நான்.... நலமாக்குவேன்"

## ஞானஸ்நானம்

| நாள் | இடம் | நபர்கள் |
|---|---|---|
| 23-6-91 | கோயம்புத்தூர் | 14 பேர் |

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   26 (வெள்ளி) ஜூலை 1991
   26 (திங்கள்) ஆகஸ்ட் 1991
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

Edited, Printed and Published by : Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at : PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph : 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 93 - Sep. 1991



"புதிய எருசலேம் சபை"

"வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவுகிற நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவார்(ர்)என்று நீங்கள் அறியீர்களே விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 18 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும்,அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையில் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப். 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளே, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள் பல. சர்வ வல்லமையுள்ள தேவன் நம்மேல் அன்பு கூர்ந்து, தம்முடைய குமாரனை கல்வாரிக்கு அனுப்பிக் கொடுத்து நம்மை மீட்டுக் கொண்டார். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய தியாக பலியானது எல்லாரையும் இழுத்துக் கொள்ளவதற்கான வல்லமையுடையதாயிருக்கிறது. அதற்கு நிகரில்லை. திறப்பிலே நிற்கவும் சுவரை அடைக்கவுந்தக்கதாக ஒரு மனிதனைத் தேடினார். ஒருவருமில்லை என்பதால் தாமே அந்தக் காரியத்தைச் செய்தார். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை பிதாவாகிய தேவன் நமக்குத் தந்தருளி, நம்மில் அன்பு கூர்ந்ததற்காய் அதிகமதிகமாய் அவரை ஸ்தோத்தரிப்போமாக! எல்லா ஐசுவரியங்களும் எல்லாவிதமான நீதிகளும், புண்ணியங்களும், சகலவிதமான ஆசீர்வாதங்களும் கிருபைகளும் அவருக்குள்ளாய் நமக்கு அடுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவைப் பற்றி அறிகிற அறிவினாலே, கிறிஸ்துவை அறிகிற அறிவினாலே நாம் அவைகளை நிறைவாய் பெற்றுக் கொள்ள முடியும். பிதாவையும், குமாரனையும் அறிகிற அறிவே நித்திய ஜீவனாக இருக்கிறது. தெய்வீகத்திலே நாம் அதிகமதிகமாக நிறைவு பெற வேண்டும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்மை அதிகமாக வெளிப்படுத்தும்படியாக! பரிசுத்த ஆவியானவருடைய உதவியோடு கூட தேட வேண்டும், பிரார்த்திக்க வேண்டும். இந்தக் காலமானது கடைசிக்காலமாயிருக்கிறபடியினால் தேவனுடைய சகல ஐசுவரியத்தினாலும் நாம் நிரப்பப்பட, ஆசீர்வாதங்களினால் நிரப்பப்பட, வெற்றியுள்ள வாழ்க்கை வாழ, மகிழ்ச்சியோடும் சந்தோஷத்தோடும் தேவசித்தம் செய்து வருகைக்கு ஆயத்தப்பட தேவன் நம்மெல்லாருக்கும் அனுக்கிரகம் செய்வாராக! திருச்சபையின் வாழ்க்கை மிகவும் ஆசீர்வாதமாக வளர்ந்து பெருகிக் கொண்டு இருக்கிறது. உலக அளவாய் விரியும் நாட்கள் வெகுதூரமல்ல. கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்! இருபத்தி மூன்றாவது ஆண்டை திருச்சபை வெற்றியோடு முடித்து 24-ம் ஆண்டுக்குள் பிரவேசித்திருக்கிறது. இது தேவனுடைய பெரிதான செயல். உடைந்து போகாமல், பிரிந்து போகாமல் ஒரே சரீரமாய இறைவனுடைய சித்தம் செய்கிற தெய்வீக கூட்டமாய் தேவ நாமம் பரிசுத்தப்படத் தக்கதாய் தேவன் தமது திருச்சபையைக் கட்டி நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார். இது உலக அதிசயங்களில் முதலாவதாக காணப்படுகிறது. கர்த்தருக்கு ஸ்தோத்திரம். தேவன் மென்மேலும் நம்மை ஆசீர்வதித்து திருச்சபையின் தெய்வீகப் பணியிலே பங்கு பெற கிருபை செய்வாராக! இயேசுவின் நாமத்தில்!!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# தசம பாகம்

தசமபாகம் நியாயப் பிரமாணத்துக்கு 430 வருஷங்களுக்கு முன்பாகவே செலுத்தப் பட்டு வந்துள்ளது (ஆதி. 14:20; 28:22;எபி. 7:1-11) பின் நியாயப் பிரமாணத்தில் கட்டளையிடப்பட்டது. இது ஜீவ பிரமாணங்களில் ஒன்று (லேவி. 27:30;மல்.3:10;எசே. 33:15; லேவி. 18:5)

காரணங்கள்

1) தேசம் கர்த்தருடையது என்று இஸ்ரவேலர் எண்ணினார்கள். ஆனபடியினால் கர்த்தருக்கு தசம பாகம் செலுத்தப்பட்டது (லேவி. 27:30,32,33)

2) லேவியர்கள், ஆசாரியர்களுக்காக அது கட்டளையிடப்பட்டது. (எண்.18:8 உபா 18. 1,2)

3) ஏழைகள், லேவியர்களுக்கு உதவியாக கட்டளையிடப்பட்டது (உபா.14:28,29).

4) தேவனுக்குக் கீழ்ப்படியும்படி கீழ்ப்படிதலைக் காட்ட இது கட்டளையிடப்பட்டது (உபா. 26:12-15).

5) தேவனுக்குப் பயப்படும் பயத்தை கற்றுக் கொள்ளும்படி தசமபாகம் கட்டளையிடப் பட்டது (உபா. 14:22)

6) தேவனை கனப்படுத்தும்படியாக (நீதி. 3:9,10).

7) அது கர்த்தருடையது, அவனுடையதல்ல (லேவி. 27:30).

8) வீட்டில் ஆசீர்வாதம் தங்க தசமபாகம், முதற்பலன் செலுத்தப்பட வேண்டும் (எசே. 44:29,30).

9) தேவன் உன்னை ஆசீர்வதிக்க தசமபாகம் கட்டளையிடப்பட்டது (மல். 3:10).

10) நியாயப் பிரமாணத்திற்கு மேலான விசுவாச வாழ்க்கையில் ஆபிரகாமின் விசுவாச அடிச்சுவடுகளில் நடக்கிறவர்களுக்கு இது அடையாளம் (ரோ.4:12).

11) ஆசாரியர்களுக்கு ஜனங்கள் மத்தியில் சுதந்திரம் இல்லாதபடியினால் அது கட்டளையிடப்பட்டது (எண்.18:21-24). ஆசாரியர்கள் தசம பாகம் வாங்கி தசம பாகத்தில் தசமபாகம் பிரதான ஆசாரியருக்கு செலுத்த வேண்டும். அப்படி செலுத்தாவிட்டால் அது அவர்களுக்கு பாவமாகும் (எண். 18:25-32).ஜனங்களின் அக்கிரமம் அவர்கள் மேல் சுமரும்.

இது புதிய ஏற்பாட்டின் கட்டளை

1) இயேசு கிறிஸ்து கூறியிருக்கிறார் (மத்.23: 23).

2) அப். பவுல் கூறியிருக்கிறார் (ரோ.2:22). ஆலயத்தை திருடுதல் என்று சொல்லப் பட்டது பரிசுத்த (பணிமுட்டுகள்) பொருட்களைத் திருடுதலை குறிப்பிட்டு இங்கே எழுதியிருக்கிறார். மனுஷன் தேவனைத் திருடலாமா (மல் 3:8-10).

3) உபதேசிக்கிறவனுக்கு கொடுக்க வேண்டும் (கலா.6:6). ஊழியர்களுக்கு சம்பளம் இது (1 கொ. 9:7-14; உபா. 25:4; லூக். 10:7; 1 தீமோ. 5:17,18; 1 கொரி. 9:4, 9), இது மெல்கிசெதேக்கின் ஆசாரிய முறைமைக்கு உட்பட்டது (எபி.7:1-11). இது ஆபிரகாம் நடந்த விசுவாசத்தின் அடிச்சுவட்டில் நடப்பதாகும். ஆபிரகாமின் பிள்ளைகளாகிய விசுவாசிகளின் கடமையாகும் இது (ரோ. 4:12; எபி. 7-ம் அதி).

கடவுளின் கிருபைகளையும் ஆசீர்வாதங்களையும் பெற்றுக் கொள்கிறதற்கு இது வழி. (ரோ. 4:12; எபி.7:6-10; 1 தீமோ.6:17,18; மல். 3:8-10; நீதி. 3:9,10; ஆதி. 14:20; உபா. 8:10-20; உபா. 14:22).

தசமபாகம் செலுத்தாவிட்டால்...

1) விசுவாசிகள் தசமபாகம் செலுத்தாவிட்டால் அதற்கு மன்னிப்பு கிடையாது.

செலுத்தித் தீர்க்க வேண்டும், (உ-ம்) பொருத்தனை செலுத்தும்படி தேவன் யாக்கோபுக்கு நினைப்பூட்டியது (ஆதி. 35 : 1, 7; லேவி. 27 : 31).

2) தசமபாகத்தை எடுத்துக் கொள்ள விரும்புகிறவன் 20% சேர்த்து செலுத்த வேண்டும் (லேவி. 27:31).

3) அதை மாற்ற நினைக்கிறவர்கள் அதையும், மாற்ற நினைத்ததையும் சேர்த்து செலுத்த வேண்டும் (லேவி. 27:33).

4) அது கர்த்தருக்குப் பரிசுத்தமானது, கர்த்தருடையது (லேவி. 27 : 30).

5) அவன் தன் இஷ்டப்படி அதில் எடுத்து செலவு செய்யக் கூடாது (உபா. 26:14).

6) அதை செலுத்தாதவன் புதிய ஏற்பாட்டின் விசுவாசியல்ல (நெகே. 3 : 5; கலா. 6:7: மல். 3:8, 9; II கொரி. 8:4, 5)

7) புதிய ஏற்பாட்டின் விசுவாசி அதைவிட அதிகமாக செய்கிறவனாகும் (II கொரி. 8:1-5).

8) அதை நிறைவேற்றுதவன் கர்த்தருடைய வருகையில் கைவிடப்படலாம் (மத். 5:20; கலா. 6:6-8).

9) தசமபாகம் செலுத்தாவிட்டால் ஆசீர்வாதம் இல்லை (2 கொரி. 9:6). நீங்கள் எந்த அளவினால் அளக்கிறீர்களோ அந்த அளவினால் உங்களுக்கு அளக்கப்படும் (லூக். 6;38).

10) உற்சாகமாய் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார் (II கொரி. 9 : 7).

11) இது சுவிசேஷத்தை ஏற்ப்படிதலோடு அறிக்கையிடுகிறதாகும் (II கொரி. 9:13).

என்னிடத்தில் அன்பு கூர்ந்து, என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறை மட்டும் இரக்கஞ்செய்கிறவராயிருக்கிறேன் (யாத். 20:6).

## ஞானஸ்நானம்

ஞானஸ்நானம் பெற்று சபையோடே சேர்ந்தவர்கள் விவரம்

| இடம் | நாள் | ஆண் | பெண் |
|---|---|---|---|
| கோயிலாம்பாடு (பிரகாசம் Dt., A.P.) | 15—8—91 | 2 | 6 |
| சென்னை | 19—8—91 | 3 | 2 |

## ஆந்திராவில் சபை எழும்புதல்

கர்த்தருக்கு ஸ்தோத்திரம்

15-8-1991 வியாழக்கிழமையன்று ஆந்திராவிலுள்ள கோயிலாம்பாடு (பிரகாசம்-ஜில்லா) என்ற ஊரில் "புதிய எருசலேம் சபை" எழும்பியிற்று என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். எட்டு பேர் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள். இந்த ஊழியம் ஆந்திர மாநிலம் முழுவதும் பரவ எல்லோரும் விண்ணப்பிக்க வேண்டுகிறோம்.

# இந்து மதம்

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்! இந்துக்களுடைய மத சம்பந்தங்களைக் குறித்து இது வரைக்கும் சரியாக தொகுத்து, ஒருவரும் தமிழ்ப் பாஷையில் எடுத்து, யாவரும் அறிய அறிவியாதபடியினாலே அதனைக் குறித்து சில விஷயங்களை இந்த புஸ்தகத்தில் எழுத வேண்டியது ஆயிற்று.

இந்து மதக்கோட்பாடுகளை சுருக்கம் சுருக்கமாக சில புஸதகங்களிலே எழுதியிருந்தாலும் முறையாக அது விவரமாக எல்லாக் காரியங்களையும் எழுதியிருக்கவில்லை. ஆனபடியினால் இதை எழுதத் துணிந்தோம். மேலும் எல்லா மதங்களைப் பற்றிய ஓரளவு அறிவை தேவனுடைய ஊழியர்களும சபையாரும்அறிந்து கொள்ளும்படியாக இது எழுதப்படுகிறது. இந்துக்களுடைய மதக் கோட்பாடுகளை விவரமாக அறிந்து கொள்ளும் பொருட்டு அவற்றை மூன்று பிரிவுகளாக, மூன்று விஷயங்களாக பிரித்து கிரமமாய் ஒவவொன்றையும விஸ்தரித்து எழுதுவோம். அவையாவன

1) தேவர்களின் கதை
2) நாலு வேதம் ஆறு சாஸ்திரம் பதினெட்டு புராணங்களாகிய இவைகள் வரலாறு
3) இந்துக்களுடைய சமயக் கோட்பாடு.

## 1) தேவர்கள் :

இந்துக்களுக்கு முப்பத்து முக்கோடி தேவர்களுண்டு. அவர்களில் மும்மூர்த்திகள் பிரதானமானவர்கள். இவர்களை கடவுள் என்று சொல்லி எழுதுகிறதும் உண்டு. பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேச்சுவரன், சதாசிவன் இவர்கள் ஐந்து பேரையும் பஞ்ச கர்த்தாக்கள் என்று சொல்கிறார்கள். விசேஷமாக சிவன், பிரம்மா, விஷ்ணு என்று இந்த மூன்று பேரையும் குறித்து அநேக புராணங்களும், கதைகளும் புனைந்திருக்கிறார்கள்,

### 1) பிரம்மா

சிருஷ்டிக்கும், வேதத்துக்கும் கர்த்தா. (Brahma) பிரம்மாவுக்கு உண்டான பெயர்களாவன:-

அந்தணன், அன்ன ஊர்தி, இரணிய கருப்பன், இறையின் கணவ், போதிம முயத்தோன், கமலயோனி, குமகுறவன், தமனியன், தாதா, திசைமுகன், நான்முகன், புங்கவன், பங்கயன், பரம எட்டி, பிதா மகன், போதன், மலரோன், மானூர்தி, மகன், வரன், வாணிகிழ்வன், விதாதா, விதித்தா, விரிஞ்சன் வேதா போன்ற பெயர்கள் உண்டு. பிரம்மாவின் மனைவி: சரஸ்வதி; ஆயுதம்: பாசம்; கொடி: மறை; வாகனம் அன்னம்· ஆயுஷபம்: கற்பம்; ஆசனம்: தாமரை மலர்

பிரம்மாவை நான்கு முகமும், நான்கு புயமும் உள்ள வெள்ளுடை தரிக்கப்பட்ட பொன்னிறமான புருஷ ரூபமாய் செய்து வைக்கிறார்கள். இந்த பிரமமா ஒரு கையில் சாவாமைக்கு அடையாளமான சக்கரத்தையும் ஒரு கையில் வல்லமைக்கடையாளமாகிய அக்கினியையும் மற்ற இரண்டு கைகளில் வேதத்தையும் பிடித்துக் கொண்டிருக்கிறான். பிரம்மா சிவனிடத்தில் பொய் சொன்ன நிமித்தம் தனக்கு கிடைத்த சாபத்தினால் அவனுக்கு கோயிலும் பூஜையும் இல்லை. பிராமணர் மாத்திரம் காலையில் அவனை நோக்கி ஜெபிக்கிறார்கள். பிரம்மாவுக்கு ஆதியிலே ஐந்து தலைகள் உண்டாயிருந்து, அதிலொரு தலையை அவன் செய்த துன்மார்க்கத்திற்காக, பரமசிவன் கிள்ளி போட்டதாக நான்கு விதமாகச் சொல்லுகிறார்கள். அவையாவன:

1) சிவனுடைய பெண்ஜாதி பார்வதியின் கால்விரலைக் கண்டு பிரம்மா இச்சித்தநிமித்தம் சிவன் கிள்ளிப் போட்டானென்றும்,

2) சிவனுக்கும் பிரம்மாவுக்கும் ஐந்து தலைகள் இருந்தபடியினாலே பார்வதிக்கு குறிப்பாக தன் புருஷன் யார் என்று தெரியாததினால் பல தடவை குழப்பம் நடந்து விட்டபடியினால் சிவன் கிள்ளிப் போட்டானென்றும்,

3) பிரம்மாவானவன் தன் மகளாகிய

ஊர்வசியோடு முறை கேடு செய்ததற்காக சிவன் வெட்டிப் போட்டாவென்றும்,

4) பிரம்மாவானவன் சிவனைப் பார்த்து உன்னை நான் உண்டாக்கினேன் என்று சொன்னபடியினால் சிவன் வெட்டிப் போட்டானென்றும், இருவர் கதையில் சிவனுடைய தலை முடியை நான் பார்த்தேன் என்று சொல்லி அன்ன ரூபத்தில் பறந்து போய் பார்த்ததாக பிரம்மா பொய் சொன்னதினால் அவன் தலையை சிவன் வெட்டிப் போட்டாவென்றும் சொல்கிறார்கள்.

ஐங்கரன் தலையிழக்க
அறிவனும் தன்னிப் போக,
சங்கரன் பிச்சை எடுக்க
சதுர்முகனை எழுதினானோ
அங்கவன் நெழுதினால்
மற்றவன் தலையற்றுப் போக
இங்கவன் எழுதினான் சொல் இதுவல்லாம்
மையந்தானே.

ஒரு விசை பிரம்மா, காயத்திரி,சாவித்திரி, சரஸ்வதி எனும் பெண்களோடு கூடியிருந்து தான் படைத்த இரேத்துமை மேல் ஆசை பட்டு அவள் பின்னே துரத்த, அவள் ஒரு கிளிப்பிள்ளையாய் ஓட, பிரம்மா ஓர் ஆண்கிளியாய் தொடர்ந்து கூடினான். மேலும் ஒரு அன்னபட்சி ரூபமெடுத்து சிவனுடைய முடியைத் தேடி காணாமல் கண்டேன் என்று பொய் சொன்னதாகவும் இன்னும் பல கதைகளும் பிரம்மாவைப் பற்றி உண்டு. பிரம்மாவும், சிவனும் நான் உன்னை உண்டாக்கினேன் என்று ஒருவருக்கொருவர் தர்க்கம் பண்ணுகிறதும், அடிபிடி சண்டை உண்டாக்குகிறதும் உண்டு. இன்னும் பிரம்மாவைப் பற்றி மேற் கொண்டு அதிகமாக அறிய விரும்புகிறவர்கள் அருணகிரி புராணம், திருமலைச் சருக்கம் 17 முதல் 48ம் முதலாம் பாடலிலிருந்து பாகவதம் மூன்றும் ஸ்கந்தம், கபிலர் தாயாருக்கு தத்தம் படைத்த அத்தியாயம் 48ம் பாட்டிலும், பாகவதம் 10ம் ஸ்கந்தம் 3வது குருகு முனி சொன்ன அத்தியாயத்திலும் விஷ்ணு புராணம், அருணசல புராணம், பாவத் தீர்த்தம் 11ம் பாட்டிலும் கந்த புராணம், காமதகன படலத்தில் 11ம் பாட்டிலும், உத்திர புராணம் 65ம் பாட்டிலும், பாரதம், ஆதிபருவம், தரும புத்திர விசேஷ சருக்கம் 67, 68ம் பாடலிலும் கர்ம காந்த படலம் 12ம் பாட்டிலும் அகத்திய படலம் 2ம் பாட்டிலும் தேடி வாசித்து, திட்டமாய் அறிந்து கொள்ளலாம். இவைகளைப் பற்றிய விவரங்களை அறிய விரும்புகிறவர்கள் N.J.S. சிவசுந்தரம் (N.J. ஸ்டீபன்) அவர்கள் எழுதிய "முக்தி வழி" என்ற புத்தகத்தைப் பார்க்கவும்.

## 2) விஷ்ணு (VISHNOO)

விஷ்ணு என்றால் இரட்சிக்கிறவன் என்ற அர்த்தங்கொண்ட பெயராகும். விஷ்ணுக்கு உண்டான பெயர்களாவன: விட்டுமோர், அச்சுதன், அரவணைச் செல்வன், அரி, அரிமந்தனை, அரிதுயிலன், மாங்கோன், அனந்தசயனன், உநதிக்கூத்தோன், புன்னகை எதிரோன், கடல்வண்ணன், கமலக் கண்ணன், கரியன், கருடக்கேதனன், கேசவன், கொண்டல் வண்ணன், சக்கரபாணி, சக்கராயுதன், சக்கிரி, சங்கமோதி, சனார்த்தவன், சம்பூர், சலசாரங்கபாணி, சிதனன், செவ்ரி, திருநாதன், துவாய்மௌளி, நாரணன்,நாராயணன்,கொடியவன், பத்மநாபன், ராமன், ராதை பிள்ளைக் கேள்வன், பீதாம்பரன், பூமிக்குழுந்தன், பொம்மான், பெருமாள், மாதவன், மாயன், மால முகுந்தன், முண்டகாசனக் கேள்வன், வலவலை, வலமாயி, வாசுதேவன், விண்டு, வைகுந்தநாதன், அண்டியோன். அவதாரம் எடுத்த பெயர்கள்: முதலாவது மச்சன், இரண்டாவது கூர்மன், மூன்றாவது வராகன், நான்காவது நரசிம்மன், ஐந்தாவது வாமனன், இந்திரவாசன், உலகளந்தோன், திருவிக்கிரமன், ஆறாவது பராசுரன், ஏழாவது ராகவன், ராமன், காகுந்தன், எட்டாவது பலபத்திரன், குண்டலன், பலவும், ஒன்பதாவது அலகை முலையுண்டோன், உலகுண்டோன், கண்ணன், கிருஷ்ட்டினன், கோவிந்தன், காமேந்திரன், நந்ததந்தவன், பஞ்சவர் தூதன், புத்தன், மதுசூதனன், முராரி என்று இன்னும் பல பெயர்களுண்டு. விஷ்ணு மஞ்சள் வஸ்திரம் தரித்து நான்கு கைகளையுடைய கருப்பு நிறமாக செய்து வைக்கிறார்கள்.

## விஷ்ணுவின் தச அவதாரங்கள்

### 1. மச்ச அவதாரம் :-

முன்னொரு கற்ப காலத்திலே பிரம்மாவானவர் நித்திரை செய்யும் பொழுது ஜலப்பிரளயத்தினால் பூமி பாதாளத்தில் அமிழ்ந்த. இலங்காசுரன் என்பவர் வேதங்களைத் திருடி எடுத்துக் கொண்டு போய் கடலுக்குள்ளே ஒளித்து வைத்துக் கொண்டதை விஷ்ணுவானவர் அறிந்து நூறு லக்கண யோசனை நீண்ட ஒரு மச்ச வடிவம் எடுத்து ஜலத்துகுள்ளே போய்க் அவ்வசுரனை சங்கரித்து வேதத்தை எடுத்தார் என்பதாம்.

### 2. கூர்ம அவதாரம் :-

முன்னொரு காலத்திலே தேவர்களும், அசுரர்களுமாய் மந்திர மலையை மத்தாக நாட்டி, சந்திரனை கம்பமாக நிறுத்தி, வாசுகி பாம்பை கயிறாக சுற்றி வெவ்வேறு இருபுறத்திலும் நின்று அமுதம் எழும்பும்படி பாற்கடலை கடையும்பொழுது அவ்வாசுகி பாம்பு வருத்தப்பட்டு நஞ்சை கக்கிவிட்டபடியினால் அவர்கள் கைவிட்டு திகைத்து நடுநடுங்கி ஓட மந்திர மலையாகிய மத்துவும் கீழே தாழ்ந்துபோய்விட்டது. ஓடிய தேவர்கள் பின்பும் கூடி அதை எடுக்கும் பொருட்டாய் விஷ்ணுவை ஆராதிக்க, அவர் பிரசன்னராய் மகிழ்ந்து கூர்ம வடிவமாய் சென்று கீழே போன மந்திர மலையை முதுகிலே தாங்கிக் கொண்டு நின்றார். அதற்குப் பின், இருதிறத்தாரும் கூடி பாற்கடலை கடைய அமுதம் பிறந்தது. இதற்கு முன்பாக பல பொருள்கள் பிறந்ததாகவும். கடைசியில் அமுதம் பிறந்ததாகவும் சொல்லியிருக்கிறார்கள். அதினிமித்தம் தேவர்களும், அசுரர்களும்வழக்காடுவதை விஷ்ணுவானவர், கண்டு அதனை தீர்க்கும் உபாயமாய்,எவர்களும் மயங்கத் தக்க எவ்வளவு சௌந்தரியமுள்ள ஒரு மோகினியாய் நின்று, காமக் குறிப்பு காட்டி, இவ்வமுதம் வேண்டுமா மோகினியாகிய நான் வேண்டுமா யாருக்கு வேண்டும் என்று கேட்க அசுரர்கள் மயிலாகி, மோகினியாகிய நீதானே எமக்கு வேண்டுமென்று சூழ்ந்து வர, அம் மோகினி அவ்வசுரரை நோக்கி என்னை ஆலிங்கனம் பண்ணத்தக்க ஒரு வீரன் உங்களுக்குள்ளே உண்டாகில், அவன் எவனென்று நான் அறிய வேண்டுமென்று சொல்ல, அவர்கள் தமக்குள்ளே தான்தான் என்று தனித்தனி எழுந்து ஒருவரோடொருவர் சண்டையிட்டு கொள்ள, பின்பு விஷ்ணு தேவர்களுக்கு அமுதத்தை வஞ்சனையாய் பகிர்ந்து கொடுத்தான் என்பதாம்.

### 3. வராகவதாரம் :-

கனகாச்சுரன் என்ற ஓர் அசுரன் மகா வலிய பராக்கிரமனாய் தேவர்களுக்கு இடுக்கண் செய்து வரும் காலத்தில் விஷ்ணுவானவர் வராகமாய் (பன்றி) அவதரித்து, பிரம்மாண்டமெல்லாம் தனது உருவத்தினால் நிறைத்து அவையெல்லாம் உடையும்படி நுனிமயிரை உதிரிக் கொண்டு முசுமுசுவென்று நெருப்பு பொறி சிதற. கரகரவென்று உறுமி, புரண்டு மூச்சுவிட்டு நட்சத்திரங்கள் உதிரத்தக்கதாக வாலைச் சுற்றிக்கொண்டு தன்னுடைய கொம்புகளினால் தண்ணீரைக் கிழித்துக் கொண்டு பூமியைத் தேடும்போது, அந்த வராகமூர்த்தியை கனகாச்சுரன் கண்டு,சிரித்து, ஓர் தண்டாயுதத்துடன் கிட்டி ஏ. முருகா! நான் முன்னே போய் சுருட்டாக சுருட்டி ஒளித்து வைத்த பூமியை எடுத்துக் கொண்டு போக நினைத்தாயோ என்று வர, வராகமூர்த்தியானவன் வச்சிரம் போன்ற தனது பற்களால் அவன் வயிற்றைப் பிறி பாதாளத்திலே தள்ளி அவனை சங்கரித்து, தேவர்களை இரட்சித்து, பாதாளத்தில் அமிழ்ந்துபோன பூமியை மேலாகக் கொண்டுயந்து வைத்தான். சிலகாலம் சென்ற பின் பூமியிலுள்ள பன்றிகளின் மேல் இச்சித்து, கூடி., கருவுண்டாக்கி, ஆண் பெண் விகற்பங்களான குட்டிகளை பிறப்பித்து வளர்த்து அநேக காலம் இப்படி உலகத்திலே இருந்தான் என்பதாம்.

### 4. நரசிங்காவதாரம் :-

இரணியன் என்பவன் பலகாலமாக பிரம்மதேவனை நோக்கி அரிய தவம் செய்து அவனிடத்தில் பூமி, பாதாளம சுவர்க்கம ஆகிய மூவுலகத்தையும் ஆளத் தக்க அதிகாரத்தையும் சகல ஐசுவரியங்களையும், தேவர், மனிதர், பறவை மிருகங்களினாலும், அஸ்திர சஸ்திர முதலிய ஆயுதங்களினாலும் தன்னை ஜெயிக்கப்படாத வல்லமையும் வரமும் பெற்று இவ்வுலகிலுள்ள யாவையும் தன் ஆளுகைக்குட்படுத்தி,

உலக முழுவதிலும் தன்னுடைய நாமத்தை ஸ்தோத்தரித்து வணங்கும்படி செய்து வந்தான். அப்பொழுது அவனுக்கு ஒரு புதல்வன் பிறந்து பிரகலாதன் என்ற பெயருடையவனுய் வளர்ந்தான். அவனுடைய குரு இரணிய நம என்று சொல்லி கற்பித்ததை அவன் மறுத்து அரி நம நாராயண என்று சொல்லி துதிப்பதை இரணியாச்சுதன் அறிந்து பிரகலாதனை கொல்ல எத்தனம்செய்யும் சமயத்தில் விஷ்ணு நரசிங்கமாய் அவதரித்து அவ்விரணியனைக் கொன்று போட்டான் என்பதாம்.

6. பரசுராமவதாரம் :-

பூர்வகாலத்தில் சூரிய வம்சத்தில் அவதரித்த சத்திரிய அரசர்கள், சமதத்தினி முதலிய பிராமண குலத்தவர்களுக்கு இடுக்கண் செய்து, பிராமண குலத்தார் செய்யக்கூடிய வேதக் கருமங்களை தாங்களே நடப்பித்து பிராமண ஆசாரங்களை இவர்களே ஆசரித்து மனச்செருக்குற்று இருந்தநிமித்தம், அவர்களை அழிக்கும்படி விஷ்ணுவானவர், சமதத்தினி புதல்வனுய் பரசுராமன் என்றபெயருடன் அவதரித்து மழுவினுல் முன்னேதரிக்கிறது போல அந்த சத்திரிய வம்ச அரசர்களை அவர்கள ஜெனிப்பித்துவிட்ட புத்திர பௌத்திரர்கள் எல்லாரையும் இருபத்தொரு தலைமுறை மட்டும் முன்னு தரிக்கிறதுபோல சங்கரித்தார் என்பதாம்.

7. ராமாவதாரம்

இலங்கையை ஆண்ட ராவணேஸ்வரன் என்னும் இராட்சசன் தன் வலிமையினுல் மூவுலகத்திலும் தன் ஆட்சியை நடப்பித்து தேவர், முனிவர் யாவரையும் மிக துன்புறுத்தி வந்தாராம், இநிமித்தம் இராவணனை அழித்து நீரே எங்களை ஆளவேண்டும் என தேவர்கள் பிரார்த்திக்க, விஷ்ணு அயோத்தியாபுரி தசரத சக்ரவர்த்திக்கும் மனைவி கௌசலைக்கும் புத்திரனுய்ப் பிறந்து.ராமன் என்னும் பேருடன் மிதிலை ஜனக மஹாராஜன் புத்திரி சீதையை மணந்து, கைகேயி பாதக இட்சையினுல் தகப்பன் கட்டளைக்கு இணங்கி மனைவியுடன் காட்டுக்குப் போக, சீதை தனித்திருக்கையில் ராவணன் மாறுவேடமாய் வந்து சீதையை கவர்ந்து கொண்டு போய்விட்டான். ராமன் சீதை இருக்கும் இடம் அறியாது திகைத்துப் புலம்பி அழுதான். பின் ராமன் அனுமார், சுக்ரீவன் மற்றும் குரங்கு கூட்டத்தின் உதவியால் சிவாலயத்தை இடித்து சமுத்திரத்தில் அணைகட்டி நடந்து குரங்கு சேனைகளுடன இலங்கையைச் சேர்ந்தான். இதையறிந்த இராவணன், ராமன் அவதாரம் என்பதை அறிந்து அவரைத் துதித்துப் போற்ற, அந்த துதியை இராமன் ஏற்றுக் கொண்டு நான் உன்னை சங்கரியேன் என்று அவனுக்கு வாக்கு கொடுத்தான். பின் தேவர்கள் இந்த செய்தியை அறிந்து ராமனைத் தூண்ட ராமன் தான் கொடுத்த வாக்கை மீறி இராவணன் தன்னை நிந்தித்தான் என்று சொல்லி இராவணனை சங்கரித்தான். அதனுல் பிடித்த பிரமகத்தியை சிவபிரதிஷ்டையினுல் நிவர்த்தி பண்ணிக் கொண்டு சீதையை அக்கினி பிரவேசம் பண்ணுவித்து கற்பு நிலையை சோதித்து பின்பு அவளுடன் கூடி இருந்து, பின்பு அவளை நம்பாமல அவள்மேல் சந்தேகப்பட்டு வால்மீகி இருக்கும வனத்திலே கொண்டுபோய் விட்டுவிட்டான். அங்கே அவளுக்குப் பிள்ளைகள் பிறந்தன.பின்பு அவளை மறுபடியும் அழைத்து, கற்பு நிலையை சோதித்தபொழுது பூமி பிளந்து பூமாதேவி பூமிக்குள்ளிருந்து சீதையைக் கட்டிப் பிடித்து தழுவிக் கொண்டு இருவருமாக பூமிக்குள்ளே மறைந்து போய்விட்டார்களாம். மேலும் ஒரு காரியம். யமதர்மராஜனேடு பேசிக் கொண்டிருக்கும்பொழுது துருவாச முனிவரால் அனுப்பப்பட்டு உள்ளே வந்த லட்சுமணனை பிடித்துத் தள்ளிவிட்டு கடைசியாக ராமன் சரேயுநதியில் விழுந்து தற்கொலை செய்து கொண்டான் என்பதாம்,

(தொடரும்)

---

"அவன் (பிசாசானவன்) ஆதி முதற்கொண்டு மனுஷ கொலைபாதகனுயிருக்கிறுன்; சத்தியம் அவனிடத்திலில்லாதபடியால் அவன் சத்தியத்திலே நிலைநிற்கவில்லை; அவன் பொய்யனும் பொய்க்குப் பிதாவுமாயிருக்கிறபடியால் அவன் பொய் பேசும்போது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசுகிறுன்." (யோ. 8:44.)

---

# வேதாகமப் பெண்கள்

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, நாம் வாழும் உலகமானது சோதோம், கொமோராவைப் போல் சீர் கெட்டதாகி நித்திய அக்கினியின் ஆக்கினையை அடைந்து கொள்ள விரைந்து செல்கிறது. நாகரீகம் என்ற பெயரில் ஆண்களும் பெண்களும் அவலட்சணமான உடை உடுத்தி அருவருப்பாய் வாழ்கிறதை நாம் காண்கிறோம். பூர்வ காலத்தில், நோவாவின் காலத்து மக்களும் இப்படியே அவலட்சணமாய் வாழ்ந்தார்கள். ''மனுஷனுடைய அக்கிரமம் பூமியிலே பெருகினது என்றும், அவன் இருதயத்து நினைவுகளின் தோற்றமெல்லாம் நித்தமும் பொல்லாததே என்றும், கர்த்தர் கண்டு தாம் பூமியிலே மனுஷனை உண்டாக்கினதற்காக மனஸ்தாபப்பட்டார்; அது அவர் இருதயத்துக்கு விசனமாயிருந்தது. அப்பொழுது கர்த்தர், நான் சிருஷ்டித்த மனுஷனைப் பூமியின் மேல் வைக்காமல், மனுஷன் முதற் கொண்டு, மிருகங்கள் ஊரும் பிராணிகள் ஆகாயத்துப் பறவைகள் பரியந்தமும் உண்டாயிருக்கிறவைகளை நிக்கிரகம் பண்ணுவேன், நான் அவர்களை உண்டாக்கினது எனக்கு மனஸ்தாபமாயிருக்கிறது என்றார்'' (ஆதி. 6:5-7). இவ்விதமாகவே கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாட்களிலும்(மனுஷ குமாரனுடைய நாட்களிலும்) நடக்கும் (லூக். 17:26-30) என்று வேதம் கூறுகிறபடியால், தேவனுடைய ஜனங்கள் எவ்விதமாய் வாழ வேண்டும், ஆண்கள் பெண்கள் ஆகியோர் எவ்வாறு வாழ வேண்டும் என்று வேதம் கூறுகிறது என்பதை கவனித்து அவரவர் தங்களுடைய வாழ்க்கைகளைச் சீர்ப்படுத்திக் கொள்வது நல்லது (II தீமோ.3:16-17) ''சீர்கெட்ட பிள்ளைகளே திரும்புங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்'' (எரே. 3:14-15).

பெண்களைக் குறித்து வேதம் கூறுவதை இங்கே கவனிப்போம்; ஆணுக்கு ஏற்ற துணையாய் இருப்பதற்காகவே தேவன் பெண்ணைப் படைத்தார் என்று (ஆதி. 2:18) வேதம் கூறுகிறது. அப்படியே புதிய ஏற்பாட்டிலும்'ஸ்திரீயானவள் எல்லாவற்றிலும் அடக்கமுள்ளவளாய் இருந்து அமைதலோடே கற்றுக் கொள்ளக் கடவள். உபதேசம் பண்ணவும் புருஷன் மேல் அதிகாரம் செலுத்தவும் ஸ்திரீயானவளுக்கு நான் உத்தரவு கொடுக்கிறதில்லை. அவள் அமைதலாயிருக்க வேண்டும் (I தீமோ 2:11-12) என்றும், ''தேவ வசனம் தூஷிக்கப்படாதபடிக்கும் பாலிய ஸ்திரீகள் தங்கள் புருஷரிடத்திலும், தங்கள் பிள்ளைகளிடத்திலும் அன்புள்ளவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், கற்புள்ளவர்களும், வீட்டில் தரித்திருக்கிறவர்களும், நல்லவர்களும், தங்கள் புருஷருக்கு கீழ்ப்படிகிறவர்களுமாய் இருக்க வேண்டும் (தீத்.2:4-5) என்றும், அப்போஸ்தலனாகிய பவுல் கூறுகிறார். அதோடு கிறிஸ்தவப் பெண்களுடைய அலங்காரங்களைக் குறித்து, ''மயிரைப் பின்னி, பொன்னாபரணங்களை அணிந்து உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக் கொள்ளுதலாகிய புறம்பான அலங்கரிப்பு உங்களுக்கு அலங்காரமாயிராமல், அழியாத அலங்கரிப்பாயிருக்கிற சாந்தமும் அமைதலுள்ள ஆவியாகிய இருதயத்தில் மறைந்திருக்கிற குணமே உங்களுக்கு அலங்காரமாய் இருக்கக்கடது; அதுவே தேவனுடைய பார்வையில் விலையேறப் பெற்றது. இப்படியே பூர்வத்தில் தேவனிடத்தில் நம்பிக்கையாயிருந்த பரிசுத்த ஸ்திரீகளும் தங்களுடைய புருஷர்களுக்கு கீழ்ப்படிந்து தங்களை அலங்கரித்தார்கள்'' (I பேது. 3:3-5; I தீமோ. 2:9-10) என்றும் கர்த்தருடைய வேதம் கூறுகிறது.

தேவனுடைய பிள்ளைகள் (பெண்கள்) தேவன் விரும்புகின்றபடி தங்களை அலங்கரிக்க வேண்டும் (சங். 45:11). உலகத்தாரைப் போல் தங்களுடைய அழகை பிறர் பார்க்க வேண்டும் என்று விரும்பி கவர்ச்சிகரமான ஆடை அணிவதும், தங்களுடைய உடல்அழகு வெளியே தெரியும்படி ஆடைகள் அணிவதும் அவலட்சணமானதாகும், இது பெண்களின் கற்புக்கு ஆபத்துமாகும் (ஆதி. 34:1-2). எனவே கிறிஸ்தவப் பெண்கள் தகுதியான வஸ்திரத்தினாலும், நாணத்தினாலும் தங்களை அலங்கரித்தல் நல்லது என்று கர்த்தருடைய வேதம் கூறுகிறது (I தீமோ. 2:10).

விதவைகள் : இவர்கள் கணவனோடு வாழ்ந்து கணவனை இழந்தவர்கள். இவர்களுக்

குப் பிள்ளைகள், பேரன் பேத்திகள் இருந்தால் அவர்களை வளர்ப்பதும், தங்கள் குடும்பத்தை தேவ பக்தியான குடும்பமாய் காத்துக் கொள்வதும், இவர்களுடைய கடமையாகும். இப்படிச் செய்வது தேவனுக்குப் பிரியமாக இருக்கும் (I தீமோ. 5:4).

இவர்களில் 60 வயதுக்குக் குறையாதவளும், ஒரே புருஷனுக்கு மனைவியாயிருந்தவளுமாகி பிள்ளைகளை வளர்த்து, அந்நியரை உபசரித்து பரிசுத்தவான்களுடைய கால்களைக் கழுவி, உபத்திரவப்படுகிறவர்களுக்கு உதவி செய்து, சகலவித நற்கிரியைகளையும் ஜாக்கிரதையாய் நடப்பித்து, இவ்விதமாய் நற்கிரியைகளைக் குறித்து நற்சாட்சி பெற்றவளுமாயிருந்தால் அப்படிப்பட்ட விதவைகளையே விதவைகள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும் (I தீமோ. 5:9,10). இவர்களை ஆதரிக்க குடும்பத்தில் யாரும் இல்லாதிருக்க வேண்டும் என்றும் (I தீமோ 5:5) வேதம் கூறுகிறது. ஆதிச் சபையில் இப்படிப்பட்ட பெண்களின் கூட்டம் ஒன்று இருந்ததாக வேதத்தில் நாம் வாசிக்கிறோம் (அப். 6:1).

இந்த விதவைகள் கூட்டத்தில்: இளவயதுள்ள விதவைகளைச் சேர்த்துக் கொள்ளாதே; ஏனெனில், அவர்கள் கிறிஸ்துவுக்கு விரோதமாய் காமவிகாரங் கொள்ளும்போது விவாகம் பண்ண மனதாகி முதலில் கொண்டிருந்த விசுவாசத்தை விடுவதினாலே ஆக்கினைக்குட்படுவார்கள், அதுவுமல்லாமல் அவர்கள் சோம்பலுள்ளவர்களாய் மாத்திரமல்ல, அலப்புகிறவர்களாயும், வீணலுவற்காரிகளாயும், தகாத காரியங்களைப் பேசுகிறவர்களாயும் இருப்பார்கள். ஆகையால் இளவயதுள்ள விதவைகள் விவாகம் பண்ணவும், பிள்ளைகளைப் பெறவும், வீட்டை நடத்தவும், விரோதியானவன் (சாத்தான்) நிந்திக்கிறதற்கு இடமுண்டாக்காமலிருக்கவும் வேண்டுமென்றிருக்கிறேன் ஏனெனில் இதற்கு முன்னே சிலர் சாத்தானைப் பின்பற்றி விலகிப் போனார்கள்'' (I தீமோ. 5:11-15) என்று பரி. பவுல் கூறுகிறார். ''மனைவியானவள் தன் புருஷன் உயிரோடிருக்கும் காலமளவும் பிரமாணத்தினால் கட்டப்பட்டிருக்கிறாள்; தன் புருஷன் மரித்த பின்பு தனக்கு இஷ்டமானவனும், கர்த்தருக்குட்பட்டவனுமாயிருக்கிற எவனையாகிலும் விவாகம் பண்ணிக் கொள்ள விடுதலையாயிருக்கிறாள்'' (I கொரி. 7:39) என்றும் வேதம் கூறுவதால் இளவயதுள்ள விதவைகள் விவாகம் செய்து கொள்வது தவறல்ல.

விவாகமாகாத கன்னிகைகள்:

'கன்னிகைகளைக் குறித்து கர்த்தரால் எனக்கு கட்டளையில்லை'' (I கொரி. 7:25) என்று பரி. பவுல் கூறுகிறார். ஒரு கன்னிகையை விவாகம் செய்து கொடுப்பதும், விவாகம் செய்து கொடாமல் இருப்பதும் அவளுடைய தகப்பனுரின் கடமையாகும். அவளை விவாகம் செய்து கொடுப்பதும் பாவமல்ல: விவாகம் செய்து கொடாமலிருப்பதும் பாவமல்ல. அதற்கால அவசியத்தை அறிந்து அவன் அப்படிச் செய்து கொள்ளலாம் என்று (I கொரி. 7:36-38) அப். பவுல் கூறுகிறார்.

வேத வாக்கியங்கள் இவ்வாறிருக்க, இந்நாட்களில் வாலிபப் பெண்களையும், இளவயதுள்ள விதவைகளையும் கூட்டிச் சேர்த்து அவர்களை கர்த்தருடைய ஊழியஞ் செய்வதற்கு பயன்படுத்துகிறார்கள். இது வேதத்தின் ஒழுங்கல்ல. இவர்கள் தாங்கள் செய்கிற தவறுக்கு ஆதாரமாக: கெங்கிரேயா ஊர் சபைக்கு ஊழியக்காரியாகிய நம்முடைய சகோதரி பெபேயாள் (ரோ. 16:1) என்று எழுதியிருக்கிறதே என்றும், ''ஊழியக்காரர் மேலும், ஊழியக்காரிகள் மேலும் என் ஆவியை ஊற்றுவேன்'' (யோவே. 2:29) என்றும் எழுதியிருக்கிறதே என்றும் கூறுவார்கள். கெங்கிரேயா ஊர் சபைக்கு ஊழியக்காரியாகிய பெபேயாளை அழைத்து வந்து கன்வென்ஷன் நடத்துங்கள, காத்திருப்பு கூட்டத்தை அவள் நடத்துவாள் என்று அப். பவுல் கூறவில்லை. ''நீங்கள் கர்த்தருக்குள் பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடி ஏற்றுக் கொண்டு எந்தக் காரியத்தில் உங்கள் உதவி அவளுக்குத் தேவைப்படுகிறதோ அதிலே நீங்கள் அவளுக்கு உதவி செய்ய வேண்டுமென்று அவளை உங்களிடத்தில் ஒப்புவிக்கிறேன். அவள் அநேகருக்கும் எனக்குங்கூட ஆதரவாயிருந்தாள (ரோ 16:1, 2) என்று எழுதியிருப்பதால் இந்த பெபேயாள் ஒரு ஊழியக்காரனுடைய மனைவியாக காணப்பட

கிறுள். இவள் மேற்கூறிய விதவைகள் கூட்டத்தில் சேர்த்துக்கொள்ள தகுதியானவள். எனவே அவளை பரிசுத்தவான்களுக்கேற்றபடி ஏற்றுக் கொண்டு உதவி செய்யுங்கள் என்று பவுல் எழுதுகிறுர்.

இன்னும் சிலர் பெண்களை ஊழியத்தில் சேர்க்க, "அந்தப்படியே ஸ்திரீகளும் நல்லொழுக்கமுள்ளவர்களும், அவதூறு பண்ணுதவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், எல்லாவற்றிலும் உண்மையுள்ளவர்களுமாக இருக்க வேண்டும்" (I தீமோ 3:11) என்று அப். பவுல் எழுதியிருப்பதைக் காட்டி விவாகமாகாத கன்னிகைகளையும், இளவயதுள்ள விதவைகளையும் தங்கள் ஊழியங்களில் சேர்த்துக் கொள்கிறுர்கள். இது தவறுகும். I தீமோ. 3;11ன் விளக்கமாவது I தீமோ. 3:8ல் கூறியுள்ள உதவி ஊழியக்காரர்களுடைய மனைவிகளாகும். ஆங்கில வேதாகமத்தில்: "Even so must their wives be grave, not slanderers, sober, faithful in all things" என்று எழுதியிருப்பதைக் காணலாம் ஆகையால், கன்னிகைகளையோ, இளவயதுள்ள விதவையையோ சபையில் தங்க வைத்து கர்த்தருடைய ஊழியத்துக்காக விடு விடாக அனுப்புவது தேவனுடைய ஒழுங்கல்ல. இப்படிப்பட்ட ஒழுங்கீனங்கள் மாற்றப்பட வேண்டும்.

"நீ குறைவாய் இருக்கிறவைகளை ஒழுங்குபடுத்தும்படிக்கு நான் உனக்கு கட்டளையிட்டபடியே பட்டணங்கள் தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கும் உன்னைக் கிரேத்தா தீவிலே விட்டு வந்தேனே" (தீத். 1:5) என்று பவுல் தீத்துவுக்கு எழுதுகிறுர். இவர் மூப்பர்களை ஏற்படுத்தும்படி தீத்துவுக்கு கடிதம் எழுதியிருக்கிறுர். ஆனால் இந்நாட்களில் சில பெரியவர்கள் தாங்கள் பவுலின் மினிஸ்ட்ரி என்று கூறிக் கொண்டு தேவனுடைய சபையை ஒழுங்குபடுத்த மூப்பத்திகளை ஏற்படுத்துகிறுர்கள், என்னே பரிதாபம்.

இவர்கள் தங்கள் கொள்கை சரியென்று நிரூபிக்க, "ஊழியக்காரர் மேலும், ஊழியக்காரிகள் மேலும் அந்நாட்களில் என் ஆவியை ஊற்றுவேன்" (யோவே. 2:29) என்று எழுதியிருக்கிறதல்லவா? ஆகையால் ஊழியக்காரிகள் இருப்பது சரியே என்று சாதிக்கிறுர்கள். அப்படி சாதிக்கிறவர்கள் யோவேல் 2:28, 29 வசனங்களைக் கொஞ்சம் தெளிவாகப் படித்தால் உண்மை விளங்கும். "அதற்குப் பின்பு நான் மாம்சமான யாவர் மேலும் என் ஆவியை ஊற்றுவேன். அப்பொழுது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்திகளும் தீர்க்க தரிசனம் சொல்லுவார்கள்; உங்கள் மூப்பர் சொப்பனங்களையும் உங்கள் வாலிபர் தரிசனங்களையும் காண்பார்கள். அதோடு உங்களிடம் வேலை செய்கிற உங்கள் அடிமைகள் மேலும் அதாவது உங்களிடம் வேலை பார்க்கும் உங்கள் வேலைக்காரர் மேலும், வேலைக்காரிகள் மேலும் என் ஆவியை ஊற்றுவேன் (யோவே. 2:29) என்பது அதன் விளக்கமாகும். ஆங்கில வேதாகமத்தில், "And also upon the servants and upon the hand-maids in those days will I pour out my spirit" என்றும் எழுதியிருப்பதால இங்கே servant என்று எழுதியிருப்பதைக் கர்த்தருடைய ஊழியக்காரர்கள் என்று எடுத்துக் கொண்டார்கள், அது அப்படியல்ல. இஸ்ரவேலர்கள புறஜாதிகளை அடிமைகளாக, வேலைக்காரர்களாக, வேலைக்காரிகளாக வைத்திருந்தார்கள். அவர்கள் மேலும் கூட என் ஆவியை ஊற்றுவேன் என்பதாரும் (லேவி. 25:44).

இன்னும் சிலர் பெண்களைத் தங்கள் ஊழியத்தில் சேர்த்துக்கொள்வதற்காக இப்படியும் விளக்கம் கூறுவார்கள. பிலேயாம் தேவசித்தம் செய்யத் தவறினபொழுது பிலேயாமைச் சுமந்து சென்ற கழுதையின் வாயைத் திறந்து கர்த்தர் பேசி பிலேயாமை எச்சரித்ததுபோல் (எண். 22:30, 31; II பேது. 2:16) இந்நாட்களிலும் கர்த்தர் இந்தப் பெண் ஊழியக்காரிகளைப் பிலேயாமின் கழுதைகளைப்போல் பயன்படுத்தலாமே என்றும் கூறுவதுண்டு. தாவீது பாவஞ்செய்து தேவ கோபத்துக்கு ஆளானபோது தாவீதின் வீட்டிலுள்ள எந்த மிருகத்தின் மூலமும் கர்த்தர் பேசி தாவீது ராஜாவின் மதிகேட்டை உணர்த்துவிக்காதபடி தேவனுடைய கர்த்தர் நாத்தான் தீர்க்கதரிசியைக் கொண்டே தாவீது ராஜாவை எச்சரித்து உணர்த்திப் பாவ மன்னிப்பைக் கூறினதாக வேதம் கூறுகிறது (II சாமு. 12:10-13). அப்படியே புதிய ஏற்பாட்டு சபையிலும் வழி தவறிப் போகிறவர்களை எச்சரிக்கத் தேவனுடைய

கர்த்தர் தம்முடைய அப்போஸ்தலர்களையும் தீர்க்கதரிசிகளையும் ஏற்படுத்தியிருக்கிறார் (எரே. 3:14-15). ஆதிச் சபையில் பந்தி விசாரிப்பு ஊழியத்தைச் செய்வதற்காக (விதவைகளை விசாரிப்பதற்காக) விசுவாசமும் பரிசுத்த ஆவியும் நிறைந்தவர்களாகிய ஏழு பேர்களைத் தெரிந்து கொண்டார்கள் (அப். 6:1-7) என்று வாசிக்கிறோம். இவர்களிலும் ஒரு விவாகம் ஆகாத கன்னிகையையோ, இளம் வயதுள்ள விதவைகளையோ காணவில்லை. ஆகையால் இளவயதுள்ள பெண்கள் (கன்னிகைகள்) தங்கள் வீடுகளில் அடங்கியிருந்து கர்த்தருக்கு சித்தமானால் விவாகம்செய்துகொண்டு குடும்பமாய் தேவ சித்தம் செய்வது நல்லது. சத்திய வேதம் அவ்வாறே கூறுகிறது. இளவயதுள்ள விதவைகளும் ஊழியம் என்ற பெயரால் வீடு வீடாய் திரிந்து சாட்சியைக் கெடுத்துக் கொள்ளாதபடியே தேவனுக்குச் சித்தமானால் தேவ பக்தியுள்ள ஒரு ஆடவனை விவாகம் செய்து கொண்டு சாட்சியாய் வாழ்வது நல்லது. முதிர்வயதுள்ள விதவைகளுக்குப் பிள்ளைகள், பேரப் பிள்ளைகள் இருந்தால் அவர்களை தேவ பக்தியில் வளர்த்துக் குடும்பத்தோடு சாட்சியாய் வாழ வேண்டும் (I தீமோ. 5:4).

உத்தம விதவைகள் அறுபது வயதுக்கு குறையாதவர்கள் நற்சாட்சி பெற்றவர்கள், ஆதரிக்க ஆட்கள் இல்லாதவர்கள் இப்படிப்பட்டவர்களை விதவை கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளலாம் (I தீமோ. 5:9, 10) என்றும் வேதம் கூறுகிறது.

இதற்கு மாறாக தேவனுடைய சத்தியத்துக்கு மாறாக பெண்ணியத்தை நடக்கச் செய்து சத்திய மார்க்கத்தை தூஷிக்கச் செய்வதற்கு சாத்தான் திட்டமிட்டுச் செயல்படுகிற காலமாய் இது இருக்கிறது. ஏதேன் முதல் சாத்தான் இதைச் செய்து வருகிறான். எனவே கிறிஸ்தவப் பெண்கள் கர்த்தருடைய வேதத்தில் எழுதியிருக்கின்றபடி தங்களுடைய வாழ்வைக் காத்துக் கொண்டு தேவாசீர்வாதம் பெற்றுக் கொள்வது நல்லது. வேதாகமத்தில் இப்படியே உள்ளது.

''ஸ்திரீயானவள் எல்லாவற்றிலும் அடக்கமுடையவளாயிருக்க வேண்டும்''
(I தீமோ. 2:11)

---

# வேத பாடம் (தொடர்ச்சி)

## லேவியராகமம் 19ம் அதிகாரம்

மத சம்பந்தப்பட்டதும், சமுதாய சம்பந்தப்பட்டதுமான சட்ட திட்டங்கள் இந்த அதிகாரத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

### லேவி. 19:1,2

இஸ்ரவேல் ஜனங்கள், தங்கள் தேவன் பரிசுத்தராயிருக்கிறபடியினால் அவர்களும் பரிசுத்தர்களாக இருக்க வேண்டும். இறைவனுடைய தன்மை ''பரிசுத்தமாக'' இருக்கிறது. எனவே, பரிசுத்தமாக இருக்கும்படி கட்டளையிடப்பட்டுள்ளது. I பேது. 1:15,16ல் நாமும் அவ்விதமாக வாசிக்கிறோம்.

### லேவி. 19:3

''உங்களில் அவனவன் தன்தன் தாய்க்கும் தன்தன் தகப்பனுக்கும் பயந்திருக்கவும், என் ஓய்வு நாட்களை ஆசரிக்கவும் கடவீர்கள்; நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்'' பிள்ளைகள் பெற்றோருக்கு கீழ்ப்படிந்திருக்க வேண்டும் பயந்திருக்க வேண்டும். நல்லவர்களுக்கு மாத்திரமல்ல அவர்கள் கெட்டவர்களாயிருந்தாலும் பிள்ளைகள் பெற்றோர்களுக்கு கீழ்ப்படிந்திருக்க வேண்டும். நியாயமான காரியத்தில் கீழ்ப்படிய வேண்டியது அவசியம். வசனத்திற்குட்பட்ட வாழ்க்கைக்கு கட்டுப்பட்டிருக்க அவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். கர்த்தருடைய ஓய்வு நாட்களை ஆசரிக்க வேண்டும். இது இஸ்ரவேல் ஜனங்களுக்கும் தேவனுக்கும் அடையாளமாக இருக்கிறது.

### லேவி. 19:4

விக்கிரகங்களை நாடவோ, அந்நிய தெய்வங்களைப் பற்றி விசாரித்து அறியவோ, விக்கிரகங்களை உண்டு பண்ணவோ கூடாது.

## லேவி: 19:5-8

கர்த்தருக்கு எப்பொழுதும் உற்சாகமாக சமாதான பலி செலுத்தலாம். கட்டாய சட்டத்தினுல் சமாதான பலி செலுத்தப்படக் கூடாது. சமாதான பலியின் மாம்சம் அன்றைய தினமும் மறுநாளும் புசிக்கப்படலாம். மூன்றும் நாளைக்கு வைக்கக் கூடாது. மூன்றும் நாள் மீந்திருக்குமானல் அதை அக்கினியினுல் சுட்டெரித்துப் போட வேண்டும்.

## லேவி. 19:9,10

அறுவடையின் போது வயலின் ஓரத்தில் இருக்கிறதை அறுக்காமலும், சிந்திக்கிடக்கிற கதிர்களைப் பொறுக்காமலும், திராட்சத் தோட்டத்தின் பின் அறுப்பை அறுக்காமலும் அதிலே சிந்திக் கிடக்கிற பழங்களை பொறுக்காமலும் அவைகளை எளியவனுக்கும், பரதேசிக்கும் விட்டு விடுவாயாக. நான உங்கள் தேவனுகிய கர்த்தர். இதில் இறைவன் ஏழை எளியவர்களுக்கு ஆதரவு உண்டாக்கும்படியாக இந்த வசனங்களிலே சொல்லியிருக்கிறுர்.

ரூத்தின் புஸ்தகத்திலே, ரூத் அறுக்கிறவர்கள் பின்னுலே போய் அரிக்கட்டுகள் சிந்திக் கிடக்கிறதை பொறுக்குகிறதற்கு அனுமதி கேட்டுக் கொண்டாள் என்று பார்க்கிறேம். இது ஏழைகள், விதவைகள், பரதேசிகள் இப்படிப்பட்டவர்களுக்கு சகாயம் உண்டாயிருக்கும்படி தேவன் கட்டளையிட்டதாக அறிகிறேம் (ரூத். 2:2,3).

## லேவி. 19:11

களவு செய்யாமலும், வஞ்சனை பண்ணுமலும், ஒருவொருக்கொருவர் பொய் சொல்லாமலும் இருங்கள்.

## லேவி. 19:12

கர்த்தருடைய நாமத்தைக் கொண்டு பொய்யாணையிடக் கூடாது. அப்படிச் செய்கிறவன் கர்த்தருடைய நாமத்தை பரிசுத்தக் குலைச்சலாக்குகிறுன்.

## லேவி. 19:13

பிறனை ஒடுக்கக் கூடாது. கொள்ளையிடக் கூடாது. கூலிக்காரனுடைய கூலியை பிடிக்கக் கூடாது. நெற்றி வேர்வை அடங்குமுன்பாக அவனுடைய கூலியைக் கொடுத்துவிட வேண்டும்.

## லேவி. 19:14

செவிடனை நிந்தியாமலும், குருடனுக்கு முன்னே தடுக்கலைவையாமலும் உன் தேவனுக்குப் பயந்திருப்பாயாக; நான் கர்த்தர், அங்கஹீனமானவர்களுக்கு இடையூறு செய்யக் கூடாது என்று கர்த்தர் எச்சரிக்கிறுர்.

## லேவி. 19:15

நியாய விசாரணையில் அநியாயமோ முகதாட்சணியமோ செய்யக் கூடாது.

## லேவி. 19:16

அங்குமிங்கும் கோள் சொல்லி ஜனங்கள் மத்தியிலே கலகம் எழுப்பிவிடக் கூடாது. பொய்யான சாட்சியாக இருக்கக் கூடாது. மற்றவர்களுடைய இரத்த பழிகளுக்கு உடன் படக் கூடாது.

## லேவி. 19:17,18

பிறனிடத்தில் அன்பு கூர வேண்டும். தவறுடையவர்களை நேரடியாகக் கடிந்து கொள்ள வேண்டும். உள்ளத்தில் பகைக்கவோ, பழி வாங்க வேண்டுமென்ற எண்ணமோ இருக்கக் கூடாது. பொருமையும் கொள்ளக் கூடாது. உன்னிடத்தில் அன்பு கூர்வது போல பிறனிடத்திலும் அன்பு கூறுவாயாக.

## லேவி. 19:19

மிருக ஜீவன்களை வேறு ஜாதியோடே பொலிய விடக்கூடாது. வயலில் வெவ்வேறு வகையான விதைகளைக் கலந்து விதைக்கக் கூடாது. சணல் நூலும் கம்பளி நூலும் கலந்த வஸ்திரத்தை உடுத்தக் கூடாது. அப்படிச்செய்தால் அது தீட்டாகும். (உபா. 22:9) அந்தந்த ஜாதி அந்தந்த ஜாதியாக இருக்கட்டும். அதில் கலப்புக் கூடாது. இஸ்ரவேல் ஜனம் தனித்து வாசமாயிருக்கட்டும். (தொடரும்)

''சகோதரரே, நீங்களெல்லாரும் ஒரே காரியத்தைப் பேசவும், பிரிவினைகளில்லாமல் ஏகமனதும் ஏக யோசனையும் உள்ளவர்களாய் சீர் பொருந்தியிருக்கவும் வேண்டுமென்று, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினுலே உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்.'' (I கொரி. 1:10)

# 23-ஆண்டு நிறைவு விழா

## தேவனுக்கு மகிமை

இந்தக் கடைசிக் காலத்தில், (8-8-1968 அன்று) தேவனால் இந்தப் பூமியில் எழுப்பப்பட்ட தேவனுடைய சரீரமான புதிய எருசலேம் சபை 8-8-1991 வியாழனன்று 23-ம் ஆண்டு நிறைவடைந்ததை முன்விட்டு 23-ம் ஆண்டு நிறைவு விழாவை மகிழ்ச்சியுடன் கொண்டாடிற்று. தேவன் தமது சபையை இந்த 23 ஆண்டு காலமாக போஷித்து, வளர்த்தி நிலை நிறுத்தினதற்காக தேவனுக்கு ஸ்தோத்திரம். உலகத்திலே எத்தனையோ சபைகளும், சங்கங்களும் சிதறிப்போகிற இந்த நாட்களில் இதுவே திருச்சபை என்பதற்கு வானத்திலே காணப்படும் அடையாளம் இதுவே (வெளி. 12:1-5).

# 15-8-1991 சுதந்திர நாள்

என்பது கோடி இந்தியரே இயேசு இறைவனின் பாதத்தில் அமர்ந்தவரே,
பந்தி அமர்ந்திட வாருங்கள் நம் பாவ விலையகல கேளுங்கள்
சுதந்திரம் பெற்ற தேசமே சுந்தரமான ராஜ்யமே
பாடு பரவசமாய் பணிந்து கொள் புதிய எருசலேமாய்,
புதிய எருசலேமே தேவனின் திருச்சபையாம்
பூலோக மனிதர்க்கு புகலிட பட்டணமாம்,
ஆதிசபை புதிய எருசலேம் அவனியில் உள்ளது புதிய எருசலேம்
இங்கே ஒரு பாதி பரலோகில் மறுபாதி இரண்டும் ஒன்றாகும் இயேசு வருகையில்
ஆயத்தமாகும் வேலைக்காய் அனுப்பப்பட்ட தலைமையுண்டு,
அப்போஸ்தலர் தீர்க்கர் என்ற அஸ்திபார கற்களுண்டு;
மனிதர்க்கு பாவத்தை மன்னிக்கும் அதிகாரம் - பாவ
மனிதர்களை சுத்தமாக்க மாதேவன் செய்த நிர்மானம்
பாவ அறிக்கையின்றேல் பரிசுத்த வாழ்க்கையில்லை,
பரிந்து பேசும் திருச்சபையின்றேல் பரலோகின் தொடர்பில்லை;

அறுபத்தெட்டிலே ஆரம்பித்த திருச்சபை,
ஆண்டவரின் அன்பையே அவனியில் காட்டுதே;
இயேசுவின் கட்டளையை இகத்திலே நிறைவேற்ற
ஈன பிறவி மானிடர்க்காய் எழும்பினது திருச்சபையே.
உலகத்தில் தோன்றியுள்ள உயிருள்ள சபையே - இது
ஊர் ஊராய் எழும்பியே ஓங்கியே வளருமே;
எங்கும் அன்பை பொழிந்துமே இயங்கிவரும் திருச்சபையே,
ஏக்கமுள்ள மனிதர்களை இயேசுவிடம் சேர்க்குமே;
ஐயந்தீர போதித்து ஆத்துமத்தை தேற்றுமே - இது
ஒன்றுபட்டு வாழுகின்ற உயிருள்ள திருச்சபையே.

ஓதுகின்ற வேதத்தால் சபையில் உண்மையெங்கும் தங்குமே
காயங்களைக் கட்டவே போர்க்களத்தில் மகுடம் சூட்டவே
தாயைப் போலத் தேற்றவே இத்தரணியில் வந்த திருச்சபையே!
மாறும் மனிதர்க்காகவே பாவ மன்னிப்பை நாளும் அருளவே
சீறும் அலகை அடக்கவே தேவ சேனையாகவே
தேடி வந்த தேவனே தெரிந்து கொண்ட திருச்சபையே

தலைமையில்லா குடும்பம் போல தத்தளித்து கலங்கவில்லை - சபை
தரிக்கெட்ட சக்கரம் போல் தாறுமாறாய் ஓடவில்லை;
எளிமையான தலைமை, இயேசுவுக்கு அடிமை - அவர்
ஏக்கமுள்ள மனிதர்க்காய் இதயத்தில் கொள்வார் சிறுமை;
விரமுள்ள தலைமை வேத வியாக்கியானத்தில் அவர் வலிமை,
விழ்ந்து போன மனிதர்க்கு தெரியும் அவர் அருமை:
பரிசுத்தம் அவர் பெருமை எல்லாவற்றிலும் தனிமை
பாருலகில் தேவன் தந்த பாக்கியமான தலைமை.

ஏழு கட்டளை பெற்றிட்டார் இயேசுவிடம் கற்றிட்டார்,
எங்கும் அதை சாற்றிட்டார் புதிய எருசலேமை எழுப்பிட்டார்;
பாவங்களை மன்னிக்க பேதுருபோல் வந்திட்டார்,
பரம தேவ நாளுக்காய் பாரில் சபையை கூட்டுகின்றார்.
போலியான வேஷமில்லை பொய்ப்புகழை நாடவில்லை,
ஓடி செல்வம் தேடவில்லை உண்மையை விட்டு விலகவில்லை;
உபதேசத்தில் குழப்பமில்லை உறுதியிலே மாற்றமில்லை,
தரித்திரரை ஒதுக்கவில்லை இத்தரணியிலே நடுக்கமில்லை.
ஜாதிவெறி காட்டவில்லை சதி செய்யும் கூட்டமில்லை;
ஜோதியான வாழ்க்கையால் தந்திர போக்குமில்லை;
சத்தியத்தை மறைக்கவில்லை சாந்தத்தை இழக்கவில்லை - அவர்
சமாதானம் பெற்றபிள்ளை நீயும் கேட்கவா அவர் சொல்லை!

கொடியேற்றி மகிழ்ந்திடுவோம், கூவியழைத்து சேர்த்திடுவோம்,
தனிப்படை அமைத்திடுவோம் இத்தரணியர்க்கு அன்பு செய்வோம்,
தாகந்திர மனிதர்க்கு ஜீவத்தண்ணீர் அளித்திடுவோம்;
பிணி தீர்க்கும் மருந்தாக பேதையர்க்கு அறிவாக,
தேவ பணி செய்திடுவோம் சேவை செய்து வாழ்ந்திடுவோம்;
புதிய பாதை அமைத்திடுவோம் புண்ணியங்கள் செய்திடுவோம்,
பூமியெங்கும் அவர் சத்தம் ஒலிக்க என்றும் செய்திடுவோம்.

தேவனை ஆராதிப்போம் தெளிந்தவர்களாய் நாம் செல்வோம்,
ஜீவனை அதற்காக தியாகபலி செய்திடுவோம்;
இருபத்து மூன்று ஆண்டுகளை இனிதாக முடித்துவிட்டோம்
அறுவடை நாளுக்கென்று ஆண்டவர்க்காய் உழைத்துச் செல்வோம்.
மலைபோன்ற போராட்டம் பாவ மனிதர்களால் வசையாட்டம்,
களைப்போடு சென்றாலும் கர்த்தரின் பெலன் பெறுவோம்;
கண்களால் காணுவேன் கர்த்தரிடம் ஓடுவேன்,
பண்ணிசைத்துப பாடுவேன் பரவசமாய் ஆடுவேன்.
நன்மைகளை நாடுவேன் நாவிலத்தில் மகிழுவேன்,
உண்மையே பேசி நானும் ஒழுக்கத்தோடு வாழுவேன்;
வாழுகின்ற நாளெல்லாம் தேவ வார்த்தைக்குச் செவி கொடுப்பேன்.
வானுலக புத்தகத்தில் என் பேரை பதிய வைப்பேன்!

O — : — O

# கிறிஸ்தவ திருமணம்

(தொடர்ச்சி)

## வாழ்க்கைத் துணையைத் தேடுதல்

வாலிப பையன்களும், வாலிப பெண்களும் விவாகம் செய்ய வேண்டும் என்ற விருப்பம் உண்டாகும் பொழுது அந்த விருப்பத்தை நேரடியாகவோ, மறைமுகமாகவோ பெற்றோர்களுக்கு அறிவிப்பது நல்லது. இரட்சிக்கப்பட்ட நல்ல பெற்றோர்களாயிருந்தால் அவர்கள் தங்களுடைய பிள்ளைகளுக்கு நல்ல ஏற்பாடுகள் செய்வார்கள். அதற்குட்பட்டு தங்களுக்கு வேண்டிய துணையைத் தெரிந்து கொள்ளலாம். அதிலும் விசேஷமாய் விவாகம் செய்ய போகிறவர்கள் தங்களுக்கு, தேவனுக்கு சித்தமான வாழ்க்கைத் துணையைத் தேடி தரும்படியாக தேவனை நோக்கி ஊக்கமாக ஜெபிக்க வேண்டும். தேவன் ஒரு ஏற்பாடு செய்யும் வரை அவர்கள் பொறுமையோடு காத்திருக்க வேண்டும். வீடும் ஆஸ்தியும் பெற்றோர்கள் அல்லது பிதாக்கள் அருளும் சுதந்திரம்; புத்தியுள்ள மனைவியோ கர்த்தர் அருளும் ஈவு என்று நீதி 19:14ல் எழுதப்பட்டுள்ளது. தேவன ஈசாக்குக்கு பெண் தேடிக் கொடுத்தார். ரெபெக்காளும் ஈசாக்கும் ஒருவரையொருவர் பார்த்ததோ பேசியதோ இல்லை. ஆபிரகாமின் வேலைக்காரனை சரியாய் நடத்தி ரெபெக்காளை காணும்படிச் செய்து அவளுடைய பூரண சம்மதத்தோடு விவாகம் நிச்சயிக்கப்பட்டது. இது கர்த்தரால் ஏற்பட்டதாக நாம் வேதாகமத்தின் மூலமாக அறிந்து கொள்கிறோம். அப்படியே நம்முடைய பிதாவாகிய தேவன் நமக்குரிய துணையைத் தேடித் தர அவர் நமக்காக கவலைப்படுகிறார். (1) நம்முடைய தேவையை தேவன் அறிந்திருக்கிறார்.

(2) பெண் இரட்சிக்கப்பட்டவளாக இருக்க வேண்டும். அப்படியே வாலிப பெண்கள் விவாகம் செய்யப் போகிற புருஷனும் இரட்சிக்கப்பட்டவனாக இருக்க வேண்டும். ஒருவர் ஆவிக்குரிய விருப்பம் உடையவராக இன்னொருவர் மாம்ச விருப்பம் உடையவராக இருந்தால் வாழ்க்கையில் போராட்டம் உண்டாகும். அவர் தேவாலயம் போவதும் தேவ ஊழியத்தின் அடுத்த பணிவிடைகளில் ஈடுபடுகிறது மான காரியத்தை வாஞ்சிக்கும்போது அவள் சினிமாவுக்கு போகவும், ஊர் சுற்றவும் விரும்புகிறவளாக இருந்தால் அவர்களுடைய விவாகம் கசப்புள்ளதாக மாறும். மாம்சம் ஆவிக்கு விரோதமாகவும் ஆவி மாம்சத்துக்கு விரோதமாகவும் போராடுகிறதாக நாம் வேதாகமத்தில் வாசிக்கிறோம். விவாகமான பின்பு இரட்சிப்புக்குள் கொண்டு வரலாமென்று சொல்லி எண்ணக் கூடாது. சாத்தான், இரட்சிக்கப்படாத பெண் மிகவும் அழகானவள், நல்ல குணமுள்ளவள், பணமுள்ளவள், இரட்சிக்கப்பட்ட அநேகரைக் காட்டிலும் அவள் எவ்வளவோ பரவாயில்லை என்று மெதுவாக காதில் சொல்லுவான். இவைகளுக்கு செவி சாய்க்கக் கூடாது. சில பெற்றோர்களும் இரட்சிப்பின் அனுபவமில்லாதவர்கள் கலியாணம் முடித்த பின்பு நீ, உன் இஷ்டப் பிரகாரம் கோயிலுக்கு அழைத்துச் செல்லலாம் என்று துராலோசனை கொடுப்பார்கள் அதற்கு இணங்கக் கூடாது. நம்முடைய ஜீவிய ஓட்டத்தில் நம்முடைய கால்களில நாமே கட்டையைக் கட்டிக் கொள்ளக் கூடாது. இது ஒருநாள் இரண்டு நாள் வாழ்க்கையல்ல; ஜீவியகால முழுவதும் நமக்குத் துணையாயிருக்கக் கூடிய, சேர்ந்து வாழ வேண்டிய பிரச்சினை. ஒரே வீட்டில் வாழ வேண்டிய நிலை. ஆகையால், திருமணத்தின் நோக்கம் மெய்யாய் நிறைவேற வேண்டுமென்றால் அவள் இரட்சிக்கப்பட்டவளாக இருக்க வேண்டும்.

(3) அந்நிய நுகத்தில் அவிசுவாசியுடனே கூட பிணைக்கப்படாதிருப்பீர்களாக என்று II கொரி. 6:14 முதல் எழுதப்பட்டுள்ளது. விக்கிரகங்களுக்கும் தேவனுடைய ஆலயத்துக்கும் சம்பந்தமேது என்று கேள்வி கேட்கப்பட்டிருப்பதையும் நாம் பார்க்கிறோம். இது இந்த பாகத்தின் உச்சகட்டமாக இருக்கிறது. ஒருவர் இரட்சிக்கப்பட்டு ஆவியில் உயிர்ப்பிக்கப்பட்டவராக இருக்கும்போது இன்னொருவர் ஆவியில் செத்தவராக இருக்கிறார். இவ்விதமான பிணைப்பு தேவனுடைய சித்தமல்ல. அங்கே ஒருவர் அப்படி இரட்சிக்கப்படாத பெண்ணைக் கட்டி அப்புறம் இரட்சிப்புக்குள்ளே கொண்டு

வந்திருக்கிறார். இங்கே ஒருவர் அப்படிச் செய்து இரட்சிப்புக்குள்ளே கொண்டுவந்திருக்கிறார் என்று உதாரணம் சொல்லிக் கொண்டு இராமல் தேவனுக்குப் பயப்பட வேண்டும். தேவனுடைய வசனத்தின்படியே நமமுடைய வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

## 4. பண்பாடு கலாச்சாரம்

வெவ்வேறு பண்பாட்டு நிலையிலுள்ளவர்கள் விவாகம் முடித்துக் கொள்வது தேவ நடத்துதல் இல்லாமல் செய்யக்கூடாது. இரட்சிக்கப்பட்ட மக்களில் வேறுபாடு இல்லையென்றாலும் பண்பாட்டில் பிரச்சினையுண்டாகும். இந்தியாவை போன்ற தேசத்தில் உள்ள வெளிநாட்டுக்காரர் ஒரு பெண்ணை விவாகம் முடிக்கும்போது பிறக்கும் பிள்ளைகளுக்கு வாழ்க்கையில் சில பிரச்சினைகள் தோன்றும். இங்கேயும் ஒரு மாகாணத்தில் உள்ள ஒருவர் இன்னொரு மாகாணத்திலுள்ள பெண்ணை விவாகம் செய்யும்பொழுது பாஷை, பண்பாடு, எங்கே நிரந்தரமாகத் தங்குவது என்பவைகளில் பிரச்சினையுண்டாகும். ஆனபடியினால் தெய்விக வெளிப்படுத்தல் இல்லாமல் விவாகத்திற்கு ஒப்புக் கொள்ளக் கூடாது.

## 5) ஜாதி :

சரியாய் மனந்திரும்பாத சிலர் கிறிஸ்தவத்திற்குள் புகுந்து இந்து மதத்தின் அஸ்திபாரத்தின் ஒன்றாகிய ஜாதியை கிறிஸ்தவத்துக்குள் கொண்டுவந்து விட்டார்கள். இது அருவருப்பான காரியம். யூதனென்றும், கிரேக்கனென்றும் இல்லை, அந்நியன் என்றும் புறஜாதியானென்றும் இல்லை என்று வேதாகமத்தில் கலா. 3ம் அதிகாரத்தில் நாம் வாசிக்கிற பிரகாரம் கிறிஸ்துவுக்குள் எல்லோரும் ஒன்றே. இரட்சிக்கப்பட்ட மக்கள் உலகப் பிரகாரமாக வேறொரு ஜாதியாய் இருந்தாலும் பெற்றோரின் சம்மதத்தின்படி விவாகம் முடித்துக் கொள்ளலாம், அப்படி பெற்றோருடைய சம்மதம் இல்லையென்றால் சரியான தெய்விக நடத்துதல் இல்லாவிட்டால் விவாகம் முடிக்காமல் இருப்பது நல்லது. காலத்திற்காக காத்திருந்து பெற்றோர்களுடைய சம்மதத்தோடு அதைச் செய்யலாம். அல்லது தெய்விக வெளிப்படுத்தல் உண்டாயிருந்தால் துணிந்து செய்து கொள்ளலாம் ஏனென்றால் வெவ்வேறு ஜாதி (வெவவேறு பாஷை இவைகள உண்டாகும்பொழுது) இவர்களுக்கு (வெவ்வேறு பாஷைக்காரர்களுக்கு) சரளமாய்பேசத்தக்கதான ஒரு பொது பாஷை இருக்க வேண்டும் அந்த பாஷை ஒருவருக்கு சரியாகத் தெரியாவிட்டால் அதனுடைய குடும்ப வாழ்க்கையில் சில பிரச்சினைகள் உண்டாகும். ஆனபடியினால் இவைகளையும் கவனிக்க வேண்டும்.

## 6) வயது :

ஆணுக்கு அதிகமான வயதும் பெண்ணுக்கு குறைந்த வயதுமாக இருக்க வேண்டும். வயதில் மூன்றோ, நான்கோ, ஐந்தோ, ஆறோ வித்தியாசம் இருக்கலாம். ஆனால் 15, 20 வயது வித்தியாசங்கள் இருப்பது நல்லதல்ல. பெண்கள் சீக்கிரம் மூப்படையக் கூடியவர்கள். ஆணைக் காட்டிலும் பெண்ணுக்கு வயது அதிகம் இருக்குமென்றால் சீக்கிரம் அவர்கள் மூப்படைய நேரும். ஆண் மனைவிக்கு சேவை செய்ய வேண்டிய பிரச்சினை உண்டாகும். ஆனபடியினால் புருஷன் வயதாகும் காலத்தில் மனைவி பெலத்தோடு இருந்தால் கணவனுக்கு அது பிரயோஜனமாகவும், உதவியாகவும் இருக்கும். பிள்ளைகளை நடத்துவதற்கு வசதியாக இருக்கும்.

7) இரட்சிக்கப்பட்ட மக்கள் அழகு, தோலின் நிறம் இவைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது. இலக் கவர்ச்சி என்று சொல்லப்படுகிற பிரகாரம் அழகாய் இருக்கிறது நல்லது. அதிக ஒப்பனைகளையோ ஆடம்பரத்தையோ தேடக் கூடாது. அழகுள்ள பெண்கள் தங்களுடைய அழகினால் அநேகரை கவர்ச்சித்து பழக்கப்பட்டவர்களாக இருப்பார்கள். விவாகமான பின்பும் தங்கள் அழகினால் கணவனை கவர்ச்சித்து கீழ்ப்படுத்த முற்படுவார்கள் (எல்லாருமல்ல). குண அழகே மிகச்சிறந்தது. அதோடு கூட கொஞ்சம் கவர்ச்சியான அழகைத் தேடுகிறது தவறு ஒன்றும் இல்லை அப்படி அழகு இல்லாவிட்டாலும் பண்புடையவர்களாக இருக்க வேண்டும். இரட்சிப்பு முக்கியம்.

## 8) கல்வி, படிப்பு நிலை :

ஒருவர் அதிகம் படித்தவரும், இன்னொரு வர் படிப்பு விருப்பம் இல்லாதவருமாக இருக் கக் கூடாது. அவர் அதிகமாக புஸ்தகத்தைப் படித்து ஆராய்ச்சி மனப்பான்மையில் இருக் கும் போது இவளோ எதிலும் ஈடுபடாத மண் டூகமாக இருந்தால் வாழ்க்கையில ரசனை உண் டாகாது. இரண்டு பேரும் கலந்து பேசி உரை யாடத்தக்கதான அறிவு நிலை வளர்ச்சியடைந் தவர்களாக இருப்பது அவசியம். ஆனபடியி னால், ஓரளவு கல்வி நிலையிலும் ஒத்துப் போகக் கூடியதாக இருக்க பார்த்துக் கொள்ள வேண் டும். நான் தியாகம் செய்கிறேன் என்று சொல்லி படிப்பறியாத ஒருவனையோ, படிப் பறியாத ஒருத்தியையோ விவாகம் செய்து விட்டு பின்பு மனஸ்தாபப் பட்டுக் கொண்டு இருக்கக் கூடாது.

9) தன்னுடைய மனைவி தலையாட்டி பொம்மையாக, தான் சொல்வதற்கெல்லாம் ஆமாம் சாமி போடுகிறவளாக இருக்க வேண் டும் என்று எண்ணக் கூடாது. ஆவிக்கடுத்தபடி ஆத்துமாவானது ஆவிக்கு தாழ்ந்ததாய் இருந்த போதிலும் அது சுயாதீனமுள்ளதாக வளர்ச்சியடைந்ததாக இருக்க வேண்டும். சில ருக்கு சரீரம் வயதடையும் ஆனால், அறிவு வயது உண்டாயிருக்காது. முப்பது வயதுடை யவர்களுக்கு 15 வயதுக்குரிய சிறுபிள்ளைத் தனம் இருந்தால் இது தவிர்க்கப்பட வேண் டும். சரீரத்தைப் போல மனநிலை வளர்ச்சிய டைந்தவர்களாக இருக்க வேண்டும். அதோடு கூட கொஞ்சம் நகைச்சுவையும் இருக்கிறது நல்லது. அதிகமாக கிண்டல் கேலி பண்ணி பரியாசம் பண்ணுகிற சுபாவம் தகாது. வாழ்க்கை ருசி உண்டாக நகைச்சுவை உணர்வு இருவர் மட்டிலும் இருப்பது நல்லது. அது மிகையாகி விடாதபடி கட்டுப்பாட்டிற்குள் இருக்க வேண்டும்.

## 10) குணநலன்கள் :

பொதுவாக அநேக பெண்கள் திருமணத் துக்கு முன்பு பக்திபரவசமுள்ளவர்கள் போல காணப்படுவார்கள். திருமணத்துக்குப் பின்பு அவர்கள் குணநலன்கள் தெரியும், ஒரு மாட்டை பிடித்தால் அது நல்ல மாடா, கள்ள மாடா என்று அறிய ஒரு மாதம் ஆகும். அப் படியே ஒரு பெண்ணைக் கட்டினால் அவளுடைய உண்மையான சுபாவம் அறிய ஒரு வருஷம் ஆகும். ஆனபடியினால் நீதி 31:10-31 உள்ள படி குணசாலியான, சுறுசுறுப்பான, உண்மை யுள்ள, வீட்டுக் காரியத்தில் கவனமுள்ள ஞானம் விளங்க தன் வாயைத் திறக்கிற, தன் னுடைய கணவனுடைய மதிப்பை சமுதாயத் தில் உயர்த்துகிற, தன்னுடைய பிள்ளைகளை நல்லொழுக்கமுள்ளவர்களாக வளர்க்கிற குண சாலியான தாய்மார்களைப் பற்றி எழுதியிருக் கிறது இப்படிப்பட்டவர்களாக ஸ்திரீகள் காணப்பட வேண்டும். எனவே குண அழகைத் தேட வேண்டும். ஆண்களும் பெருந்தன்மையு டையவர்களாக விளங்க வேண்டும்.

## 11) வரதட்சணை (Dowry)

ஸ்ரீ தனத்தின் மூலமாக பணக்காரர்களாக வேண்டும், வசதி உண்டு பண்ண வேண்டுமென் கிற இழிவான ஒரு ஆசை இச்சை நிலவுகிற ஒரு காலத்திற்குள் நாம் இருக்கிறோம். இதை பயன்படுத்தி தரங்கெட்ட பெண்களை அதிக பணங் கொடுத்து யார் தலையிலாவது கட்டி வைக்கிற பழக்கம் சில இடங்களில் காணப்படு கிறது. இன்னும் சில இடங்களில் ஒரு பெண் ணைக் காட்டி இன்னொரு பெண்ணைத் தள்ளி விடுகிற வேலையுமுண்டு. லாபான் யாக்கோபை ஏமாற்றினது போல. ஆனபடியினால், "பாத்தி ரம் அறிந்து பிச்சை எடு, கோத்திரம் அறிந்து பெண் எடு" என்று சொல்வார்கள் பழமொழி யாக. ஆனால் கிறிஸ்துவுக்குள் தேவனுடைய பிள்ளைகளும் பெண்ணுக்காகத்தான் பெண்ணை விவாகம் பண்ண வேண்டுமேயல்லாமல் பணத் திற்காக அல்ல. அவளுக்காகத்தான் வாழ்க் கைத் துணையாகிறேனேயன்றி அவளுடைய சொத்துக்காக அல்ல என்கிற மனநிலையுடைய வர்களாக காணப்பட வேண்டும். ஆனால் சுதந்திரத்தை விட்டுவிடக் கூடாது.

12) சரீர வளர்ச்சி, மன வளர்ச்சி, தோற்றம் ஓரளவு ஜோடிப் பொருத்தம் இருப் பது அவசியம், நல்லது. திருமணம் என்று சொல்லப்படுவது இருமனங்கள் இணைவதே திருமணமாகும். ஆனாலும் ஓரளவு சரீர ஒப்பு

'தேவன் ஒருவரே..'
THERE IS ONE GOD...
Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

மையையும் கவனிக்க வேண்டும். பெண்ணைக் காட்டிலும் ஆண் கொஞ்சம் உருவமைப்பில் கூடுதலாக இருப்பதில் தவறில்லை. பெண் அப்படியே ஆணைக் காட்டிலும் சரீர அமைப்பில் பெரிதாக காணப்படுவது சரியாய் இருக்காது. மிருகங்கள், பறவைகள் கூட பெண்ணைக் காட்டிலும் ஆண் உருவத்திலேயும் எல்லாவற்றிலும் பெரிதாகத் தோன்றுகிறதை நாம் பார்க்கிறோம். இயற்கையின் அமைப்பே அப்படி இருக்கிறது. கடைசியாக, அவரவர் பெண்ணும் தான தெரிந்து கொள்ளப் போகிற, தான் மணக்கப் போகிற கணவனைக் குறித்து, என் பிள்ளைகளுக்கு தகப்பனாயிருக்க இவர் லாயக்கானவரா என்று சிந்திக்க வேண்டும். வாலிபர்கள் தான் விவாகம் பண்ணப் போகிற பெண்ணைக் குறித்து என்னுடைய பிள்ளைகளுக்குத் தாயாக இருக்க இவள் தகுதியானவளா என்று நினைத்துப் பார்க்க வேண்டும். இதோடு கூட தேவ தயவை அதிகமாகத் தேட வேண்டும். கர்த்தர் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்துவார் வருகிறது திருமணம்.

(தொடரும்)

"ஆதியிலே மனுஷரை உண்டாக்கினவர் அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார்"

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

   24 (செவ்வாய்) செப்டம்பர் 1991
   23 (புதன்) அக்டோபர் 1991
   22 (வெள்ளி) நவம்பர் 1991

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி.

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15/- (பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

6. புதிய எருசலேம் செய்திமலர் தேவைப்படுவோர் ரூ. 19/- (தனிப்பிரதி ரூ. 15/- தபால் செலவு ரூ. 4/-) அனுப்பி உடனே பெற்றுக் கொள்ளவும்.

   வெளிநாடு: ரூ. 50/- சில பிரதிகளே உள்ளன. பிரதிக்கு முந்துங்கள்.

Edited Printed and Published by Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at ; PESCA Art Printers, 19, Thiruvalluvar St , Ms-29 Ph : 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 94 - Oct. 1991



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 · 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப்.1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள். உலகம் சீர்கெட்டு கொண்டு போகிறது. துஷ்டத்தனங்கள அதிகரித்துக் கொண்டிருக்கின்றன. மனிதனுடைய இருதயம், அவனுடைய சிந்தனை களெல்லாம் சிறு வயது முதற் கொண்டு பொல்லாதவைகளாக இருக்கின்றன. மேலும் அறிவில்லாத மக்களைத் தூண்டிவிட்டு மடமைத்தனத்துக்குள்ளாக்கி அவர் களை பலாத்காரத்துக்குள் வழி நடத்துகிற துஷ்ட மனிதர்கள் அதிகமாக உலகத்திலே பெருகியிருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும் மக்கள் கூட்டம் கூட்டமாக அல்லது வகுப்பு, ஜாதி, மதம் இவ்விதமான கூட்டங்களாக குடித்து, கும்மாளமிட்டு, கூத்தாடி, தங்கள் துர்க்கிரியைகளிலே மகிழ்கிற காலமாக இருக்கிறது. சாத்தான் மிகத் தீவிரமாய் உலகத்தை கெடுத்து தீமைக்குள்ளாக்கிக் கொண்டிருக்கிறான். நியாயத்தீர்ப்பு நெருங்கிக் கொண்டிருக்கிறது. இவ்விதமாய் உலகம் கெட்டுக் கொண் டிருக்கும் போது தேவனுடைய பிள்ளைகள் தனித்து வாழவும். அவர்களைப்பற்றி ராஜாவே. உம்முடைய தேசங்களில் ஒருவிதமான ஜனங்கள் பரவியிருக்கிறார்கள். அவர்களுடைய பழக்க வழக்கங்கள் மற்ற ஜனங்களுடைய பழக்க வழக்கங்களுக்கு விகற்பமாயிருக்கிறது என்று இந்த ஆமான் சொன்னது போல தேவ ஜனங்கள் தனித்து வாழ வேண்டும் உங்களுடைய வாழ்க்கையின் தரமானது மற்றவர்களைக் காட்டிலும் விசேஷித்ததாய், ஒருமைப்பாடுள்ளதாய், உண்மையுள்ளதாய், தேவ வல்லமையினால் நிரப்பப்பட்ட தெய்வீக ஜனமாய் விளங்க வேண்டியது அவசியம். இவ்விதமாய் வாழுகிறது தேவ ஜனங்களுடைய இலட்சணமாயிருக்கிறது. உலகம் முழுவதும் கெட்டு போன போதிலும் நாம் கலக்கமடையவும், பதஸ்டமடையவும் வேண்டிய தேவையில்லை. நாம் கர்த்தரை ஸ்தோத்தரித்து வேகமாக முன்னேறுவோமாக! கூட்டம் கூட்டமாய் கெட்டு போகிற மக்களைக் கண்டு நாம் மலைத்து நிற்காமல் நாம் தொடர்ந்து ஊழியம் செய்வோமாக. கிறிஸ்து இயேசுவை அறிவிப்போமாக. கூட்டம் கூட்டமாய் மக்கள் அழிந்து போகிறதை நாம் பார்த்தாலும், மக்கள் இரட் சிக்கப்படுவது தனித்தனியேதான். ஆனபடியினால் நாம் தீவிரமாக நாம செய்யக் கூடியதை செய்து கொண்டேயிருப்போம் தேவன் தம்முடைய சித்தத்தை நிறை வேற்றி முடிப்பார்! கர்த்தருடைய ஜனங்கள் ஒரே அணியில் அணி வகுத்து நிற்க வேண்டிய காலம் நெருங்கியிருக்கிறது. இப்படி செய்து தேவ சித்தத்தை நிறை வேற்றி முடிப்போமாக! கர்த்தருடைய கிருபை நம் எல்லார் மேலும் உண்டா யிருக்கும்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# சாத்தானேடு சமரச உடன்படிக்கை செய்யாதீர்கள்

இந்த நாட்களிலே, சமரச இணக்கம், இணங்கிப் போகுதல் அல்லது விட்டுக் கொடுத்தல் அல்லது சமரச உடன்பாடு செய்து கொள்ளுதல் சகஜமான உலக வாழ்க்கையில் காணப்படுகிறது. அரசியலில் தொழிலாளர் உரிமைப் போராட்டங்களில் சமரச இணக்கம் பொதுவாக பயன்படுத்தப்படுகிறது. தொழிலாளர்கள் ஊதிய உயர்வு கேட்டு போராட்டம் நடத்துவார்கள். உதாரணமாக, தினக்கூலி ரூ. 1/- கூட்டிக் கொடுக்கும்படி அவர்கள் கேட்டால் முதலாளி அல்லது நிர்வாகத்திலுள்ள அதிகாரிகள் 20 காசுகள் கூடுதலாகக் கொடுப்போம் என்று சொல்லுவார்கள். இருதிறத்தாரிடம் தகராறு உண்டான பின்பு நடுவர்கள் சமரச உடன்படிக்கைக்கு வருமாறு வேண்டிக் கொண்டு தினக்கூலி 60 காசு உயர்வினை இருதிறத்தாரும் ஏற்றுக் கொள்வார்கள். இங்ஙனம் சமரச உடன்படிக்கை செய்து கொள்வது வழக்கம். இந்த சமரச உடன்பாடு இருதரப்பாருக்கும் மகிழ்ச்சி அளிக்காவிட்டாலும் அதுவே அச்சூழ்நிலைகளுக்கு ஏற்றது என்று ஏற்றுக் கொள்வார்கள். சமயத் துறையிலும், ஆவிக்குரிய வாழ்க்கையிலும் இந்த சமரச கொள்கையை பயன்படுத்த முடியுமா? உலகத்தோடுள்ள உறவில் நாம் சமரச இணக்கம் செய்ய முடியுமா? பாவத்தோடுள்ள வாழ்வில் இணக்கம் காண முடியுமா? சமரச இணக்கம் என்பதுசொல்அகராதியின்படி இருதிறத்தாரும் தங்கள் வழக்கினில் விட்டுக் கொடுத்து நடந்து கொள்வது "சமரசம் என்பது பொருளாகும். சமரச இணக்கத்தில் தன்னலத்தையும் தன் கொள்கையையும் விட்டுக்கொடுக்க வேண்டிய நிபந்தனை அடங்கி இருக்கிறது. கிறிஸ்தவர்களாகிய நாம் நம்முடைய கொள்கையை விட்டுக் கொடுக்க முடியுமா? ஒரு போதும் கூடாது. சமரச இணக்கத்தில் ஒருவன் தன்னிலையில் ஒரு பகுதியை விட்டுக் கொடுத்து சரணடையும் நிபந்தனை அடங்கி இருக்கிறது. நம்மைப் பொறுத்த வரையில் நம்முடைய எதிராளியாகிய சாத்தானேடும் அவனுடைய கூட்டத்தாரோடும் விட்டுக் கொடுத்து இணங்குவது என்ற பேச்சுக்கே இடமில்லை. சமரச இணக்கங்கள் நடந்து அதினால் தண்டிக்கப்பட்ட சம்பவங்களை வேதாகமத்தில் வாசிக்கிறோம்.

1) கானானியரை அழிக்கும்படிக்கு தேவன் யோசுவாவுக்குக் கட்டளையிட்டிருந்தார் (யோசு. 9:24) ஆயினும், கிபியோனின் குடிகள் யோசுவாவை தந்திரமாய் வஞ்சித்து அவனோடு உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அவர்கள் யோசுவாவுக்கு அடிமைகளானார்கள்.

2) தேவன் சவுலிடம், அமலேக்கையும் அவனுடைய உடமைகள் எல்லாவற்றையும் முற்றிலும் அழித்துப் போடும்படி கட்டளையிட்டிருந்தார். ஆயினும் சவுலோ, அமலேக்கின் ராஜாவாகிய ஆகாகையும் ஆடு மாடுகளில் முதல் தரமானவைகளையும், இரண்டாந்தரமானவைகளையும் தப்ப வைத்து விட்டு அதற்கு சாக்குப் போக்குச் சொன்னான். இதினிமித்தம் அவனுடைய ராஜ்யபாரம் அவனை விட்டு எடுபட்டது. இந்த நாட்களிலே கிறிஸ்தவர்கள் சமரச இணக்கங்களில் ஈடுபட்டுள்ளனர்.

1) நவீன கொள்கைக்காரர்களோடு சுவிசேஷ சமரச இணக்கம் இவர்கள் செய்து கொள்கிறார்கள்.

2) பாவத்தோடு இசைந்து வாழும் கிறிஸ்தவர்களும் அவ்விதமாக இணக்கம் செய்து கொள்கிறார்கள்.

3) உலகத்தோடு இணைந்து வாழும் கிறிஸ்தவர்கள் உலகத்தாரோடு சமரச இணக்கம் செய்து கொண்டு வாழ்கிறதைப் பார்க்கிறோம்.

இவைகளெல்லாம் வேத வசனத்துக்கும், தேவனுடைய கட்டளைக்கும் மாறுனவையாகும். வேதாகமத்தில், யாத்திராகமம் புஸ்தகத்தில் பார்வோன் இஸ்ரவேல் ஜனங்களோடு சமரச இணக்கம் செய்த சம்பவங்கள் எழுதப்பட்டிருக்கிறது. அவைகளைக் கவனிப்போமாக.

1) இஸ்ரவேலர்கள் தேவனுக்கு ஆராதனை செய்யும்படி தாங்கள் மூன்று நாள் பிரயாண தூரம் போய் தாங்கள் கர்த்தருக்கு பலியிடும்படி கேட்டுக் கொண்டார்கள் (யாத். 5:3). கட்டளை மிகவும் தெளிவாக இருக்கிறது. வனாந்தரத்தில் எனக்கு ஆராதனை செய்ய என் ஜனங்களை அனுப்பி விட வேண்டும் (யாத்; 7:16). தேவனுடைய கட்டளைகளும், திட்டங்களும் தெளிவாய் இருக்கின்றன. கட்டளைகளுக்கு முற்றிலும் கீழ்ப்படிய வேண்டும் என்று தேவன் விரும்புகிறார் தேவனுடைய கர்த்தருடைய சித்தத்தினை பகுதி அளவாக நிறைவேற்றுவதாய் இருந்தது பார்வோனுடையதிட்டம். மூன்று நாள் பிரயாணத்தின் வாயிலாக இஸ்ரவேலர்கள் எகிப்து நாட்டிலிருந்து பிரிக்கப்பட வேண்டுமென்பது தேவனுடைய கட்டளையும், திட்டத் தெளிவான பகுதியாகும். ஏன் மூன்று நாட்கள்? கிறிஸ்துவைப்போல் மரணத்திலின்றும், உலகத்தினின்றும் மூன்று நாட்கள் இடைவெளியில் பிரிக்கப்பட்டு உயிர்த்தெழுதலில் நிலத்தின் மீது வாழும் வாழ்க்கை ஒரு ஓவியமாக இங்கு கூறப்பட்டுள்ளது. இந்நாளில் தேவன் பிரிந்துரை வாழ்க்கைக்கு அதிக ஒழுங்கினை ஏற்படுத்தியுள்ளார். ஆழத்தில் தள்ளிக் கொண்டு போங்கள் (லூக். 5:4). உலகத்தை விட்டும், பாவத்துக்குரிய ஸ்தலத்தை விட்டும், பிரிந்து எவ்வளவு தூரம் தள்ளிப் போக வேண்டுமோ அவ்வளவு தூரமாக விசுவாசிகள் தள்ளிப் போக வேண்டும். அவ்வண்ணமே, ராஜ்யத்தினுடைய, அவருடைய மக்கள் உலகத்தோ இணைந்து ஆவிக்குரிய இழப்பினை அடையாதபடி கர்த்தரோடு மிக நெருக்கமாக தங்கி இருக்கிறார்கள். சமரச இணக்கத்திற்கு எச்சரிக்கையாயிருங்கள். தேவனுடைய வல்லமையின் ஆழத்திற்குள்ளும், தேவனுடைய எல்லையற்ற அன்பின் ஆழத்திற்குள்ளும், அவருடைய விசுவாசத்தின் ஆழத்திற்குள்ளும் நம்முடைய வாழ்க்கைப்படகை செலுத்துவோமாக.

## 1 வது சமரச இணக்கம் (யாத். 8:25)

எகிப்து நாட்டில் இஸ்ரவேலர்கள் தங்கள் தேவனுடைய கர்த்தருக்கு பலி செலுத்தும்படி பார்வோன் எகிப்திலே தானே பலி செலுத்தும்படியாக அனுமதி கொடுத்தான் (யாத்.8:25). எகிப்திலே இஸ்ரவேலர்கள் பலியிடமுடியாது. இஸ்ரவேலர்கள் தங்கள் தேவனுக்கு ஆடுமாடுகளிலிருந்து பலி மிருகத்தைத் தெரிந்தெடுத்து பலியிட வேண்டும் ஆனால் எகிப்தியருக்கு ஆடு, மாடுகள் புனித மிருகங்களாகும். அவைகளை, அவர்கள் அப்படி எகிப்தில் பலியிட்டால் நிச்சயமாக அவர்கள் கல்லெறிவார்கள், பெரிய கலகமுண்டாகும். மோசேயானவர், எவ்விதமான சமரச ஏற்பாட்டையும் ஏற்றுக் கொள்ளவில்லை. 100% அவர் தேவனுக்குக் கீழ்ப்படியவே விரும்பினார். அரசியல் முறைமையின்படி இஸ்ரவேலர்கள் எகிப்து நாட்டில் அடிமைகளாக இருந்தார்கள். ஆயினும், சமயத் துறையில் தேவனை ஆராதிக்கிறதில் அவர்களுக்கு விடுதலை வேண்டும். முழு நிறைவான விடுதலை வேண்டும். எகிப்து நாட்டில் இஸ்ரவேலர்கள் பலியிட்டிருந்தால், எகிப்து மக்கள் நம்மிடையே எந்த வேறுபாடுகளையும் நாம் காணவில்லை. நம்முடைய மார்க்கங்கள் இரண்டும் ஒன்றுதான். நம்முடைய குறிக்கோளும், நோக்கங்களும் ஒன்றுதான் என்று மெச்சிக் கொண்டிருக்கவும் செய்யலாம். இந்நாளில் பொதுவாக மக்கள், நாம் உண்மையாயிருந்தால் எம்மதமும் சம்மதமே, அவைகள் நன்மையானவற்றையே போதிக்கின்றன; நாம் இணங்கிப் போக வேண்டுமென்று பிதற்றுகிறவர்களாக இருக்கிறார்கள். பின்னல் மக்கள் உலகத்தோடும் இசைந்து வாழும் வாழ்க்கையினை விரும்புகிறார்கள். கடவுளும் பக்திமார்க்கமும், அவைகளோடு கொஞ்சம், உலகமும் பாவமும் சேர்ந்தே அவர்களது வாழ்க்கை இருக்கிறது. சாத்தானும், இணங்கி வாழும் சத்தற்ற பக்தி மார்க்கததையே விரும்புகிறான். இணங்கி வாழும் இடைத்தரமான கிறிஸ்தவ மார்க்கத்தினின்று விலகி அப்பால் ஆழமான கிறிஸ்த வாழ்க்கைக்கு நம்முடைய படகுகளை தள்ளிக் கொண்டு செல்வோமாக.

## 2. பார்வோன் வழங்கிய இரண்டாவது சமரச இணக்கம் (யாத். 8:28)

அதிக தூரமாய்ப் போக வேண்டாம். சரி, வனாந்தரத்தில் மூன்று நாள் பிரயாண தூரம் போய் ஆராதனை செய்ய வேண்டுமென்று அவசியமல்ல. தேசத்தின் பக்கத்திலே தானே ஆராதனை செய்யுங்கள். ரொம்ப தூரம் அவர்கள்

போகிறதினால் அங்கிருந்து தப்பி கானானுக்குப் போய் விடும்படியாக ஏற்படும். ஆகையால் அவன் இவ்விதமாகச் சொன்னான். மோசேயோ உடனே, அந்த சமரச ஆலோசனையை நிராகரித்து விட்டார். மனந்திரும்பி, குணப்பட்ட பிறகு இரட்சிப்பின் அனுபவத்தின் ஆழத்திற்குள் தேவனுடைய பிள்ளைகள் செல்ல வேண்டும். இடைநிலையான இணங்கி வாழும் வாழ்க்கை இருக்கக் கூடாது. கிறிஸ்துவுக்குள் ஞானஸ்நானம் பெற்று உறுதியான சாட்சியின் வாழ்க்கையை மேற் கொள்ள வேண்டும். இடை நடுவே நம்மையும் உலகத்தையும் இணைக்கும் எல்லாப் பாவங்களையும், பழைய சிநேகிதர்களையும் விட்டுப் பிரிய வேண்டும். உலகத்திற்குள் மறுபடியும் செல்ல முடியாத அளவு நாம் தூரமாகச் செல்ல வேண்டும். நீங்கள் மனந்திரும்பிக் குணப்படும் பொழுது, கூடுமான வரை சாட்சியின் வாழ்க்கை வாழ வேண்டும். இயேசு கிறிஸ்துவின் பின்னே சென்றவன், மீண்டும் உலகத்திற்கு திரும்பினால் அது பயங்கரமானது. எல்லைக் கோட்டின் அருகில் நிற்கிற, அல்லது இரு தேசத்தின் எல்லையில் நிற்கிற கிறிஸ்தவன் மீது சாத்தான் மிகவும் பிரியமாயிருக்கிறான். உங்களுடைய நிலை எல்லைக் கோட்டின் ஓரமாக இருந்தால் கவனம். சாத்தானைக் கடிந்து கொண்டு உலகத்தோடு இணங்கி வாழும் வாழ்க்கை ஒழித்துவிட்டு இரட்சிப்பின் ஆழமான அனுபவத்திற்குள் உங்களுடைய வாழ்க்கையைக் கடத்திச் செல்லுங்கள். எல்லைக் கோட்டில் நிற்கிற கிறிஸ்தவர்களைக் குறித்து தேவனுடைய எதிர் வினைவு யாது? அவர்கள் அனலுமல்ல, குளிருமல்ல ஆகவே வெதுவெதுப்பாயிருக்கிறார்கள். அவர்களைத் தன் வாயினின்று வாந்திப் பண்ணிப் போடுவோம் என்கிறார் (வெளி. 3:15,16).

### 3. பார்வோன் வழங்கிய மூன்றாவது சமரச இணக்கம் (யாத். 10:11)

புருஷர்களாகிய நீங்கள் மாத்திரம் போய் கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள் (யாத். 10:8-11). இஸ்ரவேலர்கள் புருஷர்கள் மாத்திரம் மூன்று நாள் பிரயாணப்பட்டு வனாந்தரத்திற்குப் பலியிடச் சென்றார்களாகில் அவர்கள் சீக்கிரமாக தங்கள் மனைவி மக்களிடம் அடிமை வாழ்க்கைக்குத் திரும்பி விடுவார்கள் என்பதை சாத்தான் நன்றாக அறிந்திருந்தான். பார்வோனுக்கும் சாத்தானுக்கும் இது தெரியும். விடுதிரும்பி மறுபடியும் சாத்தானுக்கு ஊழியஞ் செய்வீர்களாகில் சாத்தான் உங்களை கர்த்தருடைய திருச்சபைக்குச் செல்ல இடங் கொடுப்பான். அதாவது, வாரத்தில் ஒரு மணி நேரம் கர்த்தருக்கு செலவிட்டு விட்டு மீதமுள்ள 167 மணி நேரத்தினை உங்களுக்கும் சாத்தானுக்கும் குடும்பத்துக்கும் செலவிடுவீர்களானால், அவன் ஏற்றுக் கொள்வான். உலகத்துக்கும் செலவிட்டீர்களானால் ரொம்ப சந்தோஷமாயிருப்பான். இது சாத்தானின் தந்திரமான சமரச ஆலோசனை. பெற்றோர்கள் தேவனுக்கு ஊழியஞ் செய்ய விட்டுவிடுவான். ஆயினும் பிள்ளைகளை அவர்களோடு சேரக் கூடாதவாறு தடை செய்வான். பிள்ளைகள் கர்த்தர் நமக்கு அருளியுள்ள விலையேறப் பெற்ற சுதந்திரமாகும். அவர்களை சிருஷ்டி கர்த்தாவாகிய தேவனுக்கு ஒப்புக் கொடுத்து பிரதிஷ்டை செய்ய வேண்டும். புருஷர்கள் வனாந்தரத்தில், மனைவிகளும்,மக்களும் எகிப்து நாட்டில், இது எத்தனை பெரிய முறைகேடு ஒருவன் தேவனுக்கு ஊழியஞ் செய்கிறேனென்று சொல்கிறான், மனைவி இரட்சிக்கப்படவில்லை, பிள்ளை இரட்சிக்கப்படவில்லை என்ன கேவலமான விஷயம். பெற்றோர்களே, நம்முடைய பிள்ளைகள் இரட்சிக்கப்பட்டால் மட்டும் போதாது அவர்கள் எகிப்தை விட்டே அதாவது அதன் எல்லையை விட்டே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் பிள்ளைகளோடு சேர்ந்து கொள்ள வேண்டும். திருச்சபைக்கோ அல்லது ஜெபக் கூட்டத்துக்கோ ஒரு பிரதிநிதியை மாத்திரம் அனுப்புவதற்காக உள்ள உலகத்தோடு சேர்ந்து வாழும் வாழ்க்கையைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள். முழுக்குடும்பமாக சபை ஆராதனைக்கும் ஜெபக் கூட்டத்துக்கும் செல்லுங்கள். ஆண்களும் பெண்களும் பெரியோரும், சிறியோருமாகிய பிள்ளைகளும் அனைவரும் போக வேண்டும் எல்லாக் கூட்டத்துக்கும் என்று மோசே சொன்னார்.

### 4. பார்வோன் வழங்கிய நான்காவது சமரச இணக்கம் (யாத். 10:24)

நீங்கள் போய் கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள் உங்கள் ஆடுகளும், உங்கள் மாடுகள் மாத்திரம் நிறுத்தப்பட வேண்டும். இந்த அற்புதமான சலுகையை மோசே ஏற்றுக்

கொண்டாரா? எல்லாரும் போகலாம் மூன்று நாள் பிரயாணம் பண்ணி தேவன் நியமித்த இடத்திற்கு ஆராதனை செய்வதற்கு இஸ்ரவேலர் அனைவரும் போகலாம் மோசே இந்த ஆலோசனையை ஏற்றுக் கொண்டாரா? இல்லை மோசே பார்வோனுடைய சலுகையை நிராகரித்து விட்டார். இது முழு நிறைவான கீழ்ப்படிதல் அல்ல என்று தெரிவித்தார், அரை குறையான, கீழ்ப்படிதல் விட்டுக் கொடுத்து இணங்குகிற சமரச உடன்பாடேயாகும். மிருகங்கள் இல்லாமல்; எப்படி பலியிட முடியும்; மிகவும் கெட்டிக்கார ஆலோசனை போல அது தோன்றினாலும் தேவன் விரும்புகிறவண்ணம் அவருக்கு நம்முடைய உடைமைகளை காணிக்கையாக செலுத்தாமல் நாம் அவருக்கு ஆராதனை செய்வது எப்படி? ஒரு மனிதன் ஞானஸ்நானம் பெறுவதற்கு முன்னால் உலகத்திற்காக எல்லாவற்றையும் செய்தான். இப்பொழுது அவன் தேவனுக்கு பலியிட வேண்டும். ஆராதனை செய்ய வேண்டும். சாத்தான் நாம் தேவனை ஏற்றுக் கொள்கிறதை முதலாவது அங்கீகரிக்கிறதில்லை, பின்பு அப்படி ஏற்றுக் கொண்டாலும், நாம் தேவனுக்கு முழுமையான ஒரு ஆராதனை செய்யாதபடி நம்மைத் தடுப்பான். அதாவது, நம்மை வெறுங்கையாக்கி, நாம் தேவனுக்கு நம்முடையதில் எடுத்து ஆராதனை செய்யாதபடி, எடுத்துச் செலுத்த முடியாதபடி தடை செய்வான். எல்லாவற்றிற்கும் இயேசுவே பாத்திரமானவர். பலிகளுடன் நாம் சென்று தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும். நாங்கள் எல்லோரும், எங்களுடைய எல்லாம் சென்று தேவனுக்கு நாங்கள் ஆராதனை செய்வோம். நாங்கள் நிபந்தனையின்றி, நாங்களும், எங்களுக்குள்ள எல்லாவற்றையும், எங்கள் மனைவிகள், பிள்ளைகள், சிறியோர், பெரியோர், உடைமைகள் அனைத்தோடுங்கூட நாங்கள் போவோம் என்று மோசே சொன்னார். எல்லாம் கர்த்தருக்கே சொந்தம். ஆனபடியால் முழுமையாக கர்த்தருக்கே நாம் நம்மை சமர்ப்பிக்க வேண்டும். இந்நாட்களில் அநேக கிறிஸ்தவர்கள் சமரச இணக்கம் செய்பவர்களாக காணப்படுகிறார்கள் மிகவும் தந்திரமான, கிறிஸ்தவ ஊழியம், ஜீவியம் செய்கிறார்கள். சாத்தானோடும் அவனுடைய கூட்டத்தோடும் சமரச ஆலோசனை செய்து கொள்கிறார்கள். அதாவது, சாத்தானுடைய சமரச ஆலோசனையிலுள்ள தந்திரங்களை இவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள்.

1. அவன் இஸ்ரவேலரை எகிப்து நாட்டிலேயே வைக்கும்படி வகை தேடினான்.

2. அவர்களை எகிப்து நாட்டின் அண்மையில் வைத்துக் கொள்ள வகை தேடினான்.

3. அவர்களை, அவர்களுடைய குடும்பத்தை பிரிக்க வகை தேடினான்.

4. அவர்களை வெறுங்கையோடு கர்த்தருக்கு ஊழியஞ் செய்வதற்கு, அதாவது மெய்யான ஊழியமோ ஆராதனையோ செய்யாதபடி ஆற்றல் இல்லாதவர்களாக வெறுமையாய் அனுப்பிவிட அவன் விரும்பினான்.

ஆயினும் மோசேயானவர் இந்த நான்கு ஆலோசனைகளையும் ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார். அவர் தேவனுக்காக நூறு சதவீதம் கீழ்ப்படிதல் உடையவராக நின்றார். அதன் விளைவாக முதலாவது பஸ்கா இரவினிலே எகிப்தின் தலைப்பிள்ளைகள் சங்காரம் நடைபெற்றது. தேவனுடைய வல்லமையோடுகூட அவர்கள் எல்லோரும் பிரயாணப்பட்டு மூன்று நாள் பிரயாணப்பட்டுப் போய் கர்த்தர் குறித்த இடத்திலே ஆராதனை செய்தார்கள். பரிசுத்தவான்கள் குவைப்பட்ட பொழுது தங்களுடைய முந்திய வாழ்க்கைக்குரிய தொடர்பை முற்றிலும் அறுத்துவிட்டார்கள். கிறிஸ்துவுக்கான மெய்யான ஊழியத்திலே, ஜீவியத்திலே இவ்வுலகத்திலின்று நாம் பிரிந்து வாழ வேண்டியது மிகவும் அவசியம்.

எகிப்தில் இஸ்ரவேலர்கள் இருந்தால், இரட்சிப்பு ஒரு தோல்வியாக இருந்திருக்கும். ஒரு கிறிஸ்தவன் உலகத்தோடு இணங்கிவாழக் கூடாது. பாவத்தோடு இணங்கி வாழக் கூடாது. சாத்தானோடு சமரசம் செய்யக் கூடாது. சாத்தானுடைய மக்களோடு சமரசம் செய்யக் கூடாது. அப்படியே கள்ள உபதேசத்தாரோடு ஐக்கியம் வைத்துக் கொள்ளக் கூடாது, அப்படி செய்வானென்றால் தெய்வீக தரிசனத்தையும், உபதேசத்தையும், இழந்தவனாவான். கர்த்தருக்குப் பிரியமாக ஆராதனை செய்ய, பயத்தோடும் பக்தியோடும் அவருக்கு ஆராதனை செய்ய நாம் ஜாக்கிரதையாயிருப்போமாக. சாத்தானோடும் அவனுடைய ஜனங்களோடும் சமரசம் செய்து கொள்ளாதே.

# இந்து மதம்

(தொடர்ச்சி)

## விஷ்ணுவின் தசாவதாரங்கள்

### 8. கிருஷ்ணவதாரம் :

பூர்வகாலத்தில் சத்திரியர் முதலானவர்களைத் தாங்கி சுமக்கும் பூமிதேவியின் புலம்பலை மாற்றும் பொருட்டு, கிருஷ்ணுவானவர் துவாராகையிலே கிருஷ்ணனாய் அவதரித்து நாடோறும் கிரமமாக சத்திரியரையும், அசுரரையும் கொலை செய்தும் யௌவன ஸ்திரீகளை வசப்படுத்தி அவர்களுடனே லீலாவினோதம் செய்தும், போகித்தும் மன திருப்தியடைந்தும் அவர்கள்வயிற்றில் ஜெனித்த புத்திரிகளோடும் மற்றும் பலரோடும் மோகக் கிரியைகளை நடப்பித்து, மதுபானம் அருந்தி போகித்து, சுகித்து அவர்கள் வயிற்றில் உதித்த புத்திர புத்திரிகளுடன் மற்றவர்களுடனும் பிரபாசகேத்திரை என்னும் இடத்தைச் சேர்ந்து மதுவெறியால் நிறைந்து ஒருவரையொருவர் அறியாமல் போர் புரிந்து அவர்களில் நாலைந்து பேரைத் தவிர மற்ற யாவரையும் கொன்று, தம் குருவானவர் ராயன்கோஷ் என்பவரின் மனைவி ராதை என்பவளைக் களவாய்க் கொண்டுபோய் அவளுடன் காட்டில் கூடி புணர்ந்து விருந்தாவனத்தில் பல இடைச்சியரை வசப்படுத்தி ஆலிங்கனம் செய்து, வடமதுரையில் ராஜனாக இருந்து அங்கிருந்து பதினாயிரம் பெண்களைத் திருடி இடைவிடாது காமலீலை புரிந்தும், அதன்பின் தன் மாமன் கஞ்சனைக் கொல்லப் போகையில் ஒரு வண்ணாவிடத்துக்குப் போய் நிர்வாணமாய் நின்று வஸ்திரங் கேட்டு அவன் இல்லையென்று சொன்னதினிமித்தம் அவனைக் கொன்று, வஸ்திரங்களை எடுத்து அணிந்து கொண்டு ராஜ அவையில் புகுந்து கஞ்சன் முதலானவர்களைக் கொன்று, தான் மதுபானம் பண்ணி தன் புத்திரரையும், தோழன்மாரையும் மதுபானம் பண்ணுவித்ததும் தருமரைக் கொண்டு பொய் சொல்லுவித்தும் இன்னும் இப்படிப்பட்ட காரியங்களை செய்துவந்த பின்பு ஒரு ஆல விருட்சத்தில் ஏறி சயனித்திருக்கையில் வேடன் ஒருவன் ஏதோ ஒரு மிருகம் என்று எண்ணி குறிபார்த்து ஒரு அம்பைத் தொடுக்க அதுபட்டு கிருஷ்ணன் தேகத்தை விட்டு மரணமடைந்தான். அவனுடைய சரீரம் பட்சிகளால் கொத்துண்டும், நரிகளால் பிடுங்குண்டும் போயிற்று. எலும்புகளை சிலர் எடுத்துக் கொண்டுவந்து கொடுக்க இந்திர தோமணன் என்ற ராஜா ஜெகநாதன் என்ற ஒரு விக்ரகத்தைச் செய்து அதற்குள்ளே கிருஷ்ணனுடைய எலும்புகளை வைத்து நமஸ்கரித்தான். ஒரிஸ்ஸாவில் இந்த விக்ரக ஸ்தலம் மகாமுக்கியமாக இருக்கிறது. கோபாலன், கோபிநாதன், பலராமன் என்கிறவைகள் கிருஷ்ணனுடைய பெயர்களே.

### 9. புத்தவதாரம்

திவோதாதன் என்ற ஓர் அரசன் தன் ஏகாதி தவ பலத்தால சிவனிடத்தில் காசிநகர் முழுவதும் பெற்று ராஜ்ய பரிபாலனம் செய்து வருகையில் விஷ்ணு புத்தவதாரம் எடுத்து தந்திரமாய் அங்குள்ள சேவர்களுக்கு ஒரு நூதன சாஸ்திரத்தைக் கற்பித்து அந்த நகரத்தார் யாவரையும் சைவ சமயத்திலிருந்து விலக்கி புத்த சமயத்திற்குள்ளாக்கி திவோதாதனையும் காசிநகரையும் விட்டு அப்புறப்படுத்தி அந்த நகரத்தை சிவன் ஆளும்படி செய்தான் என்பதாம். இதுவுமல்லாமல் விஷ்ணு திரிபுரத்திலிருந்த ஒரு ராட்சசனுடைய கற்புள்ள ஸ்திரீயை கற்பழிக்க எத்தனையோ உபாயங்கள் தேடியும் கூடாமற் போனபடியால் விஷ்ணு அரசமரமாய் பிறந்து அந்த ஸ்திரீயை கற்பழித்ததாய் கதையுண்டு. இதன் காரணமாய் அரசமரமும் தெய்வமாயிற்று. இதற்கு பெண் சாதியாக இன்றும் வேப்பமரத்தை விவாகம் பண்ணி வைத்து அதைச் சுற்றி சுற்றி வந்து கும்பிடுவதைப் பார்க்கலாம். விஷ்ணு தன் புத்தவதாரத்தில் பூலோகத்தை சிருஷ்டித்து, காத்து நடத்தும் தேவனில்லை, தேவனால் சிருஷ்டிக்கப்பட்ட ஆத்துமாவும் இல்லை. தேவன் என்பதும் ஆத்துமாவென்பதும் பொய்யென்று மனுஷருக்குப் போதித்தது எவ்வளவு வஞ்சனையென்பதை யோசித்துப் பாருங்கள். இது மக்களை நரகத்துக்குக் கொண்டுபோகும் மார்க்கம். இக்கேடுபாடுகளை பாகவதம் பெருமகஸ் தவம் மாயவன் அங்கிசமுறைத்த அத்தியாயம் 35-ம் பாட்டிலும், சமஸ்கிருத பாகவத்திலும் புத்தமத சாஸ்திரங்களிலும் விவரமாய் அறியலாம்.

## 10. கற்கி அவதாரம்

விஷ்ணுவின் கற்கி அவதாரம் இனிமேல் உண்டாகுமென்றும் அது உண்டாகும்போது அவன் குதிரை ரூபமாய் வந்து கட்கத்தை ஒரு கையிலும் கேடகத்தை ஒரு கையிலும் ஏந்திக் கொண்டு துன்மார்க்கர்களை அழிப்பான். அப்பொழுது சூரியனும் சந்திரனும் இருளடைந்து நட்சத்திரங்கள் தாழவிழும். இன்னும் இந்த தசா அவதாரங்களின் விரிவை பாகவதம் நூல்களில் காண்க. அநேகர் விஷ்ணுவின் விக்ரகத்தை வீட்டில் வைத்து தொழுகிறார்கள். விஷ்ணுவுக்கென்று ஒரு திருவிழாவும் இல்லை. இவன் பார்வதியின் சாபத்தினால் பாம்பாய்ப் போனான் பன்றியினுடைய ரூபமெடுத்து ஒரு அக்கினி மலையின் அடியைக் கண்டுகொள்ள மாட்டாதே போனான். கபந்தரனுடைய பெண்சாதியோடும் கோபியா ஸ்திரிகளோடும் விபச்சாரம் பண்ணினதுமன்றி தன் பெண்சாதியை இராவணனாகிய இராட்சசன் கொண்டுபோக இடம் பண்ணினான். ஒரு விசை சிவனும் விஷ்ணுவும் பேசிக் கொண்டிருக்கையில் சமுத்திரத்தைக் கடையும்போது விஷ்ணு அவதரித்த பெண் ரூபத்தை மறுபடியும் அவதரிக்க சிவன் கேட்டுக் கொண்டபடி விஷ்ணு பெண் ரூபம் எடுக்க சிவன் அதைக் கண்டு மோகித்து விஷ்ணுவைத் துரத்த இரண்டு பேரும் ஓடி ஒரு ஐவிரலி மரத்தினண்டையில் குடித்து அவனோடு புணர்ந்தான். அப்போது அரிகர புத்திரன் என்கிற ஐயனார் பிறந்தான்.

### சிவன்

### சிவனின் மறு நாமங்கள்

சங்கரன், அந்தகாரி, அத்திவனையன், அரவணித்தோன், அரன், அளவாடி, அழலேந்தி, ஆலமர்கடவுள், ஈசானன், ஈச்சுவரன், ஈமத்தாடி, உமாபதி, உருத்திரன், எண்டோழன், ஏருருண்டோன், ஐமுகன், கங்காதவன், கங்காளன், கபாலி, கைலையாழி, கரியன், காமாரி, காலகாலன், கிரீசன், நக்கன், நந்தி, நீலகண்டன், பசுபதி, பாண்டுரங்கன், பித்தன், பூதநாதன், பேயுடனாடி, மழுவாழி, மூர்த்தி யானையுரித்தோன் இப்படி பற்பல பேர்களுண்டு.

இவனுடைய ரூபம் பலவிதமாய்ச் சொல்லப்பட்டது. இவன் சரீரம் சாம்பலால் பூசப்பட்டு கண்கள் மதுபானத்தினால் சிவந்திருக்கும். இவனுக்கு ஐந்து சிரசும் மூன்று கண்களுமாம். சடைகளைத் தரித்து சூலத்தைக் கையிலே பிடித்து சர்ப்பங்களை ஆபரணமாய்ப் பூண்டு கொண்டு, பிரம்ம கபாலத்தைக் கையில் ஏந்தி பிச்சை எடுத்துக் கொண்டு சுடுகாட்டிலே வாசம் பண்ணுகிறான். சில இடங்களில் இவனையும், இவன் பெண்சாதி பார்வதியும் ஒரே ரூபமாக பாதி ஆணும், பாதி பெண்ணுமாக செய்து வணங்கி வருகிறார்கள். இதுவுமன்றி, இவனுடைய கோசமாகிய அருவருக்கப்படத்தக்க லிங்கத்தை கோவிலுக்குள்ளும், புறம்பும் வைத்து பூசிக்கிறார்கள். இது சிவன் தாருகாவனத்து ரிஷி பத்தினிகளை கற்பழித்தபோது பிருங்கிரிஷி கொடுத்த சாபத்தினாலே சம்பவித்தது என்று சொல்கிறார்கள். பார்வதிக்கு 10 வாயும் பிள்ளையாருக்கு பெரிய வயிறுமாகையால் சிவன் பிச்சை எடுத்துப் போடக் கூடாமையினாலே பார்வதியைத் தன்னோடு ஒன்றாக சேர்த்துக் கொண்டு வேசிகள் வசிக்கிற சிவபுரத்திலே சிவன் வேசிகளோடு பழகி வேசிகளோடே வேசித்தனம் செய்கிறதை பார்வதி கண்டு பார்வதி காய்மகாரமாய் சிவனோடு சண்டை சச்சரவு செய்தாளாம். பஸ்மாசுரன் என்ற அசுரனுக்கு தொட்ட இடம் எரிந்து போக வரம் கொடுத்து பின்பு அவன் தன்னைத் துரத்த ஓடிப் போய், ஐரோலிகாயில் ஒழிந்து கொண்டானாம். இந்த சிவனுடைய வெள்ளிப் பர்வதம் என்கிற கைலாசத்தை இராட்சதனாகிய இராவணன் எடுத்து குலுக்கினானாம். ஒரு யுத்தம் நிமித்தமாக சிவன் திரிபுராரி என்ற பேரிட்டுக் கொண்டான். இந்த யுத்தத்தின் விவரமாவது:

பூமியை ஒரு ரதமாக்கி, பிரம்மாவை சாரதியாக்கி, வேதங்களை குதிரைகளாக்கி விஷ்ணுவை அம்பாக்கி மகாமேருவை வில்லாக்கி ஆதிசேடனை வில் நாணாக்கி அந்த இரதத்துக்கு தான் எஜமானாயிருந்து பாவதலைக் கொழுத்தி, திரிபுரத்தின் மேலே எறிந்து அந்த மூன்று கோட்டைகளையும் அதிலே இருந்த இராட்சதர்களையும் சிவன் சுட்டெரித்துப் போட்டானாம். பாணாசுரன் என்கிற ராட்சசன் மகா பலவானாயிருந்ததினால் அவனுக்கு சிவன் வாசற் காக்கிறவனாயிருந்தான் என்றும எழுதப

பட்டுள்ளது. சிவனுடைய காமக்களியாட்டங்களிலும் பெண்ணாய் மாறிய விஷ்ணுவைக் கண்டதும் மோகாக்கினைக்குட்பட்டு அவனை விரட்டி பிடித்து அவனோடு புணர்ந்ததினாலே ஐயனார் பிறந்ததாகவும் எழுதப்பட்டுள்ளது. இவர்களுடைய பிறப்பைக் குறித்து விவரமாய் சொல்லப்பட்டிருக்கிற பல நூல்கள் இருக்கின்றன.

விஷ்ணுவின் நாபி கலத்திலே தாமரை புஷ்பம் முளைத்து அந்த புஷ்பத்திலே நாலுமுக பிரம்மா பிறந்து சகலத்தையும் உண்டாக்கினான் என்று சொல்கிறார்கள். தத்துவத்தில் சொல்லப்பட்டிருக்கிற பராபரத்தில பரன் தோன்றி, பரத்தில் சிவன் தோன்றி சிவனில் சக்தி தோன்றி, சக்தியில் நாதம் தோன்றி, நாதத்தில்விந்து தோன்றி,விந்திலே சதாசிவன் தோன்றி, சதாசிவனில் மகேஸ்வரன் தோன்றி, மகேஸ்வரனில் ருத்திரன் தோன்றி, ருத்திரனில் விஷ்ணு தோன்றி, விஷ்ணுவில் பிர்மா தோன்றி, பிர்மாவில் ஆகாசம் தோன்றி, ஆகாசத்தில் வாயு தோன்றி, வாயுவில் அக்கினி தோன்றி, அக்கினியில் அப்பு தோன்றி, அப்புவில் பிரிதிவி தோன்றி, பிரிதிவியில் அன்னம் தோன்றி, அன்னத்தில் நாய், மிருகம், பட்சி, மச்சம்,தாவரம் முதலியவைகள் தோன்றினது என்றும் எழுதப்பட்டுள்ளது.

## விநாயகன்

இவன் சிவனுடைய மூத்த குமாரன் இவனுடைய பேர்களாவன. விநாயகன், அங்குபாசகன், அம்பிகை நாதன், அரிவருகன், ஆருவானன், இறைமகன், இசவதன், ஏகந்தன், ஏரம்பன், ஐங்கரன், ஒற்றைக் கொம்பன், கங்கை பெற்றோன் கணபதி, கரியமுகன், கரிமுகன், கவரியோன், காமன், மைத்துனன், நால்வாயன், பாசாங்குசன், முக்கண்ணன், முன்னோன், மூத்தோன், விக்னேஸ்வரன்.

விநாயகனுடைய விக்கிரகம் பெரிய வயிற்றையும், யானை முகத்தையும், நாலு கைகளையுமுடையது. சில சிவசமயக் கோவில்கள் எல்லாவிற்றிலும் பிள்ளையார் உருவம் இருக்கும். இவன் கெசமுகாசுரனை அழிக்க தொடர்ந்த போது அந்த இராட்சசன் ஒரு பெரிய எலியாச ருபமெடுத்து விநாயகனை எதிர்த்தான். அப்போது விநாயகன் அந்த எலியின் மேல் ஏறி அதைத் தன் வாகனமாக்கிக் கொண்டான். துர்க்கை விநாயகனை பிரசவித்தபோது சனியும் மற்ற தேவர்களும் பிள்ளையாரைக் காண வந்தார்களாம். சனியின் திருஷ்டிபட்டு பிள்ளையின் தலை சாம்பலாகப் போய்விட்டது, அப்போது பிர்மா வடபுறத்தை நோக்கிக் கொண்டிருக்கிற முதல் மிருகத்தினுடைய தலையை அறுத்துக் கொண்டு வந்து ஒட்டுவிக்கும்படி கற்பித்தான். சனி அப்படியே போய் வடபுறத்தை நோக்கி நின்று கொண்டிருந்த யானைத் தலையைக் கொண்டு வந்து இவனுக்கு பொருத்த இவனுக்கு உயிர் உண்டாயிற்று. இவனுக்கு யானை முகத்தோன் என்ற பெயருமுண்டு, இன்னும் பலவிதமாக இந்தக் கதையைச் சொல்கிறார்கள், இவனுக்கு கலியாணமே இல்லை, வருஷத்துக்கு ஒரு முறை பிள்ளையார் சதுர்த்தி கொண்டாடி களிமண் விக்கிரகம் செய்து வணங்கி மறுநாள் அந்த விக்கிரகத்தை தண்ணீரில் போடுவார்கள் ஆனால் வட இந்தியாவில் வித்தியாசமாக இருக்கிறது. பிள்ளையாருக்கு இரண்டு பெண்டாட்டியும் பிள்ளைகளுமுண்டு இவன் கலியாணம் முதலிய எல்லாக் காரியங்களுக்கும் கல்விக்கும் கர்த்தா என்று சொல்லிக் கொள்கிறார்கள், சுபகாரியங்களிலும் அவசுபகாரியங்களிலெல்லாம் இவனுக்கு பூசை பண்ணுகிறார்கள். ஒரு புஸ்தகத்தை எழுதி தொடங்கும் போதெல்லாம் இந்த விநாயகனுக்கு வணக்கம் செய்து இவனுக்கு ஸ்தோத்திரம் ஒரு பாட்டை எழுதுகிறார்கள். எல்லாக் காரியங்களிலும் முன்னே மிகவும் கொண்டாடி புகழுகிறார்கள். ஔவையார் எழுதிய நல்வழியில் காட்டியிருக்கிற கணபதி ஸ்தோத்திரமாவது.

பாலும் தெளிதேனும் பாகும்
பருப் பொறிவை,
நாலும் நலந்துனக்கு நான்
நதருவேன் கோலஞ் செய்
துங்க கரிமுகத்தூவியை நீ
எனக்கு சங்கத்தமிழ்
மூன்றும் தா,

பொதுவாக, புலவர்களுடைய மாறுபாட்டினால் கற்பனை குதிரையை ஓட்டி மக்களை வஞ்

சிக்கும்படியாக புனையப்பட்டதே இந்துமதத் தேவர்களின் விபரீதக் கதைகள்.

## 2. சுப்பிரமணியன்

இவன் சிவனுடைய இரண்டாம் குமாரன். இவன் யுத்த தேவன். இவன் பேர்களாவன:

முருகன், அரன்மகன், அருமீவக் காதலன், ஆறுமுகன், ஆசான், ஆண்டலைக்கொடியோன், கங்கை மைந்தன், கடம்பன், கந்தன், கலையுணர்வோன், கங்கையன், கார்த்திக்கேயன், குகன், குளகன், குறிவஞ்சன், குன்றழிந்தோன், கௌரிக்கந்தனன், சண்முகன், சரவணவோன், சிலம்பன், சுப்பிரமணியன், சுரேசன், சூற்பகைவன், செட்டி, செல்வன், குந்தன், சேய், சேவற்கொடியோன், தாரகச் சொற்றோன், தாருகாரி, தேவையாவிக்காந்தன், தேவசேனுபதி, பாவகி, பஞ்சையூர்தி, மரியோன் மகன், முருகு, வரைபகவிரிந்தோன், வள்ளிமணாளன், வாகுபேயன், விசாகன், வேலன், வேலிறைவன், வேள்

இவன் விக்கிரகம் ஆறு தலையும், பன்னிரண்டு கைகளையுமுடைய மஞ்சள் நிறமாய் இவனுடைய இரண்டு மனைவிகள் இருபக்கத்திலும் வைத்து செய்கிறார்கள். சூரோபகமன் என்னும் இராட்சசனை அழிக்க சிவன், சுப்பிரமணியை தன் நெற்றியிலிருந்து பிறப்பித்தான். சுப்பிரமணியன் பத்து நாள் அந்த இராட்சசனோடு யுத்தம் பண்ணி அவனை ஜெயிக்கக்கூடாமற் போனபோது வேலாயுதத்தை எடுத்து அவனை இரண்டாக வெட்டி அத்துண்டுகளுள் ஒன்றை மயிலாகவும், ஒன்றை சேவலாகவும் மாற்றி, மயிலை தனக்கு வாகனமாகவும் சேவலை தனக்குக் கொடியாகவும் ஆக்கிக்கொண்டான். இவனுக்கு தேவயானை, வள்ளி என்பவர்கள் மனைவிகள். இவனும் இவன் அண்ணன் பிள்ளையாரும் சிவனிடத்தில் கைலாசத்தில் தங்கி இருக்கிறார்கள். இவனுடைய பிரதான ஸ்தலங்களாக திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவிழங்குடி, திருநீரகம், திருத்தணி, திருச்செந்தூர், சோலைமலை, பழனி, கதிர்காமம் முதலியவைகள். பொதுவாக இந்தத் தேவர்களுடைய வாகனம் கொடிகள் இவைகளெல்லாம் அரக்கர்கள், இராட்சசர்களாகும். இந்தத் தேவர்கள் என்று சொல்கிறவர்களை கும்பிடுகிறவர்கள் அந்த இராட்சசர்களையும் கும்பிடுகிறார்கள்.

## 3. வயிரவன்

இவன் சிவனுடைய மூன்றும் குமாரன். இவனுக்கு வாகனம் நாய். இவனுடைய பேர்களாவன:

வயிரவன், ஆபதோந்திரன், ஆர்லி, ஏதாயன், கருங்குதிரையாள், காரி, குமரன், கேத்திரபாலன், ஞாலிசூர்தி, தண்டாயுதன், பச்சகந்தன், பவழ நெடுங்குளி, நெடுங்குஞ்சியோன், முத்தமிழ்குறியோன், முத்தலையோன், முக்தன், மூர்த்திகன், வடுகன், வித்தகன். தேவனுடைய அகந்தையையும், பிர்மாவுடைய அகந்தையையும் அடக்கும்படி சிவன், வைரவனை தன் சுவாசத்தில் இருந்து பிறப்பித்தான். இவன் பிர்மாவுடைய தலைகளில் ஒன்றைக் கிள்ளிப் போட்டான். இவன் உலகத்தை அழிக்கும்படிக்கு வருவான் என்று சிவபக்தர்கள் சொல்லி இவனுக்கு பலியிட்டுக் கொண்டு வருகிறார்கள்.

## 4. வீரபத்திரன்

சிவனுடைய நாலாம் குமாரன். இவனுடைய பெயர்களாவன:

வீரபத்திரன், உக்கிரன், உமை மகன், கரற்கினையோன், குரோதன், பிங்கத்தோன், சிம்புகளானேன், சிறுவிழி, சிறுத்தோன், சுடர் ஒளியோன், சுக்கலி, எருசேவன், பத்திரசேம்வன், யானைமுக வெஞ்சலைச் செல்வன்.

தக்கன் யாகம் செய்தபோது அவனது யாகத்தை அழிக்கும்படியாய் சிவன் தன் குமாரனாகிய விக்னேஸ்வரனையும், சுப்பிரமணியனையும், வைரவனையும் ஒவ்வொன்றாக அனுப்பிப் பார்த்தான். அப்படியும் அதை அழிக்க முடியாமல், விக்னேஸ்வரன் போனான். இவன் வருகிறதை இவன் பாட்டனாகிய தக்கன் கேட்டு இவன் போஜனப் பிரியனாகிய, பெருவயிற்றோன் என்று பலவித போஜன பாவங்களை இவனுக்கு வைக்க இவன் சந்தோஷமாய் அதைப் புசித்து குடித்து, தான் அனுப்பப்பட்ட நோக்கத்தை மறந்து போனான். இரண்டாவது சுப்பிரமணியன் போனான் இவன் காமவிகா

ரம் பிடித்தவன் என்பதை அறிந்து இவனை மயக்க பெண்களை அனுப்பி இவனைத் தடுத்து விட்டான். இவர்களும் மீண்டு வந்தபடியால் சிவன் கோபங் கொண்டு, முகத்திலே வேர்வை யுண்டானபோது அந்த வேர்வை வழிந் தொழிந்ததினால் அதிலே வீரபுத்திரன் உண் டாகி தக்கனுடைய யாகத்தை அழிக்கும்படி யாக தகப்பனாகிய சிவனுடைய உத்தரவை பெற்றுக் கொண்டு போகையில் இவன போகிற விக்கிரகத்தைக் கண்டு சுப்பிரமணியனும், வைரவனும் இவனுக்குப் பயந்து ஓடிவிட்டார் கள். விக்னேஸ்வரன் வயிற்றைத் தூக்கிக் கொண்டு ஓடக் கூடாமையால் இவனால் உதை யுண்டு வயிறு வெடித்து, சந்திரனை பிடித்து அதை அடைத்துக் கொண்டு தன்னுடைய போஜன வேலையில் மும்முரமாக இருந்தான். அங்கிருந்து வீரபுத்திரன் போய் தக்கனுடைய யாகத்தை அழித்து அவனை வெட்டிப் போட் டான். தக்கன் இறந்துபோனதினால் அவன் மகளாகிய ஈஸ்வரி துக்கத்தைக் குறித்து தக்க னுடைய வெட்டுண்ட முண்ட பகுதியாகிய சரீரத்தின் மேல் ஆட்டு தலையை வைத்து ஈஸ் வரன் தக்கனுக்கு உயிர் கொடுத்தானாம்

திக்கு பாலர்கள்

இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வர் மன், வாயு, குபேரன், ஈசானன்.

1. இந்திரன்

இந்திரனுக்கும் பல பெயர்களுண்டு. தேவேந்திரன் என்றும், அஸ்திமதிகன் என்றும் ஐராவதபாகன், ஆகந்தன், ஆயிரங்கண்ணன், இந்திரன், இமயவர்வேந்தன், கரியவன், காண் டாவனன், காரி, கோபதி, கௌசிகன், சக்கிரி, சக்கிரவந்தனன், சசிமணாளன், சதக்கிருதன், சதமகன், சுரேசன், சுரேந்திரன், சுமாங்கிரன், துச்சவனன், நாகநாதன், நான்மறுப்பு யானை, ஊத்தி, பலசூதனன், பலாரி, பாகசாதனன், புறந்தரன், புரகூதன், புரோகிதன், புலவன், புவிதன், புன்கைகிரைவன், புரோகி, பகவான் மருதநிலத்திரைவன், மருத்துவன், பால்மேக வாணன், வச்சிரவாலி, வலாரி, வாஷவன், வானோர் கோமான், விண்ணவதாரி, வெள்ளை வாகனன், வெள்ளை வாரணன், வேந்தன், வேள்வி வேந்தன்; இவனுக்கு ஆயிரங்கண் ணுள்ள வெண்ணுருவம் உண்டு. இவன் விக்கிர கத்தை சிலர் சிவன் கோவிலில் வைத்து வணங் குகிறார்கள். தேவர்களுடைய நூறு வருஷம் இந்திரனுடைய ஆளுகையின் காலமாகும். அந்தக் காலம் முடிந்த பின்பு, புண்ணியவான் களில் எவனாகிலும் இந்திரன் ஆவான். அல்லது நூறுவிசை அசுவமேத யாகம் செய்தால் இந்தி ரன் ஆகக் கூடும். ஒருவிசை இந்திரனானவன் ராவணன் மகனாகிய மேகநாதனாலே ஜெயிக்கப் பட்டு குதிரையின் காலில் கட்டப்பட்டான். கவுதம ரிஷியினுடைய பத்தினியின் மேல் மோகப்பட்டு அந்த ரிஷியினுடைய சாபத்தால் பூனையாகப் போனான். ஆயிரங்கண் உண்டா னதும் அவருடைய சாபத்தினால்தான். இவன் மனைவி இந்திராணி.

2. அக்கினி :

தென் கிழக்கு தேவன் காசி பிரம்மனு டைய மகன். இவனுக்கு குறி: புகை, மனைவி: சுவாகாதேவி குயவர்களுக்கு இவன் முக்கிய மான தேவன். குறுகுமுனி திரிசுவாகிய தன் மனைவியை அக்கினி தேவன் காக்காதபடி யினால், சர்வத்தையும், சாப்பிடக்கடவன் என்று சபித்தான். அப்போதே பிரம்மா இவன் சாப்பிடுவதெல்லாம் சுத்தமாகக் கடவது என்று வரமளித்தான். இவனுக்கு நைவேத்தி யம் செய்கிறதுண்டு.

3. இயமன் :

தென் திசைத் தேவன். இவனுக்கு குறி: சியம்; சிவந்த நிறமுடையவன். இவன் மனைவி: ஸிசை; வாகனம் எருமை; மரணத்தை நடத்தி, மரித்தவர்களை நியாயம் விசாரித்து நன்மை தீமைக்கடுத்த பலனைக் கொடுக்கிறான். சித்திர குப்தா இவனுடைய குமாஸ்தா. அவன் மனு ஷருடைய கிரியைகளையெல்லாம் எழுதுகிறான். சரீரத்தை விட்டுப் பிரிகிற ஆத்துமாக்கள் வெந்நீருள்ள வதரணி ஆற்றைக் கடந்து எமலோகத்துக்கு 4 மணி நேரமும் 40 நிமிஷத் துக்குள்ளே போய்ச் சேருகிறது. அதற்கு முன் சரீரத்தை தகனம் செய்யலாகாது என்பது இந்துக்களுடைய ஐதிகம்.

4. நிருதி

தென் மேற்கு திசைத் தேவன். இவனுக்கு குறி: நாய்; இவன் பேய்களின் ராஜா.

**5. வருணன் :**

மேற்றிசைக்குத் தேவன் இவனுக்கு குதி: இடபம்; வாகனம்: மகரம்; இவனுடைய ஸ்தானமாகிய வருண லோகத்தில் சிற்றின்பம் தவிர வேறொன்றும் இல்லை. ஒரு விசை வருணன் லோகத்தில் நேமி என்கிற ராசா தனக்காக சில காரியங்களைச் செய்ய வசிஷ்டரை அனுப்பி வைத்தான். அத்தருணத்தில் வசிஷ்டனுக்கு வேறே வேலைகள் இருந்தபடியால் போகவில்லை. அப்போது நேமி ராசா மற்றொரு ஆசாரியனைக் கொண்டு தன் காரியங்களை நடத்திக் கொண்டு வருகிறதை வசிஷ்டன் அறிந்து அங்கே போய் ராசாவை சாம்பலாய்ச் சபித்தான். ராஜா சாகும் போது வசிஷ்டனை சாம்பலாய் சபித்தான். அப்போது வசிஷ்டனது ஆத்துமா பிரம்மாவினிடத்துக்குப் போய் நான் மறுபடியும் உடல் எடுத்து ஜென்மிக்கிறது எப்படி என்று கேட்க, பிரம்மா வருண தேவனிடத்திலும் சூரிய தேவனிடத்திலும் போ வென்றான். அத்தருணத்தில் சூரிய தேவன் தேவலோகத்தில் ஆடிக் கொண்டிருந்த ஊர்வசி என்ற பெண்ணை மோகத்தினால் விட்டுக்கழைத்தான். அவள் போகும்போது வருண தேவன் கண்டு மோகித்தான். இவ்விருவருடைய மோகத்தினால் அகஸ்தியன் என்கிற முனியும், வசிஷ்டன் என்கிற முனியும் பிறந்தார்களாம்

**6. வாயு**

வடமேற்குத் திசைக்குத் தேவன். இவனுடைய குதி: கழுதை; காற்றுகளுக்குத் தேவன். தேவர்களுக்கு தூதனுமானவன் இவனுடைய தாயாகிய அதிதி இவன் இந்திரனிலும் வல்லமையுள்ளவனாக இருக்கும்படிக் கோரி வரம் பெற்றாள். இந்திரன் இதைக் கேட்டு அதிதியின் கர்ப்பத்தில் பிரவேசித்து சிசுவை ஏழுபங்காக்கி ஒவ்வொரு பங்கை ஏழு பங்காக்கினான். அதனால் வாயு பகவானுக்கு 49 உருவங்களாம். இவன் கேசரி என்கிற மந்திரியின் பெண் சாதியாகிய அஞ்சலையோடு விபசாரம் பண்ணினபடியால அனுமந்தன் பிறந்தான். இவனுக்கு வாகனம் மான்; கையில் வெள்ளைக்கொடி. இவனுக்கு பலிகளை செலுத்துகிறதுண்டு.

(தொடரும்)

*"வானத்தையும் பூமியையும் உண்டாக்காத தெய்வங்கள், பூமியிலும் இந்த வானத்தின் கீழும் இராதபடிக்கு அழிந்து போகும்..." (எரே. 10:11)*

# வேத பாடம்

(தொடர்ச்சி)

**லேவியராகமம் 19:20-22 :** அடிமைகளாகிய பெண்களோடு கூட தகாத உறவு (Sexual Relations) கொண்டால் அதற்கான தண்டனை.

ஒருவனுக்கு அடிமையானவள் ஒரு புருஷனுக்கு நியமிக்கப்பட்டவளாயிருந்து முற்றிலும் மீட்கப்படாமல் தன்னிச்சையாய் விடப்படாமலிருக்க அவளோடு ஒருவன் சம்யோகமாய்ச் சயனம் பண்ணினால் அவர்கள் கொலை செய்யப்படாமல் அடிக்கப்படவேண்டும். அவள் சுயாதீனமுள்ளவள் அல்ல. ஆனால், சுயாதீனமுள்ள அல்லது இஸ்ரவேலர்களில் ஒரு கன்னிகையை ஒருவன் ஊருக்குள்ளே கண்டு கெடுத்தால் அவள் சத்தமிடவில்லையென்றால் அந்தக் கன்னிகை ஏற்கெனவே ஒரு மனிதனுக்கு நியமிக்கப்பட்டவளாய் இருந்தால், அவன் கொலை செய்யப்பட வேண்டும். ஆனால் அவள் ஒருவனுக்கு நியமிக்கப்படாதவளாயிருந்தால் அவளை அவன் விவாகம் செய்து கொள்ள வேண்டும். அவளுடைய தகப்பனுக்கு ஐம்பது வெள்ளிக்காசை பரிசமாக செலுத்த வேண்டும். அவன் அவளை கற்பழித்தபடியினால், உயிருள்ள மட்டும் அவளைத் தள்ளிவிடக் கூடாது. தன் மனைவியாக வைத்துக் கொள்ள வேண்டும். ஊருக்கு வெளியே, நியமிக்கப்பட்ட ஒரு பெண்ணை ஒருவன் கண்டு பலாத்காரமாய் கெடுத்தால், அவள் சத்தமிட்டும் அவளைத்

தப்புவிப்பார் ஒருவனும் இல்லாதபடியினால் அது அவள் மேல் எழும்பி அவள் ஜீவனை வாங்கி னதுபோல் ஆகும். பெண்ணுக்கு ஒன்றும் செய்யலாகாது. அப்படிச் செய்த மனிதன் கல் லெறிந்து கொல்லப்பட வேண்டும். புருஷனுக்கு விவாகம் பண்ணப்பட்ட ஸ்திரீயோடு ஒருவன் சயனிக்கக் கண்டால் அந்த ஸ்திரீயும் அந்த மனிதனும் கொலை செய்யப்பட வேண்டும். இப்படி தீமையை இஸ்ரவேலைவிட்டு விலக்கு வாயாக (உபா. 22:22-29). ஆனால் அடிமைப் பெண்ணை ஒருவன் அவ்விதம் கெடுத்தால் அதினிமித்தம் அவன் கொலை செய்யப்பட கட்டளையில்லை. அவன் அதற்காக ஒரு ஆட்டுக்குட்டியை ஆசாரியனிடத்தில் கொண்டு வந்து தனக்காக குற்ற நிவாரண பலி செலுத்த வேண்டும். இந்நாட்களில் ஒரு ஆட்டுக்குட்டியின் விலை ரு. 900, 1000 ஆக இருக்கிறது. ஆசாரியன் அவனுக்காக பாவநிவிர்த்தி செய்யக் கடவன் என்பதாம்.

லேவி. 19:23-25 முதற்கனிகளைக் குறித்த தேவனுடைய பிரமாணம் :

நீ தேசத்தில் போய் அங்கே கனிதரும் விருட்சங்களை நாட்டினால் அது கனி கொடுக்க ஆரம்பித்த மூன்று வருஷம் அதனுடைய கனிகள் விருத்தசேதனம் இல்லாதது என்று எண் ணப்படும். அவைகள் புசிக்கப்படலாகாது. நான்காம் வருஷம் அந்தக் கனிகள் கர்த்தருக்கு ஸ்துதி செலுத்த அல்லது ஆசாரியனிடத்திற்குக் கொண்டு போய் முதற்பலனாக செலுத்த அது தகுதியானதாகும் (வச. 24).

ஐந்தாவது வருஷம் அதை இஸ்ரவேலர்கள் புசிக்கலாம். இப்படி அவர்கள் தேவனுடைய பிரமாணத்தைக் கடைபிடித்தால் அதன் பலன் ஏராளமாய்ப் பெருகும் (வச. 25).

லேவி. 19:26-28 : மத சம்பந்தப்பட்டதும், சமுதாய சம்பந்தப்பட்டதுமான 20 கட்டளைகள்:

1. இரத்தத்தோடு சேர்த்து மாம்சத்தை சமைத்து சாப்பிடக் கூடாது.
2. குறி பாராதே.
3. சகுனம் பார்க்காதே.
4. உன்னுடைய தலைமுடியை சுற்றி ஒதுக்கி வெட்டாதே (வச.27).
5. தாடியை சுற்றி வெட்டி விடாதே.
6. உன்னுடைய சரீரத்தைக் கீறிக் கொள்ளாதே.
7. உன்னுடைய சரீரத்திலே அடையாளமான எழுத்துக்களை குத்திக் கொள்ளாதே படங் களை வரையாதே.
8. உன்னுடைய குமாரத்தியை வேசித்தனம் பண்ண விடாதே.
9. என்னுடைய ஓய்வு நாட்களை ஆசரிப்பாயாக.
10. என்னுடைய பரிசுத்த ஸ்தலத்தைக் குறித்து பயபக்தியாயிரு.
11. அஞ்சனம் பார்க்கிறவர்களை தேடாதே.
12. மந்திரவாதிகளை, குறி சொல்லுகிறவர்களைத் தேடாதே.
13. நரைத்தவனுக்கு முன்பாக எழுந்து மரியாதை செலுத்து.
14. முதிர்வயதுள்ளவனைக் கனம் பண்ணு.
15. உன்னுடைய கடவுளாகிய தேவனுக்கு பயந்திரு.
16. உன் தேசத்திலே அல்லது உன்னிடத்தில் அடுத்து குடியிருக்கிற அந்நியனை உபத்திரவப் படுத்தாதே, சிறுமைப் படுத்தாதே.

17. அந்நியனிடத்திலே அன்பு கூருவாயாக; ஏனென்றால் நீயும் எகிப்தில் அந்நியனாக இருந்தாய்.

18. உன்னைப் போல அவனை நேசி.

19. நியாய விசாரணையிலும், அளவிலும், நிறையிலும், படியிலும் அநியாயம் செய்யாதிருப்பீர்களாக.

20. சுமுத்திரையான கல்லும், சுமுத்திரையான மரக்காலும், சுமுத்திரையான படியும் இருக்கட்டும். என்னுடைய கட்டளைகளையும் நியாயங்களையும் கைக்கொண்டு நடவுங்கள், இல்லாவிட்டால் தேசம் உங்களைக் கக்கிப் போடும். நான் உங்களுக்கு முன்பு துரத்தி விடுகிற ஜனங்கள் இவ்விதமான தவறுகளினால் தங்களைத் தீட்டுப்படுத்தினார்கள். இதினிமித்தம் அவர்களை அந்தத் தேசத்தை விட்டு அப்புறப்படுத்தினேன். அவர்களுடைய வழிகளை, பழக்க வழக்கங்களை நீ கடைபிடியாதே (லேவி. 20:22,23).

லேவி. 20:1-5 : உன் சந்ததியில் யாரையாகிலும் மோளேகுக்கென்று தீக்கடக்கப் பண்ணும்படி இடங்கொடுக்காதே. உன் தேவனுடைய நாமத்தை பரிசுத்தக் குலைச்சலாக்காதே. நான் கர்த்தர். மோளேகுக்கு தன்னுடைய பிள்ளைகளைக் கொடுத்து அவைகளைத் தீயிலே தகவிப்பது இவ்வித அருவருப்பான காரியங்கள் செய்யக் கூடாது (உபா. 12;31). பிள்ளைகளை தீக்கடக்கப் பண்ணுகிறவர்களை கொலை செய்யக் கடவாய். ஒரு ஊரிலே, ஒரு சந்ததியிலே ஒருவன் அப்படிச் செய்தால் அப்படிப்பட்டவனை பிடித்துக் கொன்று போட வேண்டும். இல்லாவிட்டால் தேவன் சங்கரிப்பார் என்பது.

லேவி. 20:6-20 மரண தண்டனைக்குரிய பாவங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது.

மரணதண்டனைக்கு ஏதுவானவைகள் :

1. அஞ்சனம் பார்க்குதல், குறி கேட்டுதல் (வச. 6)
2. தகப்பனையாவது தாயையாவது சபிக்கிறவன் கொலை செய்யப்படக் கடவன் (வச. 9).
3. அடுத்தவன் மனைவியோடு ஒருவன் விபச்சாரம் செய்தால் அந்த விபசாரனும், விபசாரியும் கொலை செய்யப்படக் கடவன் (வச. 10)
4. தகப்பன் மனைவியோடு சயனிக்கிறவனும், அவளும் கொலை செய்யப்படக் கடவர்கள் (வச. 11)
5. மருமகளோடு சயனிக்கிறவனும் ,அவளும் கொலை செய்யப்படக் கடவர்கள் (வச.12).
6. ஆணோடு ஆண் சயனித்தால் இருவரும் கொலை செய்யப்படக் கடவர்கள் (வச. 13).
7. ஒருவன் ஒரு ஸ்திரீயையும் அவள் தாயையும் படைத்தால் மூவரும் கொலை செய்யப்படக் கடவர்கள் (வச. 14)
8. ஒருவன் மிருகத்தோடு புணர்ந்தால் அவனும் அந்த மிருகமும் கொலை செய்யப்படக் படக் கடவர்கள் (வச. 15)
9. ஒரு ஸ்திரீ மிருகத்தோடே சயனித்தால் அவளும் அந்த மிருகமும் கொலை செய்யப்படக் கடவர்கள் (வச. 16)
10. ஒருவன் தகப்பனுக்காவது, தாய்க்காவது பிறந்த சகோதரியோடே சயனித்தால் இருவரும் கொலை செய்யப்படக் கடவர்கள் (வச. 17)
11. ஒருவன் சூதக ஸ்திரீயோடே சயனித்தால் இருவரும் கொலை செய்யப்படக்கடவர்கள் (வச. 18)

12. ஒருவன் தன் தாயோடு பிறந்த சகோதரியோடாவது, தகப்பனுடன் பிறந்த சகோதரியோடாவது சேர்ந்தால் இருவரும் கொலை செய்யப்படக் கடவர்கள் (வச. 19).

13. ஒருவன் தன் தகப்பனின் சகோதரியோடு சயனித்தால் சந்தானமில்லாமல் சாவான். (வச. 20)

**லேவி. 20:23,24 :** இவைகள் ஒன்றினாலும் உங்களைத் தீட்டுப்படுத்தாதிருங்கள். உங்களுக்கு முன்னிருந்த ஜாதிகள் இவைகளினால் தீட்டுப்பட்டிருக்கிறார்கள் (லேவி. 18:24). புறஜாதிகளின் அருவருப்பான பழக்க வழக்கங்களை கைக் கொள்ளாதிருங்கள். நான் உங்களை மற்ற ஜனங்களிலிருந்து பிரித்தெடுத்தேன்.

**லேவி. 20:25,26 :** ஆதலால் அசுத்தமான ஆகாரங்களை புசிக்காமலும் அருவருப்பான காரியங்களை செய்யாமலுமிருந்து எனக்கேற்ற பரிசுத்தவான்களாயிருப்பீர்களாக. நான் கர்த்தர், நான் பரிசுத்தர்.

**லேவி. 20:27 :** அஞ்சனம் பார்க்கிறவர்களும், குறி சொல்லுகிறவர்களுமாகிய புருஷரோ ஸ்திரீகளோ இருந்தால் அவர்கள் கொலை செய்யப்படக்கடவர்கள் என்பதாம்.

மேற்கண்ட பாவங்களுக்குத் தீர்ப்பு கொலை செய்யப்படுவதாகும்.

(தொடரும்)

---

''இதோ, எல்லா ஆத்துமாக்களும் என்னுடையவைகள்; தகப்பனின் ஆத்துமா எப்படியோ, அப்படியே மகனின் ஆத்துமாவும் என்னுடையது; பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும்.'' (எசே 18:4)

---

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களுக்கு,

நீங்கள் பத்திரிகை ஊழியத்திற்கோ அல்லது தலைமைக்கோ காணிக்கைகள் D.D. (Demand Draft) எடுத்து அனுப்பினால் அவைகளை சாதாரண தபாலில் அனுப்பாதீர்கள். அவைகள் திருடப்பட்டு போகின்றன. அவைகளை பதிவுத் தபாலிலோ (Registered Post with A/D) அல்லது விரைவுத் தபாலிலோ (Speed Post) அனுப்பவும் அல்லது மணி ஆர்டர் (Money Order) மூலம் காணிக்கைகள் அனுப்பலாம். அப்பொழுது அது இங்கே வந்து சேர்ந்ததற்கான அத்தாட்சியும் உங்களுக்கு வந்து உடனே கிடைக்கும் என்பதை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். —EDITOR

## பிழைத்திருத்தம்

புதிய எருசலேம் செய்தி எக்காளசத்தம் 93 Sept. 1991 பக்கம்-6ல் 3. வராகவதாரம் என்ற தலைப்பின் கீழ் 14-வது வரியில் வரும் 'முருகா' என்பதை 'முருந்தா' என்று வாசிக்கவும்.

மாதர் பகுதி

# கிறிஸ்தவ திருமணம் (தொடர்ச்சி)

திருமணம் செய்யப் போகிற வாலிபர்கள் தாம எதிர்பார்க்கும் மனைவி என்ன குணநலன்களையுடையவளாய் இருக்கவேண்டும், எப்படிப்பட்டவளாய் இருக்க வேண்டும் என்று விரும்ப வேண்டும் என்றால்,

1) என்னிடம் உள்ள குறைகளையும், நிறைவுகளையும் அவள் எனக்கு சுட்டிக்காட்டி நான் மனிதனாக வாழ எனக்கு ஆலோசனை கூறுகிறவளாக இருக்க வேண்டும்.

2) என்னிடத்தில் ஏமாற்றம் கண்ட போதும் என்னிடத்திலுள்ள நம்பிக்கையை அவள் இழந்துவிடக் கூடாது.

3) என்னுடைய பலவீனங்களில் நான் வெற்றிபெற சலிப்படையாமல் அவள் எனக்கு உதவி செய்ய வேண்டும்.

4) நான் எப்பொழுதாவது அவளை மன வேதனைப்படுத்தினதுண்டானால் அவள் அதை ஒளிவு மறைவின்றி எனக்குச் சொல்ல வேண்டும்.

வாழ்க்கைத் துணையாகப் போகும பெண் தனக்கென்று ஒரு திட்டமுடையவளாகவும் அதனை பயன்படுத்துகிறவளாக இருக்கும் போது மட்டுமே அது சாத்தியமாகும். ஒரு மனிதனுக்குத் தேவை ஒரு அடிமைப் பெண் அல்ல; அவனுக்கு இணையாக இருக்கக் கூடிய துணையே தேவை.

இன்னொரு காரியம். விவாகம் செய்யப் போகிறவர்கள் நெருங்கிய இனத்தில், அதாவது இரத்த சம்பந்தமான உறவில் விவாகம் செய்யக் கூடாது. இதற்குக் காரணம் ஒருவரில் மறைந்து நிற்கும் அசாதாரண குறைகள் அவனுடைய குழந்தைகளில் பன்மடங்காக பெருகிக் காணப்படும். அதே இரத்தக் கலப்பான மற்றவரும் அதே குறைகளை உடையவராயிருப்பதாலே இங்ஙனம் இது நிகழ்கிறது. நெருங்கிய உறவினர்கள் திருமணம் செய்து கொள்ளாமலிருக்க கடவுள் அமைத்த தடை இது. இருமறையும் இப்படிப்பட்ட திருமணங்களை அனுமதிப்பதில்லை. முத்த தமக்கையின் மகளை, விவாகம் செய்கிற பழக்கம் இந்தியாவில் பல பாகங்களில் காணப்படுகிறது. இது இறைவனை அறியாத மக்களில் காணப்படும் தவறான வழக்கமாகும். இதைக் கிறிஸ்தவர்கள் அனுசரிக்கக் கூடாது. கூடுமானவரை இவைகளைத் தவிர்க்கவும். இயற்கைக்கும் வேதவாக்கியங்களுக்கும் புறம்பான காரியமாகும் இது. இப்படிப்பட்ட பல திருமணங்களைக் குறித்து நானறிவேன். அவர்களுக்கு பிறக்கிற குழந்தைகள் குறைபாடுள்ளவர்களாகவே காணப்படுகிறார்கள். அவர்களுடைய குழந்தைகளனைத்தும் ஏதாவது ஒரு பெருங்குறையோடுதான் பிறக்கும். கடவுளே ஒன்றிற்குத் தடைவிதித்திருக்கும் பொழுது அதற்கு சரியான காரணம் இருக்கும் என்று நாம் உறுதியாக நம்ப வேண்டும். அத்தான் என்பதற்கு பதிலாக அவள் மாமா என்று கூப்பிட வேண்டியது வரும்.

## வேறுபட்ட சபைப் பிரிவுகளைப் பற்றிய காரியம்

திருமணம் செய்யப் போகிற யுவனும், யுவதியும் மாறுபட்ட உபதேசங்களைக் கொண்டவர்களாக இருந்தால் இணைக்கப்படுவது சரியல்ல. திருமணத்துக்கு முன்பு இவைகளைக் குறித்து நன்கு சிந்திக்க வேண்டும். ஞானஸ்நானம் சபை ஐக்கியம் ஆகியவற்றில் உடன்பாடு இருக்க வேண்டியது அவசியம். ஏனென்றால் மணமான பின்பு இப்பிரச்சினை தலைதூக்கும் குழந்தைகளாக இருக்கும் போதே தன் பிள்ளைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கவேண்டுமென்று அந்த அம்மா சொல்ல, இந்த ஐயா வேண்டாமென்று சொல்ல இப்படியாக திருமணத்திற்குப் பின்பு இவைகளைக் குறித்து சண்டை போட்டுக் கொள்வதைக் காட்டிலும் முன்கூட்டியே பேசி முடிவு செய்வது நல்லது. குடும்பமாக ஒரே இடத்திற்குச் சென்று கடவுளை ஆராதித்து வரவேண்டும். சில பிள்ளைகளை அழைத்துக் கொண்டு தாய் ஒரு சபைக்கும், தந்தை ஒரு சபைக்கும் போகிற அசுத்தமான நிலை, தவறு உண்டாகக் கூடாது. முன்கூட்டியே பேசி முடிவு செய்ய வேண்டும். உபதே

சப் பிரிவினைகளினால் கிறிஸ்தவ கூட்டங்கள் பிரிந்து நிற்பதை நாமெல்லாரும் அறிவோம், முன்கூட்டியே எங்கு ஆராதனை செய்ய வேண்டும் என்பதை பேசி முடிவெடுக்க வேண்டும், இந்தியாவின் வழக்கம் ஆண் எங்கே ஆராதனை செய்கிறானோ (தலை போகிற இடத்துக்கு வால் போகும்) அங்கே மனைவியும் செல்ல வேண்டும். இந்தக் காரியத்தில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். இதை மீறுகிறவர்கள் மறுபடியும் தங்கள் இரட்சிப்பை இழந்து போக நேரிடும். குடும்பமாக ஒன்றுபட்டு கூட்டு வாழ்க்கை, கூட்டு ஜெபம், தேவ சமூகம் சென்று கூட்டு ஆராதனை செய்ய வேண்டும். சமய நிலையில் விட்டுக் கொடுக்க முடியாத அளவுக்கு உறுதியான கொள்கை வித்தியாசம் இருக்குமானால் திருமணத்திற்கு முன்பாகவே இந்தக் காரியங்கள் பேசி முடிவு செய்து கொள்ள வேண்டியது மிகவும் முக்கியமாகும்.

திருமணம் செய்து கொள்ள ஆண்டவர் ஒரு பெண்ணை உங்களுக்குத் தருவதாக இருந்தால் அவள் மீது செலுத்துவதற்கான அன்பையும் தேவன் தருவார். இந்த அன்பு எத்தன்மையுடையது என்று ஏற்கெனவே நாம் பார்த்து வருகிறோம்.

திருமணத்துக்கு முன் அன்பு வளர்ந்திருக்கலாம். வளராமலும் இருக்கலாம். குறைந்த பட்சம் அன்பு இருந்திருக்க வேண்டும். தனக்கு ரெபெக்காளை கடவுள் கொடுத்தார் என்று எண்ணி அவளை ஈசாக்கு எடுத்துக் கொண்ட போது அதற்கு முன் அவன் அவளை சந்திக்கவில்லை, ஆனால், இப்பொழுது அவன் அவளை நேசித்தான் (ஆதி 24:67) முன்னே அவள் யாரென்று அவனுக்குத் தெரியாது. கடவுள் சித்தத்தை அவன் நன்கறிந்திருந்தான். எனவே, அவளிடம் செலுத்த வேண்டிய அன்பு அவன் உள்ளத்திலிருந்து புறப்பட்டது, முன்பின் தெரியாத பெண்ணை மணந்து கொள்ளும்படி கடவுள் ஒருவனை வழி நடத்துவது மிகவும் அபூர்வம். ஈசாக்கிற்கு அருளப்பட்ட வழி நடத்தல் இறைவனால் நிகழ்ந்தது. அப்படி ஒரு மனைவியை ஆண்டவர் தெரிந்து எடுத்து கொடுக்கிறாரென்று தெரியும் பொழுது அவள் மேல் செலுத்தும்படியான அன்பையும் இறைவனே தந்தருள்வார். ஈசாக்குக்கு தேவன் அதை தான் செய்தார். அன்பு என்பது ஒருவர் ஆசையை பிறப்பிக்க மற்றவர் செயல்படுகிற ஒரு காரியமல்ல, அது உள்ளத்திலிருந்து ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடிவரவேண்டும் இழுத்துப் பறித்து வெளியே கொண்டு வர வேண்டிய ஒன்றல்ல அன்பு. அப்படியானால் அது உண்மையான அன்பாகாது, ஒருவர் மீது நாம் கொள்ளும் மதிப்பே அன்பாக மலர்வது. நீங்கள் ஒருவரையொருவர் மதித்துப் போற்றவில்லையானால் அவரை நீங்கள் உண்மையாக நேசிக்க முடியாது. அனுதாபத்தை அன்பு என்று எண்ணுவது தவறாகும். ஒரு பெண்ணின் அவல நிலையைக் கண்டு மனமிளகி அவளைத் திருமணம் செய்து கொள்வது அறிவுடைய செயலாகாது, வேண்டுமானால் அதை ஒரு வீரச் செயல் அல்லது தியாகச் செயல் என்று குறிப்பிடலாம். அவள் மீது உண்மையான அன்பு உங்களுக்கு இல்லையென்றால் உங்கள் திருமண வாழ்க்கை தோல்வியடையும், கிறிஸ்தவ திருமணத்திற்கு இந்த அன்பு மிகவும் அவசியம், பரிதாபம், இரக்கம் இவைமட்டும் இருந்தால் போதாது அன்பு வேண்டும். ஒரு பெண்ணிடமுள்ள ஆவிக்குரிய தன்மை, உறுதியான கொள்கைகள், அறிவாற்றல், ஆகியவற்றை நீங்கள் மதிக்க முடியாவிட்டால் அவளிடம் உங்களுக்குள்ள வேறு ஈடுபாடுகள் நிலைக்காது. உங்களைப் பார்த்து, என்னை திருமணம் செய்து கொள்ளாவிட்டால் தற்கொலை செய்து கொள்வேன், அல்லது அதைச் செய்வேன், இதைச் செய்வேன் என்று பயங்கரமான காரியத்தைச் செய்யப் போகிறதாகச் சொன்னால் உடனே அந்த நபரைத் திருமணம் செய்து கொள்ள தீர்மானித்து விடாதீர்கள், அந்தப் பெண்ணை கண்டிப்பாக நீங்கள் இப்பொழுதே வெறுத்து விடுவது நல்லது.

கடவுளாக முன் குறிக்கப்பட்டபடி அவருடைய வேளை வரும் போது உங்களுக்காக அவர் தேர்ந்தெடுத்துள்ள வாழ்க்கைத் துணைவியோடு நீங்கள் இணைக்கப்படுகிறீர்கள் என்று திருமண நேரத்தை நீங்கள் அறிய வந்தால் அது எத்தனை அருமையாய் இருக்கும், அந்த உறுதியோடு இணைக்கப்படும் மணமக்கள் பேறு பெற்றவர்களாவார்கள் எனலாம், இணையில்லாத மகிழ்ச்சி என்றென்றும் அவர்களுக்கு உண்டாகும்.

(தொடரும்)

# சிறுவர் பகுதி

கிறிஸ்துவுக்குள் அருமையான குழந்தைகளே, உங்கள் விசுவாசமும் பயபக்தியும் நல்லொழுக்கமும் ஜெப ஜீவியமும் வளர்ந்து பெருகுவதாக.

அருமையான குழந்தைகளே, தாசனும் எப்ஸியும் பயபக்தியுள்ள குடும்பத்தில் பிறந்தவர்கள். இவர்களுடைய தாயாரின் பெயர் எலிஸபெத். தகப்பனார் மரித்துவிட்டார்.

இவர்களுடைய தாயார் இவர்களை கண்ணும் கருத்துமாக வளர்த்து வந்தார்கள். தன்னுடைய பிள்ளைகள் பக்தி மார்க்கத்தில் வளர்ந்து பெருக மிகுந்த ஆசையும், கவலமும் கொண்டிருந்தார்கள். தாசனும் எப்ஸியும் தங்கள் தாயாருடன் அதிகாலையிலே எழுந்து காலை ஜெபத்தில் கலந்து கொள்வார்கள். பின்பு அன்றைய தினம் படிக்க வேண்டிய பாடங்களை எழுதி பின்பு தங்கள் தாயாருக்கு செய்ய வேண்டிய உதவிகளை செய்து பள்ளிக்கு ஆயத்தமாகி செல்வார்கள்.

தாசனும், எப்ஸியும் தங்கள் வகுப்பில் மார்க் வாங்குவதில் முதன்மையான இடத்தை பிடித்து விடுவார்கள். இருவரும் தங்கள் ஆசிரியரிடத்தில் நல்ல மதிப்பை பெற்றிருந்தார்கள். தங்கள் தாயாருக்கு எல்லாக் காரியத்திலும் கீழ்ப்படிந்து அதிக அன்பை செலுத்தி வந்தார்கள். தங்களுக்குத் தேவையான காரியங்களை கர்த்தரிடத்தில் விண்ணப்பம் செய்வார்கள். விண்ணப்பம் செய்த காரியங்களுக்கு பதில் கிடைத்தவுடன் மகிழ்ந்து கர்த்தருக்கு நன்றி செலுத்துவார்கள். இவர்கள் குடும்பத்தில் சந்தோஷமும், மகிழ்ச்சியும் எப்பொழுதும் தங்கி இருந்தது. குறைவுகளைக் குறித்து வருத்தப்படுவதில்லை.

ஒவ்வொரு நாளும் இராக்காலத்தில் தாசனும், எப்ஸியும் தங்கள் தாயாருடன் தங்கள் வீட்டு வராண்டாவில் அமர்ந்து அன்றைய தினம் நடந்த காரியங்களைக் குறித்துப் பேசி மிகுந்த சந்தோஷப்படுவார்கள்.

இவர்கள் வசித்த ஊரில் மிகுந்த பணக்கார மனிதர் ஒருவர் இருந்தார். அவருக்கு அநேக வேலையாட்கள் இருந்தார்கள். அவர் எதை நினைத்தாலும் செய்து விடுவார். ஆனால் அவருக்கு சமாதானம் இல்லை, இரவில் தூக்கம் இல்லை. அவர் தினமும் தாசன் எப்ஸி வீட்டிலுள்ள கலகலப்பான சிரிப்பொலியைக் கேட்டுக் கொண்டிருந்தார். அவர்: தான் எவ்வளவு வசதியாயிருந்தும் சமாதானமும் மகிழ்ச்சியும் பெற்றுக் கொள்ள முடியவில்லை. ஆனால் இந்தச் சிறிய குடும்பத்தில் எவ்வளவு பெரிய மகிழ்ச்சி உண்டாயிருக்கிறது. இது இவர்களுக்கு எவ்வாறு உண்டாயிற்று என்று தனக்குள் சிந்திக்க ஆரம்பித்தார். அந்த வீட்டாரிடத்தில் போய் நேரில் கேட்டு விடுவோம் என்று ஒரு நாள் இவர்களது வீட்டிற்கு வந்தார்.

தாசனும், எப்ஸியும் அவர்களது அம்மாவும் அவரை மகிழ்ச்சியோடு வரவேற்று உபசரித்தார்கள். பின்பு அவர் அவர்களிடத்தில் உங்களுக்கு எப்படி எப்பொழுதும் மகிழ்ச்சியும், சந்தோஷமும் உண்டாகிறது, என்று விசாரிக்க ஆரம்பித்தார். அதற்கு அவர்கள் நாங்கள் கர்த்தருடைய பிள்ளைகளாய் இருந்து அவருடைய சித்தம் செய்து வருகிறோம். எங்களுடைய தேவைகளை ஜெபத்தின் மூலம் கர்த்தரிடத்தில் கேட்போம். அவர் எங்களது ஜெபத்தைக் கேட்டு அன்றன்றுள்ள தேவைகளை அருளுகிறார். அதோடு கூட சமாதானத்தையும், சந்தோஷத்தையும் கூட்டித் தருகிறார். இதற்கு முக்கிய காரணம் எங்களது ஜெப ஜீவியமே என்று சொன்னார்கள். அந்த மனிதர் அதைக் கேட்டு நானும் அப்படிச் செய்து கர்த்தருடைய பிள்ளையாக மாறி அவருடைய சித்தம் செய்து ஜெபம் செய்து சமாதான சந்தோஷத்தை கர்த்தரிடத்தில் பெற்றுக் கொள்கிறேன் என்றுகூறி மன உறுதியுடன் சென்றார்.

ஆம், பிள்ளைகளே, உம்முடைய சமுகத்தில் பரிபூரண ஆனந்தமும், உம்முடைய வலது பாரிசத்தில் நித்திய பேரின்பமும் உண்டு (சங் 16:11) என்று தாவீது பக்தன் கூறுகின்றார். இது உண்மையான வார்த்தையாகும். ஆலயத்தில் ஜெபம் செய்கிற போது பரிபூரண ஆனந்தம் உண்டாகிறது. குடும்ப ஜெபங்களிலும், தனி ஜெபங்களிலும், நித்திய பேரின்பம் உண்டாகிறது. ஆகவே, பிள்ளைகளே! நீங்களும் ஆலய ஆராதனை வேளைகளிலும், காலை மாலை குடும்ப ஜெபங்களிலும் கண்டிப்பாக கலந்து கொள்ள வேண்டும். இதன் மூலமாக சமாதானமும் சந்தோஷமும் பெருகும். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக. ஆமென்!

''கனம் பொருந்தினவனாயிருந்தும் அறிவில்லாத மனுஷன் அழிந்து போகும் மிருகங்களுக்கு ஒப்பாயிருக்கிறான்''

(சங். 49:20)

'தேவன் ஒருவரே..'
THERE IS ONE GOD...

Regd. No. 0400[illegible]8/84
Postal Regd No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

# கேரளாவில் சபை எழும்புதல்

கர்த்தருக்கு ஸ்தோத்திரம்

1—9—1991 ஞாயிறுக்கிழமையன்று கேரளா மாநிலத்திலுள்ள நெய்யாற்றின்கரை அருகில் திருப்புறம் என்ற ஊரில் "புதிய எருசலேம் சபை" எழும்பிற்று என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த ஊழியம் கேரளா மாநிலம் முழுவதும் பரவ வேண்டி ஜெபிக்க வேண்டுகிறோம்.

## ஞானஸ்நானம்

27—09—91 அன்று பம்பாயில் 8 பேர் ஞானஸ்நானம் பெற்று சபையோடு சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள்.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

   23 (புதன்) அக்டோபர் 1991
   22 (வெள்ளி) நவம்பர் 1991
   20 (வெள்ளி) டிசம்பர் 1991

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar.**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரரா அல்லது புதிய சந்தாதாரரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15/- (பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited Printed and Published by Chief Pastor N LAZAR. New Jerusalem Church, Church Lane. Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at : PESCA Art Printers 19 Thiruvalluvar St Ms-29 Ph : 425490

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

### எக்காளசத்தம் 95 - Nov. 1991



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 - 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி ''தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)'' எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப்.1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

### இதழின் உள்ளே...

M. Selvi

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள் பல! உபாத்தியாயர்கள் அநேகர் இருக்கலாம், ஆனால் தகப்பன்மார்கள் கிறிஸ்தவ உலகத்தில் அநேகர் இல்லை. இப்படி நட, அப்படி நட. இப்படிச் செய்ய வேண்டும் அப்படிச் செய்ய வேண்டும், இப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றெல்லாம் போதிப்போர் பலர், சாதிப்போரோ சிலர். இந்நாட்களில் அநேக வாத்தியார்கள் கிளம்பி தங்களை தேவ ஊழியர்கள் என்பதுபோல் காட்டிக் கொள்ளுகிறார்கள். இவர்களிலே பொய் குருக்களும் உண்டு, மெய் குருக்களும் உண்டு. பொய் குருக்கள்:- ''யாரையும் நம்பாதே, எந்த மனிதனையும் நம்பாதே, இயேசுவையே பார்'' என்று சொல்வார்கள். காரணம் என்னவென்றால் அவர்களை நம்பினால் கண்டிப்பாக மக்கள் நரகத்துக்குப் போவார்கள் என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள். மேலும் இவர்கள் நாளைக்கு மருளவிடுகிறவர்களாக இருக்கிறார்கள். மக்களின்மேல் ஒரு தகப்பனைப்போல் கரிசனையுடையவர்களாய் அவர்களுடைய ஆத்துமாவுக்காக இவர்கள் முடிவு பரியந்தம் பிரயாசம் எடுப்பவர்கள் அல்ல. வேதாகமமோ மெய்குருக்களை பற்றியே நமக்கு அடையாளம் காண்பித்திருக்கிறது. இன்றைக்கு சிலர் பிரசங்கிக்கிறது போல் இயேசுவை மாத்திரம் பார்த்தால் போதும் என்று சொல்லும்பொழுது அவர்களே அந்த வழியில் நடக்கவில்லை என்பதை அவர்கள் நிரூபிக்கிறார்கள். ''கூரை ஏறி கோழி பிடிக்க மாட்டாத குருக்களெல்லாம் வானம் கீறி வைகுண்டம் காட்டுவார்களாம்'' என்ற முதுமொழியின்படி தாங்களே சாதிக்க முடியாததை பிறர் சாதிக்க வேண்டுமென்பதுபோல இவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் வேதாகமம் என்ன சொல்லுகிறது என்றால், அப் பவுல் தன்னை மாதிரியாக காண்பிக்கிறார் (பிலி, 4:4-9; I கொரி 4:15,16; 11:1, I தெச. 1:6). தேவனுடைய ஜனங்கள் மெய்யான ஊழியர்களைப் பின்பற்றி அவர்களுடைய நடக்கையின முடிவை நன்றாய் கவனித்து அப்படிப்பட்டவர்களுடைய விசுவாசத்தைப் பின்பற்ற வேணடும் (எபி. 13.7) பரிசுத்தவான்களைப் பின்பற்றும்படியாக மெய்யான சபைகளை மாதிரியாக நோக்கும்படியாக வேதாகமததில் குறிப்பிடப்பட்டுள்ளது (எபி. 6:11,12; I தெச.2:14).வி சுவாசத்தைத் துவக்குகிறவரும்,முடிக்கிறவருமாகிய இவர் இயேசு கிறிஸ்துவே. அவரை நோககி நாம் தனித்து ஓடுகிறதல்ல; ஆயிரக் கணக்கான, லட்சக்கணக்கான மேகம் போன்ற திரளான சாட்சிகள் ஓடின அந்த பாதையிலே, ஜெயங் கொண்ட அந்த பாதையிலே நாம் ஜெயங் கொள்ளும்படி தேவன் நமக்கு அழைப்பு கொடுததிருக்கிறார் (எபி.12:1,2.) அதற்கு மெய்யான தேவ ஊழியர்களே மாதிரிகளாக இருக்கிறார்கள் அடிப்படையில்லாதவர்களும், இழிவான ஆதாயத்திற்காக ஊழியம் செய்கிறவர்களும், ஒன்றுமில்லாதிருந்தும் தங்களை ஒரு பொருட்டாக காண்பிக்கிறவர்களும் தாங்கள் இருக்கிற நிலைக்கு சாதகமாக வசனங்களைத் திரித்துக் கூறுகிறவர்களுமாகிய கபடமுள்ள வேலையாட்கள் பெருகியிருக்கிற இந்நாட்களிலே தேவனுடைய ஜனங்கள் மெய்யான ஊழியர்களை தேவன் எழுப்பித

தரும்படியாக ஜெபிப்பதும் அப்படிப்பட்டவர்களைப் பின்பற்றுவதும் தேவ ஜனங்களுடைய முழுமைக்கு ஆதாரமாக இருக்கும். யாதாமொருவர் தானே சாதிக்க முடியாத காரியத்தை பிறர் சாதிக்கும்படியாக சொல்லுகிறார்கள் என்றால் அவர்களைக் குறித்து ஜாக்கிரதையாயிருப்பது நல்லது. நாம் மெய்யான ஊழியர்களை பின்பற்றி அவர்களிடத்தில் முழு நம்பிக்கை வைத்து அவர்களை பின்பற்ற வேண்டும். இப்படி செய்வோமானால் வேதத்துக்குச் செவி கொடுத்தோம் என்று அர்த்தமாகும் (பிலி. 3:17) என் ஆடுகள் என் கரத்திலிருக்கிறது. அவைகளை என் கையிலிருந்து ஒருவனும் பறித்துக்கொள்ள முடியாதென்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து திருவுளம் பற்றினார். மெய்யாய் அவருடைய சத்தத்துக்குச் செவி கொடுக்கிற அவருடைய ஆடுகள் ஒருபோதும் இடறி விழுவதில்லை. இறைவன் உங்கள் எல்லோரையும் ஆசீர்வதிப்பாராக.

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

## புதிய கிளைகள் ஆரம்பம்

4—10—91 அன்று திருப்பூரிலும், 18—10—91 அன்று அரக்கோணத்திலும் புதிய எருசலேம் சபையின் கிளைகள் தமிழ்நாடு அப்போஸ்தலர் S. சுந்தர்ராஜ் அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

### ஞானஸ்நானம்

பள்ளப்பட்டி, சேலம் ஆகிய இடங்களிலுள்ள கிளை சபைகளில் ஞானஸ்நானம் பெற்று சபையோடு சேர்க்கப்பட்டவர்களின் விபரம்.

| நாள் | இடம் | நபர்கள் |
|---|---|---|
| 13—09—91 | பள்ளப்பட்டி | 28 |
| 02—10—91 | சேலம் | 26 |

M. [illegible]



# இந்து மதம் (தொடர்ச்சி)

## தேவர்கள்

### 7. குபேரன்

வடக்குத் திசைத் தேவன். இவனுக்கு குறி யானை. இவன் திரவியங்களைக் கொடுக்கிறவன் என்று சொல்லப்படுகிறது.

### 8. ஈசானன்

வடகிழக்குத் திசைக்குத் தேவன். இவனுக்குக் குறி காகம்.

### 9. விஸ்வகர்மன்

இவன் பிர்மாவின் மகன். தேவலோக தச்சன் என்று வர்ணிக்கப்படுகிறான்.

### 10. மன்மதன்

இவனுடைய பெயர்கள் பலவுண்டு. அங்கசன், அனந்தன், ஆழிமுரசோன், பிரதிகாவலன், உருவிலி, ஐங்கணை, கிரவன், கந்தப்பன், கருப்புவில்லி, காமன், சம்பிராதி, சுத்தசன், கரும்பரவன், திருமகன் மைந்தன், பஞ்சாபணன், பூலம்பன், பூவாளி மகரகேதனன், மதன், மதுசுகன், மனேசன், மனோற்பவன், மாமகன், மாறணன், மான்மகன், மீனக்கொடியோன், மோகன வசந்தன், வேள், வேனிலாடி. இவன் விஷ்ணுவின் மகன். புராணங்களிலும், காவியங்களிலும் இவனைக் குறித்து அநேக சரித்திரங்களுண்டு. காமத்திற்கு இவன் காரணன் என்று வர்ணிக்கிறார்கள். இவனுடைய காமக் கணையால் தேவர்களெல்லாம் கருண்டு போவார்கள்.

### 11. தர்ம லிலி

இவன் புண்ணியத்தை நடத்துகிறவன். இவனை ஒரு ரிஷபமாக செய்து வணங்கி வருகிறார்கள்

### 12. மன்னார்சாமி

இவனை ஒரு தெய்வம் என்று விக்கிரகத்தைச் செய்து வணங்கி வருகிறார்கள்.

## தேவிகள்

இந்துக்களுடைய தேவர்களைப் போல தேவதைகள் அதிகமாக இருக்க வேண்டியதே. ஏனெனில் சில தேவர்களுக்கு அநேக மனைவிகளும், பல கூத்திகளும் இருக்கிறார்கள்.

### 1. பார்வதி

சிவனுடைய மனைவி. துர்க்கா என்ற ராட்சதனை இவள் சங்காரம் பண்ணினபடியால் இவளுக்கு துர்க்கை என்று பெயர். இவளுடைய பெயர்களாவன :

பார்வதி, அந்தரி, அமலை, அம்பிகை, அம்மை, ராணி, அரவிழந்தோள், ஆரிகை, இமயங்கலி, உமை, உமையவள், உடுத்திருள், ஐயை, கௌரி, காமக்கோட்டி, சங்கரி, சத்தி, சாம்பவி, சிவை, தேவி, நாயகி, நாரி, பகவதி, பருப்பதி, பவானி, மரகதவல்லி, மலமடந்தை, மாதா, முக்கண்ணி, துர்க்கை, அமரி, அம்பணத்தி, அரியேறி, ஆழியுத்தி, எண்டோளி, கலையாவந்தி, கலையூர்தி, கன்னி, காத்தியாயினி, கார்த்திகை, குமரி, கொற்றவை, குமற்றி, சங்கரபாணி, சக்ராயுகத்தி, சண்டிகை, சமரி, சயமகள், சுந்தரி, சூலி, தேவி, நாரணி, நாராயணி, நீலி, பாலைக்கிளத்தி, மயிடச்சொற்றுள், மாலிலையாள், மேதி சென்னிமிதித்தாள், வாழ்க்கைக் கொண்டாள், விசையை, விந்தை விரச் செல்வி, விரி, காளி, ஐயை அவகைக் கொடியாள், ஆரணி, எண்டோவி, கங்காளி, குண்டலி, சாமுண்டி, சூரி, தாரகவினுசினி, தாரகச் சொற்றுள், பதுமை, பத்திரி, பைரவி, மதுபதி, மாதங்கி, மாதவி, மாயை, மாயையுற்றுள், மாலினி, யாமலை, யாழியூர்தி, யோகினி, வல்லவைங்கு, விரி, வேதனனி.

இவள் உலக சிருஷ்டிப்புக்கு ஆதாரமானவள் என்றும் சொல்லிக் கொள்வார்கள். இவள் பத்து அவதாரங்கள் செய்தாளாம். பக, துர்க்கை, சுருபா. பார்வதிக்கு பத்து கைகள் உண்டு. வலது கையில் ஈட்டியையும், இடது கையில் சர்ப்பத்தின் வாலையும் பிடித்துக் கொண்டு இருக்கிறாள். இவள் தக்கனுடைய

வீட்டில் முதற் பிறந்தவள், இவளை சிவன் கலியாணம் பண்ணும் பொழுது சக்தி என்னப் பட்டாள். ஒருநாள் தன் தகப்பன் தன் புருஷனை தூஷித்தபடியால், தன்னை மாய்த்துக் கொண்டாள். அவள் மறுபடியும் இமயமலையில் குமாரத்தியாகப் பிறந்து பார்வதி என்று அழைக்கப்பட்டு சிவனுக்கு வாழ்க்கைப்பட்டும் அவனுக்கு சுப்பிரமணியனையும், பிள்ளையாரையும் பெற்றாள். யமுனை என்ற ஆற்றைக் கடந்து போக துர்க்கை கழுதை ரூபம் எடுத்தாள். வங்காளத்திலுள்ள காளி கோயிலில் சகல அக்கிரமங்களும், நரபலியும் முக்கியமாக இருக்கிறது. சக்தி பூசையில் அகந்தையை எழுதவே கூடாத அளவுக்கு அசிங்கமானது. சில இடங்களில் சக்திக்கு நரபலிகளும் செலுத்தப்படுகின்றன.

2. லட்சுமி

இவள் பெயர்களும் பலவுண்டு. லக்குமி, அரிப்பிரியை, ஆக்கம், இந்திரை, இலையாள் கமலை என்று பல பெயர்கள் சொல்லப்படுகிறது. இவள் விஷ்ணுவினுடைய மனைவி. விஷ்ணு, இவளை சமுத்திரத்தைக் கடையும் போது வந்தபொழுது மனைவியாக எடுத்துக் கொண்டான் என்று எழுதப்பட்டுள்ளது. இவள் நிறம் மஞ்சள். இவள் செல்வத்துக்கும், மோகத்துக்கும் தேவி என்றும், உலகத்துக்குத் தாய் என்றும் எண்ணி வணங்குகிறார்கள். இவள் வயிற்றில் மன்மதன், சந்திரவல்லி, அமிர்தவல்லி என்பவர்கள் பிறந்தார்கள்.

3. சரஸ்வதி

இவள் பிர்மாவின் மனைவி. இவளுக்கும் பல பெயர்களுண்டு. கலைமகள், காயத்திரி, சாவித்திரி, ஞானமூர்த்தி, தண்டாச்சுகம், தூயாள், நாமகள், நான்மகள் மொத்தி, பனுவலாட்டி, பரமகள், பாமதவல்லி, பாரபிரமி, பூவாகினி, வாணி, வெண்டமையாள், வெண்சிரமுற்றாள், வெள்ளைநிறத்தாள், வெள்ளைமெய்யாள், இந்துக்கள் அனைவரும் இந்த சரஸ்வதிக்கு கல்வியைத் தொடங்கும்போதெல்லாம் விசேஷமாய் பூசை செய்து வணங்குகிறார்கள். எல்லா பாஷைகளும் இவளுடைய ஆதினமென்றும், இவள் அனுக்கிரகத்தினாலே எல்லாரும் கல்விமான்களாகிறார்களென்றும் இவர்கள் நம்பிக்கொள்கிறதுமல்லாமல், இவளை உலகத்துக்கெல்லாம் முக்கியமான மாதா என்றும் சொல்லிக் கொள்கிறார்கள்.

சீதை ராமனுடைய மனைவி; ருக்மணி கிருஷ்ணனுடைய மனைவி; ராதை கிருஷ்ண னுடைய வைப்பாட்டி; மாரியம்மன், புன்னி னைத்தாள், சல்வேரி, கன்னிகை முதலிய தேவிமார்களையும் இந்துக்கள் வணங்குகிறார்கள்.

## சாமானியத் தேவர்கள்

இவர்கள் எல்லாரும் காசியப்ப பிர்மாவினாலே உண்டாக்கப்பட்டவர்கள்.

1. ராட்சதர்

இவர்களுக்கு பொதுப் பெயரான ராக்கதர், அரக்கர், இடும்பர், சாலக் கடங்கர், நிருதர், பிசிதாசதர், யாதுதானவர், வானோர் மாற்றதர், மாலி, சுமாலி, ராவணன், கும்பகர்ணன், விபீஷணன், இந்திரசித்தன், அதிகாயன் முதலிய ராட்சதர்கள் பிரதானமானவர்கள். இவர்கள் ஸ்தலம் தென்மேற்கு என்பது காதளவு சுற்றளவான இலங்கைத் தீவு. இதிலிருந்து கும்பகர்ணனுடைய படுக்கை இரண்டாயிரம் காதவெளி நீளமாயிருந்ததாம்.

2. கந்தர்வர்

கின்னரரும், ஆண் பெண்ணாகிய பாடகர்கள். இவர்கள் வீணையில் வல்லோர்,

3. வித்தியாதரர், விஞ்சையர் அதாவது கூத்தாடுபவர்கள்.

4. அப்சரர் நடனம் பண்ணுகிற அழகுள்ள ஸ்திரீகள். இவர்களில் ஐந்து பேர்கள் விசேஷமாக தேவர்களுடைய சபைகளிலே இந்திரனுடைய சபைகளிலேயும் நடனத்தில் வல்லவர்களாயிருந்து இந்திரனால் பட்டம் பெற்றவர்கள்.

இவர்கள் தேவர்களின் வைப்பாட்டிகளுமாகும்.

## அஷ்டாதசனங்கள்

1) அமரர் (வானவர்)
2) சித்தர்
3) அசுரர்
4) தைத்தியர்
5) கருடர்
6) கின்னரர்
7) நிருதர் (ராக்கதர்)
8) கிம்புருடர்
9) கந்தர்வர் (தேவ பாடகர்)
10) ஏக்கர்
11) விஞ்சையர் (வித்தியாதரர்)
12) பூதர்
13) பிசாசர்
14) அந்தரர்
15) முனிவர்
16) உறக்கர் (நாகர்)
17) ஆகாயவாசிகள்
18) போகபுவியர்

மேற் சொல்லிய தேவர்கள் தேவிகளின் சரித்திரத்தையும், நடபடிகளையும் அவர்களுடைய புராணங்களில் எழுதப்பட்டிருக்கிறபடி சொல்வோமானால் அக்கிரமம் உள்ளதும், அசிங்கமானதும் விஸ்தாரமுமாக இருக்கும் என்று எண்ணி சுருக்கிச் சொல்கிறோம். அவைகளை பாகவதம், கந்தபுராணம், திருவிளையாடல், பாரதம் முதலிய புஸ்தகங்களிலிருந்து காணலாம். பொதுவாக பழமொழிகள் சொல்வார்கள், கந்தபுராணத்தில் இல்லாத புழுகு எந்த புராணத்திலும் இல்லை என்று. இந்துக்கள் மேற் சொல்லிய மும்மூர்த்திகளையும், தேவர்களையும், தேவிகளையும் வணங்குகிறதுமன்றி மிருகங்களையும், சர்ப்பங்களையும், பட்சிகளையும் மச்சங்களையும், விருட்சங்களையும், ஆறுகளையும், கிரகங்களையும், ஆயுதங்களையும், சில கற்களையும், சிலவேளைகளில் வணங்கி வருகிறார்கள்.

1) மிருகங்களில் பசு மகா முக்கியம், ஏனெனில், பிர்மா பிராமணர்களையும், பசுவையும் ஒரே சமயத்தில் உண்டாக்கினாராம். அதினால் அதன் சாணியையும் கோமயமும் முக்கியமான வஸ்துக்கள்.

எருது சிவனுடைய வாகனமாதலால் சிவஸ்தலங்களில் எல்லாம் அதன் ரூபம் முற்புறத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. வருஷத்துக்கு ஒரு விசை மாட்டுக்குப் பொங்கல் என்று ஒரு திருவிழாவும் நடந்தே வருகிறது.

அனுமான் (குரங்கு)

வாயுதேவனுடைய மகனானதாலும், சிவ அவதாரங்களில் ஒன்றாய் இருக்கிறதினாலும் கோவில்களில் சேஷ்டை செய்யும் குரங்குகளை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நாய் வைரவனுடைய வாகனமாகையால் அதை வைரவசுவாமி என்று வணங்குகிறார்கள் மேலும் பார்வதி அவதாரமாகி நரி, யானை, சிங்கம், எருமை, பெருச்சாளி, மான், ஆடு இவைகளாக மாறி சிவன்கூட சேர்ந்ததினால் பிறந்தவைகளாக இவைகளெல்லாவற்றையுமே தேவர்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்கிறார்கள்.

பட்சிகள்

மனுஷ ரூபத்தையும், பட்சி ரூபத்தையுமுடைய காசியப்பிர்மாவின் பெண்சாதி இட்ட முட்டையிலிருந்து விஷ்ணு வாகனமாயிருக்கிற கருடனும் அன்னமயிலும், சூரிய ரதத்தை ஓட்டுகிற கர்ணனுடைய அண்ணனாகிய அருணனும், ராமன் பெண்சாதி சீதைக்காக ராவணனுடன் யுத்தம் செய்த சடாயுவும், பருந்து முதலியவைகளும் விசேஷித்தவைகள்.

3. மச்சங்களில் மகரமும் ஆமையும் விசேஷித்தவைகள்.

4. விருட்சங்களில் துளசி என்கிற ஒரு ஸ்திரீ வெகுநாள் தபசு பண்ணி விஷ்ணுவுக்கு மனையாட்டியாகும்படி கேட்டுக் கொண்டாள், அதை லட்சுமி அறிந்து சபித்துப் போடப்பட்ட துளசியும், விஷ்ணுவினுடைய மார்பிலே துளசி மாலையாக தரிக்கப்படுகிறாள். வில்வம், ருத்திராட்சம் சிவனுக்கு பிரீதி, அசோகம் அருகனுக்கு பிரீதி.

5. ஆறுகளில் கங்கை, யமுனை, சரஸ்வதி

திருவேணி, கோதாவரி, நர்மதை, காவேரி, தாமிரபரணி, துங்கபத்திரை, கிருஷ்ணே, பிரம்மபுத்திரா, வைதாணி முதலிய புண்ணிய நதிகள். இவைகளில் ஸ்நானம் பண்ணினவர்களுக்கு பாவ விமோசனம் உண்டாகுமென்றும் மோட்சம் உண்டாகுமென்றும் நம்பி எல்லாரும் ஸ்நானம் செய்து கொண்டு வருகிறார்கள். சிலர் இந்நதிகளுக்கு பூசைகளையும் நடத்திக் கொண்டு வருகிறார்கள்.

6. நவக்கிரகங்களாகிய ஆதித்தன், சோமன், அந்தகாரகன், புதன், பிரகஸ்பதி, சுக்கிரன், சனி, ராகு, கேது என்பவைகளும் தேவர்களே.

7. பூசிக்கப்பட்ட கற்களில் சாலிக்கிராமம் மகாமுக்கியம். விஷ்ணு நவக்கிரகங்களை, மனுஷர்களுடைய விதிக்கர்மங்களை நடத்தி சிருஷ்டித்த பின்பு சனியானவன் பிரம்மதேவனை தன் ஆளுகைக்குள் 12 வருஷ காலம் வைத்திருக்க வேண்டுமென்று கேட்டான். பிர்மா அவனை விஷ்ணுவிடத்திற்குப் போகச் சொன்னான். சனி அவனைப் போய்க் கேட்ட போது அவன் பயந்து ஒரு மலையாய் மாறி நின்றான், சனி அதை அறிந்து வச்சிரக் கேத்தாய் என்ற புழுவாகி விஷ்ணு மாறின காண்டாகே மலையைப் போய் 12 வருஷமாய் விஷ்ணுவை வதைத்தான். இந்த உபத்திரவத்தைப் பொறுக்கமாட்டாமல் விஷ்ணு தன் சொந்த உருவெடுத்து அந்த மலையின் கல்லுகள் நமஸ்கரிக்கப்படும்படி கட்டளை கொடுத்தான். இந்தக் கல்லில் இருக்கிற இடமெல்லாம் சுத்தமாம். சில கற்கள் 2,000/- ரூபாய்க்கு விற்கப் படுகின்றன.

8. பல ஆயுதங்களையும், கவடிகளையும் வருஷந்துக்கு ஒருவிசை ஐப்பசி மாசத்து சித்திருப் பட்சத்தில் பிரதமை முதல் நவமி பரியந்தம் நவராத்திரி என்று சொல்லப்பட்ட புண்ணிய தினங்களில் மகா முக்கியமாய் பூசை செய்து தொழுது கொண்டு வருகிறார்கள். கோயில்களிலும் விசேஷமாய் இந்த நவராத்திரி கொலு செலுத்தி மிகுந்த சிறப்புடனே உச்சாதிகளை நடத்திக் கொண்டு வருகிறார்கள்.

(தொடரும்)

''பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள்''.

(வெளி. 21:8)

# யார் கிறிஸ்தவன்?

கிறிஸ்தவன் (Christian) கிறிஸ்துவை விசுவாசிக்கிறவன். இந்நாமம் அந்தியோகியாப் பட்டணத்திலே கி.பி. 42-ம் வருடத்தில் இயேசுநாதருடைய சீஷர்களுக்குக் கொடுக்கப் பட்டது (அப். 11:26). ஆதி கிறிஸ்தவர்கள் தங்களுக்குள்ளே சகோதரர்கள், விசுவாசிகள் பரிசுத்தவான்களென்றும், அந்நியராலே நசரேனர் எனறும், கலிலேயர் என்றும் அழைக்கப் பட்டார்கள்.

1. கிறிஸ்தவன் என்பது ஒவ்வொரு விசுவாசிக்கும் பொதுப் பெயர். இந்தப் பெயரைத் தரித்துக் கொண்டவர்களுக்குள் வித்தியாசம் இருக்கக் கூடாது (I கொரி. 1:12-15; கொலோ. 3:11; சகரி 14:9). ஆதிக் கிறிஸ்தவர்களுக்குள் ஒருவன் அஞ்ஞான நியாதிபதிக்கு முன்பாகத் துன்பப்படுத்தப்பட்டு நியாயந் தீர்க்கபபட்டபோது நியாயாதிபதி அவனை நோக்கி உன் பெயர் என்ன என்று கேட்க கிறிஸ்தவன் என்றான். உன் ஊர் என்னவென்று கேட்க கிறிஸ்தவன் என்றான், உன் தொழில் என்னவென்று கேட்க கிறிஸ்தவன் என்றான். கிறிஸ்தவன் என்கிற கனமான நாமத்தைப் பார்க்கிலும் உலகத்தில் வேறொரு கனமான நாமம் இல்லை. "A christian is the highest Style Man" முன்னே அஞ்ஞானிகளாயிருந்து பின்பு கிறிஸ்து மார்க்கத்தில் பிரவேசித்த கல்விமான்களாகிய யுஸ்தினுஸ், அத்தேனசோர்ஸ், தெர்துல்லியான், ஒரிகன் முதலானவர்களும் தங்கள் தங்கள் காலத்திலிருந்த

அஞ்ஞானிகளுக்கெழுதின மாறுத்தரவுகளில் பூர்வகாலத்துக் கிறிஸ்தவர்களைக் குறித்து விசேஷமான சாட்சிகளைச் சொல்லியிருக்கிறார்கள். அவர்களில் யுஸ்தினுஸ் எழுதினது, முன்னே விபச்சாரத்தில் பிரியமாயிருந்த நாங்கள் இப்போது கற்புள்ளவர்களாயிருக்கிறோம். முன்னே பில்லி சூனியங்களைச் செய்த நாங்கள் இப்போது எங்களை மெய்யான தேவனுக்கு ஒப்புக் கொடுத்திருக்கிறோம், முன்னே பணத்தின் மேலும் மிகுந்த ஆதாயத்தின் மேலும் மிகுந்த ஆசையுள்ளவர்களாயிருந்த நாங்கள் இப்போது எங்களுக்கு உண்டாயிருக்கிறவைகளை பொதுவாக அனுபவித்து யாவருக்கும் வேண்டியவைகளைப் பகிர்ந்து கொடுக்கிறோம் என்றெழுதினார்.

ஓரிகோன் என்பவரும் செல்லசுக்கு எழுதிய மாறுத்தரவிலே சொன்னதாவது, நீர் எங்களில் சிலருடைய நடக்கைகளைக் குறித்து விசாரணை செய்யும். எங்களுடைய முந்திய நடக்கையையும் இப்போதிருக்கிற நடக்கையையும் ஒத்துப் பாரும். அப்போது கிறிஸ்து மார்க்கத்தின் உபதேசங்களை ஏற்றுக்கொள்கிறதற்கு முன்னே அவர்கள் நடப்பித்து வந்த அசுத்தங்களும், துன்மார்க்கங்களும் இன்னவைகளென்றும், கிறிஸ்து உபதேசங்களை ஏற்றுக் கொண்டபின் அவர்கள் நடப்பித்து வருகிற நீதிகளும். நல்லொழுக்கங்களும் இன்னவைகளென்றும் அறிந்து கொள்வீர். மேலும் பரிசுத்தத்தின் மேலுள்ள மிகுந்த ஆசையினாலே சிலர் நியாயமாய் அநுபவிக்கத்தக்கவைகளையும் விட்டுவிட்டார்கள். ஆகையால் பொல்லாத துன்மார்க்கங்களிலிருந்து அநேகரை சன்மார்க்கராக்கியிருக்கிறவர்கள் மனிதருக்குள்ளே பெருவாரிக் காய்ச்சலாயிருப்பதெப்படி என்றெழுதினார்.

அல்லாமலும் இலக்குத்தந்தியுஸ் என்பவர் எழுதியதாவது: கிறிஸ்தவர்களல்ல, விக்கிரக ஆராதனைக்காரரே தரையிலேயும் சமுத்திரத்திலேயும் கொள்ளையிட்டுத் தங்கள் மனைவியின் பரிசபணத்தை அடையும் படிக்கு அவர்களுக்கு நஞ்சைக் கொடுக்கிறவர்கள். ஸ்திரீகள் தங்கள் சோர நாயகரைக் கலியாணம் பண்ணும்படிக்குத் தங்கள் புருஷரைக் கொலை செய்கிறவர்கள். புருஷர்கள் தங்கள் குழந்தைகளை அழித்து தங்கள் குமாரத்திகள், சகோதரிகள், தாய்மார்கள் முதலானோர்களோடு விபச்சாரம் செய்து, பில்லி சூனியத்தினாலே நல்ல புத்தியும், மோட்சமும் வருமென்றெண்ணி சொல்லத் தகாத அசுத்தங்களை நடப்பித்து வருகிறவர்கள் என்றார். அக்காலத்திலிருந்த அஞ்ஞானிகள் பொறாமையினாலே கிறிஸ்தவர்களுடைய நடக்கைகளைப் புகழாமலிருந்தும் அவர்களுடைய நடக்கை பரிசுத்தமாயிருந்ததினாலே கிறிஸ்தவர்களைக் குறித்து பல நற்சாட்சிகளை கொடுத்திருக்கிறார்கள். ஆகையால் அந்தக்காலத்திலிருந்த விக்கிரக ஆராதனைக்காரர் இவன் கிறிஸ்தவனாயிருக்கிறது மாத்திரமல்ல நல்ல மனிதனாயிருக்கிறான் என்று வழக்கமாய்ச் சொல்லி வந்தார்கள்.

மேலும் துரையாகிய 'பிளினி' என்பவன் ராஜாவுக்கெழுதின கடிதத்தில் கிறிஸ்தவர்கள் கிறிஸ்துவைக் குறித்து சங்கீதம் பாடுவதற்கு அதிகாலையில் கூடிவருகிற குற்றத்தையேயல்லாமல் வேறொரு குற்றத்தையும் அவர்கள் மேல் சாட்டவில்லை. அல்லாமலும் கி.பி. 403ம் வருஷத்திலேயிருந்த பதிதனாகிய யூலியான் என்னும் ராஜா அர்சாக்கியூஸ் என்னும் ஆசாரியனுக்கு எழுதின நிருபத்திலே அஞ்ஞானிகள் கிறிஸ்தவர்களுடைய நடக்கைகளைப் பார்த்து பின்பற்றும்படி எழுதினதுமல்லாமல் கிறிஸ்தவர்கள் அஞ்ஞானிகளுக்கும் பகைவர்களுக்கும் ஒத்தாசைகளைச் செய்கிறவர்களாயிருக்க விக்கிரக ஆராதனைக்காரர்கள் தங்களைச் சேர்ந்தவர்களையும் எண்ணாமற் போகிறது மிகவும் வெட்கப்படத் தக்கதாயிருக்கிறது என்று எழுதினான். இப்படி சிநேகிதர்களும் பகைவர்களும் எழுதின சாட்சிகளினாலே கிறிஸ்து மார்க்கத்தை அணைந்துக் கொண்டவர்கள் அதனாலே நல்லவர்களானார்களென்று வெளியரங்கமாயிருக்கின்றது.

2. உண்மையுள்ள கிறிஸ்தவனாயிருப்பதென்றால் 1. பாவத்துக்கு விலகியிருப்பதும் (II தீமோ 2:19 : யாக். 2:7 - 12).

2. நம்மை நாம் வெறுத்து நம்முடைய சிலுவையை எடுத்துக் கொண்டு கிறிஸ்துவைப் பின்பற்றிச் செல்லுகிறதும் (லூக். 9: 23 ; 14 : 26).

3. கிறிஸ்துவினுடைய மாதிரியைப் பின்பற்றி அவருடைய சிந்தையைப் போலும் சிந்தையுள்ளவர்களாய் இருப்பதுவுமே (1கொரி 11 : 1, பிலி. 2:5).

ஆதியிலே ஏழைகளும் அறிவீனர்களுமேயொழிய கனமுள்ள, அறிவுள்ளவர்களொருவரும் கிறிஸ்தவர்களாகவில்லை என்பதுஅபத்தமென்பதற்குத் திருஷ்டாந்தமாக இஸ்ரவேலில் ஒரு தலைவனும் குருவுமாயிருந்த நிக்கோதேமும், ஐசுவரியவானாகிய அரிமத்தியா ஊர் யோசேப்பும், ஜெப ஆலயத் தலைவனாகிய யவீரும், எரிகோ பட்டணத்திலிருந்த ஆயக்காரர்களுக்குத் தலைவனான சகேயுவும்,சாதுரியவானான அப்பொல்லோவும், கற்றுணர்ந்த சவுலும் (அப். பரி. பவுல்)சீப்புரு தீவுக்கு பிரதிதுரையாயிருந்த விவேகமுள்ள செர்கியுபவுலும்,ரோம சேனைத்தலைவனான கொர்நேலியும், அத்தனே (ஏதென்ஸ்) பட்டணத்து நியாயாதிபதியும் அதிகார புருஷனுமாயிருந்த தியோனிசியும், கொரிந்து பட்டணத்து உக்கிராணக்காரனாகிய ஏரெஸ்தும், கொரிந்து பட்டணத்திலிருந்த இலக்கண சாஸ்திரியாகிய திரன்னுவும், மெலித்தா தீவுக்கு முதலாளியாயிருந்த புபுலியும், கொலோசே பட்டணத்தில் சிரேஷ்டனாயிருந்த பிலமோனும் சமாரியாவிலிருந்த தர்க்கவாதியும் பெரிய மந்திரவாதியுமான, சீமோனும், நியாய சாஸ்திரியாகிய சேனாவும், அரமனையைச் சேர்ந்த (ரோம்) அநேகரும் அப்போஸ்தலர்களுடையக் காலத்திலேதானே கிறிஸ்தவர்களானார்கள். இவர்களல்லவா கிறிஸ்தவர்கள்.

சகோதரனே சகோதரியே நீயும் கிறிஸ்தவனா ? சரி கிறிஸ்தவனாயிரு.

---

# வேத பாடம் (தொடர்ச்சி)

லேவி 21-அதி :- மத சம்பந்தப்பட்டதும், ஆசாரியனுக்குரிய கட்டளையும் அவனுடைய பரிசுத்தத்துக் கடுத்த விஷயமுமாகும்.

லேவி 21:1-9 :- ஆசாரியனுக் கடுத்த கட்டளைகள்

*21:1-4* :- ஆசாரியர்கள் தன் இனத்தார் இறந்த யாதொருவனுக்காகவும் தன்னை தீட்டுப்படுத்தலாகாது. தாய், தகப்பன். தன் குமாரன், தன் குமாரத்தி, தன் சகோதரன், புருஷனுக்கு வாழ்க்கைப்படாமல் தன்விடத்திலிருக்கிற கன்னியாஸ்திரியாகிய தன் சகோதரி, தனக்கு நெருங்கிய இனமான இவர்களுடைய சாவுக்காக தீட்டுப்படலாம். தன் ஜனத்தாரில் பெரியவனாகிய அவன் வேறொருவருக்காகிலும் தன்னைப் பரிசுத்த குலைச்சலாக்கித் தீட்டுப்படுத்தலாகாது. அவர்கள் தங்கள் தலையை மொட்டையடிக்காமலும், தங்கள் தாடியின் ஓரங்களை சிரைத்துப்போடாமலும், சரீரத்தில் எந்த இடத்திலும் Cut பண்ணாமலும், கீறாமலும் இருப்பார்களாக; தங்கள் தேவனுடைய நாமத்தை பரிசுத்தக் குலைச்சலாக்காமல் அவருக்கேற்ற பரிசுத்தர்களாக அவர்கள் விளங்க வேண்டும். கர்த்தரின் தகனபலியையும், தங்கள் தேவனுடைய அப்பத்தை செலுத்துகிறவர்களாதலால் பரிசுத்தமாய் இருக்க வேண்டும். அவர்கள் பரிசுத்தமானவர்கள் ஆகையால் வேசியையாகிலும், கற்பு குலைந்தவளையாகிலும், விதவைகளையாகிலும், தன் புருஷனாலே தள்ளப்பட்ட ஸ்திரீயையாகிலும் விவாகம் பண்ணலாகாது. தன் ஜனத்தாரில் கன்னிகையாயிருக்கிற ஒரு பெண்ணையே அவன் விவாகம் முடிக்கலாம். (வச 13,14,15) பொதுவாக புருஷனால் தள்ளப்பட்டவளை விவாகம் முடிக்கிறது அருவருப்பாகும் (உபா. 24:1-4). ஆசாரியர்கள் தேவனுடைய தகனபலிகளையும், தங்கள் தேவனுடைய அப்பத்தையும் செலுத்துகிறவர்களாயிருக்கிறபடியினால் அவர்கள் பரிசுத்தமாயிருக்க வேண்டும்.

கர்த்தர் பரிசுத்தர் ஆகையால் அவருக்குரியவனாகிய ஆசாரியனும் பரிசுத்தமானவனாயிருக்க வேண்டும்.

**21:6,7-** ஆசாரியனுடைய குமாரத்தி வேசித்தனம் பண்ணி தன் தேவனுடைய நாமத்தையும் தன் தகப்பனுடைய பெயரையும் பரிசுத்தக் குலைச்சலாக்க விடக் கூடாது ஆசாரியன் தேவனுடைய சட்டத்தின்படி அவ்விதமான, பெண்களை அக்கினியினால் சுட்டெரித்துப் போட வேண்டும்

**லேவி 21:9 :-** பிரதான ஆசாரியன், லேவி 21:10-15 முடிய பிரதான ஆசாரியனுக்குரிய கட்டளை கொடுக்கப்பட்டிருக்கிறது. பிரதான ஆசாரியன் அபிஷேகத் தைலத்தினால் அபிஷேகிக்கப்பட்டவனும், பரிசுத்த வஸ்திரம் தரிப்பிக்கப்பட்டு பிரதிஷ்டைபண்ணப்பட்டவனுமாயிருக்கிறான். ஆனபடியினால் எந்த பிரேதத்துக்காகிலும் தன் பாகையை எடுக்காமலும், தன் வஸ்திரங்களைக் கிழித்துக் கொள்ளாமலும். பிரேதம் கிடக்கும் இடத்திற்குப் போகாமலும், தன் தகப்பனுக்காகவும், தன் தாயக்காகவும் தன்னைத் தீட்டுப் படுத்திக் கொள்ளாமலும், பரிசுத்த ஸ்தலத்தை பரிசுத்த குலைச்சலாக்காமலும் இருப்பானாக. ஏனெனில் அவனுடைய தேவனுடைய அபிஷேகத்தைலம் என்னும் கிரீடம் அவன்மேல் இருக்கிறதே. ஆசாரியன் கன்னிகையாயிருக்கிற ஒரு பெண்ணையே விவாகம் முடிக்கலாம். பிரதான ஆசாரியன் தன் இனத்தாரில் தன்னுடைய தாய் வழியில வந்த இனத்தாரில் ஒரு கன்னிகையை விவாகம் முடிக்கவும். ஏனென்றால் அவனுடைய ஆசாரிய ஊழியத்தில் அவள் மிகவும் உதவியாக இருப்பாள். லேவி 21:16-24 ஆசாரியனுக்கு இருக்க வேண்டிய சரீரத் தகுதிகள். 11 தகுதிகளாகும். அதாவது ஊழியத்திற்கு தகுதியில்லாதவன், ஆசாரியனாயிருக்கத் தகுதியில்லாதவன் இன்னென்னார் என்று இந்தப்பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது

1. **சப்பாணி :-** அதாவது ஊழியத்தில் அசதியாயிருக்கிறவன சோம்பேறி. *(எரே. 48:10)*

2. **குறுகின அவயவமுள்ளவன் :-** இது மந்தபுத்தியுள்ளவன் உபதேசத்திலோ, பரிசுத்தத்திலோ வாழ்க்கையே இலாதவன் வளர்ச்சியுமில்லாதவன் *(நீதி 14:14)*

3. **நீண்ட அவயவமுள்ளவன் :-** இது மிஞ்சின நீதிமான். வேதத்திலில்லாத பரிசுத்தம் பேசுகிறவன் *(பிர 7:16)*.

4. **காலொடிந்தவன் :-** இது பாவத்தில் விழுந்தும் எழுந்திருக்கமாட்டாது பாவமே போதுமெனறிருக்கிறவன் *(I தீமோ. 1:19)*.

5. **கையொடிந்தவன் :-** இது நற்கிரியையை செய்கிறதை விட்டுவிட்டவன் *(நீதி 25:14)*

6. **கூனன் :-** உலகத்தையே ஆசித்துக் கொண் . மேலானவைதை நோக்காதவன் *(II தீமோ. 4:10)*.

7. **குள்ளன் :-** இது மகிமையில் ஆசையில்லாதவன். இரட்சிப்பில திருப்தியடைந்து, இரட்சிப்பே போதுமென்று ஜீவிக்கிறவன். மேற்கொண்டு வளர்ச்சியை விரும்பாதவன *(சங் 78:41)*.

8. **பூவிழுந்த கண்ணன் :-** இது மகிமையின் பிரகாசத்தை இழந்தவன், அன்பில்லாதவன் *(I யோ 2:11)*

9 **சொறியன் :-** இது எப்பொழுதும் மற்றவர்கள் குற்றத்தையே பேசி நடக்கிறவன், அதாவது அலப்புகிறவன் *(நீதி 10:10; ரோம 2:1)*

**10. அசுசியுள்ளவன் :-** இது தன் ஜீவியம் நாறும் வண்ணம் ஜீவிக்கிறவன் (ரோம. 2:21-24).

**11. விதை நசுங்கினவன் ;-** இது ஆத்தும ஆதாயம் செய்ய திராணியில்லாதவன். இது ஆத்தும தாகம் இல்லாதவன் என்பதையும் அறிய வேண்டும் (எசே. 34:18). இவ்வித மான சுபாவமுள்ளவர்களும் ஊழியத்திற்கு ஆகாதவர்கள் என்பதை வேதாகமம் குறிப் பிட்டுள்ளது.

இந்நாட்களில் சாத்தான் தன்னுடைய கையாட்களை, இவ்விதமான சுபாவமுள்ளவர்களை தன்னுடைய ஊழியக்காரர்களாக வெளியே உலாவ விட்டிருக்கிறான். இதைக் குறித்து தேவ ஜனங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தேவனுடைய ஊழியர்களுக்கு உள்ள தகுதி நலக்கு உண்டோ என்று ஒவ்வொருவனும் நோக்கிப் பார்ப்பானாக

**லேவி 21:21-24 :-** ஆசாரியனாகிய ஆரோனின் சந்ததியாரில் அங்கவீனமுள்ள ஒருவனும் கர்த்தரின் தகனபலியை செலுத்தவோ, தேவனுடைய அப்பத்தை செலுத்தவோ தேவ சந்நிதானத்தில் சேரக்கூடாது. அவன் தன் தேவனுடைய அப்பமாகிய மகா பரிசுத்த மானவைகளில், மற்ற பரிசுத்தமானவைகளிலும் புசிக்கலாம். ஆனாலும் அவன் அங்கவீன முள்ளவனாகையால் அவன் பரிசுத்த ஸ்தலத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்காதபடிக்குத் திரைக் குள்ளே போகாமலும், பலிபீடந்தண்டையிலே சேராமலும் அவன் இருக்க வேண்டும். ஆனால் அவன் சாதாரண அங்கத்தினனாக, இஸ்ரவேலனாக இருக்கலாம். ஆசாரியனாய், வேத ஊழியக்காரனாய் அவன் ஊழியம் செய்யக் கூடாது-என்பதாம்.

(தொடரும்)

---

*...''குற்றஞ்சாட்டப்படாதவர்களானால் உதவிக்காரராக ஊழியஞ் செய்யலாம்.''*
*(1 தீமோ 3:10)*

---

# கிறிஸ்தவ திருமணம் (தொடர்ச்சி)

இருமணம்! திருமணம்! திருமணம்! என்ன தான் அதன் பொருள்?

வயது வந்த ஒரு ஆணும் பெண்ணும் இல் லற வாழ்க்கை நடத்த ஒன்றுபடுவதே மணம் என்ற சொல்லின் மூலம் குறிப்பிடுகிறார்கள். இது ஒரு சிறப்பான புனிதமான செயல் என்ப தைக் காட்டத்தான் 'திரு' என்ற சிறப்புக் குறிக்கும் சொல் அத்துடன் சேர்க்கப்பட்டுள் ளது. ஒருத்தனுக்கு ஒருத்தியே, ஒருத்திக்கு ஒருவனே இறைவனுடைய நியமனம். சில தவறான மதங்கள் இரண்டு மனைவிகள் வைத் துக் கொள்ளலாம். 5 மனைவிகள் வைத்துக் கொள்ளலாம் என்று மனிதனுடைய மாம்ச இச்சைக்கும், சுயநலத்திற்கும் இடம் கொடுக் கின்றன. அவ்விதமாக ஒருத்தி 5 புருஷனை வைத்துக் கொள்ளலாம். 2 புருஷனை வைத் துக் கொள்ளலாம். பல புருஷனை வைத்துக் கொள்ளலாம் என்றும் அவைகள் சொல்ல லாம். இவைகளெல்லாம் கெட்டுபோன உல கத்தில் அசுத்தமான நிலைகளாகும்.

தேவனுடைய நியமம் வேதாகமத்தில் மிக வும் திட்டமாக ஆதியாகமத்திலே அமைக்கப் பட்டுள்ளது. அவர் ஒருவனையல்லவா படைத் தார். பின்னை ஏன் ஒருவனைப் படைத்தார். ஆவி அவரிடத்தில் சம்பூரணமாயிருந்ததே பின்னே ஏன் ஒருவனை படைத்தார். தேவ பக்தியுள்ள சந்ததியை பிறப்பிக்கும்படித் தானே என்று மல். 2:15ல் திட்டமாக எழுதப்

பட்டுள்ளது. இந்த உலகத்தில் தோன்றியிருக்கிற எல்லாரையும் படைக்கவில்லை. அவர் ஒருவனைத்தான் படைத்தார். அவனுக்கு ஒருத்தியை உண்டாக்கினார். அவர்களுக்கு சந்தானம் உற்பத்தி செய்யும் அதிகாரத்தை வல்லமையை (Power) கொடுத்தார். உலகத்தில் சந்ததிகள் பெருகியிருக்கின்றன.

காணப்படுகிற மனித ஜாதிகளில் இயற்கையான மனிதர்கள் தேவசித்தத்தின்படி பிறந்தவர்கள். அப்படியில்லாதவர்களும் உலகத்தில் பிறந்திருக்கிறார்கள், பிறந்து கொண்டிருக்கிறார்கள். ஆதி. 6-ஆம் அதிகாரம் இருமனம் இணைப்பின் மூலமாக இருபாலரும் இறைவனுடைய கட்டுப்பாட்டுக்குள் அதாவது அவருடைய சட்ட நியதிக்குள் வாழ்ந்து சுகித்திருப்பதே தேவ சித்தம்.

இன்பம்! இன்பம்! இன்பம்! மணவாழ்க்கை தேன் குளத்துக்கும், இன்பச் சோலைக்கும் ஒப்பிட்டுப் பலர் எழுதியிருக்கிறார்கள். மணப்பந்தலில் பொங்கி வழியும் மகிழ்ச்சியும் சிரிப்பும், கோலாகலமும் இதைத்தான் முன்னறிவிக்கின்றன. உங்கள் இல்லத்தரசியை நீங்கள் முதன் முதலாக பார்த்தபோதும் அவரது கடைக்கண் நோக்கி நீங்கள் மறைந்தபோதும் அவரது தேன்குரல் ஒலியில் நீங்கள் மயங்கிய போதும் நீங்கள் இங்கேயே சொர்க்கத்தைக் கண்டதுபோல் உங்களுக்கு தோன்றியிருக்கும். இந்த இன்ப கோட்டை இருக்கிறதே இது உயிர்களுடைய உரிமை. நிச்சயம் இதில் மூழ்கி திளைக்க உங்களுக்கு உரிமை உண்டு.

ஆனால்,

மணவாழ்க்கையே வெறும் இன்பச் சுரங்கம்தான் என்று கணக்கிடுகிற தவற்றை நீங்கள் செய்யமாட்டீர்கள் என்று எண்ணுகிறேன். மணவாழ்வில் கடமைகள் ஏராளம் உண்டு. துன்பமும் நிறைய உண்டு. அவ்வப்போது இன்பங்களும் உண்டு.

கடமைகள் உண்டு என்று சொன்னேன். ஆமாம் அந்தக் கடமைகள்தான் உங்கள் மணவாழ்க்கை செழிக்கவும், இனிக்கவும், வெற்றியாக்கவும் கூடிய இரகசியங்களாகும். அவைகளை நீங்கள் சரிவர நிறைவேற்றும்பொழுது தான் நீங்கள் மணவாழ்வின் உரிமைகளுக்குத் தகுதியாக முடியும்.

## மணவாழ்வில் வெற்றி :-

மணவாழ்க்கையின் நுழைவாயலில் உங்களை நிறுத்தி வைத்துக் கொண்டு உங்கள் கடமைகளையும், உரிமைகளையும் நான் பேசுவதை நீங்கள் ஊன்றி கவனிப்பது அவசியம். அதுவே மணவாழ்வின் வெற்றியும், வெற்றி நீங்கிக் கொண்டிருக்கும் அக்கரையே. அந்த திசையில் நீங்கள் முதல் அடி எடுத்து வைக்க தீர்மானிப்பவர்கள் என்பதையும் காட்டுகிறது. மணவாழ்க்கையைப் பற்றி குறிப்பிடும்போது மேனாட்டு பேரறிஞரான Nirman Rice இப்படிக் குறிப்பிடுகின்றார் :- வாழ்வின் எல்லாத் துறைகளிலும் வெற்றி கண்டாலும் மணவாழ்வில் தோல்வி காண்பது போன்ற அவலம் வேறில்லை அதைவிட மற்ற எல்லா துறைகளிலும் தோல்வி கண்டாலும் மணவாழ்வில் வெற்றி பெறுவதே சிறப்பு என்று சொல்லுவேன் இதை உங்கள் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு அதற்காக முழுமனதோடு முயல ஆரம்பித்துவிட்டீர்களானால் வெற்றி உங்கள் பக்கம்தான். நிச்சயமாக ஒரு வெற்றிகரமான மணவாழ்க்கைக்கு வழிவகுக்கும் அம்சங்கள் தொடரும். உலக வரலாற்றில் இதுவரை எப்போதும் இல்லாத அளவுக்கு இப்பொழுது ஏராளமான பேர் மணம் புரிந்து வாழ்க்கை நடத்தத் தொடங்கியுள்ளார்கள். அறிவு முதிர்ந்த, மனம் முதிர்ந்த நிலையில் மணம் புரிந்து கொண்டு பெற்றோரையும் மற்றோரையும் விட்டுப் பிரிந்து தனி வாழ்க்கை நடத்தும் பேர்கள் இப்போது ஏராளமாயிருக்கிறார்கள்.

இளமை மணங்கள் அல்லது சிசு விவாகம் நலிந்துபோய் விட்டன. குடும்ப வாழ்க்கையைப் பற்றியும் திருமணத்தின் நோக்கங்களையும் பற்றி அறிந்துகொள்ளக் கூடிய வயதிலேயே இப்போது ஆண்களும், பெண்களும் மணம் புரிந்து கொள்ளுகிறார்கள். திருமண வாழ்க்கைப் பற்றியும், வாழ்க்கையின் வெவ்வேறு அம்சங்களைப் பற்றி படித்தலோ, பேசுதலோ கன்னிக் குறைவான செயலாக அல்லது தவறான செயலாகக் கருதப்பட்டக் காலம் ஒன்று இருந்தது. இப்போது மணவாழ்க்கை

யின் எல்லா பக்கங்களையும் பற்றி அறிந்து கொள்ள ஆர்வம் பெருகிவிட்டது. மண வாழ்க்கையின் வெற்றி பெற செய்திகளை அறிந்து கொள்ளுதல் மட்டும் போதாது. அறிந்து கொள்ளுகிற எல்லாவற்றையும் வாழ்க்கையோடு பொருத்திப் பார்க்கிறவர்களுக்கே வெற்றி கிட்டும். மணவாழ்க்கையில் வெற்றிபெறும் மணமக்கள் ஒவ்வொருவருடைய தனிப்பட்ட வெற்றி, அதுமட்டுமல்ல குடும்பத்தில் வெற்றி, அதன் பயனாக அது சமுதாயத்தின், நாட்டின் வெற்றி, திருச்சபையின் வெற்றியாகும்.

## மனைவியைப் புரிந்து கொள்ளுதல் :

மணவாழ்வின் வெற்றி, ஆர்வம், நாட்டம் கொண்டுள்ள நீங்கள் மணவாழ்க்கையில் வெற்றி பெறுவதாவது உங்கள் இருவரின் முயற்சியின் பயனாக விளைகின்ற கனி என்பதை உணர வேண்டும். அந்த வெற்றிக் கனியை சுவைக்க நீங்கள் இருவருமே முயற்சி செய்ய வேண்டும். வண்டியில் பூட்டிய மாடுகள் இரண்டும் ஒன்றை ஒன்று புரிந்து கொண்டு ஒன்றுக்கு ஒன்று ஈடு கொடுத்து இணை நடை போடுகிறது போல நீங்களும் செல்ல வேண்டும். அதற்கு நீங்கள் முதலாவது உங்களைத் தயார் செய்துகொள்ள வேண்டும். மனைவியை புரிந்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் எப்போதாவது எண்ணியதுண்டா? இயற்கை ஆணையும், பெண்ணையும் பல துறைகளில் ஒத்தத் தன்மை உடையவர்களாகவும், வேறு சில துறைகளில் வேறுபட்ட தன்மையுடையவர்களாயும் வைத்திருக்கிறது. ஆணுக்கும், பெண்ணுக்கும் இயற்கையிலே உள்ள இந்த வேறுபாட்டை விளங்கிக் கொள்வதின் மூலமாக நீங்களும் மகிழ்ச்சிகரமான மண வாழ்வுக்கு வித்திட முடியும். ஆணுக்கும், பெண்ணுக்கும் பண்பிலுள்ள அடிப்படை வேறுபாடுகளாவன ஆண் எதையும் முன்னின்று நடத்தும் செயல்வீரன், வலிமை மிக்கவன். பெண் ஏற்றுக் கொள்ளுபவள்—பணிந்து நடப்பவள், ஒத்துழைப்பவள். ஆண் வெளியுலகத்தில் மிகுதியாக வாழ்கிறான். பெண் மனதினுள்ளே மிகுதியாக வாழ்கிறாள். ஆண் வெளியுலகில் ஈடுபாடு உடையவன். பெண் மன உலகில் ஈடுபாடு உடையவள். உலகின் பொருட்களை ஆண் கையாள்கிறான், உருமாற்றுகிறான். பெண் வாழ்வை மாற்றுகிறாள். தொலைவில் உள்ள கண்ணுக்குத் தெரியாத நுண் பொருளுக்காக ஆண் தியாகம் புரியக் கூடியவன். பெண் தான் வாழும் உலகில் உள்ள உண்மையான மனிதர்களுக்காக தியாகம் செய்யக் கூடியவள். ஆண் தான் செய்யும் செயல்களுக்கெல்லாம் காரணங்கள் கூற முடியும். நான் ஏன் அன்பு செலுத்துகிறேன்? ஏன் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்கிறேன் என்பவைகளைப் பற்றி அவன் காரணம் சொல்லிக் கொண்டிருப்பான். பெண் காரணங்கள் சொல்லத் தெரியாதவள். அன்புக்காக அன்பு செலுத்துபவள். ஆண் கட்டுகிறான், கண்டுபிடிக்கிறான், வெல்லுகிறான். பெண் பராமரிக்கிறாள். தன்னையே அளிக்கிறாள். ஆண் பரிசுகள் கொடுக்கக் கூடியவன், பெண்ணோ அவளே ஒரு பரிசு. உங்கள் மனைவியை ஒரு பெண்ணாக புரிந்து கொள்ளவும் ஒரு மனைவியாகப் போற்றவும், மனைவியாக அடக்கி ஆளவும், புரிந்து கொள்ளவும் ஆரம்பிக்கும்பொழுதே நீங்கள் மகிழ்ச்சிகரமான மணவாழ்க்கையில் முதல் பாடத்தைக் கற்றுக் கொண்டு விட்டீர்கள் என்று சொல்லலாம்.

''பின்பு தேவனாகிய கர்த்தர் மனுஷன் தனிமையாயிருப்பது நல்லதல்ல, ஏற்ற துணையை அவனுக்கு உண்டாக்குவேன் என்றார்''. தேவன் குடும்ப வாழ்க்கையை ஏற்படுத்துகிறார்.

மனிதனின் நன்மைக்காக தேவன் ஏற்படுத்திய முதல் நிறுவனம் இல்லறம் என்பதை மறக்கலாகாது. தேவனால் அருளப்பட்டதும், பாவம் உலகில் பிரவேசிக்கும் முன்பே ஏற்பட்டதுமான இல்வாழ்க்கை, தேவனின் பரிசுத்த முறைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தது. இந்நாட்களில் சர்வ சாதாரணமாய் நிகழும் திருமண விலக்கு தேவனின் பரிசுத்த நியமனத்தைத் தகர்த்தெறிவதாயுள்ளது. தேவன் ஆதாமையும், ஏவாளையும் உருவாக்கியபோது அவர்களை ஆணும், பெண்ணுமாக தேவ சாயலில் உருவாக்கினார். பாவமற்ற நிலைமையில் புருஷன் மனைவி உறவு பரிசுத்தமானதாகவும், புனிதமானதாகவும் அமைந்திருந்தது.

திருமணத்தில் புருஷனும், மனைவியும் ஒன்றாயிருக்க வேண்டும் என்றே தேவன் உணர்த்தினார். குடும்பத்தின் அஸ்திபாரக் கொள்கைகள் புனிதத்துவத்தையும், தெய்வீகத் தன்மையையும் ஆதாரமாகக் கொண்டுள்ளமையால் தேவன் ஏற்படுத்திய குடும்பத்தைப் பற்றிய தமது கொள்கையும், திட்டத்தையும் ஒரு பாவி தன்னுடைய குடும்ப வாழ்க்கையில் நடைமுறைக்குக் கொண்டுவர முடியாது. கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டு கிருபையும், ஆவியும் பெற்று வளருவோர் கடின இருதயமுள்ள இஸ்ரவேலரோடு அசுத்த வாழ்க்கையில் சிக்குண்டுள்ள உலகத்தார்களின் மாதிரியையோ பின்பற்றக் கூடாது. எபே. 5-ஆம் அதிகாரத்தில் புருஷனுக்கும், மனைவிக்கும் உள்ள உறவு கிறிஸ்துவுக்கும் சபைக்கும் உள்ள உறவுடன் ஒப்பிடப்பட்டுள்ளது. கிறிஸ்து சபையோடு நித்தியமாய் இணைக்கப்பட்டுள்ளார். இப்புனிதத் தன்மை குடும்பத்தில் என்றென்றும் இருக்க வேண்டும்.

ஒரு புனித உறவு:

வாழ்க்கையின் மேன்மை பரிசுத்தம் நிறைந்த ஒரு திருமண உறவேயாகும். ஆதி. 2-ம் அதிகாரத்தில் தேவன்: அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என கூறுகிறார். ஒருவரன்றி மற்றவரில்லை. இது தேவ நியமனம். இதுவே குடும்பத்தின் ஆதாரம். இருவரன்றி குடும்பம் முழுமையடையாது. அவர்கள் இருவரும் ஒரே மாம்சங்களாயிருப்பார்கள். திருமணம் கனமுள்ளது என்று தேவன் கூறுகின்றார். ''விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயும், விவாக மஞ்சம் அசுசிப்படாததாயும் இருப்பதாக; வேசிக்கள்ளரையும், விபச்சாரக்காரரையும் தேவன் நியாயம் தீர்ப்பார் (எபி. 13:4)

புருஷன் தன் தகப்பனையும், தாயையும் விட்டு தன் மனைவியோடே இசைந்திருப்பான். அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என்று ஆதியாகமம் 2:24-ம் வசனத்தில் கூறப்பட்டுள்ளது. மனிதனின் நன்மைக்காக தேவன் குடும்பத்தை ஏற்படுத்துகிறார். மனிதன் தனிமையாயிருப்பது நல்லதல்ல என்று தேவன் கூறுகிறார். எனவேதான் ஏற்ற துணையை அவனுக்கு உண்டாக்குவேன் என்று திருவுளம் பற்றினார். திருமணம் மிகவும் இன்றியமையாதது என்பதற்கு இன்னொரு காரணத்தை வேதத்தில் பார்க்கிறோம். ''வேசித்தனம் இராதபடிக்கு அவனவன் தன்தன் சொந்த மனைவியையும், அவளவள் தன்தன் சொந்த புருஷனையும் உடையவர்களாயிருக்க வேண்டும்'' என்று கூறப்பட்டுள்ளது (I கொரி. 7:2). ஒழுங்கின வாழ்க்கையை அழித்துப் போடவும், ஒழுங்கான சமுதாயத்தை ஏற்படுத்தி நிலைநாட்டவும், ஒழுங்குள்ள குடும்பங்கள் மூலம் உண்மையையும், பரிசுத்தத்தையும் தலைமுறை தலைமுறையாக நிலைநாட்டுவதற்காகவும் தேவன் திருமண உறவை ஏற்படுத்தினார். நாட்டின் சமாதானமும், நல்வாழ்வும் திருச்சபையின் நிறைவும் இவ்வித பரிசுத்த குடும்பங்களையே சார்ந்துள்ளது. வீடு எவ்விதமோ அவ்விதமே நாடும், திருச்சபையும் காணப்படும் என்பது நாட்டறிஞர்களின் கருத்து. கிறிஸ்துவுக்கும், சபைக்குமுள்ள உறவுக்கு திருமணம் அடையாளம். திருமண உறவில் உள்ள ஐக்கியத்தை கிறிஸ்துவுக்கும், சபைக்குமுள்ள ஐக்கியத்திற்கு அடையாளமாக தேவன் நியமித்திருக்கிறார். கிறிஸ்துவுக்கும், சபைக்குமுள்ள உறவு பரிசுத்தமாயிருப்பது போலவே தேவனால் ஏற்படுத்தப்பட்ட திருமண உறவு கணவன் மனைவிக்கிடையில் உள்ள ஐக்கியம் பரிசுத்தமானதாக இருக்க வேண்டும். எபே. 5-ம் அதிகாரத்தில் புருஷனுக்கும், மனைவிக்கும் உள்ள உறவு கிறிஸ்துவுக்கும் சபைக்குமுள்ள உறவு எனின் எவ்விதமானது, அது எவ்விதமாயிருக்க வேண்டுமென்று விளக்கப்பட்டுள்ளது. ''தெய்வ பயத்தோடு ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள். மனைவிகளே கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறது போல உங்கள் சொந்த புருஷருக்குக் கீழ்ப்படிந்திருங்கள். கிறிஸ்து சபைக்கு தலையாயிருக்கிறதுபோல புருஷனும் மனைவிக்குத் தலையாயிருக்கிறான், கிறிஸ்துவே சரீரத்துக்கும் இரட்சகராயிருக்கிறார். ஆகையால் சபையானது கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படிகிறது போல மனைவிகளும் தங்கள் சொந்த புருஷர்களுக்கு எந்தக் காரியத்திலேயும் கீழ்ப்படிந்திருக்க வேண்டும். புருஷர்களே உங்கள் மனைவிகளில் அன்பு கூறுங்கள். அப்படியே கிறிஸ்துவும் சபையில் அன்பு கூர்ந்து தம்மைத் தாமே அதற்கு ஒப்புக் கொடுத்தார் (எபே. 5:21-25).

அப்படியே புருஷர்களும் தங்கள் மனைவிகளை தங்கள் சொந்த சரீரங்களாக பாவித்து அவர்களில் அன்புகூற வேண்டும். தன் மனைவியில் அன்பு கூறுகிறவன் தன்னில்தான் அன்பு கூறுகிறான். தன் சொந்த மாம்சத்தைப் பகைத்தவன் ஒருவனுமில்லையே. கர்த்தர் சபையை போஷித்துக் காப்பாற்றுகிறது போல ஒவ்வொருவரும் தன் தன் சொந்த மாம்சத்தை (மனைவியை) போஷித்துக் காப்பாற்றுகிறான் (எபே. 5:25-29).

(தொடரும்)

''...ஆதியிலே மனுஷரை உண்டாக்கினவர் அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார்'' (மத். 19:4).

# சிதறடிக்கிறவன் வருகிறான்

''சிதறடிக்கிறவன் உன் முகத்துக்கு முன்பாக வருகிறான்; அரணைக் காத்துக் கொள், வழியைக் காவல் பண்ணு, அரையைக் கெட்டியாய்க் கட்டிக் கொள், உன் பெலனை மிகவும் ஸ்திரப்படுத்து'' (நாகூம் 2:1) என்று கர்த்தருடைய வேதம் கூறுகிறது. தேவ ஜனமே, தேவனோடு இணைந்து வாழும் மக்களைச் சிதறடிப்பதற்காகச் சாத்தான் தீவிரமாய் போராடுகிற காலமாய் இருக்கிறது. ஆதியிலிருந்தே (ஏதேனில்) மனிதனைத் தேவனை விட்டுப் பிரிக்கும் வேலையில் சாத்தான் வெற்றி பெற்று வருகிறான். அப்படிப்பட்ட நிலைமை உருவாகாமல் இருப்பதற்கு தேவ ஜனங்கள் என்ன செய்ய வேண்டுமென்பதை நாகூம் தீர்க்கதரிசி கூறுகிறார்.

## முதலாவதாக அரணைக் காத்துக் கொள்ள வேண்டும் :

அக்காலத்திலே யூதா தேசத்தில் பாடப்படும் பாட்டாவது பெலனான நகரம் நமக்கு இங்கே உண்டு இரட்சிப்பையே அதற்கு மதிலும் அரணுமாக ஏற்படுத்துவார் (ஏசா 26:1) என்று ஏசாயா பக்தன கூறுகிறார் இந்த அரண் இரட்சிக்கப்பட்ட மக்களின் கூட்டமாகிய தேவனுடைய திருச்சபையைக் குறிப்பிடுகிறது. திருச்சபைக்கு வெளியே இரட்சிப்பு (பாதுகாப்பு) இல்லை என்று கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது. ''இரட்சிக்கப்படுகிறவர்களைக் கர்த்தர் அநுதினமும் சபையில் சேர்த்துக் கொண்டு வந்தார் (அப். 2:47) என்று வாசிக்கிறோம். தேவனுடைய திருச்சபைக்குள் இருப்பவர்களுக்குத்தான் சமாதானம் உண்டு, பாதுகாவல் உண்டு. உன் அலங்கத்திற்குள்ளே சமாதானமும், உன் அரமனைகளுக்குள்ளே சுகமும இருப்பதாக (சங். 122: 7-8) என்று சங்கீதக்காரனும் கூறுகிறார். தேவனுடைய திட்டம் இவ்வாறு இருக்க இந்நாட்களில் சில கள்ளப் போதகர்களும், கபடமுள்ள வேலையாட்களும் தோன்றி எங்கிருந்தாலும் இயேசு உன்னை இரட்சிப்பார், இயேசு உன்னைக் கைவிடார், சபை வேண்டாம் ஒன்றும் வேண்டாம் என்று போதித்து, பிரசங்கித்து மக்களை தேவனண்டை சேராதபடி, தேவனுடைய திருச்சபையாய், பரிசுத்தவான்களுடைய ஐக்கியமாய் சேர்ந்து பரிசுத்த நகரமாய் (எபே. 2:19-22 ; I போ. 1:3-4 ; அப். 2:42) கட்டப்படாதபடி சிதறடிக்கிறவர்களாய் காணப்படுகிறார்கள் ''என்னோடே இராதவன் எனக்கு விரோதியாயிருக்கிறான்: என்னோடே சேர்க்காதவன் சிதறடிக்கிறான்'' (மத். 12:30) என்று நமது ஆண்டவரும் கூறியிருக்கிறாரே.

ஆகையால், தேவ ஜனமே, சாத்தான் உன்னைப் பாவத்தின் அடிமைத்தனத்துக்குள்ளாக்கி, சிற்றின்பத்திற்கு அடிமையாக்கி, பொருளாசை என்னும் விக்கிரக ஆராதனைக்கு அடிமையாக்கி தேவனைவிட்டுப் பிரித்துச் சிதறடிக்கிறதைக் காண்கிறாயா? அரணுக்குத் திரும்புங்கள். ''நம்பிக்கையுடைய சிறைகளே, அரணுக்குத் திரும்புங்கள்: இரட்டிப்பான நன்மையைத் தருவேன், இன்றைக்கே தருவேன்'' (சகரி. 9:12) என்று உன்மேல் மனதுருகுகிற கர்த்தர் சொல்கிறார்.

இரண்டாவதாக வழியைக் காவல் பண்ணு: என்று தீர்க்கதரிசி கூறுகிறார். ஒவ்வொரு மனிதனுக்கு முன்பாகவும் இரண்டு வழிகளைத் தேவனாகிய கர்த்தர் வைக்கிறார். ''இதோ, நான் உங்களுக்கு முன்பே ஜீவ வழியையும், மரண வழியையும் வைக்கிறேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்'' (எரே. 21:8) என்பதாக நாம் வாசிக்கிறோம். ''மனுஷனுக்கு செம்மையாய்த் தோன்றுகிற வழியுண்டு; அதன் முடிவோ மரண வழிகள்'' (நீதி.16:25) என்று சாலமோன் ஞானி கூறுகிறார். உலகத்தில் மனிதர்கள் யாவரும் தங்களுக்குச் செம்மையாய்த் தோன்றுகிற வழிகளிலேயே நடந்து சமாதானமின்றி,வேதனையிலே வாழ்கிறார்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் வந்து ஒவ்வொரு மனிதனும் அடைய வேண்டிய (நித்திய) ஜீவனை வாக்கருளி (யோ. 10:10) அந்த ஜீவனை அடைந்து கொள்ளக் கூடிய வழியையும் காண்பித்திருக்கிறார். தமது மாம்சமாகிய திரையின் வழியாகப் புதிதும் ஜீவனுமான மார்க்கத்தை (வழியை) நமக்கு உண்டு பண்ணினார் (எபி. 10:19) என்றும், ''நானே வழியும், சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்'' (யோ.14:6) என்றும் நமதாண்டவர் கூறியிருக்கிறதை வாசிக்கிறோமே.இவ்விதமாய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் ஜீவனை, பரிசுத்த ஆவியைப் பெற்று ஜீவ மார்க்கத்தில் (வழியில்) நடந்து கொண்டிருக்கும் மக்களை ஜீவ பாதையில் செல்லவிடாமல் திறடிப்பதற்காக சாத்தான் போராடுகிறான். ஆகையால், ''உன் வழியைக் காவல் பண்ணு''என்று கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இவ்விதமாய் மனுக்குலம் அடைய வேண்டிய நித்திய ஜீவனைக் கொடுத்திருந்தும், அதை அடைந்து கொள்வதற்குரிய வழியைக் காண்பித்திருந்தும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு ஆராதனை செய்யும் மக்களில பெரும்பகுதி பேர்களும் இந்த வழியைக் கண்டுகொள்ள முடியாதிருக்கிறதைக் காணுகிறோம். காரணம், தேவனாகிய கர்த்தர் தம்முடைய வழியைத் தமது பரிசுத்தவான்களுக்கும், தமது பக்தர்களுக்கும் முதலாவது காண்பிக்கிறார். இவர் தமது வழிகளை மோசேக்குத் தெரியப்படுத்தினார்'' (சங். 103:7).

ஆகையால் தேவனாகிய கர்த்தர் தமது சரீரமாகிய திருச்சபையைப் பூமியிலே உருவாக்கி தமது அப்போஸ்தலர், தீர்க்கதரிசிகளை எழுப்பி அவர்களைக் கொண்டு தமது வழியை மக்களுக்குப் போதிக்கிறார். கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம், பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு மலைகளுக்கு மேலாக உயர்த்தப்படும்; எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடி வருவார்கள். திரளான ஜனங்கள் புறப்பட்டு வந்து, நாம் கர்த்தரின் பர்வதத்திற்கும், யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார். நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள்; ஏனெனில் ''சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும்'' (ஏசா. 2:2-3) என்று ஏசாயா சொல்வது போல கர்த்தர் இந்தக் கடைசி நாட்களில் தமது சபையை உருவாக்கி தமது ஊழியக்காரர்கள் மூலமாகவே தமது வழிகளை மக்களுக்குப் போதிக்கிறார் சகோதரரே, நீங்கள் என்னோடே கூடப் பின்பற்றுகிறவர்களாகி, நாங்கள் உங்களுக்கு வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை மாதிரியாக நோக்குங்கள்'' (பிலி. 3:17) என்று அப். பவுலும் கூறுகிறார்.

ஆனாலும் இந்நாட்களில் வேத புத்தகத்தை கரத்தில் எடுத்த எல்லோருக்குமே தேவனுடைய மார்க்கம் (வழி) தெரியுமென்று பலர் எண்ணி, அப்படிப்பட்டவர்களைப் பின்பற்றி மோசம் போய்விட்டார்கள். ''என் ஜனமே உன்னை நடத்துகிறவர்கள் உன்னை மோசம்பாக்கி, நீ நடக்க வேண்டிய வழியை அழித்துப் போடுகிறார்கள் (ஏசா. 3:12) என்று வேதம் கூறுகிறதைக் காண்கிறோம்.ஆகையால் ஜீவ மார்க்கத்தை அறிந்து கொண்ட தேவனுடைய ஜனமே! அந்த மார்க்கத்தை விட்டு (வழியை விட்டு) விலகி உன்னுடைய சுய விருப்பத்தின்படி நடந்து மரண வழிக்குள் உன்னை அழைத்துச்செல்ல சாத்தான் போராடுவான். இது உன் உள்ளத்திலேயே உருவாகி உன்னை வழிவிலகச் செய்யும். ஆகையால உன் வழியைக் காவல்பண்ணு என்று கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது. ஆதிமனிதனாகிய ஆதாமை ஏதேன் தோட்டத்தில் அழைத்துக்

கொண்டுவந்து, அதைப் பண்படுத்தவும், காக்கவும் (காவல் பண்ணவும்) வைத்தார் (ஆதி. 2:15). ஆதாமின் காவலில் கவனக் குறைவு உண்டாகி இருக்கிறது. எனவே, ஏதேனுக்குள் சாத்தான் புகுந்து ஆதாமையும், ஏவாளையும் தேவனுடைய ஐக்கியத்திலிருந்து சிதறடித்தான்.

மூன்றாவதாக, அரையைக் கெட்டியாய்க் கட்டிக்கொள் : என்பதாகும்.

நாம் உடுத்தியிருக்கும் வஸ்திரம் உரிந்து போகாமலிருக்க இடுப்பிலே இடைக் கச்சைகளை, பெல்ட்டுகளை பயன்படுத்துகிறோம். அதுபோல, நாம் பெற்றுக் கொண்ட இரட்சிப்பின் வஸ்திரம் நம்மை விட்டு விலகாமலிருக்க நாம் நம்முடைய மனதின் அரையைக் கட்ட வேண்டும் (I பேது. 1:13). மனிதனுடைய இருதயத்திலிருந்து புறப்படுகிறவைகளே மனிதனைத் தீட்டுப்படுத்தும் (மத். 15:17-20) என்று நம தருமை ஆண்டவரும் கூறுகிறார். நாம் சிந்தனைகளினாலும், எண்ணங்களினாலும் செய்கிற பாவத்தால் நம்முடைய ஆத்துமா தீட்டாகி தேவனை விட்டு நாம் பிரிந்துவிடுகிறோம் (ஏசா. 59:2). ஆகையால் நம்முடைய மனதின் அரையை சத்தியம் என்னும் கச்சையால் கட்ட வேண்டும் (எபே. 6:14). அப்பொழுது நாம் சிந்திக்கும்பொழுதெல்லாம் தேவனுடைய சத்தியமே நம் எண்ணத்தில் தோன்றி நம்முடைய இரட்சிப்பின் வஸ்திரத்தைப் பாதுகாக்கும்.

தேவனால் வெறுத்துவிடும்படி கட்டளை பெற்றிருந்த ஏவாளின் உள்ளத்திலே தேவன் விலக்கிய விருட்சத்தின் கனியைப் புசிக்கும்படியான சிந்தனை உண்டானது. வெறுத்துவிட்ட காரியம் விரும்பக் கூடியதாய், இச்சிக்கக் கூடியதாய் (ஆதி. 3:6) தோன்றினது. அதன் விளைவு ஆதாமையும், ஏவாளையும் நிர்வாணிகளாக்கினது (ஆதி. 3:9-10), தேவனை விட்டுப் பிரித்தது.

ஆகையால், சகோதரனே, சகோதரியே உன் அரை கட்டப்பட்டதாய் இருக்கட்டும் (லூக். 12:35-36).

நான்காவதாக உன் பெலனை மிகவும் ஸ்திரப்படுத்து என்று கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது. பெலன் என்றால் நம்முடைய ஆத்மிக பெலனைக் குறிப்பிடுகிறது. சரீர வளர்ச்சியுடைய பலருக்கு சரீரத்தில் பெலனில்லாதிருக்கும். அதுபோலவே ஆவிக்குரிய பல அனுபவங்களைப் பெற்றவர்கள், வரங்களைப் பெற்றவர்களுங்கூட சில வேளைகளில் தங்களுக்கு எதிராக வரும் சோதனைகளில் விழுந்து போகிறார்கள். இதற்குக் காரணம் ஆன்மீக பெலனில்லாமையே. எனவே ஆன்மீகப் பெலனடைய பெலமுள்ள (ஆன்மீக) ஆகாரம் புசிக்க வேண்டும். பெலமுள்ள ஆகாரமானது நன்மை தீமை இன்னதென்று பயிற்சியினால் பகுத்தறியத் தக்கதாக முயற்சி செய்யும் ஞானேந்திரியங்களையுடையவர்களாகிய பூரண வயதுள்ளவர்களுக்கே தகும் (எபி. 5. 13-14). ஆவிக்குரிய ஜீவியத்தில் குழந்தை நிலைமாறி பெலனடைய வேண்டும். அடுத்தபடியாக நாம் பெலம் பெற்றுக் கொள்வது கர்த்தருடைய ஆவியையும் வல்லமையையும் நிறைவாய் பெற்றுக் கொள்ளுதல் ஆகும். உன்னதத்திலிருந்து வரும் பெலனால் தரிப்பிக்கப்படும் வரையிலும் எருசலேம் நகரத்தில் இருங்கள் (லூக். 24:49) என்று ஆண்டவர் கூறியிருக்கிறார். கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்கள் புதுப் பெலனடைந்து, கழுகுகளைப் போலச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள். அவர்கள் ஓடினாலும் இளைப்படையார்கள் நடந்தாலும் சோர்ந்து போகார்கள் (ஏசா. 40:31) என்று ஏசாயாவும் கூறுகிறார். ஆகையால் பரிசுத்த ஆவியின் பெலத்தினாலும் நம்மை ஸ்திரப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆவிக்குரிய வாழ்க்கையிலே நிந்தைகள், அவமானங்கள், பொய்யான குற்றச்சாட்டுகள் இவைகளை உண்டுபண்ணி நம்மைச் சோர்ந்து போகச் செய்து தேவனுடைய ஐக்கியத்தை விட்டு சாத்தான் சிதறடித்து விடுவான்.

ஆகையால், சகோதரனே, சகோதரியே சாத்தான் உன்னை தேவனுடைய ஐக்கியத்தை விட்டு சபையைவிட்டு சிதறடித்து விடாதிருக்க உன் பெலனை மிகவும் ஸ்திரப்படுத்திக்கொள்ள வேண்டும் என்று கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது. எப்பொழுதும் ஆவியில் நிறைந்திரு. அது உன்னை பெலமுள்ளவனாக்கும்.

---

''சிதறடிக்கிறவன் உன் முகத்துக்கு முன்பாக வருகிறான்; அரணைக் காத்துக்கொள், வழியைக் காவல் பண்ணு, அரையைக் கெட்டியாய் கட்டிக் கொள், உன் பெலனை மிகவும் ஸ்திரப்படுத்து'' (நாகூம் 2:1).

---

**சிறுவர் பகுதி**

# ஒரே தரம் மரிப்பதும் பின்பு நியாயத் தீர்ப்பு அடைவதும் மனுஷருக்கு

வானளாவிய மரங்களினூடே இனிமையான குரல்களினால் குயில்கள் பாடிக் கொண்டிருந்தன. மின் மினிப் பூச்சிகள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன. வெண்ணிறப் பனித்துளிகள் வானிலிருந்து இறங்கிக் கொண்டிருந்த காலைப் பொழுது அது. நிசப்தமான நேரம் அதன் இனிமையிலும் இனிமையான கீதம், ''தேவபிதா எந்தன் மேய்ப்பன் அல்லோ'' பாடலுக்கு சலசலக்கும் நீரோடை சுருதி இயற்றிக் கொண்டிருந்தது. பனிக் காற்றில் பாடல் மிதந்து வந்து செவி வழியே இருதயத்தில் குடி கொண்டிருந்தது. இன்னிசை சொரிந்து கொண்டிருந்தது கிருபை நகரில்.

சரியாக காலை 5 மணி. ஆழ்ந்த ஜெபத்தில் அமர்ந்திருந்தான் தானியேல் ஆம் பெயருக்கு ஏற்றார் போல் ஜெப வீரனாக காணப்பட்டான் தானியேல். பக்தி மிகுந்த கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்தவன். தானியேல் பிறப்பிலிருந்தே தேவன் அவனை முன் குறித்திருந்தார். அவனுக்கு வயது 15. 10-ம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். தானியேல் பெற்றோருடன் இயற்கை எழில்மிகும் கிருபை நகரில் வாழ்ந்து வந்தான். ஊருக்கு மத்தியில் ஊருக்கே பெருமை கூட்டும் வண்ணம் அமைந்திருந்தது அவ்வூர் கிறிஸ்தவ ஆலயம். அதிலிருந்து மிதந்து வந்ததுதான் அந்த தேவ கானம்.

அன்று திங்கட்கிழமை. அதிகாலை 5 மணி ஜெபத்தில் அமர்ந்திருந்தான் தானியேல். ''அன்றியும் ஒரே தரம் மரிப்பதும், பின்பு நியாயத் தீர்ப்பு அடைவதும், மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறபடியே'' (எபிரெயர் 9:27) வசனத்தோடே தேவன் அவன் ஆத்துமாவில் இடைபட்டுக் கொண்டிருந்தார். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. புது கிருபை பெற்றவனாய் எழுந்து, காலைக் கடன்களை முடித்து விட்டு பள்ளிக்குப் புறப்பட்டான்.

அன்று மாலை 7வது பீரியட் (Period) நீதிபோதனை பீரியட் அது. ஆசிரியர் மறுபிறப்பின் மீது நம்பிக்கை உடையவர். அவர் மாணவர்களிடம், மனிதன் செய்யும் நன்மை தீமைக்கு ஏற்ப நாய், குரங்கு, பன்றி, எருமை, பூனை, எலி, அண்டங்காக்காய் போன்ற ஏழு பிறவி எடுக்கின்றான் என்று கதை கட்டி முடித்தார். பின்பு ஒவ்வொரு மாணவர்களும் தங்களுக்குத் தெரிந்த கதைகளை கட்டவிழ்த்து விட்டார்கள்.

தானியேலின் நேரம் வந்தது. இருதயத்தில் இறைவனை ஸ்தோத்தரித்தான். எல்லாருடைய கண்களும் தானியேலின் மேல் நோக்கமாக இருந்தது. அவன் ஆரம்பித்தான். ''ஒரு நாளில் ஒரு பையன் ஒரு பன்றியை கல்லால் அடித்து இம்சை படுத்திக் கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு பெரியவர் அவ்வழியே வரும் போது, அவனைக் கண்டு, ''தம்பி அதைக் கல்லால் அடித்து இம்சைப்படுத்தினால் அது அடுத்த பிறவியில் மனிதனாகப் பிறந்து உன்னைக் கல்லால அடித்து இம்சைப்படுத்தும்'' என்றார். உடனே அச்சிறுவன் அவருக்கு மறுமொழியாக, ''ஐயா, சென்ற பிறவியில நான் பன்றியாக இருந்தபோது இது மனிதனாக இருந்து என்னை கல்லால் அடித்து இம்சைப் படுத்தியது. அதற்கு பதிலாக நான் இப்போது இதைப் பழி வாங்குகிறேன்'' என்றான். உடனே அப்பெரியவருக்கு என்ன சொல்வது என்று தெரியாமல் போய்விட்டாராம் என்று கதை சொல்லி முடித்தான். ஆசிரியரின் உள்ளத்தில் கேள்வி எழுந்து கொண்டிருந்தது. இவனாவது பன்றியாகப் பிறப்பதாவது என்று எண்ணமிட்டார். மீண்டும் தானியேல கூறினான், ''மறு பிறப்பு என்று ஒன்று இருந்தால், நாய், பன்றி, குரங்கு போன்ற விலங்குகளும் டீச்சர் ட்ரெயினிங், எம்.எஸ். சி., பி காம் போன்ற படிப்புகள் படித்திருக்க வேண்டுமே'' என்றான். ''அன்றியும், ஒரே தரம் மரிப்பதும் பின்பு நியாயத் தீர்ப்பு அடைவதும், மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிற படியே'' (எபி. 9:27) வசனத்தை தானியேல் சொல்லி முடித்த

'தேவன் ஒருவரே'
THERE IS ONE GOD...
Regd. No. 040068/84
Postal Regd No. MH BY NE-94/08
Tamil Monthly Magazine

போது, மாணவர்கள் [illegible] பேசி உட்கார்ந்திருந்தனர். [illegible] இறைவன் இயேசுவின் [illegible] தென்படலாயிற்று. விதைத்த [illegible] வளர்ந்து பெருகிறது. பள்ளிக்கூட மணி ஒலித்தது. [illegible] அன்றைய பொழுது கழியலாயிற்று. ஆனபடியால் [illegible] வேறு ஒரு பிறவி அல. இந்த பிறவியிலே இயேசு சுவாமியை விசுவாசிக்க வேண்டும். "கிறிஸ்துவும் அநேகருடைய பாவங்களைச் சுமந்து தீர்க்கும்படிக்கு ஒரே தரம் பலியிடப்பட்டு, தமக்காகக் காத்துக் கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பை அருளும்படி இரண்டாம் தரம் பாவமில்லாமல் தரிசனமாவார்" (எபி. 9.28)

"பாவத்தின் சம்பளம் மரணம். தேவனுடைய கிருபை வரமோ நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் உண்டான நித்திய ஜீவன்"

(ரோம. 6:23).

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

   22 (வெள்ளி) நவம்பர் 1991
   20 (வெள்ளி) டிசம்பர் 1991

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15/- (பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by : Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at ; PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph : 425490

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 96 - Dec. 1991

## "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4 : 11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் —மத். 28:18; மாற்கு 16 : 15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத். 28:19 [இயேசு மாதிரி (Through Action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள் - மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் - யோவா. 20 : 23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள் - யோவா. 21 : 15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப்பெற்றுகொண்டு(அப் 1:5,8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் - 1 கொரி. 11 : 23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10 : 40-43).

CHIEF PASTOR N. LAZAR

### இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

காலங்கள் கடந்து ஆண்டு ஒன்றின் இறுதி நாட்களில் வந்திருக்கிறோம். இறைவன் இயேசுவை விசுவாசித்து அவர் மூலமாய் உண்டாகும் ஜீவனைப் பெற்றுக் கொண்ட எல்லா மக்களும் கிறிஸ்துவினுடைய பிறப்பையும் வாழ்க்கையையும், அவருடைய தியாகத்தையும் எண்ணி களி கூருவார்களாக. இறைவன் நமக்குக் கொடுத்த ஒரே அஸ்திபாரம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. அவர் மேல் உயிருள்ள விசுவாசம் கொண்டு, அவரோடு இணைக்கப்பட்டு, அவரிடத்திலிருந்து சாரத்தைப் பெற்றுக் கொள்கிறதும் அவர் மூலமாக இந்த உலகத்தில் செயலாற்ற, தொடர்ந்து அவர் தம்முடைய கிரியைகளை நிகழ்த்த, தன்னை வெளிப்படுத்த திருவுளங் கொள்கிறதற்கு இடமளித்து, அவரோடு ஐக்கியமாயிருப்பதே கிறிஸ்தவ வாழ்க்கை. இந்த உலகத்திற்கு ஒரே ஒரு சந்தர்ப்பம் கிறிஸ்துவை விசுவாசிக்கும்படி இயேசு கிறிஸ்துவைப் பற்றிய செய்தி அவனுக்கு முன்பாக கடந்து வருகிறதே. அதை ஏற்றுக் கொண்டவர்கள் எல்லாரும் மகிமையடைவார்கள். அதைத் தள்ளிப் போடுகிறவர்களுக்கு வேறொரு கதியில்லை. நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன். என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான் என்று திருவுளம் பற்றின கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய திருவுள நோக்கத்தை வேகமாய் இந்தப் பூமியிலே நிறைவேற்ற நாம் எல்லாரும் அவருக்குக் கீழ்ப்படிந்து, அவர் சித்தம் செய்வோமாக! ஒரு ஆண்டு முடிவடையும் பொழுது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரப்போகிற நாட்களில் ஒரு ஆண்டு குறைந்துவிட்டது. இது அவருடைய வருகை சீக்கிரம் என்பதை நமக்கு அறிவிக்கிறது. ஆண்டின் இறுதியில் கடந்து வந்திருக்கிற நாம் இறைவனை சந்திக்க ஆயத்தமா என்பதையும், நமது கணக்கை நாம் சரியாக செய்து முடித்துவிட்டோமா என்பதையும் உற்றுக் கவனிப்போமாக! அல்லவென்றால் புது ஆண்டிலாவது இறைவனுடைய சித்தம் செய்து முடிக்க தீர்மானித்து, ஆண்டின் ஆரம்பத்திலே தேவ சமூகத்தில் ஒப்புக் கொடுத்து செயலாற்றுவோமாக! நமக்குக் கிடைத்திருக்கிற ஒரே சிலாக்கியம் இறைவனுக்காக பிரயோஜனப்படுவதே. ஒருவரும் கிரியை செய்யக் கூடாத இராக்காலம் வரப் போகிறது நான் என்னுடைய பங்கை பற்றிக் கொள்வேன் நீ உனக்குள்ளதைப் பற்றிக் கொள். உள்ளவன் எவனோ அவனுக்குக் கொடுக்கப்படும் பரிபூரணமும் அடைவான். இல்லாதவனிடத்திலிருந்து உள்ளதையும் பறித்தெடுத்து உள்ளவனுக்குக் கொடுக்கப்படும் 10+1=11. கர்த்தர் உங்களை ஆசீர்வதித்து தம்முடைய சித்தத்தை உங்களில் நிறைவேற்றுவாராக!

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# வானவர் பூவுலகில் மனிதனானார்

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய கன்னிப் பிறப்பு, பிறப்பு, சிருஷ்டிப்பு என்றாலே அது இறைவனுடைய மகத்துவமான செயல். இதோடு சம்பந்தப்பட்டதுதான் உயிர்த்தெழுதல்.

இவைகளையெல்லாம் செயலாற்றுகிறவர் இறைவனே. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய கன்னிபிறப்பு மனித செய்தியிலிருந்து தோன்றினதல்ல, அது வரலாற்று உண்மையாக இருக்கிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய சீஷர்களில் மத்தேயு, பின்பு சீஷனான லூக்காவும் இயேசு கிறிஸ்துவினுடைய கன்னி பிறப்பைக் குறித்து தங்களுடைய புஸ்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். இது வரலாற்று உண்மையாகும். லூக்கா சுவிசேஷ நற்செய்தியைப் பற்றி நூலெழுத ஆரம்பித்தார். அந்தியோகியா பட்டணத்தைச் சேர்ந்த லூக்கா இவ்விதமாக இயேசு கிறிஸ்துவினுடைய பிறப்பைப் பற்றி யூதேயாவில் ஜனங்கள் மத்தியில் வழங்கப்படுகிற செய்தியை கேட்டு ஆராய்ந்தார். அது ஏற்கனவே எங்கும் பேசப்படுகிற ஒரு உன்னதமான செய்தியாக இருந்தது. ஆனபடியினால் அவர் இயேசுவின் தாயாகிய கன்னி மரியாளைக் கண்டு நடந்த சம்பவங்களை விசாரித்தார். ஏற்கனவே தேவதூதன் மூலம் அறிவிக்கப்பட்டதும் தன்னுடைய வாழ்க்கையில் இறைவன் செயலாற்றினதும் இறைவன் இந்த உலகத்திலே மேசியாவைப் பிறப்பிக்க அவர் திட்டமிட்டதில் தன்னுடைய பங்கு இவ்விதமாக உண்டாயிருந்தது என்பதையும் அவர் அடிக்கடி தன் இருதயத்தில் வைத்து சிந்தித்துக் கொண்டிருந்தார் (லூக்கா 2:19, 51). மரியாள் இறைவன் இந்த உலகத்தில் செயலாற்ற திட்டமிட்டதில் தன்னுடைய பங்கு நான் ஆண்டவருக்கு அடிமை. ஆண்டவர் தமக்கு சித்தமானதை என்னில் செய்வாராக என்று தன்னை ஒப்படைத்ததிலிருந்து இருக்கிறது என்பதை தெளிவாக சொன்னார். ஆனபடியினால் லூக்கா இந்த விபரங்களை மிகவும் தெளிவாக எழுதி வைத்தார்.

பிறப்பு என்று சொல்லும்பொழுதே அது இறைவனால் நிகழ்த்தப்படுகிறதாகும். சிருஷ்டிப்பு, பிறப்பு, உயிர்த்தெழுதல் இறைவனுடைய மகத்துவமான செயலாகும். ஜீவனை அருளுகிறவர் அவரே. சுவிசேஷம் கூறும் கன்னி பிறப்பை அதில் பொதிந்து கிடக்கும் கிறிஸ்தவ மதக் கருத்தையும் பிரித்துவிட முடியாது. கிறிஸ்தவ மதத்தின் அஸ்திபார தூண்களில் இதுவும் ஒன்று. கிறிஸ்தவ திருச்சபையானது பிற்காலத்தில் உருவாக்கின விசுவாசப் பிரமாணத்தில் கன்னிப் பிறப்பையும் சேர்த்துக் கொண்டது. வரலாற்றில் நடந்த உண்மையை அவர்கள் விசுவாசத்தின் அஸ்திபாரமாக கொண்டார்கள். கிறிஸ்தவ மதத்தின கருத்துகளிலிருந்து கன்னிப் பிறப்பை பிரித்துவிட முடியாது.

மரியாள் தன்னை இறைவனுக்கு ஒப்புக் கொடுத்தது முதற்கொண்டு இறைவனின் அற்புத செயல் தன்னில் ஆரம்பமாயிருக்கிறதைக் கண்டு கொண்டாள். தன்னுடைய இனத்தாளான முதிர்வயது கொண்ட எலிசபெத்தைக் காணச் சென்றபோது அவள் உள்ளே பிரவேசித்தவுடனே எலிசபெத்தை வாழ்த்தினதும் எலிசபெத்தின் வயிற்றிலிருந்த பிள்ளை களிப்பாய் துள்ளிற்று. அதோடு எலிசபெத்து பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு உரத்த சத்தமாய் என் ஆண்டவருடைய தாய் என்னிடத்தில் வந்தது எனக்கு எதினால் கிடைத்தது. கர்த்தராலே சொல்லப்பட்டது அவளில் நிறைவேறும் என்று தீர்க்கதரிசனம் உரைத்தார். ஏற்கனவே மரியாளுடைய கர்ப்பத்தில இறை செயல் ஆரம்பமாகிவிட்டது. இது பரிசுத்த ஆவியினால் எலிசபெத்தை வாழ்த்தினதின் மூலமாக அறிந்து கொள்கிறோம் (லூக். 2:31-45). இறைவனுக்கு இது கூடிய காரியமே. மண்ணிலிருந்து ஒரு மனிதனை (ஆதாம்) உண்டு பண்ணினவர், மனிதனிலிருந்து ஒரு பெண்ணை (ஏவாள்) உண்டாக்கினவர் ஒரு பெண்ணிலிருந்து மனிதனை (இயேசு கிறிஸ்து) உருவாக்குவது கூடிய காரியமே. இன்று நான் உம்மை ஜநிப்பித்தேன்' என்று சங். 2:7ல் எழுதியிருந்த வேத வசனம் ஆயிற்று. அவள் தன் முதற்பேறான குமாரனைப் பெற்று முன்னணையில் கிடத்தினாள் (லூக். 2:5-7).

ஏற்கெனவே தேவ தூதரால் முன்னறிவிக்கப்பட்ட பிரகாரம் அவருக்கு இயேசு என்று பெயர் சூட்டப்பட்டது (லூக். 2:21). அவர் இறைவனாயிருக்கிறபடியினால் அவருடைய மேன்மைக்கு கன்னிப் பிறப்பை நம்பிக்கைக்குரியதாக நாம் நம்பலாம். 'கன்னிப் பிறப்பைக் காட்டிலும் அதிசயம் இறைவனுடைய மனித உற்பவமே. தேவன் மனிதனாய் உற்பவித்தது மிகவும் வியப்புக்குரிய அதிசயமான காரியமாகும். இதைக் காட்டிலும் உலகத்தில் வேறொரு அதிசயமில்லை, அவர் மூலமாய் உண்டான கிருபையும் சத்தியமும் இறைவனால் அருளப்பட்டது (யோ. 1:17) என்பதற்கு கன்னிப் பிறப்பு ஒரு வெளிப்படையான அடையாளமே. இறைவன் மனிதனான செயல் மிகவும் அதிசயிக்கத்தக்க காரியமாகும். இறைவன் தம்மை வெளிப்படுத்த கிறிஸ்துவாக இந்த உலகத்தில் வெளிப்பட்டார். அவர் அதிலே மனித சரீரத்திலே இருந்தபடியினால், ஆசரிப்புக் கூடாரத்தின் மகிமையைக் காண முடியாதபடி தகசுத்தோல் அதின்மேல் மூடப்பட்டிருந்தது போல இறைவனைக் காண முடியாதபடி அவருடைய மனிதத் தோற்றம் மூடி மறைத்ததாய் ஆகிவிட்டது. அவரை பூமியில் இருக்கும்போது கண்ட அநேகர் அவரை இன்னார் என்று காணக் கூடாமற் போய்விட்டது. ஆனால் அவருடைய செயல், கிரியைகள் அவர்களுக்கு அதிசயமாய் அடிக்கடி தோன்றிற்று. இவர் யாரோ என்று அதிசயித்தார்கள். அவருடைய வாழ்க்கை அவர்களுக்கு சவாலாக இருந்தது. இவர் எப்படிப்பட்டவரோ என்று வியந்தார்கள். அவருடைய போதகமும் அவருடைய செயற்பாடும் இவர் வரும் உலகத்தில் ஆளுகை செய்யப் போகிற ராஜா என்று கண்டார்கள். ஆனபடியினால் நிச்சயம் உம்முடைய ராஜ்யத்தில் சிங்காசனம் அமர்ந்திருக்கும் பொழுது எங்களுக்கு வலது இடது பக்கம் வேண்டுமென்று சொல்லி தங்கள் தாயின் மூலமாக இருவர் விண்ணப்பம் பண்ணினார்கள். இறைவனாகிய இயேசுகிறிஸ்து மனிதனாய் இவ்வுலகத்தில் தோன்றின அந்த சம்பவம் மனித உலகத்திற்கு மீட்பாயிற்று. பாவ மனித ஜாதியின் உருவத்திலே இறைவன் தோன்றினபடியினால் மனிதன் இறைவனின் ஸ்தானத்திற்கு உயர்த்தப்படுகிறான். மகிமையிலே இப்பொழுது தேவனுடைய வலது பாரிசத்திலே வீற்றிருக்கிறவர் ஒருவர் மனிதனே. அவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. நீயும் நானும் உயர்த்தப்பட்டு அங்கே அமர்த்தப்படப் போகிறோம் என்பதற்கு இது அடையாளமும் ஆதாரமுமாக இருக்கிறது.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி, அவரைத் தொழுது கொள், அவரை வணங்கு, அவரைப் பின்பற்று, அவரோடுகூட ஐக்கியப்பட்டு நீயும் முக்தியிலே இறைவனுடைய வலது பாரிசத்திலே இருப்பாய். கிறிஸ்தவ மதக் கோட்பாட்டில் சகல உபதேசங்களும், இயேசு கிறிஸ்துவினுடைய கன்னிகைப் பிறப்பு, இயேசு கிறிஸ்துவினுடைய பரிசுத்த ஜீவியம், இயேசு கிறிஸ்துவினுடைய மரணம், இயேசு கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதல் ஆகிய நான்கு தூண்களின் மேல் நிற்கின்றன. அவர் மனித சம்பந்தமில்லாமல் உற்பவித்தபடியினால் பாவமற்ற பரிசுத்தராக அவர் ஜீவித்தார். அவருடைய பரிசுத்த வாழ்க்கை அவர் பாவ கல்மிசமில்லாதவர் என்பதை நிருபிக்கிறது. அவர் பரிசுத்தராய் ஜீவித்து பாவிகளாகிய நமக்காக மரித்து நமக்காக பிராயச்சித்தமானார், அவர் நீதிமானாயிருந்தபடியினால் அவர் உயிரோடெழுப்பப் பட்டார். அவர் இறைவனாயிருந்தபடியினால் பரலோகத்திற்கு எல்லாருடைய கண் காண எழுந்தருளிப் போனார். மறுபடியும் வரப் போகிறார். மரியாள் தன்னை கர்த்தருக்கு அடிமை, ஆண்டவருடைய சித்தம் என்னில் ஆவதாக என்று ஒப்படைத்தது போல நீ ஒப்படை; கிறிஸ்து உன் இருதயத்தில் பிறப்பார்; புது ஜீவன் உண்டாகும்.

"... இதோ, ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள், அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவாள்"
(ஏசா. 7:14)

# உங்கள் ஜெபத்திற்கு ஏன் இன்னும் பதில் கிடைக்கவில்லை தெரியுமா?

''கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும், கேட்கிறவன் எவனும் பெற்றுக் கொள்கிறான்''. ''என் நாமத்தினால் எதைக் கேட்டாலும் செய்வேன்; அவருடைய சித்தத்தின்படி எதையாகிலும் கேட்டால் அவர் நமக்கு செவி கொடுக்கிறாரென்பதே அவரைப் பற்றி நாம் கொண்டிருக்கிற தைரியம்''. யாக்கோபு இரா முழுதும் ஜெபத்தில் போராடி, தேவனால் ஆசீர்வாதம் பெற்றார். ஆறுதலான இவ்வார்த்தைகள், நாம் ஜெபித்து தேவனிடம் கேட்டுப் பெற்றுக் கொள்ள நம்மைத் தூண்டுகிறவைகளாக இருக்கின்றன. அநேக கிறிஸ்தவ பக்தர்கள் இந்த வசனங்களின்படி ஜெபித்து நன்மை பெறுகிறார்கள். அதற்காக கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

இப்படியிருப்பினும், அநேகர் பற்பல காரியங்களுக்காக ஜெபம் செய்தும் பெற்றுக் கொள்ளாமலிருக்கிறார்கள், போராடியும் ஜெயம் பெறவில்லை. மன்றாடியும் சித்திக்கிறதில்லை. இதற்குக் காரணம் இந்நாட்களில் கிறிஸ்தவ மதத்தில் போதிக்கப்படுகிற தவறான உபதேசமாகும். அதென்னவெனில்: சபை வேண்டாம், உபதேசம் வேண்டாம், ஆவிக்குரிய அதிகாரிகள் வேண்டாம், அப்போஸ்தலர் வேண்டாம், தீர்க்கதரிசி வேண்டாம், போதகன், மேய்ப்பன், சுவிசேஷகன் என்று எவருமே வேண்டாம், தேவாலயம் வேண்டாம் நீ இயேசுவை விசுவாசித்தால் போதும் எதை வேண்டுமானாலும் செய்யலாம். விசுவாசிக்கிற எல்லாருக்கும் எல்லா அதிகாரமும் இருக்கிறது. திரை கிழிக்கப்பட்டாயிற்று என்பவைகளாகும்.

நமக்கும் பக்கத்து விட்டுக்காரருக்கும் வழக்கு உண்டானால் நாலு பேரை அழைத்து வழக்கைத் தீர்க்கலாம்; முடியாவிட்டால் போலீஸ் அதிகாரிகள் மூலம் தீர்க்கலாம்; முடியாவிட்டால் முனிசிபல் கோர்ட்டில் வழக்குப் போடலாம். அங்கேயும் நீதி கிடைக்காவிட்டால் மாவட்ட கோர்ட்டில் வழக்குப் போடலாம். அங்கும் முடியாவிட்டால் உயர் நீதிமன்றத்தில் வழக்குப் பதிவு செய்யலாம். அங்கும் நீதி கிடைக்காவிடில் சுப்ரீம் கோர்ட் வரை போய் நீதி பெறலாம். இப்படி செய்வதை விட்டுவிட்டு பக்கத்து வீட்டுக்காரனிடம் காலையில் ஒரு சண்டை, மாலையில் ஒரு கூச்சல், திடீர் திடீரென மோதல், அனுதினமும் அலட்டல் இப்படிச் செய்து செய்து பார்த்துவிட்டு நீதி கிடைக்காமல் சோர்ந்து போவதைக் காட்டிலும் செய்ய வேண்டியதை செய்வது நல்லது.

நாம் ஜெபத்திற்கு பதில் பெற்றுக்கொள்ள வேதாகமம் காட்டும் மாதிரியை கவனிப்பது நல்லது. நமக்கு ஒரு வியாதி வந்துவிட்டால் கர்த்தர் சுகம் தரும்படி வேண்டுதல் செய்யலாம். வியாதி தீராவிடில் சபையின் மூப்பர்களை வரவழைக்க வேண்டும். அவர்கள் நீதிமான்களாக இருக்க வேண்டும். அவர்கள் வந்து எண்ணெய் பூசி ஜெபிக்க வேண்டும். உன்னுடைய ஜெபம் கேட்கப்படாவிட்டாலும், மூப்பர்கள் தேவனால் ஏற்படுத்தப்பட்டவர்களானபடியால் அவர்கள ஜெபம் அதிக பெலனுள்ளதாக இருந்து தேவனால் கேட்கப்பட்டு சுகம் கிடைக்கும் என்று சத்திய வேதத்தில் எழுதி இருக்கிறது (யாக. 5:14-18).

நீ விசுவாசிதான், நீ தேவனுடைய பிள்ளைதான், உனக்கு சபை உண்டா? அங்கு மூப்பர்கள் உண்டா? அப்படியே இருந்தாலும் அவர்கள் நீதிமான்களா? அவர்கள் எலியாவைப் போன்று கருத்தாய் ஜெபம் செய்யக் கூடியவர்களா?

ஏரோது சபையைத் துன்பப்படுத்தி சிலரைக் கொலை செய்வது யூதருக்குப் பிரியமென்று அறிந்து, பேதுருவையும் பிடித்து சிறையிலே அடைத்துவிட்டான். பஸ்கா பண்டிகைக்குப் பின்பு ஜனங்களுக்கு முன் கொண்டுவர வேண்டும் என்று எண்ணி பேதுருவை பலத்த காவலுக்குட்படுத்தியிருந்தான். பேதுருவுக்காக சபையார் எல்லாரும் ஊக்கத்தோடே ஜெபம்

பண்ணினார்கள் (அப். 12:5). கூட்டு ஜெபத்தோடே மாத்திரம் நின்றுவிடாமல், சபையாரின் வீடுகளிலும் சபை மக்கள் கூடி இரவில் நீண்ட நேரம் ஜெபித்துக் கொண்டிருந்தார்கள் (அப். 12:12). ஜெபத்தைக் கேட்கிற தேவன் தமது தூதனை அனுப்பி சிறைச்சாலையிலிருந்து பேதுருவை வெளியே அழைத்து வந்துவிட்டார். பாருங்கள் பேதுரு ஒரு பெரிய அப்போஸ்தலன்தான், சபையாரின் ஊக்கமான ஜெபம் பெரிய அற்புதத்தை நடப்பித்தது.

பிரியமானவர்களே, நம்முடைய பிரச்சினைகளை நாமே தீர்க்க வேண்டும் என்று பிரயாசப்படுவதைவிட அதை சபைக்கு தெரிவிக்க சபையாரின் ஊக்கமான ஜெபம் அற்புதத்தை நிகழ்த்தும். இந்நாட்களில் அநேகருக்கு சபைகள் உண்டு. ஆனால் அதன் உறுப்பினர்கள் சபை கூட்டத்திற்கு கூடும்போது ஒன்றாயிருப்பார்கள். வெளியே வந்ததும், ஜாதி, பொருளாதாரம், உலகம், சுயநலம் இப்படிப்பட்ட காரியங்கள் அவர்களை பிரித்துவிடுகிறது. மெய்யான திருச்சபையோ ஒரு சரீரம் போன்றது. சரீரத்தில் ஒரு அவயவம் பாடுபட்டால், மற்ற எல்லா அவயவமும் ஒன்றாக பாடுபடுகிறது போல மெய்யான திருச்சபையில் ஒரு உறுப்பினருக்கு ஒரு பிரச்சினை என்றால் முழு சபையும் அதிலே கவனம் செலுத்தி ஜெபம் பண்ணுகிறது. ஜெபத்தைக் கர்த்தர் கேட்கிறார். உங்கள் காரியங்களை சபைக்குத் தெரிவியுங்கள். தீர்வு காண்பீர்கள்.

ஊமையும் செவிடுமான பிசாசு பிடித்திருந்த பையனிடமிருந்து சீஷர்கள், பிசாசை துரத்த பிரயாசப்பட்டார்கள், முடியவில்லை. கர்த்தரிடத்திலே சீஷர்கள் காரணம் கேட்டபோது அவர் இவ்வகைப் பிசாசுகள் ஜெபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தினாலும் போகாதென்றார் (மாற். 9:29). பிசாசுகளைத் துரத்தும் அதிகாரம் பெற்ற சீஷர்களால் பிசாசை துரத்த முடியவில்லை, அதிகாரம் இருந்தது உண்மைதான். ஆனாலும், உபவாசித்து ஜெபித்து அந்த அதிகாரத்தை செயல்படுத்த வேண்டியதாயிருந்தது. சீஷர்களுக்கே இந்தப் பாடென்றால் வெறும் விசுவாசியான உன்னால் என்ன செய்ய முடியும்? உனக்காக பரலோகத்தின் தேவனை நோக்கி மன்றாடும் ஊழியர்களிடம் உன்னுடைய பிரச்சினைகள் கொண்டுவரப்படக் கடவது. அவசியமானால் அவர்கள் உபவாசித்து ஜெபிப்பார்கள் காரியம் சித்தி பெறும். தானியேல் தன் தலைக்கு ஆபத்து வந்ததைக் கண்டபோது, பிரச்சினையை தன் தோழரான சாத்ராக், மேஷாக், அபேத்நேகோ என்பவர்களுக்கு தெரிவித்து பரலோகத்தின் தேவனை நோக்கி மன்றாட்டு செய்தார்கள். தானியேலின் தலை தப்பிற்று. பதிலாக கிரீடம் கிடைத்தது (தானி. 2:17, 18, 19).

புதிய எருசலேம் சபையில் தினமும் காலை 7 மணி முதல் 8 மணி வரையில் (அதற்கதிகமாகவும்) ஊழியர்கள் கூடி சபையாரின், சபையின் காரியங்களுக்காக பரலோகத்தின் தேவனை நோக்கி மன்றாட்டு ஏறெடுக்கிறார்கள். எருசலேமை நேசிக்கிறவர்கள் சுகித்திருக்கிறார்கள்.

யோப்பா பட்டணத்தில் தபீத்தாள் என்று ஒரு சீஷி இருந்தார்கள். அந்த அம்மா நற்கிரியைகளையும், தர்மங்களையும் மிகுதியாய் செய்து கொண்டு வந்தார்கள் (அப். 9:36). அந்த அம்மாள் வியாதிப்பட்டு மரித்துப் போனார்கள். அங்கே சீஷர்கள் இருந்தார்கள் (அப். 9:38), பரிசுத்தவான்கள் இருந்தார்கள் (அப். 9:41). அவர்கள் ஜெபம் பண்ணாமலா இருந்திருப்பார்கள். ஆனாலும் அவர் உடனே சபையை சந்திக்கும்படி பக்கத்தில் வந்திருந்த பிரதான அப்போஸ்தலனாகிய பேதுருவுக்கு ஆள் அனுப்பி வரவழைத்தார்கள். பேதுருவானவர் வந்து, முழங்கால் படியிட்டு ஜெபம் பண்ணி, பிரேதத்தின் புறம்பாகத் திரும்பி, தபீத்தாளே எழுந்திரு என்றார். உடனே தபீத்தாள் உயிரடைந்து எழுந்து உட்கார்ந்தார்கள் (அப். 9:36-40)

ஏன் பேதுரு வந்துதான் இந்த காரியத்தை செய்ய வேண்டுமா? ஆம், யோப்பா பட்டணத்திலிருந்த பரிசுத்தவான்களால், சீஷர்களால் ஜெபித்து சித்தி பெற முடியாததை பேதுருவானவர் ஜெபத்தின் மூலமாய் பெற்றுக் கொண்டார்கள்.

புதிய எருசலேம் சபையாரின் விடுதலை வாழ்வின் இரகசியம் இதிலே இருக்கிறது. இறைவன் தமக்கு சித்தமானவைகளை, கேட்கிற

# வேத பாடம் (தொடர்ச்சி)

லேவி. 22-ம் அதி. :

ஆசாரியர்கள் பரிசுத்த வஸ்துக்களை, இஸ்ரவேல் புத்திரர் செலுத்தின காணிக்கைகளை தீட்டுப்படுத்தலாகாது. குஷ்டரோகியோ,பிரமியமுள்ளவனோ, பிணத்தினால் தீட்டுப்பட்டவனோ இந்திரியம் கழிந்தவனோ, தீட்டுப்பட்ட யாதொரு பிராணியையோ, தீட்டுள்ள மனிதனையோ தொட்டவனோ சாயங்காலம் மட்டும் தீட்டுப்பட்டிருப்பான். அவன் சாயங்காலத்தில் ஜலத்தில் ஸ்நானம் பண்ணும் வரைக்கும் அவன் பரிசுத்தமானவைகளில் புசிக்கலாகாது. சூரியன் அஸ்தமித்த பின்பு அவன் ஸ்நானம் பண்ணி சுத்தமாயிருப்பான். அதன் பின்பு அவன் பரிசுத்தமானவைகளில் புசிக்கலாம். அது அவனுடைய ஆகாரம். தானாய் செத்ததையும், பீறுண்டதையும் புசிக்கிறதினாலே தன்னைத் தீட்டுப்படுத்தலாகாது. ஆகையால் பரிசுத்தமானதை அவர்கள் பரிசுத்தக் குலைச்சல் ஆக்குகிறதினாலே பாவம் சுமந்து அதினிமித்தம் சாகாதபடிக்கு என் கட்டளைகளைக் காக்கக் கடவர்கள். நான் அவர்களை பரிசுத்தமாக்குகிற கர்த்தர் என்றார்.

ஆசாரியர்கள் தீட்டுள்ளவனோ குஷ்டரோகியோ பரிசுத்தமானவைகளில் தொடக் கூடாது; புசிக்கவுங் கூடாது. பரிசுத்தமானவைகளை தீட்டுள்ளவன் தொட்டால் அது தீட்டாகும். அது கர்த்தருடைய நாமத்துக்கு மகிமை குறைச்சலாகும் (ஆகாய். 2:11-13).

லேவி. 22 : 10-14 : ஆசாரியன் வீட்டில் தங்கி இருக்கிற அந்நியனோ கூலி வேலை செய்கிறவனோ பரிசுத்தமானவைகளில் புசிக்கக் கூடாது. ஆனால் ஆசாரியன் வீட்டிலே பணத்துக்கு கொள்ளப்பட்டவனும், ஆசாரியன் வீட்டில் பிறந்தவனும் அவனுடைய ஆகாரத்தில் புசிக்கலாம். ஆசாரியனுடைய குமாரத்தி அந்நியனுக்கு விவாகமுற்றிருந்தால் அவள் பரிசுத்தமானவைகளில் புசிக்கலாகாது. விதவையாய்ப் போன அல்லது தள்ளிவிடப்பட்ட ஆசாரியனுடைய குமாரத்தி பிள்ளை இல்லாதிருந்து தன் தகப்பன் வீட்டில் தன் இளவயதில் இருந்தது போல் இருந்தாளாகில் அவள் தன் தகப்பனுடைய ஆகாரத்தில் புசிக்கலாம். அந்நியன் ஒருவனும் பரிசுத்தமானதில் புசிக்கலாகாது. அப்படித் தவறி தெரியாமல் புசித்து விட்டால் பரிசுத்தமானதில் ஐந்தில் ஒரு பங்கு அவன் கூட்டி ஆசாரியனுக்குக் கொடுக்க வேண்டும்.

லேவி. 22 : 17-22 : சர்வாங்க தகன பலியோ, பொருத்தனையோ,எந்த ஒரு பலியோ பலிபீடத்தின் மேல் தகனிக்கிற எந்த ஒரு பலியும் பழுது இல்லாததாக இருக்க வேண்டும்.

குருடோ, நெரிசலோ, முடம், கழலை, சொறிபுண் முதலிய பழுதுள்ளவைகளும், நீண்ட அல்லது குறுகின அவயமுள்ளவைகளோ பொருத்தனையாக அங்கிகரிக்கப்படமாட்டாது.

லேவி. 22: 23, 24, 25 : குறுகின அவயமுள்ள மாட்டையோ, ஆட்டையோ உற்சாக பலியாக இடலாம். பொருத்தனைக்காக அது அங்கிகரிக்கப்பட மாட்டாது. விதை நசுங்கினதையும், நொறுங்கினதையும், காயம்பட்டதையும், விதை அறுக்கப்பட்டதையும் நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தாமல் அவைகளை உங்கள் தேசத்திலே பலியிடாமலும் இருப்பீர்களாக. அந்நியர் கையிலே இப்படிப்பட்டவைகளை வாங்கி தேவனுக்குப் பலி செலுத்தக் கூடாது. அவைகளின் கேடு அவைகளில் இருக்கிறது.

லேவி. 22 : 26-30 : செம்மறியாட்டு, வெள்ளாட்டுக் குட்டிகளோ எட்டாம் நாளில் கர்த்தருக்குப் பலியிடலாம். தாயையும், குட்டியையும் ஒரே நாளில் பலியிடக் கூடாது. கர்த்தருக்கு ஸ்தோத்திர பலி செலுத்துகிறவர்களெல்லாம் மனப்பூர்வமாய் அதைச் செலுத்த வேண்டும். அந்த நாளிலே அந்த ஸ்தோத்திர பலி புசிக்கப்பட வேண்டும். மறுநாள் மீதி வைக்கக் கூடாது.

லேவி. 22 : 31-33 : என் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியுங்கள். நான் உங்கள் தேவன். உங்கள் தேவனாய் இருக்கும்படிக்கு உங்களை எகிப்திலிருந்து புறப்படப் பண்ணினேன் என்றார். இந்தக் கட்டளைகள் எவைகளைக் காண்பிக்கிறதென்றால் தேவனுக்குச் செலுத்தப்படுகிற எந்த பலியும் பூரணமானதாக இருக்க வேண்டும். உற்சாகமுள்ளவர்களாய் செலுத்த வேண்டும். தேவனுக்குச் செலுத்தப்படுகிற எதுவுமே இரவையாக எண்ணப்படக் கூடாது என்பதாம். ஆகையால் நாம் தேவனுக்குச் செலுத்துகிற எந்த பொருத்தனை பலியும் வேத வசனத்தின்படி சரியாக தேவனுக்கே செலுத்த வேண்டும். சிலர் கர்த்தருக்கு தசமபாகம் கொடுக்கும்போது அதை பிய்த்து பிய்த்து தங்களுக்கு இஷ்டமான பிரகாரம் தங்களுக்கு இஷ்டமான ஊழியத்துக்கும், ஊழியர்களுக்கும் கொடுக்கிறதும், தங்கள் இஷ்டமான பிரகாரம் செலவு செய்து நான் கர்த்தருக்குத்தான் செலவு செய்தேன் என்று தங்களைத் திருப்திபடுத்திக் கொள்கிறார்கள். கர்த்தருடையதை கர்த்தருடைய வார்த்தையின்படி, சத்தியத்தின்படிதான் செலவு செய்யலாம். தன்னுடைய இஷ்ட பிரகாரம் செய்ய வேண்டுமானால் தசமபாகம் கொடுத்துவிட்டு மீதி தன்னுடைய பணத்திலிருந்து எடுத்து தன்னுடைய இஷ்ட பிரகாரம் செய்யலாம். மற்றபடி மல். 3:8-10 வசனங்களின்படியும் ஆதி. 14:17-30 முடிய உள்ள உதாரணத்தின் பிரகாரமும் தனக்கு அப்பமும் திராட்சை ரசமும் கொடுக்கிற ஆசாரியனுக்கு அல்லது தான் கர்த்தரைத் தொழுது கொள்ளுகிற ஆலய பண்டகசாலைக்கே தசமபாகம் காணிக்கைகள் செலுத்தப்பட வேண்டும். சிலர் தசம பாகத்தை எடுத்து தங்கள் சகோதரி அங்கே ஊழியஞ் செய்கிறாள் என்று அவளுக்குக் கொஞ்சம், தனக்குப் பிரியமான பத்திரிகை ஊழியத்துக்குக் கொஞ்சம், வந்து போகிற ஊழியர்களுக்குக் கொஞ்சம், தான் இருக்கிற சபைக்குக் கொஞ்சம் என்று கிறிஸ்தவர்களில் சிலர் செய்கிறதாகத் தெரிகிறது. இவைகளெல்லாம் பாவமாகும். அவைகள் கர்த்தருடைய பொக்கிஷத்தில் சேராது.

(தொடரும்)

"......இது எவ்வளவு வருத்தமென்று சொல்லி, அதை ஒரு திரணமாய்ப் பேசி, பீறுண்டதையும் கால் ஊனமானதையும், நசல் கொண்டதையும் கொண்டு வந்து காணிக்கையாகச் செலுத்துகிறீர்கள்......அதை உங்கள் கைகளில் அங்கிகரித்துக் கொள்வேனோ என்று கர்த்தர் கேட்கிறார் (மல். 1:13).

(தொடர்ச்சி)

# இந்து மதம்

இரண்டாவது நான்கு வேதம் ஆறு சாஸ்திரம் பதினெட்டு புராணங்களாகிய இவைகளின் வரலாறு:

1. நான்கு வேதம் என்பது இருக், யகுர், சாமம், அதர்வணம் என்பவைகளை நான்கு வேதமும் பிரம்மாவினுடைய நான்கு முகங்களிலிருந்து புறப்பட்டனவென்றும், இவைகள் வணங்கப்படத்தக்கதென்றும் சொல்லுகிருர்கள். அவைகள் சமஸ்கிருத பாஷையில் எழுதப்பட்டிருக்கின்றன. சுயாம்பு மனு என்ற பிரம்மாவினுடைய மகன் சலப்பிரளயம் உண்டான போது வேதங்களைக் காப்பாற்றி வேதத்தின் பொருளாகிய வேதாந்தத்தை உண்டு பண்ணினுன் என்று சொல்லப்படுகிறபடியால் மனிதனுடைய காலத்தின் பரம்பரை நியாயம் என்று அர்த்தங் கொள்ளுதலாகிய பல சூத்திரங்கள் அக்காலத்திலிருந்த வித்வான்களால் எழுதப்பட்டிருக்க வேண்டும் இப்படி பாரம்பரிய நியாயங்களை மநு, அலர்க்கன், மார்க்கண்டன் என்பவர்கள் சேர்த்து வேத சூத்திரங்களாக்கினுர்கள் என்று தெரிகிறது. விசுவாமித்திரன், பரத்துவாசன், தன் நூறு குமாரர்களை சபித்து சண்டாளர்களாக்கின வசிஷ்டன், வாமதேவன், அகஸ்தியன், தன் தாயின் தலையை அறுத்த பிறகு சிவனை சபித்த கௌதமன், பிரகஸ்பதி இப்படிப்பட்டவர்கள் வேத காரியங்களை சேர்த்து எழுதினுர்கள். அவர்கள் விஸ்தாரமாக எழுதி வைத்தவைகளை தன் சகோதரன் மனைவியைச் சேர்ந்து இரண்டு பிள்ளைகளைப் பெற்ற வியாசர் வேதத்தையெல்லாம் சேர்த்து ரிக் வேதத்தை பாலி என்பவனுக்கும், யகுர் வேதத்தை வைசம்பாயனன் என்பவனுக்கும், சாம வேதத்தை சயமுனி என்பவனுக்கும், அதர்வண வேதத்தை சோமனன் என்பவனுக்கும் போதித்தாராம். இவர்கள் மற்றவர்களுக்கு போதித்தார்களாம் வேதத்தில் சங்கிதா என்னப்பட்ட மந்திரங்களும், பிராமணம் என்னபபட்ட உபதேச பிரமாணங்கள் உண்டு. மந்திரங்கள் பல ரிஷிகளாலே சூரியன், சந்திரன், பூமி, ஜலம், காற்று, அக்கினி, ஆகாயம், புல் முதலியவற்றை நோக்கியும், பல ராஜாக்களை நோக்கியும் சொல்லியிருக்கின்றன. உபதேச பிரமாணங்கள் பிராமணர்கள் செய்ய வேண்டிய பூசையினுடைய இயல்பையும், மந்திரங்கள் உபதேசங்கள் பல சடங்குகள் செய்யும் விதங்களையும் கற்பிக்கின்றன.

## 1) ரிக்வேதம்:

ரிக் என்பதற்கு பெருமை, ஸ்துதி என்று அர்த்தமாகும். இந்த வேதத்தில் தேவர்களுடைய ஸ்துதியும் மற்றவைகளின் ஸ்துதிகளும் உண்டு. காயத்திரி என்கிற சூரியனை நோக்கி சொல்கிற மந்திரம்,

''ஓம் பூர் புவ சுவர்
தற்சவிதுர்வ ரேணியம் பார்க்கோ தேவசிய
தீமகி, தியோ யோந பிரசோத யாத்''
ஓம்

தியோ யோன பிரசோத யாத் ஓம்.

இதன் பொருள் பூமி ஆகாசம், சொர்க்கம் பிரகாசமுள்ள அந்த சூரியனுடைய புகழத்தக்க ஒளியை தியானிக்கிறோம். அது நம்முடைய புத்திகளை தூண்டக் கடவது என்பதே ரிக் வேதத்தில் வசிஷ்டன் திருடப்போனபோது நாய் குரைத்தபடியால் நாயை அடக்க அவர் செய்த மந்திரமும் இருக்கிறது.

## 2) அதூர் வேதம்:

அசுர் என்பதற்கு ஸ்தோத்திரம் என்று அர்த்தம். இந்த வேதத்தில் காணிக்கைகள், பலிகள் முதலியவை பற்றி குறிப்பிடப்பட்டிருககின்றன.

## 3) சாம வேதம்:

சாமம் என்பதற்கு சங்காரம் என்றர்த்தம். சாமவேதம் மகா முக்கியமானது. இதிலே பாவ விமோசனம் குறித்து பல சடங்குகள் கற்பிக்கபபடடிருக்கிறது. ஆனுல் இந்த வேதம் பலிக்கிறது. அதை வாசிககிற விதத்தில் இருக்கிறதாம்.

## 4) அதர்வண வேதம்:

அதர்வணம் என்பதற்கு அழித்தல் என்று அர்த்தம். இதில் பகைஞரை கொல்லுகிற

தற்கு சர்ப்பனை மந்திரங்களும் இன்னமும் தேவர்களுக்கு சில மந்திரங்களும் உண்டு. அநேக பிராமணர்கள் இந்த வேதங்களை வாசித்தாலும் அதின் கருத்தை அறிய மாட்டார்கள். வேதங்களை பிராமணர் மாத்திரம் வாசிக்க வேண்டிய தொழிலேயொழிய சூத்திரர்கள் அதைத் தொடவுங் கூடாது. ஓம் என்கிற அச்சரம் பிரம்மாவினுடைய அடையாளமானபடியினாலே பிராமணர்கள் வேதத்தை ஓதத் தொடங்கும் போதும் ஓதி முடிக்கும்போதும் அதைச் சொல்ல வேண்டியதாகும்.

1. வேதத்தில்: மகத்தான பரப்பிரம்மத்தைக் குறித்து பல விகற்பமான காரியங்கள் சொல்லி இருக்கிறார்கள். பரப் பிரம்மம் எங்கும் நிறைந்திருக்கிறதென்றும் உலகத்தின் மாயை என்றும் எந்த பொருளும் அதின் தோற்றமென்றும் இந்த உலகத்தை உண்டாக்கின பிறகு அதினை இரட்சிக்க மும்மூர்த்திகளை படைத்தார் என்றும், அந்த மகாத்துமாவை தியானிப்பதே உயர்ந்த ஞானம் என்றும், மனுஷர்கள் அந்த மகாத்துமாவை பிரத்தியட்சமாய் அறிந்து கொள்ளக் கூடாமையால மும்மூர்த்திகளையும், முப்பத்துமுக்கோடி தேவர்களையும், அக்கினி முதலிய பஞ்சபூதங்களையும், விக்கிரகங்களையும் வைத்து நமஸ்கரிக்க வேண்டுமென்றும் கற்பித்திருக்கிறது வேத சாஸ்திரங்களிலேதானே கடவுளுக்கு ப பிரம்மன் என்னும் நாமம் உண்டென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை மெய்யென்று புத்திசாலிகளாகிய எவர்களும் அங்கீகரிக்க மாட்டார்கள். அதெப்படியெனில் பிரம்மம் என்கிற பெயர் மேற சொல்லிய வேத சாஸ்திரத்திலே சாட்சாத் கடவுளுக்கு வழங்குகிற தேயலலாமல அது வாயுக்கும், மனதுக்கும், போஷிப்புக்கும், ஊழியக்காரனுக்கும், துர்ச்சனனுக்கும் வழங்குகிற பொதுப் பெயராய் வருகின்றது.

2. ஆத்துமா:

சில இடங்களில் நித்தியம் என்றும் சில இடங்களில் மகாத்துமாவின் ஒரு பங்கு என்றும் ஆத்துமாக்கள் தாங்கள் செய்த பாவ புண்ணியத்தின்படி உடலைவிட்டு மற்றொரு உடலுக்கு பாய்கிறது என்றும் சொல்லுகிறது.

3. வேதத்தில் சிருஷ்டிப்பைக் குறித்து விகற்பமாகச் சொல்லியிருக்கிறது. உலகம் 14 உலகமாம். மேலுலகு, கீழுலகு. மேலுலகு: மேலுலகாவன பூலோகம், புவலோகம், சிவலோகம், சனலோகம், தபாலோகம, மகாலோகம், சத்தியலோகம்; கீழுலகான அதனம், விதனம், சுதரம், தராதரம், ரசாதரம், மகாதரம, பாதாளமே. சாங்கிய சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது (வள்).

மேலும் வேதத்தில் சூரியன் அக்கினியிலிருந்து பிறந்தானென்றும், சந்திரன் சூரியனினின்று பிறந்தானென்றும் மழை சந்திரனிலே பிறந்தது என்றும், மின்னல் மழையினால் உண்டாகிறதென்றும் சொல்லியிருக்கிறது. பிரம்மாவின் பேரனாகிய மனுதர்ம சாஸ்திரத்தில் சொல்லுகிறதாவது: ரிக்வேத முழுவதையும் படித்து ஞாபகத்தில் வைத்திருக்கிற ஒரு ஆசாரியன் மூவுலகுக் குடிகளையும் கொலை செய்த சண்டாளரோடு புசித்தாலும் அவனுக்கு பாவமில்லையாம் (நீதி சாரம் 5ம் பாட்டு)

அந்தணருடனுக்கும் ஆபத்து வருங்காலத்தில்,
சுந்தகன் உயிரை விட்டு தானதை
இரட்சித்தானே
விந்தா சரணம் விட்டிரைம்பது பிரம்மயோனி
வந்தைசு வரியவானாய் வாழ்ந்துபின
தேவனாவான்

அன்றியும், நான்கு உபதேசமுண்டு ஆயுள் வேதம், அர்த்த வேதம், தனூர் வேதம, கந்தர்வ வேதமே. மேலும் நான்கு வேதங்களிலுள்ள உபதேச பிரமாணங்களிலிருந்து உபநிடதங்கள் 32 பிறந்தன. உபநிடதம் என்றால் வேத நுட்பம் என்பது. அவையாவன: ரிக், யசுர், சாம, அதர்வணம், தைத்திரியம், மிருகதாருயண்ம், லிங்கம், சாரீரம், நாரசிங்கம், சத்பத பிரமாணம், காருடம், கருப்பம், சாந்தோக்கியம், கடவல்லி, முண்டம், முற்கதம், பிரம்ம விந்து, தாயலீயம், கபாலம், யாக்கியவல்கியம், மைத்திரா வருணம், நிற்குணம், மந்திரம், மானதீபம், மாகோபச்சம், சினியுருத்திரம், சபாலம், தாச்சுவரதம், பரமாத்துமியம், அதர்வச்சிரமம் போன்றவைகளே. மேற்சொல்லிய நான்கு வேதங்கள். வந்த விதத்தைக் குறித்து கபிலர் அகவுரையில் சொல்லியிருக்கிறதை எடுத்துரைக்கிறோம்.

பிரம்மாவுக்கு கூத்தி வயிற்றிலே பிறந்த வசிஷ்டர் முதன்முதல் இந்த மண்டலத்துக்கு வேதத்தைக் கொண்டுவந்து பராபர வஸ்து ஒன்றையே அருபமாய் துதிபண்ண வேண்டுமென்றும் எல்லா மனிதரும் சாதி பேதமில்லாமல் ஒன்றாயிருந்து சகல மாம்சமும் சாப்பிடலாமென்றும் பிரசங்கம் பண்ணினபோது சிலர் அவரிடத்திலே தர்க்கம் செய்ததினாலேசக்கிலிச்சியாகிய அருந்ததியை கலியாணம் செய்தார் என்றும் அவள் வயிற்றிலே சாதிபர் பிறந்து தகப்பனாகிய வசிஷ்டர் கொண்டு வந்த வேதத்தையே வித்தியாசமில்லாமல் பிரசங்கித்து சாதி வேற்றுமையில்லாமல் பறச்சியை கலியாணம் செய்து பராசரனைப் பெற்றார் என்றும், பராசரரும் வம்ச வரிசையின்படியே அந்த வேதத்தையே பிரசங்கம் பண்ணிக் கொண்டிருக்கிற நாளில், ராஜாக்களும் பிரபுக்களும் மச்சம் கவிச்சி உள்ளதானபடியால் அதை மாத்திரம் போஷிக்க மாட்டோம் என்று சொன்னதினால் அவர் தவசுக்குப் போய் தவோபலத்தினால் மச்சக்கந்தி என்ற பெண்ணைச் சேர்ந்து மச்ச ராஜாக்களையும், குருக்களையும் உண்டாக்கும்படிக்கு வேத வியாசரைப் பெற்றார் என்றும், அந்த வேத வியாசர் தகப்பன் பிரசங்கித்த வேதத்தை தானும் சில காலம் பிரசங்கித்து கடைசியிலே பார்ப்பனருக்கு கொடுத்தார் என்றும். வேதம் ஒன்றாயிருந்தும் நான்கு ரிஷிகள் தலைமுறைப்படியே பிரசங்கித்து வந்தபடியால் அதை நான்கு வேதமாக்கினார்கள் என்றும் சொல்லியிருக்கிறது.

*சாஸ்திரம்*

இந்துக்களுடைய சாஸ்திரங்கள் இரண்டு வகுப்பு உள்ளவைகளாக இருக்கின்றன. ஒரு வகுப்பில் மூல சாஸ்திரமும், ஒரு வகுப்பில் ஆறு சாஸ்திரமுமாம். மூன்று வேதங்களான சாங்கியம், பதஞ்சலியம், வேதாந்தம் என்பவைகளே. இவற்றை அத்தியான்மிக நூல் என்று சொல்லுகிறார்கள்.

*1. சாங்கிய சாஸ்திரம்*

இந்த சாஸ்திரம் கபிலரால் கூறப்பட்டது. முத்தொழிலும் மூல பிரகருதியாகிய மாயையிடத்திலே உண்டாயினவென்பது.

''சுவையொளி யூறோசை நாற்றமென்லைந்தின்
வகை தெறிவோன் கட்டேயுலகு''

என்று குறளுக்கு பரிமேலழகர் உரை செய்யும் சாங்கிய சாஸ்திரத்தால் தொகுப்பாய் சொல்லியிருக்கிறதாவது சுவை, ஒளியும், மூர், ஓசை நாற்றம் என்று சொல்லப்பட்ட தன் மாத்திரைகளை கூறுபாட்டை மாறாய் ''வானறிவின் கண்ணலே யுலகம் என்றாவது''. அவற்றின் கூறுபாடாவது பூதங்கள் முதலாகிய அவை தாமைந்தும் அவற்றை கட்டோன்றிய அப்பூதங்களைந்தும், அவற்றின கூறாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கருமேந்திரியங்கள் ஐந்துமாகிய இருபதுமாம்.

(தொடரும்)

''...வாதை பெரு வெள்ளமாய்ப் புரண்டு வந்தாலும் எங்களை அணுகாது; நாங்கள் பொய்யை எங்களுக்கு அடைக்கலமாக்கி, மாயையின் மறைவிலே வந்து அடைந்தோம் என்கிறீர்களே'' (ஏசா. 28:15).

# கிறிஸ்மஸ் புதுவருட வாழ்த்துக்கள்

தேவன் அருளிய சொல்லி முடியாத ஈவுக்காக அவருக்கு ஸ்தோத்திரம் (II கொரி. 9:15). நம்மை ஐசுவரியவான்களாக்கும்படியாக (சரீரப் பிரகாரமாகவும், ஆவிக்குரிய பிரகாரமாகவும்) ஐசுவரியமுள்ளவராய் இருந்த இயேசு கிறிஸ்து நமது நிமித்தம் தரித்திரரானார் (II கொரி. 8 : 9). இறைவன் மனிதனானதினிமித்தம் உண்டான எல்லா ஆசீர்வாதங்களினாலும் புதிய எருசலேம் செய்தி வாசகர்களெல்லாரையும் தேவன் ஆசீர்வதிக்க வாழ்த்துகிறோம். 1992-ம் புத்தாண்டு புது கிருபையை உங்களுக்குக் கொண்டு வருவதாக!

—புதிய எருசலேம் செய்தி

# கிறிஸ்தவ திருமணம்

(தொடர்ச்சி)

## வந்து விட்டது திருமணம்

திருமணம் நடைபெற சில மாதங்கள் அல்லது நாட்களுக்கு முன்பாகவே அதற்கு ஆயத்தத்தைத் தொடங்க ஒரு நாள் குறித்து விடுவது நல்லது. இதை நிச்சயதார்த்தம் என்று பொதுவாக அழைக்கிறார்கள். அந்த நாளில் இந்தப் பையனும் இந்தப் பெண்ணும் திருமணம் செய்யப் போகிறார்கள் என்று எல்லோருக்கும் அறிவிக்க வேண்டும். அந்த நாள் தொடங்கி திருமண நாளை எண்ணியபடி பெண்ணும் பையனும் உற்சாகமாய் இருப்பது இயல்பே. ஆனால் அந்த உற்சாகத்தில் அவர்கள் ஆயத்தப்பட வேண்டிய காரியத்தை மறந்துவிடக் கூடாது. நிச்சயதார்த்தத்தில் ஒரு அனுகூலம் உண்டு. திருமணத்துக்கு முன்பு ஒருவரையொருவர் கொஞ்சம் அறிந்து கொள்ள இது உதவுகிறது. இப்போது அவர்களை யாரும் தூற்றிப் பேசமாட்டார்கள். பையனும், பெண்ணும் பையனுடைய வீட்டாரும், பெண்ணுடைய பெற்றோர்களும், சார்ந்தவர்களும் குருக்களும் இருந்து இந்த நிச்சயதார்த்தம் செய்யப்படுகிறது. நிச்சயதார்த்தத்துக்கு முன்பாக பையனும் பெண்ணும் பரிச்சயமானவர்களாக இருக்கலாம், அல்லவென்றால், ஒருவரையொருவர் கேள்விப்பட்டவர்களாக இருந்திருக்கலாம். இருவரும் இயேசு கிறிஸ்துவினுடைய இரத்தத்தினால் மீட்கப்பட்டவர்களாக இருப்பது மிகவும் முக்கியம். இரட்சிக்கப்பட்டவர்கள் இரட்சிக்கப்பட்ட துணையையே தேட வேண்டும். மற்றப்படி அவர்களது மணவாழ்க்கை இறைவனால் அங்கீகரிக்கப்பட்டதாய் இருக்காது (II கொரி. 6:14) நிச்சயதார்த்தத்தின்போது இருவரும் ஒருவரையொருவர் சந்திக்கும்படியாக நேருக்கு நேர் அமர்த்தப்பட்டிருப்பார்கள். இந்தப் பெண்ணை விவாக மனைவியாக நீ ஏற்றுக் கொள்ள சம்மதிக்கிறாயா என்று கேட்கப்படும். பெண்ணிடத்தில் உன்னுடைய விவாக புருஷனாக இவரை ஏற்றுக் கொள்ள சம்மதிக்கிறாயா என்று கேட்கப்படும். இதைத் தொடர்ந்து கொடுக்கல் வாங்கல் முதலிய காரியங்களையும் அதே சமயத்தில், இன்ன நாளில் இந்த இடத்தில் விவாகத்தை நடப்பிக்க வேண்டும் என்பதையும் குறிப்பிட்டு விடுவது நல்லது. நிச்சயதார்த்தத்துக்கும் விவாக காலத்துக்கும் இடையில் மூன்று மாதமோ அல்லது ஒரு மாதமோ இடைவெளி இருக்கலாம். அதிக நாட்கள் இடைவெளி நியமிப்பது நல்லதல்ல. இந்த நிச்சயதார்த்த நாட்களுக்குப் பின்பு ஒருவர் பற்றி ஒருவர் தவறாக அர்த்தப்படுத்தத் தக்கதான கதைகள், கோள்கள் காதுக்கு எட்டலாம், அதைப்பற்றி சிந்திக்கக் கூடாது. ஒருவருடைய வாழ்க்கையில் திருமணத்துக்கு முன்பு நடந்த எந்த சம்பவத்திற்கும் கேள்வி கேட்க பையனுக்கோ பெண்ணுக்கோ உரிமை கிடையாது. நாமெல்லாரும் பாவிகளாயிருந்து இயேசுவின் இரத்தத்தினால் மீட்கப்பட்டவர்கள். தேவன் சுத்தமாக்கினதை மனிதன் அசுத்தமென்று சொல்லாதிருப்பானாக.

நிச்சயதார்த்தத்துக்குப் பின்பு ஒருவரையொருவர் சந்திக்கும் சூழ்நிலை ஏற்பட்டாலும் பேசுகிற சந்தர்ப்பம் உண்டானாலும் கண்ணியமாக சுருக்கமாகவே வைத்துக் கொள்ள வேண்டும். நெருங்கிப் பழகக் கூடாது நிச்சயதார்த்தந்தான் ஆகிவிட்டதே என்று அதிகமாக பழக்கம் வைத்துக் கொள்ளவோ வாழ்க்கையில் தவறவோ கூடாது. அப்படிச் செய்தால் அவர்களுடைய வாழ்க்கையில் திருமணம் வெற்றியடையாது. அநேக யுவ யுவதிகளுடைய வாழ்க்கையில் திருமணத்திற்கு முன்பு அவர்கள் களவுறவும் செய்தபடியினால் பின்பு பெரிய கசப்பாக மாறி முறிந்துபோன சம்பவத்தை அறிவோம் (II சாமு. 13:14, 15). திருமணம் எப்பொழுது ஆகிறதோ அப்பொழுதே ஒருவர் மேல் மற்றவருக்கு உரிமையுண்டு. நிச்சயதார்த்தம் ஒரு உடன்படிக்கையே. நிச்சயதார்த்தத்துக்குப் பின்பு விவாகத்திற்கான இடையூறுகள், எதிர்பாராத சிக்கல்கள் தோன்றலாம. பெற்றோர்கள் சம்மதமில்லாமல் இருக்கலாம். பண விஷயமாக தகராறு வரலாம் இவ்விதமான காரியங்கள் வந்தாலும் செய்து கொண்ட உடன்படிக்கையை நிறைவேற்றுவதிலே விசுவாசிகள் தீர்மானமாக இருக்க வேண்டும். ஆணையிடுகிற

தில் தனக்கு நஷ்டம் வந்தாலும் தவறக்கூடாது
(சங். 15:4). உடன்படிக்கையை மீறுகிறவர்
களை கடவுள் தண்டிப்பார். உடன்படிக்கையை
மீருதவர்களை கடவுள் நேசிக்கிருர். மீறுகிற
வர்களை அவர் வெறுக்கிருர் (நீதி. 12:22).
ஒரு கிறிஸ்தவன் சொல் தவறக் கூடாது.
அவன் 'ஆம்' என்ருல் அது 'ஆம்' என்றே
இருக்க வேண்டும். 'இல்லை'யென்ருல் 'இல்லை'
என்றே இருக்க வேண்டும் (மத். 5:37; யாக்.
5:12).

திருமணத்தில் பேசப்பட்ட உடன்படிக்கை
நிறைவேற்றப்பட வேண்டும். சொல்லியும்
செய்யாதிருப்பதை விட சொல்லாமல் இருப்
பதே மேல் (பிர. 5:5). திருமணத்திற்கான
ஆயத்தங்களை இருசாராரும் வேகமாய்ச்
செய்து சுருக்கமாக தேவையில்லாத சடங்காச்
சாரங்கள், பழக்கவழக்கங்கள இவைகளை
அகற்றிவிட்டு தேவ சந்நிதானத்திலே இறை
வனுக்குப் பிரியமாக சுருக்கமாக அதிகாரம்
பெற்ற குருவானவர் மூலமாக திருமணம்
நடத்தப்பட வேண்டும். தங்களை உத்தம
கிறிஸ்தவர்களென்று சொல்லிக் கொள்கிற
அநேகர் இந்திய மக்களிடத்தில் காணப்படுகிற
பழக்க வழக்கங்களையும், சடங்காச்சாரங்களை
யும், தாலி கட்டுதலையும் இவர்கள் செய்கிருர்
கள். தங்களுடைய பெற்ருேருடைய மனதை
புண்படுத்தக் கூடாது என்பதற்காக இவ்வித
மாகச் செய்கிறதாக சொல்லிக் கொள்வார்
கள். கடவுளை புண்படுத்துவது பற்றியோ,
வேதனைப்படுத்துவது பற்றியோ கவலைப்
படுத்துவது பற்றியோ கவலையில்லை. கடவுளுக்
குப் பயப்படுகிறதை விட தங்கள் உறவினர்
களுக்கு இவர்கள் அதிகம் பயப்படுகிருர்கள்.
இவர்கள படைத்தவரைத் தொழுது சேவியா
மல் படைப்புகளைத் தொழுது சேவிப்பவர்கள்
(ரோ. 1:25). திருமண நேரத்தில் நீங்கள்
புறஜாதி சடங்குகளுக்கு இடமளித்துவிட்டு
கடவுள் உங்கள் திருமணத்திற்கு வருகை தந்து
ஆசீர்வதிப்பாரென்று எதிர்பார்க்கிறதுபோல
மூடத்தனம் வேறெதுவுமே இல்லை. கடவுளு
டைய சொல்லைப் பற்றிக் கொண்டு கர்த்தருக்
குப் பிரியமாய் திருமணம் நடத்தப்பட வேண்
டும். அப்பொழுது கடவுள உங்களைக் கனப்
படுத்துவார்.

திருமணத்தின்போது கிறிஸ்துவின் மீது
தங்களுக்குள்ள விசுவாசத்தை சாட்சி பகர
இரண்டு பேருக்கும் ஒரு நல்ல சந்தர்ப்பம்
கிடைக்கிறது. திருமணத்தைத் தொடர்ந்து
போதகருக்கும் பெற்ருேர்களுக்கும் இருவரு
மாக சேர்ந்து வணக்கம் தெரிவித்து ஆசீரைப்
பெற்றுக்கொள்ள வேண்டும் விவாகம் நடந்த
வுடனே குருவுக்கு அளிக்கப்பட வேண்டிய
தட்சணையை செலுத்த வேண்டும். திருமண
அவசரத்தில் காணிக்கை கொடுக்காமல் விட்டு
விடுகிறதோ. திரும்ப ஞாபகம் வரும்போது
பிறகு பார்க்கலாம் என்று விட்டு விடுகிறதோ
நன்மையான செயல் அல்ல. ஒருவர் அவ்வித
மாக நடந்து கொண்டு பல வருஷத்துக்குப்
பின்பு தேவன் அவர்களை சிட்சிக்கும்படி நேர்ந்
தது. சிட்சை நீங்க ஜெபித்துக் கொண்டிருக்
கும்போது ஒருநாள் இரவு அவர்களுக்கு திரு
மணம் நடத்திய குருவானவர் தோன்றி என்
னுடைய காணிக்கை எங்கே என்று தரிசனத்
தில் கேட்டிருக்கிருர். அதற்குப் பின்புதான்
தாங்கள் திருமணமானபோது குருவுக்குச்
செலுத்த வேண்டிய காணிக்கை செலுத்த
வில்லையென்பதை அறிந்து மறுநாள காலையில்
குடும்பமாக ஓடோடிச் சென்று அதைச்
செலுத்தியபோது அவர்களுக்கு உண்டா
யிருந்த வயிற்றுவலி நீங்கி சுகம் பெற்ருர்கள்.

திருமணம் அழகுற நடந்து இறையாசிரும்
மனிதர்களது வாழ்த்தல்களுடன் அது சிறப்
புற முடிந்து தம்பதிகளிருவரும் சில நாட்கள்
தனித்திருக்கும்படியாக ஏற்பாடுகள் செய்து
விட்டுவிடுவது நல்லது. உற்ருர், பெற்ருர்,
குடும்பத்தார்களுடைய தொந்தரவுகளோ,
பொருளாதார காரணங்களினுல் சேர்ந்துதா
னிருக்க வேண்டுமென்கிற இடையூறுகளோ
இல்லாதபடி. அவர்களை அவ்விதமாக தனித்து
விடுவது அவர்கள் ஒருவரையொருவர் புரிந்து
கொள்ளவும், இறைவனுடைய பிரசன்னத்தை
அவர்கள் தேடவும்பிரயோஜனமாக இருக்கும்.
வெற்றி! திருமணம் மகிழ்ச்சியாக நடந்தேறி
முடிந்தது. திருமண வாழ்க்கைக்காக இரு
வரும் ஆயத்தப்பட்டு இறை சந்நிதானத்திலே
காத்திருந்து அவர்கள் வேண்டிக் கொண்டதை
இறைவன் நிறைவேற்றி முடித்தார். இனி
மகிழ்ச்சியின் வாழ்க்கை தொடரும்.

(தொடரும்)

# நான் உன் தகப்பனின் தேவன் (ஆதி. 26:24)

தேவனாகிய கர்த்தர் ஈசாக்கிடம் சொல்லும்போது, ''நான் உன் தகப்பனாகிய ஆபிரகாமின் தேவன்; நான் உன் தகப்பனிமித்தம் உன்னை ஆசீர்வதிப்பேன் என்றார் (ஆதி. 26:24). இந்த வேத வசனம் நம்முடைய ஆத்துமாவை குளிரப் பண்ணுகிறது போல இருக்கிறது. ஒரு மனிதன் தேவனுக்குப் பயந்து தேவனுக்குக் கீழ்ப்படிந்து தேவ சத்தத்துக்கு செவி கொடுத்து அவர் கொடுக்கும் கட்டளை, கற்பனைகள், நியமங்கள் எல்லாவற்றையும் கைக்கொண்டு நடக்கும்போது அவன் மூலமாய் அவனுடைய சந்ததி ஆசீர்வதிக்கப்படுவதை ஈசாக்குக்கு தேவன் சொன்ன வாக்குத்தத்தத்தின் மூலம் அறிந்து கொள்கிறோம்.

தகப்பன் மூலம்தான் பிள்ளைகளுக்கு ஆசீர்வாதம். யாத். 20:5-6ல் வாசிக்கும்போது பிதாக்களுடைய அக்கிரமத்தை பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறை மட்டும் நியாயம் விசாரிக்கிறவராயிருக்கிறேன் என்றும் என்னிடத்தில் அன்பு கூர்ந்து என் கற்பனைகளைக் கைக்கொள்கிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறை மட்டும் இரக்கம் செய்கிறவராயிருக்கிறேன் என்றும் தேவனாகிய கர்த்தர் திருவுளம் பற்றியிருக்கிறார். பிதாக்கள் பாவம் செய்யும்போது மூன்றாம் நான்காம் தலைமுறை மட்டும் தன் பிள்ளைகளிடம் நியாயம் விசாரிக்கிறார். தேவனிடம் அன்பு கூர்ந்து ஒருவன் தேவனின் கற்பனைகளை கைக்கொள்ளும்போது ஆயிரந் தலைமுறை மட்டும் தேவனாகிய கர்த்தர் இரக்கஞ் செய்கிறவராக இருக்கிறார் என்று தேவனுடைய வசனம் எவ்வளவு திட்டமாக சொல்லுகிறது. ஆகையால் தகப்பன்மார்கள் பயபக்தியாகவும், பரிசுத்தமாகவும் ஜீவித்தால் பின் சந்ததியார் ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று வேதம் சொல்லுகிறது. ''நான் இளைஞனாயிருந்தேன், முதிர்வயதுள்ளவனுமானேன், ஆனாலும் நீதிமான் கைவிடப்பட்டதையும் அவன் சந்ததி அப்பத்துக்கு இரந்து திரிகிறதையும் நான் காணவில்லை'' (சங். 37:25) என்று தாவீது ராஜா சொல்லுகிறார். பரிசுத்தவான்கள் தங்கள் அனுபவத்தையும் தாங்கள் கண்டதையும் மேற்கூறப்பட்டவாறு சொல்லுகிறார்கள். நாம் ரோடுகளில் போகும்போது காணப்படும் சில தீரா வியாதியுள்ளவர்களை மக்கள் கண்டு, இவனுடைய முன்னோர்கள் என்ன அதர்மம் செய்தார்களோ அவர்களுடைய பிள்ளைகள் இப்படி அழுந்துகிறார்கள் என்று சொல்லிக் கொண்டு போவதை நாம் பார்க்கிறோம். அது ஒரு அளவுக்கு உண்மையாகத்தானிருக்கிறது. சாலமோன் ஞானியும், ''பிள்ளைகளின் மேன்மை அவர்கள் பிதாக்களே'' (நீதி. 17:6) என்று தன் வாக்கியத்தில் சொல்லுகிறார் பிள்ளைகள் மேன்மையாக இருக்கக் காரணம் அவர்கள் பிதாக்கள் மூலந்தான் என்று வேதம் சொல்லுகிறது. இன்னும் அவர் சொல்லும்போது, ''கர்த்தருக்குப் பயப்படுகிறவனுக்குத் திடநம்பிக்கையுண்டு; அவன் பிள்ளைகளுக்கும் அடைக்கலம் கிடைக்கும்'' (நீதி. 14:26) என்றும், ''நீதிமான் தன் உத்தமத்திலே நடக்கிறான், அவனுக்குப் பிறகு அவன் பிள்ளைகள் பாக்கியவான்களாக இருப்பார்கள்'' (நீதி. 20:7) என்றும் ஞானி தன் வாக்கியத்தில் சொல்லுகிறார். அப். பவுல். ''பெற்றாருக்குப் பிள்ளைகளல்ல, பிள்ளைகளுக்குப் பெற்றார்களே பொக்கிஷம் சேர்த்து வைக்க வேண்டும்'' (II கொரி. 12:14) என்று எழுதியிருக்கிறார். ஆகையால் பிள்ளைகள் ஆசீர்வதிக்கப்பட பிதாக்கள் தேவனுக்குப் பயந்து ஜாக்கிரதையாக நடக்க வேண்டும். ஆபிரகாம் தேவனுக்குப் பயந்து நடந்தபடியால் அவருடைய சந்ததி ஆசீர்வதிக்கப்பட்ட சந்ததியாக இந்த உலகத்தில் இருக்கிறதை நாம் கேள்விப்படுகிறோம்.

### தகப்பன் மூலம் பிள்ளைகளுக்கு ஆசீர்வாதம்

இதைவிட மேலான ஆசீர்வாதம் ஆவிக்குரிய ஆசீர்வாதமாகும். இந்த ஆவிக்குரிய ஆசீர்வாதம் ஆவிக்குரிய தகப்பன்மார்கள் மூலம்தான் ஆவிக்குரிய பிள்ளைகளுக்கு கிடைக்கிறது. மாம்சமான தகப்பன்மார்கள் தேவனுக்குப் பயந்து நடந்தால் மாம்சமான பிள்ளைகள் மாம்சமான காரியத்தில் ஆசீர்வதிக்கப்படு

கிறார்கள். ஆவிக்குரிய தகப்பன்மார்கள் மூலம் ஆவிக்குரிய பிள்ளைகள் ஆவிக்குரிய காரியங்களில் ஆசீர்வதிக்கப்படுகிறார்கள் என்று பார்க்கிறோம். அநேக சபைகளில், ''போதகனைப் பாராதே, போதகத்தைப் பார்'' என்கிறார்கள். போதகன் எப்படியும் நடப்பான், 'அவனைப் பார்க்காதே, அவன் போதிக்கிறதைப் பார்த்து நட என்கிறார்கள், அது சரியான முறையல்ல. அப். பவுல், ''நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறதுபோல நீங்கள் என்னைப் பின்பற்றுங்கள்'' (I கொரி. 11:1) என்று சொல்கிறார். எனவே ஆவிக்குரிய தகப்பன்மார்களைப் பின்பற்ற வேண்டும். ஆவிக்குரிய தகப்பன்மார்கள் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறவர்களாயிருக்க வேண்டும். இன்று அநேகர், ''புதிய எருசலேமின் பிள்ளைகள் நன்றாக ஆவிக்குரிய ஆசீர்வாதத்தோடு இருக்கிறார்கள். வரம், வல்லமையோடு இருக்கிறார்கள், காட்சி தரிசனம் காண்கிறார்கள், உண்மையாக இருக்கிறார்கள், ஒழுக்கமாக இருக்கிறார்கள், புதிய எருசலேம் பிள்ளைகளை நம்பலாம் என்றெல்லாம் சொல்லுகிறார்களே இந்த புதியஎருசலேம் சபை பிள்ளைகளுக்கு இந்த ஆசீர்வாதம் எங்கிருந்து வந்தது. அவர்கள் சபைக்கு வருவதற்கு முன்னால் ஜெபம் பண்ணத் தெரியுமா, சாட்சி கொடுக்க முடியுமா, காட்சி தரிசனம் உண்டா, தன் கெட்ட பழக்கத்தை விட்டதுண்டா? சபைக்கு வந்தவுடன் ஆவிக்குரிய ஆசீர்வாதத்தோடே இருக்கக் காரணம் என்ன? இந்த ஆசீர்வாதத்தை எங்கேயிருந்து பெற்றார்கள்? ஆவிக்குரிய தகப்பன் தலைமையின் மூலம் இந்த ஆசீர்வாதம் புதியஎருசலேம் பிள்ளைகளுக்கு கிடைத்திருக்கிறது. தகப்பன் மூலம்தான் பிள்ளைகள் ஆசீர்வதிக்கப்பட வேண்டும். இது தேவ தீர்மானம். வேறு வழியாக ஆசீர்வாதம் வருவதில்லை. ''மேலும் முதற்பலனாகிய மாவானது பரிசுத்தமாயிருந்தால் பிசைந்தமா முழுவதும் பரிசுத்தமாயிருக்கும். வேரானது பரிசுத்தமாயிருந்தால் கிளைகளும் பரிசுத்தமாயிருக்கும் (ரோ 11:16) என்று சத்தியம் சொல்கிறது. இந்த சத்தியத்தை உலகம் அறிய வேண்டும். இன்னும் பவுல் சொல்லும்போது இவ்வாறாக, 'கிறிஸ்துவுக்குள் பதினாயிரம் உபாத்தியாயர் உங்களுக்குள் இருந்தாலும் தகப்பன்மார் அநேகர் உங்களுக்கு இல்லையே; கிறிஸ்து இயேசுவுக்குள் சுவிசேஷத்தினால் நான் உங்களைப் பெற்றேன்'' (I கொரி. 4:15 என்று சொல்லுகிறார். பவுல் சுவிசேஷத்தினாலே பெற்றேன் என்கிறார். ஆனால் புதிய எருசலேமின் பிள்ளைகளை தலைமை (தகப்பன்) உபதேசத்தினால் பெற்றார்கள். உபதேசத்தினால்தான பரிசுத்தம் உண்டாகிறது. நான் உங்களுக்குச் சொன்ன உபதேசத்தினாலே நீங்கள் இப்பொழுதே சுத்தமாயிருக்கிறீர்கள் (யோ. 15:3) என்று வேதம்சொல்கிறது. சுவிசேஷம் இயேசு கிறிஸ்துவை அறிகிற அறிவைக் கொடுக்கிறது. உபதேசம் இயேசு கிறிஸ்து சொன்ன வார்த்தையின்படி நடக்கச் சொல்கிறது. வார்த்தையின்படி நடக்கும்போது பரிசுத்தம் உண்டாகிறது. உபதேசத்தின் மேன்மை இவ்வாறு இருக்கிறது.

வேதத்தில் மூன்று காரியம் அடங்கி இருக்கிறது. 1) சுவிசேஷம், 2) உபதேசம், 3) விசேஷம் என்பது. சுவிசேஷம்-இயேசு கிறிஸ்துவை அறிகிற அறிவைக் கொடுக்கிறது. உபதேசம்-இயேசு கிறிஸ்து சொன்ன வார்த்தையின்படி நடக்கச் சொல்லுகிறது. விசேஷம் - வருங்காரியங்களை வெளிப்படுத்துகிறது. இந்த மூன்று பாக்கியமும் தேவனுடைய திருச்சபைக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதுவே காரியம். தேவனுடைய திருச்சபை இந்த மூன்று அம்சங்களுடையதாக இருக்கிறது. இதுவே பூரணம், பூரணமாக்கப்பட்ட திருச்சபை.

சில சபைகளில் சுவிசேஷம் மாத்திரம் இருக்கிறது, மற்ற இரண்டும் இல்லை. ஆனால் தேவனுடைய சபையில் இந்த மூன்று அம்சங்களும் இருக்கிறது. இந்த பூரண உபதேசத்தினால் (தலைமை) தகப்பன் மூலம் பெற்ற பிள்ளைகள் புதிய எருசலேம் பிள்ளைகள். எனவே தலைமை தகப்பன்மூலம் இந்த ஆசீர்வாதத்தை புதிய எருசலேமின் பிள்ளைகள் பெற்றிருக்கிறார்கள். தகப்பன் மூலம் பிள்ளைகளுக்கு ஆசீர்வாதம் உண்டாகிறது. ''அவர்களும் சத்தியத்தினாலே பரிசுத்தமாக்கப்பட்டவர்களாகும்படி அவர்களுக்காக நான் என்னைத்தானே பரிசுத்தமாக்குகிறேன்'' (யோ. 17:19) என்றாரே, உனக்குத் தகப்பனுண்டா?

''ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாயிருக்கிற உங்கள் பிதாக்களுடைய தேவனாகிய கர்த்தர் ''
(யாத. 3:15)

சிறுவர் பகுதி :

# பிதாவை எங்களுக்கு காண்பியும்

கிறிஸ்துமஸ் பண்டிகை நெருங்கிக் கொண்டிருந்தது. குழந்தைகள் மிகவும் குதூகலத்துடன் காணப்பட்டார்கள். வண்ண வண்ண புத்தாடைகளில் சின்னஞ் சிறுவர் சிறுமிகளைப் பார்ப்பதற்கு கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. சபையில் ஒவ்வொரு பெற்றோரும் தங்களது குழந்தைகளை மிகவும் நேர்த்தியாக அழகு படுத்தி அழைத்து வந்திருந்தனர். பண்டிகை நாளில் மக்கள் மகிழ்ச்சியில் திளைத்தார்கள். கிறிஸ்துமஸ் தினத்திற்கான சிறப்புச் செய்தியை போதகர் வழங்கிக் கொண்டிருந்தார். செய்தியை செவிமடுத்து கேட்ட எல்லாரும் தங்களது இல்லங்களிலும், உள்ளங்களிலும் இயேசு இரட்சகர் பிறந்துவிட்டார் என்று எண்ணி மெய்யாகவே இன்புற்றனர். விழாவின் இறுதியில் முந்தின வாரம் நடைபெற்று முடிந்த ஞாயிறு பள்ளி இலக்கிய மன்றப் போட்டிகளில் முதலிரெண்டு இடங்களில் வெற்றிபெற்ற சிறுவர் சிறுமியருக்கு மற்றும் பிள்ளைகளுக்கும் சபையின் போதகர் பரிசுகளை வழங்கினர். வயது வரம்பிற்கு ஏற்ப சிறுவர் சிறுமியர் மூன்று அல்லது நான்கு குழுக்களாகப் பிரிக்கபபட்டிருந்தனர். ஒவ்வொரு குழுவினரும் தங்கள் தங்கள் வயது மற்றும் படிப்பிற்கு ஏற்ப 'திருவசனம் ஒப்பித்தல், பாட்டுப் பாடுதல், சிறுகதை சொல்லுதல்'' ஆகிய நிகழ்ச்சிகளில் திறமையுடன் போட்டி போட்டு வெற்றி பெற்றிருந்தனர். ஞாயிறு பள்ளிகளில் தாங்கள் பெற்ற கல்விக்கும், ஒழுக்கத்திற்கும், பண்பிற்கும் அன்று வெகுமதி வழங்கப்பட்டது. பரிசளிப்பு நிகழ்ச்சி நிறைவுற்ற பின்பு சபையின் போதகர் பிள்ளைகளை நோக்கி, ''அன்பான குழந்தைகளே! அருமையான பிள்ளைகளே! இப்பொழுது நமது ஆண்டவர் இயேசுநாதர் இங்கே வந்திருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது நீங்கள் ஒவ்வொருவரும் அவரிடம் என்ன கேட்பீர்கள் என்று வினவினர்.

ஒவ்வொரு பிள்ளைகளும் தங்களது மன நிலைக்கு தக்கதான பதிலைக் கூறிக்கொண்டு வந்தார்கள். பண்டிகை நாளுக்குப் புத்தாடை கிடைக்காத குழந்தை சொல்லியது 'நல்லதொரு புதுச்சட்டை வேண்டுமென்று கேட்பேன்' என்று, தனக்கு விலையுயர்ந்த கைக் கடிகாரம் வேண்டுமென்று கேட்பேன் என்று ஒரு சிறுமி கூறினள். ஒரு குழந்தை கூறியது தனது பெற்றோர்கள் தன்னை அன்புடன் வைத்துக் கொள்ள வேண்டும், அடிக்கவே கூடாது என்று நான் ஆண்டவனிடம் வேண்டுவேன் என்று. அவ்வேளையில் ஒரு சிறு பையன் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு அனைவரும் ஆச்சரியப் பட்டார்கள். ஆம், பக்தியுள்ள பிலிப்பு என்ற அச்சிறுவன், ''ஆண்டவரே பிதாவை எங்களுக்குக் காண்பியும்'' (யோவா. 14:8)என்று கேட்பேன் என கனிரென்று சொன்னன். அவனது பதிலை ஆமோதிப்பதற்காக சபையோர் எழுப்பிய கரவொலியின் சத்தத்தினுல் கட்டிடமே அதிர்ந்தது. ஞானமுள்ள அச்சிறுவன் கூறிய பதில் சபையோர் அனைவரையும் சிந்திக்க வைத்தது. அவ்வேளையில் இயேசுநாதர் ''பிதாவே! வானத்துக்கும் பூமிக்கும் ஆண்டவரே! இவைகளை ஞானிகளுக்கும், கல்விமான்களுக்கும் மறைத்து பாலகருக்கு வெளிப்படுத்தினபடியால் உம்மை ஸ்தோத்தரிக்கிறேன். ஆம் பிதாவே! இப்படிச் செய்வது உம்முடைய திருவுளத்துக்குப் பிரியமாயிருந்தது'' என்று மலர்ந்த பொன்மொழியை எல்லாரும் நினைவு கூர்ந்தார்கள். ''நானும் பிதாவும் ஒன்ருயிருக்கிறோம்'' என்று இயேசு சொன்னர்.

இதை வாசித்துக் கொண்டிருக்கிற அன்பான தேவனுடைய பிள்ளைகளே! சற்று சிந்தியுங்கள். நமது தேவைகள், விண்ணப்பங்கள், வாஞ்சைகள் எல்லாம் உலகத்தைச் சார்ந்ததா? அல்லது உன்னதத்திற்குரியவைகளா? நாம் தேவனை, தேவனுக்குரியவைகளை தேடுவோமாக. அப்பொழுது ஆண்டவர் நமக்குத் தேவையான எல்லாவித நன்மைகளையும் தந்தருள்வார். மேலும் ''தேவையானது ஒன்றே மரியாள் தன்னை விட்டெடுபடாத நல்ல பங்கைத் தெரிந்து கொண்டாள்'' (லூக்கா. 10:42) என்று ஆண்டவர் நம்மையும் குறித்து எல்லோருக்கும் முன்பாக நற்சாட்சி கொடுப்பார்.

பிலிப்புவின் பெற்றோர்கள் அவனைத் தேவனுக்கேற்ற பக்தி நெறியில் நன்றாக வளர்த்திருப்பார்கள் என்று நம்புகிறோம். நாமும் தேவன் நமக்குத் தந்த நமது குழந்தைகளை அவ்வாறு வளர்க்கிறோமா? அல்லது அவன் நன்றாகப் படித்து உயர்ந்த வேலைக்கு வந்து நம்மை வசதியுடன் வைத்துக் கொள்ள வேண்டும். அது போதும் என்று நினைக்கின்றோமா? ''சிறு குழந்தையின் இருதயம் எழுதப்படாத வெள்ளைக் காகிதம் போன்றது. அதில் நாம் எதை எழுதுகின்றோமோ அதையே நம்மால் வாசிக்க முடியும்'' என்று அறிஞர் ஒருவர் கூறியுள்ளார் எவவே பிள்ளை வளர்ந்து ஆவியிலே பெலன் கொண்டு ஞானத்தினால் நிறைந்தது தேவனுடைய கிருபையும் அவர்மேல் இருந்தது (லூக். 2:40) என்று வேதம் நமக்குக் காண்பிக்கிற மாதிரியைப் பின்பற்றி பிள்ளைகளை வளர்ப்போமாக. அது உங்களுக்கும் திருச்சபைக்கும், தேவனுக்கும் பிரயோஜனமாயிருக்கும.

''ஆண்டவரே! பிதாவை எங்களுக்குக் காண்பியும், அது எங்களுக்குப் போதும். '' என்கிற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம்''.

(யோவான் 14:8), (I தீமோ. 6:6)

''...பிதா தவிர வேறொருவனும் குமாரனை அறியான்; குமாரனும், குமாரன் எவனுக்கு அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ அவனும் தவிர, வேறொருவனும் பிதாவை அறியான்''

(மத். 11:27).

# சாட்சி

''நியாயப் பிரமாணத்திலே மோசேயும், தீர்க்கதரிசிகளும் எழுதியிருக்கிறவரைக் கண்டோம்'' (யோவா. 1:45)

தேவனுக்கு மகிமை உண்டாவதாக. நான் கொடைக்கானல் நாயுடுபுரம் என்னுமிடத்தில் வசித்து வருகின்றேன். என் பெயர் ஜெயராஜ். நான் ஒரு வைராக்கியமுள்ள C S.I. கிறிஸ்தவக் குடும்பத்தில் பிறப்பிக்கப்பட்டேன். வைராக்கியத்தோடு வாழந்தபோதும் ''இந்த ஜனங்கள் தங்கள் வாயினால் என்னிடத்தில் சேர்ந்து, தங்கள் உதடுகளினால் என்னைக் கனம் பண்ணுகிறார்கள். அவர்கள் இருதயமோ எனக்குத் தூரமாய் விலகியிருக்கிறது...'' ஏசா. 29:13 எவற வசனத்தின்படி என்னுடைய ஜீவியம் காணப்பட்டது. சிறுவயதிலிருந்தே கீழ்ப்படியாமை காணபித்தே நடந்து வந்தேன. பொய் சொல்வதும், பொருட்களைத் திருடி இன்பம் காணுவதுமாகவே வாழ்ந்து வந்தேன்.

இந்த நாட்களில் எனக்கு ஒரு சொப்பனம் காண்பிக்கப்பட்டது. அப்போது வயது 10 அல்லது 11 இருக்கும். அந்த சொபபனத்திலே நான் என் வீட்டிலே இருந்து கொண்டிருக்கின்றேன். அப்போது சுமார் 7 அல்லது 8 பேர் மிகவும் கருப்பான வஸ்திரத்தை உடுத்திக் கொண்டு விட்டிற்குள் பிரவேசித்து என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே வருகின்றனர். மிகவும் அடித்து துன்புறுத்தி பயமுறுத்துகின்றனர் அப்போது ஒரு வயதான பெரிய மனிதர் நீண்ட வெண்மையான அங்கியைத் தரித்தவர் இடது கரத்தில் வேத புத்தகத்தை வைத்திருக்கிறார், வலது கையில் ஒரு சவுக்கு வைத்துக் கொண்டு வருகிறார். அவர் என்னைச் சூழ நின்ற மனிதர்களை அடித்து விரட்டிவிட்டு அன்போடு ஆதரவான ஒரு இடத்திறகு என்னை அழைத்துச் செல்லுகின்றார். பின் நாட்களில் இதை தியானிக்கும்போது தேவன் எரேமி. 1:19ன்படி என்னை நடத்துகிறார் என்று அறிந்து கொண்டேன்.

இப்படியாக பொய்க்குப் பிதாவாகிய சாத்தானின திட்டப்படியே நான் சகல துர்க்குணமும் நிரம்பிய வாழ்க்கை வாழ்ந்து வந்தேன். என்னுடைய அக்கிரமமான கிரியைகளினால் என்னுடைய பெற்றோர், உறவினர்கள் இனஜன பந்துக்கள யாவரும் என்னை வெறுத்து தள்ளினார்கள். இந்நிலையில் நான் வீட்டை விட்டு வெளியேறினேன். ஊர் ஊராக சுற்றி

னேன் வயது ஏற ஏற பாவத்தின் கொடூரமும் என்னில் நிரம்பி வழிந்துகொண்டே இருந்தது. பாவத்தின் பிறப்பிடமாக வாழ்ந்தேன். இதினிமித்தமாக என் சரீரம் உருக்குலேந்தது சங். 39:11ன்படி என் நிலை காணப்பட்டது. ஆனாலும் என் தேவன் என்னை முன்குறித்திருந்தபடியால் அவருடைய வலது கரம் என்னை தாங்கியது. நான் அவரை விட்டு தூரமாக போய்க்கொண்டே இருந்தேன். என் தேவன் என்னை பின்தொடர்ந்து வந்தார். நானோ பாவத்தின் இறுதி எல்லையை கண்டு கொண்டிருந்தேன். தேவ திட்டத்தை முற்றிலுமாயறிந்த சாத்தான் என்னைக் கொன்றுபோட பலமுறை வகை தேடினான். ஆனாலும் என் தேவன் மரணத்திலிருந்து என்னைத் தப்புவித்தார். நான் நன்றி அற்றவனாகவே வாழ்ந்து வந்தேன்.

பின் 1976ம் ஆண்டு என் வீட்டிற்குச் சென்றேன், என் பெற்றோர் எனக்கு மணமுடித்து வைத்தால் பையன் திருந்திவிடுவான் என நினைத்து ஆவிக்குரிய சபையைச் சார்ந்த ஒரு பெண்ணை தேர்ந்தெடுத்தார்கள். 1978-ம் ஆண்டு ஜூலை 29ல் திருமணம் நடந்தது. பல போராட்டங்களோடு திருமணத்திற்காக நான் சபைகளுக்குச் செல்ல ஆரம்பித்தேன். வேதம் வெளி. 21:27ல் தீட்டுள்ளதொன்றும் உள்ளே பிரவேசிப்பதில்லை என்று சொல்லுகிறது. ஆனால் நானோ பாவத்தோடேயே வாழ்ந்தேன். என்னைக் கண்டுபிடிக்கவோ அல்லது அது தவறு என்று சொல்லவோ ஆளில்லை. ஏனென்றால் நான் சென்று வந்த C.P.M , I P.C., C.S.I., U.P.C. போன்ற இடங்களிலெல்லாம் என்னில் குடிகொண்டிருந்த பாவ வாழ்க்கையே காணப்பட்டது.

இந்நிலையில் நான் 1978ம் ஆண்டு இறுதியிலேயே மெய்தேவனும் மீட்பர் இயேசு கிறிஸ்து வாசம் செய்துவரும் மணவாட்டியான ''புதிய எருசலேம் சபை''யைக் காண என் தேவன் எனக்கும் இரக்கம் செய்தார். எனது கால்கள் திருச்சபைக்குள்ளாக நுழைந்த போது காந்தத்தை நோக்கி இரும்பானது இழுக்கப்படுவது போல உணர்ந்தேன். அங்கே (பள்ளப்பட்டி Branch-ல்) தேவ சாயலைக் காண முடிந்தது. உபதேசம் கிறிஸ்துவையும் அவருரைத்த வார்த்தையாகிய வேதத்தையுமே சார்ந்ததாக இருந்தது. நானறியாமலிருந்த அன்பு அங்கே வெளிப்பட்டது. எப்பேர்பட்ட மனிதனும் பாவமன்னிப்பின் (யோ. 20:23) உபதேசத்தால் சுத்தமாக முடியுமென்பதையறிந்தேன். தேவன் பிரத்தியட்சமாக எழுந்தருளினதைக் காண முடிந்தது (சங். 82:1) அவரின் சத்தம் கேட்க முடிந்தது (ஆதி. 3:8). இவை யாவும் என்னைக் கல்வாரியண்டைக்கு இழுத்துச் சென்றது. கொடைக்கானலில் பெருமாள்மலை என்ற இடத்தில் புதிய எருசலேமாய் ஆராதிக்கிறார்கள், நீங்களும் அங்கே செல்லுங்கள் என்ற ஆலோசனை வந்தது. நாங்களிருந்த இடத்துக்கும் ஆராதனை ஸ்தலத்துக்கும் அதிக தூரமாக அப்பொழுது தெரிந்தபடியால் நாங்கள் மறுபடியும் UPCக்கு ஆராதிக்கச் சென்றோம். காரியங்களைப் பேசினோம். அந்த வாரத்தில் பிரசங்கம், ''சிலர் சபைவிட்டு சபை மாறும் எண்ணத்தோடு செல்கிறார்கள். இவர்களை கர்த்தர் சபிக்கிறார்'' என்றிருந்தது. எனக்கு மனதில் மிகுந்த துக்கம் உண்டானது ஏனென்றால் அந்தச் சூழ்நிலையில் வேறு யாரும் இல்லையாதலால் என்னைத்தான் இப்படிச் சொல்கிறார்கள், தேவன் நீதியுள்ளவராமே. சத்தியத்தைப் பற்றிச் சொன்னால் தேவன் சபிப்பாரோ? இனிமேல் இந்தப் பகுதியில் தலைவைத்துப் படுக்கக்கூடாது என்று நினைத்து அன்றிலிருந்து நாங்கள் புதிய எருசலேம் சபையை நோக்கி வரவாரம்பித்தோம். சங். 34:5ன்படி தேற்றப்பட்டோம். நீதி. 28:13ன்படி பாவத்தினை அதிகாரம் பெற்ற (யோ. 20:21-23) ஊழியர்களின் முன்னிலையில் தேவனிடம் அறிக்கையிட்டேன்.

1 யோ. 1:9ன்படி சுத்திகரிக்கப்பட்டேன். யோவான் 3:5ஐ அறிந்து அதன்படி வள்ளியூர் ஆலய பிரதிஷ்டையின் வேளையில் பரிசுத்தவான் மூலமாக கிறிஸ்துஇயேசுவின் கட்டளைப்படி (மத். 28:19) பாவங்கள் போக கழுவப்பட்டேன் (அப். 22:16). கிறிஸ்துவுக்குள் தான் பலப்படும்படியாக நான் தேவனால் சங். 32:8ன்படி தேற்றப்பட்டேன். என் ஆத்துமாவுக்கு உத்திரவாதிகளாகிய என் ஆவிக்குரிய (எபி. 13:17) தகப்பன்மார்களால் போதிக்கப்பட்டு வளர ஆரம்பித்தேன். இடையிலே சாத்தான் சோதிக்கவாரம்பித்தான். சில போராட்டங்கள் காரணம் என் பார்வை உலகத்தை நோக்கியது. அதன் விளைவு வேதனைகள்—

'தேவன் ஒருவரே ..'
**THERE IS ONE GOD...**

Regd. No. 040088/84
Postal Regd No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

ரூ. 30,000 வரை நஷ்டம் ஏற்பட்டது யோ 16:8ன்படி மறுபடியாக ஆவியானவரால் போதிக்கப்பட்டு யோ. 13:10ன்படி என்னை தேவன் தமது வார்த்தையால் ஜீவ இரத்தம் கொண்டு கழுவினார்.

இப்போதும் தேவன் தமது ஆலய பிராகாரத்தில் தேவனுக்கு பணிவிடை செய்யத் தக்கதாக ஒரு சிலாக்கியத்தை எனக்கு கடந்த 20—5—86 அன்று B. L. Shed-ல் நடந்த ஊழியர் மாநாட்டில் வைத்து கொடுத்தார். இதற்காக என் தெய்வத்தை நன்றியோடு ஸ்தோத்தரிக்கின்றேன். இதை வாசிக்கின்ற கிறிஸ்து இயேசுவுக்குள் அன்பான சகோதர, சகோதரிகளே நாம் இரட்சிக்கப்பட்டு தேவ ராஜ்யமாகிய பரலோக ராஜ்யத்திற்குள் பிரவேசிக்க வேண்டுமாயின் முதலாவது கர்த்தராகிய இயேசுவை விசுவாசிக்க வேண்டும் இரண்டாவது அவரின் வார்த்தையாகிய சத்தியம் வெளிப்படும (ஏசா. 2:3) திருச்சபையை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு அடைக்கலப் பட்டணமாகிய அதற்குள் பிரவேசிக்க வேண்டும்,

அப்போது நமது ஆத்துமா இளைப்பாறுதலை அடைந்துகொள்ள முடியும் (மத். 11:28) இது எனது சாட்சி மேற்கண்டவாறு அடியாள் பெற்றுக் கொண்ட தெய்வீக சமாதானத்தை உங்களோடு பகிர்ந்து கொள்ள தேவன் தந்த கிருபைக்காக என் தேவனை துதிக்கிறேன்.

Eld. Bro. E. R. ஜெயராஜ்
புதிய எருசலேம் சபை
கொடைக்கானல்.

" கர்த்தரே தெய்வம், கர்த்தரே தெய்வம்..." (II இராஜா. 18:39).

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

   *20 (வெள்ளி) டிசம்பர் 1991*
   *20 (திங்கள்) ஜனவரி 1992*
   *18 (செவ்வாய்) பெப்ருவரி 1992*

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :

   **Chief Pastor N. LAZAR**
   **"New Jerusalem Church"**
   **Church Lane, Tilak Nagar,**
   **Durga Road, Bhandup,**
   **Bombay-400 078. India.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா (எண்) நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15/- (பதினைந்து)சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (Capital Letters) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by : Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Durga Road, Bhandup, Bombay-400 078. Printed at : PESCA Art Printers, 19, Thiruvalluvar St., Ms-29. Ph : 425490